# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## ஒன்பதாம் மடலம் - இரண்டாம் பாகம்
## [இணைப்பு மடலம்]

## (ச - வெள)

# A Comprehensive Etymological Dictionary of the Tamil Language

## [Supplementary Volume]
## Volume IX - Part-II


முனைவர் இரா. மதிவாணன்
மதிப்புறு இயக்குநர்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட
இயக்கக வெளியீடு
தமிழ்நாடு அரசு
2010

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

ஒன்பதாம் மடலம் – இரண்டாம் பாகம்
[இணைப்பு மடலம்]

(ச–வௌ)

# A Comprehensive Etymological Dictionary of the Tamil Language
[Supplementary Volume]
Volume IX - Part-II


முனைவர் இரா. மதிவாணன்
மதிப்புறு இயக்குநர்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட
இயக்கக வெளியீடு
தமிழ்நாடு அரசு
2010

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 30.

முதற் பதிப்பு : திருவள்ளுவர் ஆண்டு 2041 ஆடவை (ஆனி) (June 2010)

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. IX, Part-II



விலை : உருபா 400/-

Price : Rs. 400/-

குறியீட்டெண் : Colon No.P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் :

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்,
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்,
அண்ணாநகர், சென்னை 600 040.

Published by :

Directorate of Tamil Etymological Dictionary Project,
C- 48, Ist Floor, T.N.H.B.,
IInd Avenue, Anna Nagar,
Chennai - 40.

அச்சீடு :

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை–600 113.

Printed at :

International Institute of Tamil Studies,
Tharamani, Chennai - 113

நூல் கிடைக்குமிடங்கள் :

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்,
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்,
அண்ணாநகர், சென்னை–600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை–600 113.

Copies available at :

Directorate of Tamil Etymological Dictionary Project,
C- 48, Ist Floor, T.N.H.B.,
IInd Avenue, Anna Nagar,
Chennai - 40.

International Institute of Tamil Studies,
Tharamani, Chennai - 113

மாண்புமிகு தமிழக முதலமைச்சர்

# கலைஞர் மு.கருணாநிதி



செம்மொழிச் செம்மல் கலைஞர் பெருந்தகையே
செம்மாந்த செந்தமிழர் பாவாணர் நுண்ணோக்கில்
சீர்கொள் அகரமுதலி வெளியிட்டுப்
பேர்கொண்டீர் வாழ்க நெடிது!

மு. கருணாநிதி
முதலமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள் 26.5.2010

## வாழ்த்துரை

செந்தமிழ் மொழியின் வேர்ச்சொல் வித்தகர் மொழிஞாயிறு ஞா.தேவநேயப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு, 1974ஆம் ஆண்டில், அன்றைய திராவிட முன்னேற்றக் கழக அரசு காலத்தில் உருவாக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியை 12 மடலங்களில் 31 தொகுதிகளாகக் கலைக்களஞ்சிய அமைப்பில் விரிவாக உருவாக்கி வெளியிடத் திட்டமிட்டது. அதன்படி, இதுவரை, 11 மடலங்களில் 28 தொகுதிகள் வெளியிடப்பட்டுள்ளன. இந்த நூல் தொகுதிகளில் விடுபட்ட சொற்கள் தொகுக்கப்பட்டு, ஒன்பதாம் மடலத்தின் இணைப்பாக இரண்டு பாகங்கள் 29, 30 ஆகிய இரு தொகுதிகளாக உருவாக்கப்பட்டுள்ளன. இந்த இரு நூல்களும் கோவை மாநகரில் நடைபெறும் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டில் வெளியிடப்படுவது மிகுந்த பாராட்டுக்குரியது.

இதனைத் தொடர்ந்து, 12வது மடலமாக, அதாவது, 31ஆம் தொகுதியாகச் 'சொற்பிறப்பு நெறிமுறைகள்' என்னும் பெயரில் இறுதித் தொகுதி விரைவில் வெளியிடப்படவுள்ளது.

கழக அரசு அமையும் காலங்களில் மட்டுமே கனிவோடு கவனம் செலுத்தப்பட்டு, கடந்த 36 ஆண்டுகளாக நடைபெற்று வரும் செந்தமிழ்ச் சொற்பிறப்புப் பேரகரமுதலி திட்டத்தின் நூல்கள் அனைத்தும் அன்னைத் தமிழின் அரிய அணிகலனாகவும், ஆராய்ச்சியாளர்களுக்கு ஏற்றதோர் கருவூலமாகவும் திகழும் என உறுதியாக நம்புகிறேன். இப்பணியில் ஈடுபட்ட தமிழறிஞர் பெருமக்கள் அனைவரையும் உளமாரப் பாராட்டி வாழ்த்துகிறேன்.

(மு.கருணாநிதி)

மொழிஞாயிறு

ஞா.தேவநேயப்பாவாணர்



ஞால முதன்மொழி எந்தமிழே என்றென்று
சால நிறுவிய பாவாணச் செம்மலே
நின்று நிலவும் சொற்பிறப்பு காட்டியதால்
பொன்றாது நின்றதும் பேர்!

க. முத்துசாமி, இ.ஆ.ப.,
அரசு முதன்மைச் செயலாளர்.

தமிழ் வளர்ச்சி,அறநிலையங்கள் (ம)
செய்தித் துறை,
தலைமைச் செயலகம்,
சென்னை–600 009.

நாள்: 02–06–2010

# அணிந்துரை

"நன்று தமிழ் வளர்க ! – தமிழ்
நாட்டினில் எங்கணும் பல்குக! பல்குக!
என்றும் தமிழ் வளர்க! – கலை
யாவும் தமிழ்மொழியால் விளைந்தோங்குக"

என்று பாவேந்தர் பாரதிதாசன் பாடியதைப்போன்று எல்லாக் கலைகளும் செம்மொழித் தமிழில் சிறப்புற வளர்ந்தோங்கும் காலம் தமிழ்நாட்டில் வந்தாயிற்று. மாண்புமிகு முதலமைச்சர் கலைஞர் அவர்களின் சீரிய முயற்சியினால் 'தமிழ்' இன்று செம்மாந்த நிலையை அடைந்திருக்கின்றது.

நம் செம்மொழித் தமிழுக்கு மேலும் சிறப்பு சேர்க்கும் எண்ணம் தமிழ் வளர்ச்சிக்கு அடிப்படையான பணிகளில் அகரமுதலி உருவாக்குவதும் தலைசிறந்த தமிழ்ப்பணியாகப் போற்றப்படுகிறது. தனித்தமிழ் காத்த மொழிநூலறிஞர் ஞா. தேவநேயப் பாவாணரின் சொற்பிறப்பு ஆராய்ச்சி அவரது 'ஞாலமுதன்மொழிக் கொள்கை' என்னும் அடிப்படையில் அமைந்தது. இக்கொள்கைக்கு அண்மைக் காலத்தில் உலக மொழியியல் அறிஞர்களிடையில் ஊக்கம் தருவோர் எண்ணிக்கை விரைவாகப் பெருகி வருகிறது. அத்தகு பெருமைக்குரிய பாவாணர் செய்த அரிய ஆராய்ச்சியின் அடிப்படையில்தான் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மாண்புமிகு முதலமைச்சர் கலைஞர் அவர்களால் உருவாக்கப்பெற்று, அவர்கள் வழி நடத்தியவண்ணம் அகரமுதலியின் பன்மடலங்களாகப் பாவாணர் கருதியவண்ணமே வெளிவந்துள்ளன. அத்தகைய தொடர்முயற்சியில் இவ்வியக்ககத்தின் வாயிலாக வெளிவந்த அகரமுதலித் தொகுதிகளில் விடுபட்டவையெல்லாம் தொகுக்கப்பெற்று இப்போது இரண்டு தொகுதிகள் கொண்ட இணைப்பு மடலமாக வெளிவந்துள்ளது. அவற்றை மாண்புமிகு முதலமைச்சர் கலைஞர் அவர்கள் உலகத்தமிழ்ச் செம்மொழி மாநாட்டில் தம் பொற்கரங்களால் வெளியிட இருக்கின்றார்கள் என்பது நமக்குப் பெருமகிழ்ச்சியளிக்கின்றது. என்றென்றும் பீடு பெற பாடாற்றித் தமிழுக்குச் செம்மொழி அரியணை தந்த மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் ஊட்டிய ஊக்கம் அகரமுதலி 30 தொகுதிகளாக மலர்ந்துள்ளது.

இணைப்பு மடலங்களுக்குப் பின்னர் வெளிவரவேண்டிய சொற்பிறப்பு நெறிமுறை மடலத்தையும் விரைந்து முடித்து வெளியிடும் பணி நடைபெற்று வருகிறது. இத்தகைய சீரிய முயற்சியில் ஈடுபட்டுள்ள செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் மதிப்புறு இயக்குநரையும் மற்றும் பதிப்பாசிரியர்கள், சிறப்புநிலைத் தொகுப்பாளர்கள், அனைத்துப் பணியாளர்களையும் சிறப்பாகப் பாராட்டுகிறேன்.

(க. முத்துசாமி)

# பதிப்புரை

செம்மொழித் தமிழின் சீரார்ந்த முன்மைக்கும் தொன்மைக்கும் அடிப்படைக் கருவி நூலாக இருப்பது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி. உலகில் இதுவரை வெளிவந்துள்ள சொற்பிறப்பியல் அகரமுதலிகள் அனைத்தினும் மேம்பட்டதாகத் தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி விளங்க வேண்டும் எனப் பேராசான் மொழிஞாயிறு ஞா.தேவநேயப்பாவாணர் கனவு கண்டார். அதனை அரசின் திட்டமாக்கிப் பாவாணருக்கென்றே தனித்த ஓர் இயக்ககத்தை உருவாக்கிய **மாண்புமிகு தமிழக முதலமைச்சர் முத்தமிழ்க் கலைஞர்** அவர்கள் பாவாணரின் நெட்ட நெடுங்கனவை நீடு நிலைத்த நனவாக்கியதை அகரமுதலி தொகுப்புப் பணி நிறைவுற்று வெளிவந்துள்ள 30 தொகுதிகளில் இன்று காண்கிறோம். இறுதித் தொகுதியான சொற்பிறப்பு நெறிமுறைகள் 31 ஆம் தொகுதியாக விரைவில் வெளிவரவுள்ளது.

உலக மொழிகளில் ஆங்கிலம், பிரஞ்சு, செருமானியம், உருசியம், சீனம், இலத்தீனம், சமற்கிருதம் ஆகியவற்றில் சொற்பிறப்பு அகரமுதலிகள் வெளிவந்துள்ளன. இந்திய மொழிகளில் தெலுங்கு, நேப்பாள மொழிகளில் வெளிவந்தவை சிறப்பாக அமையவில்லை. குடும்ப மொழிகளுக்காக வெளிவந்த பரோஎமனோவரின் Dravidian Etymological Dictionary (DED). அல்தாய்க்கு மொழிகளுக்காக வெளிவந்த Etymological Dictionary of Altaic languages (EDAL). பின்லாந்து பேராசிரியர் அன்னு பனு அகோலா வெளியிட்ட SUDURALJAN (சுமேரியன் திரவிடம் ஊரல் மொழிகள் சப்பானியம் ஆண்டியன் இன்கா மொழி) அகரமுதலி ஆகியவை ஒப்பீட்டு அகரமுதலிகளாக (Comparative Dictionary) உள்ளன. இவற்றில் சொற்பிறப்பின் மூலத்தைத் தேடும் முயற்சி முழுமையாக எடுக்கப்படவில்லை.

12000 பக்கங்களில் இரண்டு இலக்கம் சொற்களை உள்ளடக்கி அனைத்துச் சொல்லாட்சிகளுக்கும் வேர்மூலமும் இனச்சொல்வகைப்பாடும் காட்டும் முயற்சியில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி வீறார்ந்த வெற்றி நடை பயின்றுள்ளது. பல்வேறு காரணங்களால் அகரமுதலிப் பணி தொடர்ந்த இடர்ப்பாடுகளுக்கு உள்ளாகியது. திட்டமிட்ட கால வரம்புக்குள் நிறைவுறுத்த இயலாமல் வேறுவழியின்றி காலநீட்டிப்பை எதிர்கொள்ள நேர்ந்தது வருந்தத்தக்கதாயிற்று. நெடுங்காலமாகப் புலமை நலம் பொதுளிய திறப்பாடு மிகுந்த இயக்குநர் பணியிடம் நிரப்பப்படவில்லை. அரசு செயலாளரே கூடுதல்

பொறுப்பு இயக்குநராக நீடிக்க நேர்ந்ததாலும் புலமை சான்ற இயக்குநரின் ஒரு சீரான மேற்பார்ப்பு இல்லாத நிலையிலும் அகரமுதலிச் சொற்பதிவுகளிலும் சீரான பதிப்புப் பணியிலும் குறைபாடுகள் காணப்படுகின்றன என்பது உண்மையே. இக்குறைபாடுகளைக் களைந்து ஆக்சுபோர்டு ஆங்கில அகரமுதலி போல் பன்னிரு பெருந்தொகுதிகளில் திருந்திய பதிப்பு Revised edition of (TED) Tamil Etymological Dictionary வெளியிட அரசுக்கு வேண்டுகோள் விடப்பட்டுள்ளது.

"வினைச் சொற்களின் பெருக்கம் செம்மொழிச் சிறப்பை நிலைநாட்டும். அத்தகைய வினைச்சொல் பெருவளத்தை தமிழில் நான் காண்கிறேன்" என அருள்மிகு வினோபா அடிகள் குறிப்பிட்டார். அது உலக மொழிகளில் வேர்வீழ்த்து ஐரோப்பிய மொழிகளில் விழுதூன்றியதைக் கால்டுவெல் பெருமகனாரும் யாழ்ப்பாணத்து நல்லூர் ஞானப்பிரகாச அடிகளாரும் வலியுறுத்தினர். பாவாணர் அதனை மெய்ப்பித்துக் காட்டினார். அகரமுதலியில் செம்மொழித் தமிழின் வேர்வளம் விளக்கப்பட்டுள்ளது.

திராவிடமொழிகளிலும் ஏனைய உலகமொழிகளிலும் இனச்சொல் காட்டியிருப்பது, படவிளக்கம் தந்திருப்பது, இன்றியமையாத சொற்களுக்கு விரிவான விளக்கம் தந்திருப்பது, பிற அகரமுதலிகளில் காணப்படும் பிழைபாடுகளைச் சுட்டிக்காட்டித் திருத்தியிருப்பது, புதிய கலைச் சொற்களைப் படைத்திருப்பது, வடமொழிச் சொல்லாட்சிகளுக்கு நிகரான தமிழ்ச் சொற்கள் தந்திருப்பது, தமிழில் புகுந்துள்ள வேற்று மொழிச் சொற்களைத் தனியாகப் பிரித்து முத்தொகுதி அயற்சொல் மடலமாக வெளியிட்டிருப்பது, ஏட்டில் பயிலாத நாட்டுப்புறத்துத் தமிழ்ச் சொல்லாட்சிகளைத் தேடித் தொகுத்திருப்பது இன்றியமையாத இலக்கணக் குறிப்புகள் தந்திருப்பது ஆகியவை இந்த அகரமுதலியின் சிறப்புக் கூறுகள் எனலாம்.

எல்லாவற்றுக்கும் மேலாகப் பாவாணர் எண்ணிய வண்ணம் இதுவரை வெளிவந்துள்ள உலகச் சொற்பிறப்பு அகரமுதலிகளில் காணப்படாத சிறப்புக்கூறுகள் பெருமளவில் இந்த அகரமுதலித் தொகுப்புகளில் இடம் பெற்றிருப்பது இத்திட்டப் பணியின் தனிச்சிறப்பை எடுத்துக் காட்டுகிறது. இப்பணியில் எங்களை ஈடுபடுத்திய **மாண்புமிகு முதலமைச்சருக்கும்,** தமிழ் வளர்ச்சி அரசு செயலாளருக்கும் என்றும் பொன்றா நன்றியுடையோம். இப்பணியில் அயராது உழைத்த திட்டப்பணி தமிழறிஞர்கள் அனைவருக்கும் நன்றி உரியது.

**இரா. மதிவாணன்**
**மதிப்புறு இயக்குநர்**

# பதிப்புக்குழு

முனைவர் **இரா. மதிவாணன்**, மதிப்புறு இயக்குநர்

தலைவர்–பதிப்புக்குழு

முனைவர் **மு.கண்ணன்**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்

முனைவர் **ச. செந்திலாண்டவன்**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்

முனைவர் **இரா.கு.ஆல்துரை**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்

திரு.**கா. இளமுருகு**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்

திரு.**ச.கி. கணேசன்**, சிறப்பு நிலை ஓவியர் – முதனிலை

திரு. **மா. பூங்குன்றன்**, பதிப்பாசிரியர்

திரு.**க.கணேசன்**, பதிப்பாசிரியர்

திரு.**சு.வீரவேலு**, பதிப்பாசிரியர்

திருவாட்டி.**வே.உமாராணி**, உதவிப் பதிப்பாசிரியர்

# ச

**சங்கிலி முடிச்சு** *cangilimuḍiccu,* பெ. (n.) முடிச்சு வகை; kind of knot.

*[சங்கிலி + முடிச்சு]*

**சங்குக் கிடங்கு** *cangukkiḍangu,* பெ. (n.) சங்குகளைப் பதப்படுத்திப் பாதுகாக்கும் அறை; chank godown.

*[சங்கு+கிடங்கு]*

**சட்டம்பி** *caṭṭambi,* பெ. (n.) திண்ணைப் பள்ளிக் கூடத்து மாணவர் தலைவன், சட்டாம் பிள்ளை; school pupil leader.

*[சட்டாம்பிள்ளை – சட்டம்பி]*

**சடக்ககடம்** *caḍakkagaḍam,* பெ. (n.) பெருந்தீனிகொள் பருவயிறு ; a stomach with a sensation of over appetite. “சடக்க கடத்துக் கிரை தேடி பலவுயிர் தம்மைக் கொன்று” (பட்டினத். திருவேசம்பி 33).

*[சடம்(சடக்க)+(குடம்) கடம்]*

**சடத்தாங்கல்** caḍa-t-tāngal, பெ. (n.) வேலூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Vellore.

*[ஒருகா சடையன் + தாங்கல்(ஏரி)]*

**சடுத்த மருத்துவம்** *caḍuttamaruttuvam,* பெ. (n.) உடனடி மருத்துவம், emergency treatment.

*[சடுத்தம்+மருத்துவம்]*

**சடுதி** *caḍudi,* பெ. (n.) போட்டி; competition. என்னோடு சடுதி போடாதே. (மீனவ.)

Mar. jaduti.

*[சடைவு – சடுவு – சடுதி]*

**சடுதை** *caḍudai,* பெ. (n.) தொல்லை, நச்சரிப்பு (சிரமம்); disturbance, nuisance

*[சாடு – சடு – சடுதை]*

**சடையாலி** *caḍaiyāli,* பெ. (n.) சாலிவகை நெல்லினம்; a variety of paddy.

*[சடை+ஆலி]*

**சண்டைச் சச்சரவு** *caṇḍai-c-caccaravu,* பெ. (n.) ஒருவரையொருவர் திட்டிக்கொள்ளுதல் அல்லது காரசாரமாகப் பேசிக் கொள் ளுகை; quarrel. இந்தத் தெரு எப்பொழுது பார்த்தாலும் சண்டைச் சச்சரவு மிக்கதாகவே இருக்கும்.

*[சண்டை+சச்சரவு]*

சண்டை – பூசல்; சச்சரவு – கலகம். முதலெழுத்து ஒன்றிவந்த மரபிணை மொழி.

**சத்தம்** *cattam,* பெ. (n.) வண்டிக்கூலி; wage for transportation சாத்தம்பார்க்க; see *cāttam,*

*[சாத்து–சாத்தம்–சத்தம்]*

**சதுரப்பொற்காசு** *cadura-p-poṟkāsu,* பெ. (n.) சதுர வடிமையிலான மதுரைப்பாண்டியர் காசு; a coin of Pandiyan king.

*[சதுரம்+பொன்+காசு]*



**சதை வாவல்** *cadai-vāval,* பெ. (n.) ஒரு வகை மீன்; round bat fish.

*[சதை+வாவல்]*

**சந்தனக்கல்** *candana-k-kal,* பெ.(n.) கத்தியைத் தீட்ட உதவும் சாணைக்கல், grindstone.

*[சந்தனம்+கல்]*

**சப்பட்டைக்குருவி,** *cappattai-k-kuruvi,* பெ. (n.) வானம்பாடி பறவை இனம்; black lark.

*[சப்பட்டை+குருவி]*

**சமக்கூடை** *cama-k-kūdai,* பெ. (n.) பனை ஒலைக்குடை; umbrella made of palm leaves.

*[சமம்+கூடை]*

**சம்பங்கி நல்லூர்** *cambanginallūr,* பெ. (n.) வட ஆர்க்காடு மாவட்டத்தில் வேலூர்க்கு அருகில் உள்ள ஓர் ஊர்; a village in north Arcot, near Vellore.

*[சம்பங்கி+நல்லூர் (கல்வெட்டு)]*

**சம்பா** *cambā,* பெ. (n.) விசய கண்ட கோபாலனுடைய 22 ஆம் ஆட்சியாண்டில், கி.பி.1272ஆம் ஆண்டில் – திருவோத்தூர் கோயிலில் இருந்த தேவரடியாள் உண்ணா முலையின் மகள்; name of dancer, daughter of Unnamulai at Thiruvottūr temple.

*[சம்பு–சம்பா]*

**சம்புரிப்பட்டு** *camburi-p-pattu,* பெ. (n.) நெசவுப்பாவில் ஊடிழையாக வரும் பட்டு; interlacing thread in silk weaving.

*[சம்பு++உரி+பட்டு]*

**சம்புவராயநல்லூர்** *cambuvarāyanallūr,* பெ. (n.) வேலூர் மாவட்டத்தில் திருவலத்திற்கு அருகில் உள்ள ஓர் ஊர் ; a village in Vellore near the Thiruvalam.

*[சம்புவராயன்+நல்லூர்]*

**சம்புவராய நாச்சி** *cambuvarāyanācci,* பெ. (n.) கோயிலுக்குத் தானம் புரிந்த திருவோத்தூரில் வாழ்ந்த தேவரடியார் செய்யாண்டையான 'சம்புவராய நாச்சி'; a dancer.

*[சம்புவராயன்+நாச்சி]*

**சம்பைக்கடை** *cambai-k-kadai,* பெ. (n.) கருவாட்டுக்கடை ; dryfish shop.

*[சம்பை+கடை]*

**சமத்தூர்** *cama-t-tūr,* பெ. (n.) கோயம்புத்தூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Coimbatore.

*[சமம்(போர்) அத்து+ஊர்]*

**சரடு விடுதல்** *caraduvidu,* செ.கு.வி. (v.i.) பொய் சொல்லுதல்; to tell lies அவன் சரடு விடுவதில் கெட்டிக்காரன். (இ.வ)

*[சரடு+விடு–]*

சரடு எத்தனை நீளத்துக்கும் விடலாம். அதைப் போன்று தன் கற்பனைத் திறமைக்கு ஏற்ப எத்தனைப் பொய்களும் சொல்லலாம் என்பது குறிப்பாகப் புலப்படும் பொருள்.

**சரணளி–த்தல்** *caranali-,* செ.குன்றாவி (v.t.) அடைக்கலம் அளித்தல்; to give refuge இராமன் விபீடணக்குச் சரணளித்தான்.

*[சரண்+அளித்தல்]*

**சரதவெக்கை,** *carada-vekkai,* பெ. (n.) மாட்டிற்கு வரும் ஒருவித நோய்; a disease affecting cow.

*[சரதம்+வெக்கை]*

**சரளி ஆடு** *caraliādu,* பெ. (n.) உடலில் வெண்ணிறம் படர்ந்த ஆடு; a goat of white column on the body.

*[சரளி + ஆடு]*

**சரந்தாங்கி** *cara-n-tāngi,* பெ. (n.) பாண்டிய நாட்டில் உள்ள ஓர் ஊர்; a village in Pāndiyanādu.

*[சரம்+தாங்கி]*

**சருவக்கண்ணாடி** *caruva-k-kaṇṇāḍi,* பெ. (n.) மழையால் பதிக்கப்பட்ட கண்ணாடி. mirror damaged by rain.

*[சருவம் + கண்ணாடி]*

**சல்லடம்** *callaḍam,* பெ. (n.) நீர்ச்சீலை (கோவணம்); loincloth.

*[சல்லை–சல்லடம்]*

**சல்லாயம்** *callāyam,* பெ. (n.) இடையூறு disturbance

*[சள்ளை – சல்லாயம்]*

**சவந்தின்னிச்சீவி** *cavan-tiṇṇi-c-cīvi,* பெ. (n.) பறவைகள் தங்குமிடம், birds perching place.

*[சவம்+தின்னி+சீவி]*

**சவாரிக்கட்டு** *cavāri-k-kaṭṭu,* பெ. (n.) கற்கட்டு வகை; type of setting stones in a wall.

*[சவரி–சவாரி+கட்டு]*

**சளித்த பதனீர்** *caḷitta-p-padaṉīr,* பெ. (n.) பதனழிந்த பதனீர்; rotten tender palmyrah juice.

*[பதன்+அழிந்த+பதனீர்]*

**சற்றேறக்குறைய** *caṟṟēṟa-k-kuṟaiya,* பெ.அ. (adj.) நேரத்தில், எண்ணிக்கையில் ஏறக் குறைய; approximate of time, amount. அவன் வீட்டுக்கு வரும் போது சற்றேக்குறைய 12 மணி இருக்கும்.

*[சற்று+ஏறக்குறைய]*

**சன்னாநல்லூர்** *caṉṉā-nallūr,* பெ. (n.) திருவாரூர் மாவட்டத்தில் திருவாரூரிலிருந்து 16 கல் மாத்திரியிலுள்ள ஓர் ஊர்; a village, 16 k.m. away from Thiruvarur.

*[சன்னம்+நல்லூர்]*

**சாகாக்கலை** *cāgā-k-kalai,* பெ. (n.) சாதலின்றி நெடிது வாழ்ந்திருக்கும் கலை; boon of immortality "சாகாக் கலைநிலை தழைத்ததில் வெறியெனும் ஆகாயத்தொளிர் அருட்பெருஞ் சோதி" (அருட்பா. 4615, 51).

*[சாவாக்கலை – சாகாக்கலை]*

**சாண்டு** *cāṇḍu,* பெ. (n.) நோனிக் குருதி; menstrual fluid.

*[சான்+சாண்டு]*

**சாணக்கு** *cāṇakku,* பெ. (n.) மட்பாண்டத்தின் மேல் மூடி; lid of the pot.

*[சாள்–சாளக்கு–சாளக்கு]*

**சாத்தம்** *cāttam,* பெ. (n.) வண்டிக்கூலி; charge levied for carrying goods from place to place by cart.

*[சாத்து–சாத்தம்]*

சாத்து வாணிகர் தம் வண்டிச் சாத்துகளில் வாங்கிய கட்டணம் சாத்து – சாத்தம் எனப்பட்டது. இது வண்டிச் சத்தம் எனத் திரிந்தது.

**சாத்தனூர்** *cāttaṉūr,* பெ. (n.) திருநள்ளாற் றுக்கு வடகிழக்கே 8 கல் தொலைவில் உள்ள ஊர்; a village 8 km from Thirunaḷḷār.

*[சாத்தன்+ஊர்]*

**சாதுவன்** *cāduvaṉ,* பெ. (n.) 1. நல்லவன்: goodman சாதுவராய் போது மின்க ளென்றான் [திவ். இயக் 68] 2. ஐம்புலன் அடக்கிய துறவி; a monk தத்துவன் சாதுவன் (சிலம் : 10.182)

*[சால் – சாது+வ் + அன்]*

**சாரணி** *caraṇi,* பெ. (n.) துளைக்கரண்டி, கண்கரண்டி ; perforated laddle.

*[சுரை – சரை – சாரணி]*



**சால்கெண்டை** *cāl-keṇḍai*, பெ. (n.) கெண்டை மீன் வகையுள் ஒன்று; dorsalis.

*[சால்+கெண்டை]*



**சாலியமங்கலம்** *cāliya-maṅgalam*, பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Thanjavur.

*[சாலி-சாலியம்+மங்கலம்]*

**சாலினி** *cāliṉi*, பெ. (n.) 1. தேவராட்டி; foretelling women with divine power. முழுங்குவாய் சாலினி (சிலம். 12–7)

*[சால் – சாலி – சாலினி]*

**சாலோட்டு–தல்** cālōṭṭu - செ.கு.வி. (v.i) நிலத்தை உழுதல்; to plough land. நேற்று வரை இரண்டு சால் ஓட்டி ஆயிற்று. (உ.வ.)

*[சால்+ஓட்டு]*

**சாவுக்குருவி,** *cavu-k-kurivi*; பெ(n) ஒரு வகை குருவி இனம்; Indian night jar.

*[சா–சாவு+குருவி]*

**சாவிகை** *cāvigai*, பெ. (n.) இனிப்பு சேர்த்து உண்ணும் இடியாப்ப வகை; a vapour cooked rice pudding.

**சாற்றுப்பாட்டு** *cāṟṟu-p-pāṭṭu*-, பெ. (n.) விழாச் செய்தியைப் பறைசாற்றிச் சொல்வதற்கான பாட்டு; a song sung while declaring day of festival by drumming

*[சாற்று+பாட்டு]*

காணிக்காரரிடை இப்பாடல் வழக்கில் உள்ளது.

**சாற்றுரை** cāṟṟurai, பெ. (n.) அறிவித்தல், declaration.

*[சாற்று+உரை]*

**சான்றாளி** *cāṉrāli*, பெ. (n.) சான்று கூறுபவன் a witness. சான்றாளன் பார்க்க; see cāṉrāḷan.

*[சான்று + [ஆள்] + ஆளி].*

**சான்றொப்பம்** *cāṉṟoppam*, பெ. (n.) சான்றிதழ், ஆவணம் முதலியவற்றில் கொடுக்கப்பட்டுள்ள விளத்தம் உண்மையானது அல்லது அவற்றின் நேர்ப்படி உண்மையானது என்று இடப்படும் கையெழுத்து; attest a copy, certify. விண்ணப்பத்தில் சான்றொப்பம் வாங்கிவா.

*[சான்று+ஒப்பம்]*

**சிக்கல்** *cikkal*, பெ. (n.) நாகப்பட்டினம் வட்டத்தில் 15 கல் மாத்திரி அளவு உள்ள ஓர் ஊர்; a village 15 km from Nagappattinam.

*[சிக்கு–சிக்கல்]*

**சிகட்டி** *cigaṭṭi*, பெ. (n.) இருள்; darkness.

**தெலு. சீகட்டி**

*[சீகு–சிகட்டி]*

**சிகிர்** *cigir*, பெ. (n.) துளிர்; sprout.

**கன். சிகுரு**

*[துளிர்–துகுர்–சிகுர்]*

**சிகுவை** *ciguvai*, பெ. (n.)உண்ணாக்கு நரம்பு; a nerve in uvula.

*[சிகுல்–சிகு–சிகுவை]*

**சிஞ்சல்** *ciñjal*, பெ. (n.) நாகப்பட்டினம் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Nagapaṭṭinam.

*[செஞ்சு–செஞ்சல்–சிஞ்சல்]*

**சிஞ்சிரி** *ciñjiri*, பெ. (n.) கஞ்சிரா எனும் தோற்கருவி; a percussion instrument.

*[சிஞ்+சிரி (ஒலிக்குறிப்பு)]*



**சித்தர்காடு** *cittar-kāḍu,* பெ. (n.) மயிலாடு துறைக்கு 6 அயிரிமாத்திரி தொலைவில் உள்ள ஓர் ஊர்;a village 6 k.m from Mayiladuthurai.

*[சித்தர்+காடு]*

**சித்தமலம்** *cittamalam,* பெ. (n.) அறியாமை; ignorance 'சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட அத்தன்' (திருவா.)

*[சித்தம்+மலம்]*

**சித்திரை திருநாள்** *cittirai - tirunāl,* பெ. (n.) திருவிதாங்கூரை ஆண்ட கடைசிமன்னன்; name of a last king Tiruvidangur.

*[சித்திரை+திரு+நாள்]*

**சிதரல்** *cidaral,* பெ. (n.) பாண்டியர் காலத்தில் சமணரின் பல்கலைக் கழகமாகவும், சமணப் பள்ளியாகவும் இருந்த குன்று; a hillock cave centre of Jain monks.

*[சிதர் – சிதரல்].*

**சிந்தாதிரிப்பேட்டை** *cindadiri-p-pēṭṭai,* பெ. (n.) சென்னையில் உள்ள ஓர் ஊர்; an area in Chennai city.

**த.சிந்தாதிரிப் பேட்டை E. Saint Andrew's pet).**

**சிந்தாமணி** cindāmaṇi, பெ. (n.) தென்னார்க் காடு மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர் name of the village in South Arcot.

*[சிந்தா+மணி (ஒளி குன்றாதமணி].*

**சிப்பி** *cippi,* பெ. (n.) உண்கலமாகிய மண்தட்டு; a flat earthen pottery used for eating purposes.

*[சிறு – சிறுப்பி – சிப்பி]*

**சிப்பியுயிரி,** *sippiuyiri,* பெ. (n.) கடலில் வாழும் மீன் வகைகளுள் ஒன்று; shell fish.

*[சிப்பி+உயிரி].*

**சிரகு** *siragu,* பெ. (n.) புடவை தலைப்பு; lore-saree.

**க. செரகு; பட. செரங்கு**

*[சிறகு–சிரகு].*

**சிராயம்பட்டு** *cirāyam-paṭṭu*, பெ. (n.) காஞ்சி புரம் மாவட்டத்தில் செய்யாற்றிலிருந்து ஆரணி செல்லும் சாலையில் அமைந்துள்ள ஓர் ஊர்; a village in Kanchipuram, way to Ceyyaru Arani sālai.

*[சிராயம்+பட்டு].*

**சிம்பு** *cimbu,* பெ. (n.) கைத்தறியில் புனிக்குப் பயன்படும் மெல்லிய கொம்பு; an implement in handloom weaving.

*[சிள் – சிம் – சிம்பு]*

**சிமுக்கு** *cimukku,* பெ. (n.)சிறுகுச்சி, சிறுவளார்; splint.

*[சீள்–சிமுக்கு]*

**சில்லாக்கோல்** *cillā-k-kōl,* பெ. (n.) எலி பாம்பு போன்றவற்றைக் கொல்ல கூரான கொம்பு பொருத்தப்பட்ட மூங்கில் கழி; spiked stick.

*[சில்லா+கோல்]*

**சில்லான்** *cillāṉ,* பெ. (n.) தெருக்கூத்தில் பயன்படுத்தப்படும் இசைக்கருவி வகை; a music instrument.

*[சில்லை–சில்லான்]*

**சில்லியாடு** cilli-y-āḍu, பெ. (n.) அளவிற்சிறிய காதுள்ள செம்மறியாடு; a kind of brown sheep

*[சில்லை + ஆடு]*

**சிலும்பு** *cilumbu,* பெ. (n.) துரு, மாழை (உலோக)க்கறை; rust.

*[சிலு–சிலும்பு]*

**சிலுப்பை** *ciluppai,* பெ. (n.) கைத்தறிக் கருவி; a device containing few kunjams in handloom weaving.

*[சிலு – சிலும்பை].*

**சிலையோடு–தல்** *cilaiy-y-ōḍu,* செ.கு.வி. (v.i.) மலைகளில் எதிரொலிக்கும் ஓசை; to echo sound in mountain.

*[சிலை+ஒடு].*

**சிவபுரம்** *civapuram*, பெ. (n.) வேலூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Vellore.

*[சிவம்+புரம்].*

**சிவமதம்** *civa-madam,* பெ. (n.) சிவனை முழு முதல் கடவுளாகக் கொண்ட சமயம், saivism.

*[சிவன் + மதம்]*

**சிவமாக்கு-தல்** *civam-ākku-,* செ.குன்றாவி. (v.t.) மெய்யுணர்வு பெறச் செய்தல்; to make immortable. "சித்தமல மறுவித்துச் சிவ மாக்கி யெனையாண்ட அத்தனெனக் கருளியவா றார்பெறுவார்" (திருவாச.).

*[சிவம் + ஆக்கு]*

**சிவனிரவு** *civaṉ-irau,* பெ. (n.) கும்ப *[மாசி]* மாதத்தில் வெள்ளுவாவின் 14ஆம் நாளன்று உள்ள இரவு *[பெரும்]* மா சிவனிரவு (மகாசிவ ராத்திரி); forteenth night of kumba (māci) month from full moon.

*[சிவன்+இரவு]*

**சிற்றலை** *ciṟṟalai,* பெ. (n.) அலைகாலப்பருவம்; half tide.

*[சிறு+அலை]*

**சிற்றினவாழ்** *ciṟṟinavāḷ,* பெ. (n.) பாபநாசம் வட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Papanāsam.

*[சித்தன்+வாழ்+ஊர்]*

இவ்வூர் இப்போது 'சித்தன்வாலூர்' என்று அழைக்கப்படுகிறது.

**சிற்றியாற்றூர்** *ciṟṟiyāṟṟūr,* பெ. (n.) செய்யாறு வட்டத்தில் பில்லாந்தாங்கல் அருகே அமைந் துள்ள ஊர்; a village in Seyyaru, near the Pillanthangal.

*[சிறு+ஆற்று+ஊர்]*

**சிற்றுரை** *ciṟṟurai,* பெ. (n.) சிறிய அளவில் தெரிவிக்கும் கருத்து; a short statement or comment.

*[சிறு + உரை]*

**சிற்றெழுத்தர்** *ciṟeḻuttar,* பெ. (n.) கையேட்டுக் கணக்கர்; personal attendant.

*[சிறு+எழுத்தர்]*

**சிற்றேவலர்** *ciṟṟēvalar,* பெ. (n.) அலுவல் உதவியாளர்; attender.

*[சிறு + ஏவலர்]*

**சிறகு** *ciṟagu,* பெ. (n.) தாலியில் சேர்க்கப் பட்டிருக்கும் சிறுபொன் தகடு; ornamental piece in tali.

*[சிறு>சிறுகு-சிறகு]*

**சிறஞர்** *ciṟañar,* பெ. (n.) நாகபப்பட்டின மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். a village in Nagappaṭṭiṉam.

*[(ஒருகா.சிறை (ஏரி)+அதர் (வழி)]*

**சிறாமீன்** *ciṟāmīṉ,* பெ. (n.) சிறிய மீன், வகைகளுள் ஒன்று; tope.

*[சிறுமை→சிறு→சிறா+மீன்]*

**சிறுகருந்தும்பி** *ciṟukaruntumbi,* பெ. (n.) பூச்சியினத்தில் ஒன்று; an insect.

*[சிறு+கரு+தும்பி]*

**சிறுகால்** *cirukāl,* பெ. (n.) 1. சிறிய நீரோடை; brook. 2. விடியற்காலம்: dawn சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்தோம்.

*[சிறு+கால்].*

**சிறுத்தொண்ட நல்லூர்** *ciṟu-t-toṇḍanallūr,* பெ. (n.) திருநெல்வேலி மாவட்டத்தில் அமைந் துள்ள ஓர் ஊர்; a village in Thriunelveli.

*[சிறுத்தொண்டன்+நல்லூர்]*

**சிறுநோக்கம்** *ciṟunōkkam,* பெ. (n.) அருகிய நோக்கம் ; rare look. "கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில் செம்பாகம் அன்று பெரிது" (குறள். 1092).

*[சிறு+நோக்கம்]*

**சிறுபுலமீன்கொத்தி,** *cirupulamin-kotti,* பெ. (n.) நீர்நிலைகளில் வசிக்கும் பறவை; a water bird.

*[சிறு+புலம்+மீன்+கொத்தி].*



**சிறுமூர்** *cirumūr,* பெ. (n.) வேலூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Vellore.

*[சிறு+ஆமூர்].*

**சின்னத்திரை** *cinna-t-tirai,* பெ. (n.) தொலைக் காட்சி, கம்பி வடத்தொலைக்காட்சி, television, cable television.

*[சிறிய > சின்ன+திரை].*

**சின்னலபுரம்** *cinnalapuram,* பெ. (n.) வேலூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Vellore.

*[சின்ன+ஆலம்+புரம்].*

**சினுக்குவலி** *cinukku-vali,* பெ. (n.) தலைமுடியைக் கோதவும் சிக்கு எடுக்கவும் பயன்படுத்தும் குச்சி போன்ற பெரிய ஊசி; hair pin like tool used by women for trimming the hair.

*[சினுக்கு+வலி]*

**சினுப்பு-தல்** *cinuppu,* செ.குன்றாவி. (v.t.) தயிர் போன்றவற்றைக் கடைதல்; to churn curd.

*[சிலுப்பு-சினுப்பு]*

**சினை** *cinai,* பெ. (n.) கருத்தரிப்பு; conceivement.

*[சில்-சின்-சினை].*

**சீக்காய்** *cīāk-kay,* பெ. (n.) பழுக்காத பனங்காய் unripened palmyrah fruit.

*[சிக்கல்+காய்].*

**சீகனேந்தல்** *ciganēndal,* பெ. (n.) அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[சீங்கன்+ஏந்தல் (ஏரி)].*

**சீகுபத்தி** *cikupatti,* பெ. (n.) அருப்புக்கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர், a village in Aruppukkottai Taluk.

*[ஒருகா. சீங்கன்+பட்டி].*

**சீங்காய்** *cingāy,* பெ. (n.)பழுக்காத பனங்காய்; unripened palmyrah fruit.

*[சிக்கல்+காய்]*

**சீச மங்களம்** *cisamangalam,* பெ. (n.)வேலூர் மாவட்டத்தில் ஆரணிக்கு அருகில் உள்ள ஓர் ஊர்; a village in Vellore, near the Arani.

*[சீயன்+மங்கலம்].*

**சீட்டஞ்சேரி** *cittañjēri,* பெ. (n.) காஞ்சிபுரம் வட்டத்தில் சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[சீட்டன்+சேரி].*

**சீடைபாய்ச்சல்** *cidai-pāyccal,* பெ. (n.) களை படர்ந்த காடுகளில் நீர் பாய்ச்சுதல்; watering the dry land.

*[சீடை+பாய்ச்சி].*

**சீத்தலை** *cittalai,* பெ. (n.) 1. ஓர் ஊரின் பெயர்; a place name. 2. வன்மையான நிலப்பகுதி : a hard soiled land.

*[சீத்தம்(வன்மை, திறமை); சீத்தம்+ தலை].*

**சீதவெக்கை** *cida-vekkai,* பெ. (n.) மாட்டிற்கு வரும் ஒரு வித நோய்; a disese affecting cows.

**சீதேவி** *cidēvi,* பெ. (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukoyilur Taluk.

*[திரு>சீ+தேவி].*

**சீதைப்பாண்டி** *cidai-p-pāndi,* பெ. (n.) பல்லாங் குழியின் வகை; an indoor game of pallāṅkuli.

*[சீதை+பாண்டி].*

**சிப்பான்** *cippān,* பெ.(n.) களையெடுக்கும் களைக் கொட்டு; hoe.

*[சித்தல்–சிப்பான்].*



**சீபம்** *cipam,* பெ.(n.) ஒசூர் வட்டத்தில் சிற்றூர்; a village in Hosur Taluk.

**சீமாட்டுக்கல்** *cimāṭṭu-k-kal,* பெ.(n.) சுமை யடைக்கல்; platform erected on the roadside to rest burden.

**சீமைமாடு** *cimai-māḍu,* பெ.(n.) வெளிநாட்டு மாட்டு வகை; non native breed of cow

*[சீமை+மாடு].*

**சீயமுத்தரையன்** *ciyamuttaraiyan,* பெ.(n.) இரண்டாம் இராசராசனுடைய 4ஆம் ஆட்சியாண்டில், வாழ்ந்தவன் (கி.பி.1167ஆம் ஆண்டு திருவோத்தூர் கல்வெட்டு); a man who lived during the fourth ruling year of the king Rasarasan II.

*[சீயன்+முத்தரையன்]*

**சீயாப்பாடி** *ciyāppāḍi,* பெ.(n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[சீயான்+பாடி].*

**சீர் உருளை** *cir-uruḷai,* பெ.(n.) இரு பக்கங் களிலும் இருக்கும் வண்டிச் சக்கரம்; cart wheel.

*[சீர்+உருளை].*

**சீர்க்கடை** *cir-k-kaḍai,* பெ.(n.) கொங்கு வேளாளர் இனத்தில் நிகழும் வேளாண் தொடர்புடைய சடங்கு; an agricultural ritual of Kongu Vēllalar community.

*[சீர்+கடை].*

**சீர் கயிறு** *cirkayiru,* பெ.(n.) கொரங்காட்டியையும் அச்சையும் சேர்க்கும் கயிறு; a connecting rope.

*[சேர் > சீர்+கயிறு]*

**சீர்க்காரர்** *cikkārar,* பெ.(n.)அருமைக்காரைச் சுட்டும் வேறு பெயர்; another name of Arumaikkāraṉ.

*[சீர்+காரர்].*

**சீர்தண்ணீர்** *cir-taṉṉir,* பெ.(n.) கொங்கு திருமணச் சடங்குகளில் ஒன்று; ritual in marriage of Kongu Vēllalar community.

*[சீர்+தண்ணீர்].*

**சீர்தாங்கி** *cir-tāṅgi,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvāḍānai Taluk.

*[சீர்+தாங்கல் (ஏரி)].*

**சீர்மரபினர்** *cirmarabiṉar,* பெ.(n.) பரங்கியர் களால் வகைப்படுத்தப்பட்டதொரு பட்டியலி லிருந்து பின்னர் நீக்கப்பட்டு மிகவும் பின்தங்கிய இனத்தவராக இனங்காணப் பட்டோர்; communities once listed by the (British) and later transferred to the list of most backward communities.

*[சீர்+மரபினர்].*

**சீரப்பள்ளி** *cirappaḷḷi,* பெ.(n.) இராசிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Rāsipuram Taluk.

*[சீரான்+பள்ளி].*

**சீரம்பாம்பு** *ciram-pāmbu,* பெ.(n.) விலாங்கு மீன் வகை; long finned eel

*[சீரம்+பாம்பு].*



**சீரமம்** *ciramam,* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[ஒருகா.சீராமன் – சீராமம்].*

**சீராடிச் சட்டம்** *ciradiccattam,* பெ.(n.) தறி சீராக இயங்கும் சட்டம்; wooden frame in handloom.

*[சீர்+ஆடி+சட்டம்].*

**சீருடை** *cirudai,* பெ.(n.) நிறுவனப்பணியாளர் ஒரு குழுவினர், மாணவர் ஆகியோர் உடுத்தும் ஒரே வகையான உடை; uniform

மறுவ. ஒப்பாடை

*[சீர்+உடை].*

**சீருடையாள்** *cirudaiyāl,* பெ.(n.) திருநள்ளாற்று சிவன் கோயில் கல்வெட்டில் காணப்படும் பெண்ணின் பெயர்; name of a woman.

*[சீர்+உடையாள்].*

**சீரெழுத்தாளர்** *cireluttālar,* பெ.(n.) மெய்யுணர் வூட்டும் ஆசான்; a great sage or teacher who enlightens his disciples. "ஒரெழுத் தொருபொரு ளுணரர்க் கூறிய சீரெழுத் தாளர்" (திருமந்.514)

*[சீர்+எழுத்து+ஆளர்].*

**சீலப்பந்தல்** *cilappandal,* பெ.(n.) திருவண்ணாமலை வட்டத்தில் உள்ள சிற்றூர்; a village in Thiruvannamalai Taluk.

*[சிலம்+பந்தல்].*

**சீலை** *cilai,* பெ.(n.) கைத்தறி நெசவில் பாவுக்கு நூலை முரடாக்க உதவும் பணி; a method of making the thread rough in handloom weaving.

**சீவணி** *civani,* பெ.(n.) ஒரு நெய்தற்பண்; a musical note.

*[தீவரம்–சீவணி].*

**சீவரம்** *civaram,* பெ.(n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arakkōnam Taluk.

*[சீ+வரம்].*

**சீவலப்பேரி** *civalappēri,* பெ.(n.) நெல்லை மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Tirunelvēli District.

*[சீவலப்பன்+ஏரி].*

**சீவலாத்தி** *civalātti,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர் ; a village in Tiruvādānai Taluk.

*[சீவலன்+ஆத்தி].*

**சீவளி** *civali,* பெ.(n.) மரத்தைச் சீவப் பயன்படுத்தும் கருவி; carpenter's tool.

*[சீவு+உளி].*

**சீவாடி** *civādi,* பெ.(n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Maduranthagam Taluk.

*[சிவன்+பாடி].*

**சீவாளி** *civāli,* பெ.(n.) நாதசுரம் என்னும் ஒலகத்தில் பொருத்தப்பெறும் தக்கை, மட்டை முதலியவற்றால் செய்யப்பட்ட சிறு துண்டு; reed in certain windpipe instruments.

*[தா–தி–சி+வாளி].*

நீண்ட குழல் வடிவிலான இசைக்கருவி. இதில் சீவாளி பொருத்தியே வாசிக்கவியலும்.

**சீனந்தல்** *cina-n-dal,* பெ.(n.) போளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Pōlur Taluk.

*[ஒருகா. சின்னன்–ஏந்தல் (ஏரி)].*

**சீனாங்குடி,** *cinangudi,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள; a village in Tiruvadani Taluk.

*[சின்னன்+குடி].*

**சீனாகாலா** *cinākāla,* பெ.(n.) ஒரு வகைச் சிறு கடல் மீன்; Indian salomon row hall thread fins.

*[சின்னன்+கலா].*

**சீனிக்கற்கண்டு** *cinikkarkandu,* பெ.(n.) ஒரு வகைக் கற்கண்டு; crystal sugar with rough edges.

*[சீனி+கற்கண்டு].*

**சுக்கான்** *cukkān,* பெ.(n.) கப்பலை நடத்தும் கருவி; rudder.

*[சுக்கு–சுக்கான்].*

**சுக்கான்பிடி** *cukkānpidi,* பெ.(n.) தலைமைப் பதவி; helm of office.

*[சக்கான்+பிடி].*

**சுக்குட்டிச் செடி** *cukkutticcedi,* பெ.(n.) மணத்தக்காளிச் செடி; a plant.

*[சுக்குட்டி+செடி].*

**சுசீந்திரம்** *cusindiram,* பெ.(n.) இராசிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Rasipuram Taluk.

**சுங்கர்** *cungar,* பெ.(n.) கி.மு.176 முதல் மகத நாடாண்ட மரபினர்; a ruling class in Magada.

*[சுங்கம்–சுங்கர்].*

மோரியரின் படைத்தலைவனாக இருந்த புசியமித்திரனால் உண்டாக்கப்பட்ட அரசமரபு.

**சுங்கான்** *cungān,* பெ.(n.) அழகற்ற பங்கரை தோற்றமுடையவன்; a person of ugly appearance (மீனவ.)

**மறுவ : பங்கடை, பங்கரை**

*[சோங்கு–சுங்கு–சுங்கான்].*

**சுச்சி** *cucci,* பெ.(n.) பெரிய சக்கரத்தைச் சுற்றும் கருவி; a device used to rotate the big wheel.

*[சுழற்றி–சுழத்தி–சுத்தி–சுச்சி].*

**சுட்டநாக்கன்** *cuttānākkan,* பெ.(n.) கோள் சொல்பவன்; tale bearer. அவன் சுட்டநாக்கன் (மீனவ.)

*[சுடு–சுட்ட+நாக்கன்].*

**சுட்டாமுட்டி** *cuttā-mutti,* பெ.(n.) ஒரு வகை யான இசைக்கலை வழக்குச் சொல்; a term used in music.

*[சுட்டாத+முட்டி)].*

**சுட்டாவன்விளை** *cūttāvanviḷai,* பெ.(n.) அகத்தீச்சுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[சுட்டவான்+விளை, (மிளை–விளை)].*

**சுட்டொலி** *cuttoli,* பெ.(n.) சுட்டிக்காட்டும் ஒலி; deitic sound.

*[சுட்டு+ஒலி].*

**சுடர்முடி** *cudarmudi,* பெ.(n.) சிற்ப நூல்கள் கூறும் மகுட முடிவகை; a feature in sculpture.

*[சுடர்+முடி].*

**சுடுகண்** *cudukan,* பெ.(n.) பவழ வகை மீன் ; pennat coral fish.

*[சுடு+கண்].*

**சுண்டபற்றிவிளை** *cundaparrivilai,* பெ.(n.) அகத்தீச்சுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[சுண்டன்+பற்று+விளை].*

**சுண்டன்** *cundan,* பெ.(n.) சுண்டைக்காய்; vegetable cundai-k-kāy, Indian current tomato.

**மறுவ. சுண்டை**

*[சுண்டை(சுண்டைக்காய்)–சுண்டன்].*

**சுண்டாச்சட்டி** *cundāc-catti,* பெ.(n.) மீத மிருக்கும் குழம்பை ஊற்றி அடுப்பில் சுண்ட வைக்கும் மண்சட்டி; a pot used to reboil the juicy like juice called kulambu.

*[சுண்டான்+சட்டி].*

**சுண்டித் தள்ளுதல்** *cundi-t-talludal,* பெ.(n.) சுண்டுவிரலால் தள்ளுதல்; moving the ball with little finger.

*[சுண்டி+தள்ளுதல்].*

**சுண்டு** *cuṇḍu,* பெ.(n.) உதடு; lips

*[சுள்–சுண்டு].*

**சுண்டு கயிறு** *cuṇḍu kayiṟu,.* பெ.(n.) பொம்மலாட்ட பொம்மைகளில் இணைக்கப் படும் கயிறு; a interwinned slender rope in puppetry

*[சுண்டு+கயிறு].*

**சுண்டுகாரம்** *cuṇḍukāram,* பெ.(n.) குழந்தை பிறந்ததும் தாய்க்குச் சுக்கு, மிளகு போன்ற வற்றை அரைத்துக் கொடுக்கும் காரவகை; curry paste given to the mother of just born baby.

*[சுண்டு+காரம்].*

**சுண்டுகால்** *cuṇḍu-kāl,* பெ.(n.) நரம்புப் பிடிப்பால் காலை இழுத்து நடத்தல்; limping back because of convulsion.

*[சுண்டு+கால்].*

**சுண்டுமுத்து** *cuṇḍu-muttu,* பெ.(n.) விளையாடும் கருவியாகப் பயன்படுத்தும் புளியங்கொட்டை; tamarind seed used as dice.

*[சுண்டு+முத்து].*

**சுண்டுரணி** *cuṇḍuraṇi,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvāḍaṇai Taluk.

*[சுண்டு+ஊருணி].*

**சுண்ணாம்புக்குறி** *cuṇṇāmbu-k-kuṟi,* பெ.(n.) குழி பறிக்கும்போது இடும் சுண்ணாம்புக்குறி; laying lime mark on the working spot

*[சுண்ணாம்பு+குறி].*

**சுண்ணாம்புத் தட்டி** *cuṇṇambu-t-tatti,* பெ.(n.) பதநீர்ப்பானைக்குச் சுண்ணாம்பு தடவ உதவும் மட்டை; a brush used to apply lime to the pot.

*[சுண்ணாம்பு + தட்டி].*

**சுணக்கக்கட்டணம்** *cuṇakka-k-kaṭṭāṇam,* பெ.(n.) காலக் கழிவுக்கான கட்டணம்; late fee.

*[சுணக்கம்+கட்டணம்].*

**சுத்தம்** *cuttam* பெ.(n.) சிற்ப முத்திரை வகையினுள் ஒன்று; a feature in sculpture.

*[தாய்–துய்–சுய்–சுத்தம்].*

**சுத்துக்குழி** *cuttu-k-kuḻi,* பெ.(n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[சுற்று+குழி].*

**சுத்துப்பொலி** *cuttu-p-poli,* பெ.(n.) நெற்குவியலின் சுற்றுப்பகுதி; surrounding place of paddy heap.

*[சுற்று+பொலி]*

**சுத்துமுடிச்சு** *cuttu-muḍiccu* பெ (n) சுற்று முடிச்சு பார்க்க; see cuṟṟu muḍiccu.

*[சுற்று+முடிச்சு]*

**சுதுப்பணங்கரை** *cudupaṇaṅgarai* பெ.(n.) அழகு (அலங்கார) மீன் வகை; silver bellies.

*[சுதுப்பணி+காரை].*

**சுந்தனுடைப்பு** *cundaṇuḍaippu* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[சுந்தன்+உடைப்பு].*

**சுந்து** *cundu,* பெ.(n.) குச்சிகளில் துணி சுற்றிப் பற்ற வைத்த தீப்பந்தம்; fire stick, torch.

*[சுளுந்து–சுந்து (கொ.வ.)].*

**சும்புகா** *cumpugā* பெ.(n.)கூரான பற்களைக் கொண்ட கொடுக்கு மீன்; pale edged sting ray.

*[சூம்பு–சும்புகா].*

**சும்மாட்டுக் கட்டை** *cummāṭṭukkaṭṭai* பெ.(n.) ஆயக்காலில் மோட்டு வலையைத் தாங்கும் கட்டை; wooden role used by fishermen

*[சும்மாடு+கட்டை].*

**சுமைதாங்கி** *cumai-tāṅgi,* பெ.(n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Walaja Taluk.

*[சுமை+தாங்கி].*

**சுருக்கணாம்காரை** *curukkaṇām kārai,* பெ.(n.) அழகு (அலங்கார) மீன் வகை; silver bellies.

*[சுருக்கணம்+காரை].*

**சுருக்காங்கண்ணி** *curukkāṉ-kaṇṇi,* பெ.(n.) முடிச்சுவகை; a kind of knot

*[சுருக்கம்+கண்ணி].*

**சுருக்காமுடி** *curuk-k-āmuḍi,* பெ.(n.) இலகுவாக அவிழ்க்கும்படி போடும் முடிச்சு; a knot easily unfastened

*[சுருக்காத+முடி].*

**சுருட்டுத் தட்டி** *curuṭṭu-t-taṭṭi,* பெ.(n.) மெல்லிய தப்பையால் பின்னப்படும் தட்டி; bamboo splint - side screen.

*[சுருட்டு+தட்டி].*

**சுருட்டைக் கொம்பு** *curuṭṭai-k-komabu,* பெ.(n.) மாட்டின் கொம்புவகை; a horm shape of cow.

*[சுருட்டை+கொம்பு]*

**சுருத்து** *curuttu,* பெ.(n.) சீற்றம்; anger

*[சுரு-சுருத்து].*

**சுருவால்** *curuvāl,* பெ.(n.) கரகாட்டத்தில் (மதுரை) ஆண்கள் அணியும் அரைக்கால் சட்டை; half jacket - worn by karagam folk lorists.

*[சுரு+வால்].*

**சுருள்வீச்சு** *curuḷ-viccu,* பெ.(n.) வீரத்தை வெளிப்படுத்தும் நாட்டுப்புறக்கலை; a martial play.

*[சுருள்+வீச்சு].*

**சுவடிப்பு** *cuvaḍippu,* பெ.(n.) மத்தளத்தை முழக்கும் முறைப்பாடு; method of playing 'mattalam'.

*[சுவடு+வடிப்பு].*

**சுவதாசிகள்** *cuvatāsigaḷ,* பெ.(n.) குடமுழுக்கு போன்ற நிகழ்ச்சிகளில் பரதம் ஆடுபவர்கள்; temple dancers.

*[சுவயம்+தாசிகள்].*

**சுவாத்தன்** *cuvāttaṉ,* பெ.(n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[ஒருகா. சிவத்தன்-சுவாத்தன்].*

**சுவாலை மகுடம்** *cuvālaimaguḍam,* பெ.(n.) சிற்பங்களில் வடிவமைக்கப்படும் ஒரு மகுடம்; crown design seen in statues.

*[சுவாலை+மகுடம்].*

**சுழல் வேகமானி** *cuḻalvēgamāṉi,* பெ.(n.) கடலில் ஏற்படும் சுழற்சி கண்டறியும் அளவை கருவி; lyroscope.

*[சுழல்+வேகம்+மானி].*

**சுழலரை** *cuḻalarai,* பெ.(n.) ஒரு வகையான ஆடல் இயக்கம்; a dance movement.

*[சுழல்+அரை (இடுப்பு)].*

**சுள்ளணி** *cuḷḷaṇi,* பெ.(n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர், a village in Arantangi Taluk.

*[ஒருகா. சூளாமணி-சுள்ளணி]*

**சுள்ளற** *cuḷḷaṟa,* பெ.எ. (adj.) முழுமையாக, மிச்சமில்லாமல்; paying fully without keeping balance. இவன் சுள்ளறக் கொடுத்து விட்டான் (மீனவ.)

*[சுள்+அற]*

**சுள்ளு** *cuḷḷu,* பெ.(n.) பொய்; lie

**க. சுள்ளு**

*[சுல்-சுள்-சுள்ளு]*

**சுள்ளெறும்பு** *cuḷḷeṟumbu,* பெ.(n.) திண்டுக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர், a village in Dindigul Taluk.

*[சுள்(சிறு)+எறும்பு]*

**சுளியன்** *culiyan,* பெ.(n.) சேட்டை செய்பவன் (நெ.வ.வ.சொ.); trouble some person.

*[சுள்–சுளி+அன்]*

**சுளுந்து சுற்றல்** *culundu curral,* பெ.(n.) நுனியில் தீயைப் பற்றவைத்து விளையாடல்; fireball play.

*[சுளுந்து + சுற்றல்]*

**சுற்றலடைவு** *cularraladaivu,* பெ.(n.) சுழன்றாடும் அடைவு வகைகள்; a fast twisting movement in dance.

*[சுற்றல்+அடைவு]*

**சுற்றறிக்கை** *currarikkai,* பெ.(n.) அலுவலகம் போன்ற இடங்களில் செய்திகளைத் தொடர்புள்ளவர்களுக்குத் தெரிவிக்கக் கொடுக்கும் அறிக்கை; circular

*[சுற்று+அறிக்கை]*

**சுற்றுக்கோல்** *currukkōl,* பெ.(n.) அள்ளுதறியில் பாவைச் சுற்றி இழுத்துக் கட்டியிருக்கும் கோல்; a stick used in handloom.

*[சுற்று+கோல்]*

**சுற்றுப்பாண்டி** *curru-p-pāndi,* பெ.(n.) – பல்லாங்குழி ஆட்டவகையில் ஒன்று; a type of pallāṅkuli.

*[சுற்று+பாண்டி]*

**சுற்றுமுடிச்சு** *currumudiccu,* பெ.(n.) முடிச்சு வகை; a kind a knot.

*[சுற்று+முடிச்சு]*

**சுறாவிழுந்தூர்** *curāvilundūr,* பெ.(n). சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர், a Village in chidambaram Taluk.

*[ஒருகா. சிறை(ஏரி) + விழுந்த ஊர்]*

**சூச்சம்** *cūccam,* பெ.(n.) எந்திரம் விசை; machine power.

*[சூழ் – சூச்சம்]*

**சூச்சனி** *cūccani,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர், a village in Tiruvādānai Taluk.

*[சூழ்–சூச்சனி]*

**சூசி** *cūci,* பெ.(n.) பரதத்தில் பின்பற்றப்படும் ஒரு வகையான ஒற்றை முத்திரை நிலை; single hand pose in dance.

*[சூழ்–சூழ்சி–சூசி]*

**சூட்டாங் காய்** *cūttāṅkāy,* பெ.(n.) தேய்த்தால் விரைவில் சூடு உண்டாகும் காய்; a nut which get hot easily when it is rubbed.

*[சூடு+ஆம்+காய்]*

**சூட்டிப்பு** *cūttippu,* பெ.(n.), சுறுசுறுப்பு; active

*[சூடு–சூட்டிப்பு]*

**சூடாமணி** *cūdā - mani,* பெ.(n.), சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர், a village in Sivaganga Taluk.

*[சூளாமணி – சூடாமணி]*

**சூடை** *cūdai,* பெ.(n.), ஒரு வகைச்சிறு கடல் மீன்; fire spot.

*[சூடு–சூடை]*

**சூடோன்** *cūdōn,* பெ.(n.), சோளப்பயிர் வகையிலொன்று ; a type of maize.

*[சூடன்–சூடோன்]*

**சூத்திரகாட்டேரி** *cūttira*kātteri பெ.(n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wandewash Taluk.

*[சூத்திரம்+காட்டேரி. (காளி) காட்டாளி– காட்டேரி]*

**சூதானம்** *cūdānam,* பெ.(n.) பாதுகாப்பு; safe

*[சூழ்து–சூதானம்]*

**சூது தாயம்** *cūdu-tāyam,* பெ.(n.), ஆறு சோழிகளைக் குலுக்கிப் போட்டு விளையாடும் ஆட்டம்; a play with six cowries.

*[சூது+தாயம்]*

**சூந்து** *cūndu* பெ.(n.) நளி ஒளி (கார்த்திகை சோதி) திரு விழாவின் போது வளையத்தில் தீப்பந்தம் சுருட்டி சுற்றுதல்; a fire ball play.

<u>பட.</u> **சூன்சு**

*[சுளுந்து – சூந்து]*

**சூப்பாங் கட்டை** *cūppāṅkaṭṭai,* பெ.(n.), குழந்தை விரலைச் சூப்பிக் கொண்டிருக்க உருவாக்கப் பட்ட கட்டை; a small stick designed for the child to suck instead of finger.

*[சூப்பம்+கட்டை]*

**சூர நாற்றம்** *cūranāṟṟam,* பெ.(n.) முடை வீச்சம் (துர் நாற்றம்); a fowl smell.

*[சூரல்+நாற்றம்]*

**சூரம்புளி** *cūrampuḷi,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர், a village in Tiruvādānai Taluk

*[சூரல்–சூரம்+புளி]*

**சூரன்பாடு** *cūraṉpāḍu,* பெ.(n.) சூரனைக் கொல்லும் காட்சிகள் கலைநயத்துடன் நடித்தல்; enacting the play of killing the demon Cūraṉ.

*[சூரன்+பாடு]*

**சூரிகை** *cūrigai,* பெ.(n.) சிற்பங்களில் காணப்பெறும் ஒரு போர்க்கருவி; a weapon shown in the sculpture.

*[சூர்–சூரிகை]*

**சூசியப்பலகை** *cūsiya-p-palagai,* பெ.(n.) பூ வேலைப்பாடுடைய பலகை; flower designed plank.

*[சூசி+ஆம்+பலகை]*

**சூரியமூலை** *cūriyamūlai,* பெ.(n.) குடமூக்கு (கும்பகோணம்) வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kumbakonam Taluk.

*[சூரியன்+மூலை]*

**சூரை** *cūrai,* பெ.(n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurandagam Taluk

*[சூர்+சூரை(செடி)]*

**சூவிளையாட்டு** *cūviḷaiyāṭṭu,* பெ.(n.) சிறுவர் விளையாட்டு; a children's game. உட்கார்ந்திருப்பவரின் பின்னால் நின்று கொண்டு 'சூ' என்று சொல்லும் விளையாட்டு.

*[சூ+விளையாட்டு]*

**சூல் கதிர்** *cūlkadir,* பெ.(n.), கறுத்து நிற்கும் நெற்கதிர்; a ripened corn of paddy.

*[சூல்+கதிர்]*

**சூலக்கல்** *cūlakkal,* பெ.(n.), பொள்ளாச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Pollachi Taluk.

*[சூலம்+கல்]*

**சூலாடு குத்துதல்** *cūlāḍukuttudal,* பெ.(n.), நாட்டுப்புறச்சடங்குகளில் ஒன்று; a ritual in village.

*[சூலாடு+குத்துதல்]*

**சூழ்–தல்** *cūl-,* செ.குன்றாவி. (v.t) கண்ணால் பார்த்தல், நோக்குதல், to see with the eyes.

**தெ. சூடு. (சூப்பு – பார்வை)**

(சூழ் – கருதுதல், நினைத்தல் பொருட்பாட்டுப் புடை பெயர்ச்சியால் பார்த்தல் பொருள் பெற்றது).

**சூழ்கிளை** *cūlkiḷai,* பெ.(n.) சுற்றம்; relatives. "சூழ்கிளையும் சொற் பொருளும் சோர்வு ஆகும்" (ஜீவ : 46).

*[சூழ்+கிளை]*

**சூழியல்** *cūḷiyal,* பெ.(n.) விளவங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilavancode Taluk.

*[சூழ்+இயல்]*

**சூன்றிடு –தல்** *cūṉṟiḍu,* செ.கு.வி. (v.i) பனங்காயின் உள்ளீட்டுக் குழியிலுள்ள நுங்கினைக் குடைந்தெடுத்தல்; to take the inner pulp of the tender palm fruit 'நுங்கு சூன்றிட்ட கண்' (நாலடி.44)

*[சூல்–சூன்றிடு]*

**செக்காலை** *cekkāli,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk.

*[செக்கு+ஆலை]*

**செகுடி** *cegudi,* பெ.(n.) திருவாடானை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in TiruvādāniTaluk.

*[சே(மரம்)+குடி]*

**செங்கட்டம்** *ceṅkaṭṭam,* பெ.(n.) சதுரங்க விளையாட்டு, chess game.

*[செம்+கட்டம்]*

**செங்கப்படை** *cengappaḍai,* பெ.(n.) திருமங் கலம் வட்டத்திலுள்ள சிற்றூர், a village in Tirumangalam Taluk.

*[செங்கம்+படை]*

**செங்கணாத்தி** *ceṅgaṇātti,* பெ.(n.) அறந் தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[செங்கண்+ஆத்தி]*

**செங்கல்நத்தம்** *cengalnattam,* பெ.(n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wallajah Taluk.

*[செம்+கல்+நத்தம்]*

**செங்கண்** *ceṅgaṇ,* பெ.(n.) அரத்தக் கண், blood shot eye

*[செம்+கண்]*

**செங்கனி** *ceṅgaṉi* பெ.(n.) ஒருவகை மீன், rock cod.

*[செம்+கனி]*

**செங்காடு** *ceṅgāḍu,* பெ.(n.) செய்யாறு வட்டத்தில் மழையூர் சாலையில் கோவிலூர்க்கு அருகே உள்ள ஓர் ஊர்; a village in Ceyyāṟu on the way to Maḻaiyur sālai near the Kōvilūr.

*[செம்+காடு]*

**செங்குஞ்சி** *ceṅkuñji,* பெ.(n.) செம்மயிர்; red hair 'விரி செங்குஞ்சிப் பண்பிலா அரக்கன்'

*[செம்+குஞ்சி]*

**செங்குடி** *ceṅgudi,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk.

*[செம்+குடி]*

**செங்குளி** *ceṅguḷi,* பெ.(n.) நீண்டகத்தி போன்ற மீன்; snapper.

*[செம்+குளி]*

**செங்கோ** *ceṅgō,* பெ.(n.) கடல் கொண்ட குமரிநாட்டுத் தமிழ் வேந்தன், Tamil king of submerged Kumari land. செங்கோவே ஒளிச்செம்மல் (செங்கோன் தரைச்செலவு)

*[செம்+கோ]*

**செங்கோட்டியாழ்** *ceṅkōṭṭiyāḷ,* பெ.(n.) கின்னரி; fiddle.

*[செம்கோடு+யாழ்]*



**செங்கோணி அத்திமல்லன்** *ceṅkōṇi attimallaṉ,* பெ.(n.) வீர ராசேந்திரன் இரண்டாம் ஆட்சியாண்டில் கி.பி. 1180 ஆம் ஆண்டு திருவோத்தூர் கோயிலுக்கு 30 ஆநிரைகளை (பசுக்களை) வழங்கியவன்; a name of donar of 30 cows to Tiruvōttūr temple.

*[செங்கோணி+அத்தி+மல்லன்]*

**செங்கோணி அம்மையப்பன்** *ceṅgōṇi ammaiyappaṉ,* பெ.(n.) திருவோத்தூர் கோயிலுக்கு கொடை வழங்கியவன்; a name of donar to tiruvōttur temple.

*[செங்கோணி+அம்மை+அப்பன்]*

**செங்கோன் தரைச்செலவு** *ceṅkōntarai-c-celavu,* பெ.(n.) மறைந்துபோன தமிழ் நூல்; an ancient Tamil treatise now extinct.

*[செங்கோன்+தரை+செலவு].*

செங்கோன், கடல் கொண்ட பெருவள நாட்டில் ஒளியர் குடியில் தோன்றிய மன்னன். செங்கோ என்ற அழைக்கப்பட்டவன்.

**செஞ்சிட்டு** *cencittu,* பெ.(n.) ஒரு வகைப் பறவை இனம்; miniver.

*[செம்+சிட்டு].*

**செஞ்சில்லை** *ceñjillai,* பெ.(n.) ஒரு வகைப் பறவை இனம்; red mina.

*[செம்+சில்லை].*

**செஞ்சோளம்** *ceñjōlam,* பெ.(n.) சோளவகை; a kind of maize.

*[செம் + சோளம்]*

**செண்பகராயநல்லூர்** *cenbagarāyanallūr,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Tanjāvur.

*[செண்பக+அரையன்+நல்லூர்].*

**செண்டிப்பு** *cenḍippu,* பெ.(n.) குதித்துப் பின்வாங்குதலைக் குறிக்கும் உடலியக்கம்; jump - retreat method in kalari martial fight.

*[செண்டு–செண்டிப்பு].*

**செடல் குத்துதல்** *ceḍal-kuttu,* பெ. (n.) வேண்டுதல் நிறைவேறியபின் பின்பற்றப்படும் நாட்டுப்புறச் சடங்கு; a ritual in temple festival

*[செடல்+குத்து].*

**செடி** *ceḍi,* பெ.(n.) தோண்டிக்கரகத்தைக் காகிதப்பூச்சரங்களால் அழகு செய்வது; decorating the karagam pot with paper flowers.

*[சுவடி–சோடி–செடி].*

**செடி நாற்றம்,** *ceḍi-nāṟṟam,* பெ.(n.) பெண்கள் தீட்டு வந்த நாளில் வீசும் நாற்றம்; fowl smell of menstruation.

*[சோடு–சொடி–செடி].*

**செண்டத்தூர்,** *cenḍattūr,* பெ.(n.) அரக் கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arkonam Taluk.

*[செண்டை+அத்து+ஊர்].*

**செண்டாக்கல்** *cenḍākkal,* பெ.(n.) எல்லைக் கோட்டில் வைக்கப்படும் கல்; border stone.

*[செண்டை+கல்].*

**செத்தமூரல்** *cettamūral,* பெ.(n.)ஒரு வகை மீன்; gat fish.

*[சா–செத்த+மூரல்].*

**செதலப்பதி** *cedalappadi,* பெ.(n.) புதுக் கோட்டை மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Pudukottai district.

*[சிதலை+பதி].*

**செதால்** *cedāl,* பெ.(n.) சிதார்கள்; broken pieces of splint.

*[சிதை–சிதார்–செதால்].*

**செதுவாலை** *ceduvālai,* பெ.(n.) வேலூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk.

*[ஒருகா. சிதல்+வாலை].*

**செந்தமிழ்** *centamiḻ,* பெ.(n.) செம்மையுற்ற தமிழ்; refined Tamil.

*[செம்+தமிழ்].*

**செந்தலை** *centalai,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Thanjāvur.

*[செல்+தலை (இடம்) ].*

**செந்தவிடு** *cendaviḍu,* பெ.(n.) சிவப்பு நெல் பச்சரிசித் தவிடு; brain of red paddy.

*[செம்+தவிடு].*

**செந்தாமரைக் கண்ணன்** *centāmaraik kaṇṇan,* பெ.(n.) மூன்றாம் இராசராசனுடைய ஆட்சியின் போது (1235) திருவோத்தூர் கோயிலுக்கு 2 விளக்குகள் வைக்கக் கொடை அளித்தவன்; name of a donar to Tiruvōttur temple.

*[செம்+தாமரை+கண்ணன்].*

**செந்திட்டு** *cen-tiṭṭu,* பெ.(n.) சேலம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[செம்+திட்டு].*

**செந்தூக்கு** *cendūkku,* பெ.(n.) அகவ லோசை தழுவிய சந்தம்; agaval variety of tune in prosody.

*[செம்+தூக்கு].*

**செந்நவரை** *cennavarai,* பெ.(n.) வெள்ளாட்டு மீன் வகை, golden randed goat fish.

*[செம்+நவரை].*

**செந்நெல் முதுகுடியினர்** *cennelmudu kuḍiyiṉar,* பெ.(n.) மள்ளரின மக்களுக்கு வழங்கும் வேளாண் அடையாளப் பெயர்; a name of Mallar community people.

*[செந்நெல்+முது+குடியினர்].*

**செந்நெல்** *cennel,* பெ.(n.) ஒருவகை மீன்; glassy perchlet.

*[செம்+நெல்].*

**செப்பறை** *cepparai,* பெ.(n.) சீவலப்பேரியில் உள்ள ஓர் ஊர்; name of the village near Seevalapperi in Thirunelveli (dists)

*[செப்பு+அறை].*

**செப்பாயி** *ceppāyi,* பெ.(n.) சிக்கனம் பின்பற்றும் பெண்; a spend thrifty women.

*[செம்+பாயி].*

(செப்பம் + ஆயி – செப்பாயி, செப்பமாகக் குடித்தனம் செய்யும் பெண்)

**செபத்தையபுரம்** *cepattaiyapuram,* பெ.(n.) தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர் name of the village in Thuththukudi.

*[செபம்+அத்து+ஐயன்+புரம்].*

**செம்மொழி** *cemmoḻi,* பெ.(n.) உயர்தனிச் செவ்வியல் மொழி; classical language. மாண்புமிகு முதலமைச்சர் கலைஞர் தமிழுக்குச் செம்மொழித் தகுதிபெற்றுத் தந்தார். (உ.வ.)

*[செம் + மொழி]*

**செம்படாம்** *sembaḍām,* பெ.(n.) சிவந்த கம்பளம்; red carpet "கம்பளம் சிம்புளி செம்படாம் ஆகும்" (நிக.தி. 7 : 282)

*[செம்+படாம்]*

**செம்பரணி** *cemparaṇi,* பெ.(n.) திருமங்கலம் வட்டத்திலுள்ள சிற்றூர். a village in Tirumangalam Taluk.

*[செம்+பரணி]*

**செம்பரம்பன்னி** *cembarampaṉṉi,* பெ.(n.) ஒரு வகை மீன்; rock cod.

*[ஒருகா. செம்பரம்+(பன்றி) பன்னி]*

**செம்பட்டைத்தில்லான்** *cempaṭṭai ttillāṉ,* பெ.(n.) தூக்கணாங்குருவி வகை; a kind of swallow.

*[செம்பட்டை+தில்லான்]*



**செம்பியமங்கலம்** *cembiya maṅgalam,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Thanjavur.

*[செம்பியன்+மங்கலம்]*

**செம்பியன்** *cembiyaṉ,* பெ.(n.) 1. சோழன்; Chola king. 2. சோழர் குடி மரபுகளுள் ஒன்று; one of the Chola dynasties.

*[செம்+செம்பியன்]*

**செம்பியன் மாதேவி** *cembiyaṉ mādevi,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Thanjavur district செம்பியன் மாதேவி சதுர்வேதி மங்கலம். செம்பின் மாதேவி (கல்.).

*[செம்பியன்+மாதேவி]*

**செம்பியனேந்தல்** *cembiyaṉēndal,* பெ.(n.) மதுரை மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Madurai.

*[செம்பியன்+ஏந்தல்(ஏரி)]*

**செம்பில்** *cembil,* பெ.(n.) ஒரு வகை மரம்; a tree.

*[செம் –செம்பு – செம்பில்]*

**செம்பிலிச்சை** *cempiliccai,* பெ.(n.) ஒரு வகை மீன்; snapper.

*[செம்–செம்பிலி–செம்பிலிச்சை]*

**செம்புலம்** *cempulam,* பெ.(n.) 1. செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Chengalpattu. 2. செம்மண் நிலம்; red soil land

*[செம்+புலம்]*

**செம்புழை** *cempuḻai,* பெ.(n.) குலாத்தி பறவையின் வகையுள் ஒன்று; a variety of kulatti bird

*[செம்+புழை]*

**செம்பூட்சேய்** *cempūṭcēy,* பெ.(n.) தொல்காப் பியரின் ஒருசாலை மாணாக்கர்; a classmate of the great Tamil grammarian Tolkappiyar.

*[செம்+பூண்+சேய்].*

**செம்பூத்தன் கூட்டம்** *cempūttaṉkūṭṭam,* பெ.(n.) கொங்கு வேளாளரின் அடையாளக் குடிப் பெயர்களுள் ஒன்று; name of a clan among Kongu Vellalars.

*[செம்போத்து+அன்+கூட்டம்]*

**செம்பூர்** *cembūr,* பெ.(n.) வந்தவாசி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Vandavasi Taluk.

*[செம்பு+ஊர்]*

**செம்பூவம்** *sempūvam,* பெ.(n.)செம்பழுப்பு நிறம் கொண்ட காகம் போன்ற பறவை; a brown coloured bird, resembling crow.

**மறுவ . செம்போத்து.**

*[செம்+பூவம்]*

**செம்மங்குடி** *cemmaṅguḍi,* பெ.(n.) கும்ப கோணத்திற்கு அண்மையில் உள்ள ஓர் ஊர்; a village in Kumbakōnam.

*[செம்மண்+குடி]*

**செம்மடுவு** *cemmaḍuvu,* பெ.(n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[செம்+(மடு) மடுவு]*

**செமத்தியாக** *cemattiyāga,* வி.எ. (adv.), நன்றாக, முழுமையாக; fully, completely, இவன் தப்பாகப் பேசியதால், ஆசிரியரிடம் செமத்தி யாக வாங்கிக் கட்டிக் கொண்டான்.

*[சுமை – சுமத்தி – செமத்தி – செமத்தியாக (கொ.வ.)]*

**செமை** *cemai,* பெ.(n.) 1. சுமை, load 2. கட்டு; bundle

*[சுமை–செமை (கொ.வ)]*

**செய்திப்பறை** *ceydippaṟai,* பெ.(n.) செய்தி பரவலுக்காக (பரிமாற்றத்திற்காக)ப் பயன்படுத் தப்பட்ட பறை; a drum used to convey message.

*[செய்தி+பறை]*

**செய்தி முகவர்** *ceydimugavar,* பெ.(n.) செய்தித்தாள் போன்ற ஊடகத்தார் தம் ஊடகங்களில் வெளியிடுவதற்கான செய்தி களையும் நிகழ்ச்சிகளையும் திரட்டும் பணியியில் ஈடுபடுத்தும் பணியாளர்; news agent, press reporter.

*[செய்தி + முகவர்].*

**செய்யலேரி** *ceyyalēri,* பெ.(n.) திருவண்ணா மலை வட்டத்திலுள்ள சிற்றூர், a village in Thiruvannamalai Taluk.

*[செய்யல் (சிவப்பு)+ஏரி]*

**செய்யாண்டையான சம்புவராய நாச்சி** *ceiyāṇḍaiyāna Sambuvarāya nācci,* பெ.(n.) விசயகண்ட கோபாலனுடைய திருவோத்தூர் கல்வெட்டொன்றில் குறிக்கப்படும் சம்புவ ராயர் மரபில் வந்த தேவரடியார் மகள்; a name of a dancer in temple.

*[செய்யாண்டை+ஆன+சம்புவராயன்+ ஆட்சி]*

**செய்யாத்து வென்றான்** *ceyyāttuvenrān,* பெ.(n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wallajah Taluk.

*[செய்யாறு – செய்யாற்று+வென்றான்]*

**செய்யாற்றை வென்றான்** *ceyyārraivenrān,* பெ.(n.) செய்யாறு வட்டத்தில் அனுக்காவூர் அருகில் உள்ள ஓர் ஊர்; a village in Seyyāru near the Anukkavur.

*[செய்யாறு+ஐ+வென்றான்]*

**செய்யூர்** *ceyyūr,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்தில் மதுராந்தகம் அருகே உள்ள ஓர் ஊர்; a village in Kanchipuram, near the Mathuranthagam.

*[செய்+ஊர்]*

**செயற்பாட்டியல்** *ceyarpāttiyal,* பெ.(n.) நாட்டுப் புறவியல் ஆய்வின் ஒரு கோட்பாடு; a tenet in folklore study.

*[செயல்+பாடு+இயல்]*

**செயற்கை இரை** *cayarkaiirai,* பெ.(n.) மீன்களுக்குப் போடப்படும் உணவு; artificial food for fish.

*[செயற்கை+இரை]*

**செயற்கை முத்து** *cayarkaimuttu,* பெ.(n.) கடலில் உள்ள முத்தைப் போன்று உருவாக்கப் படும் ஒரு வகை முத்து, artificial pearl.

*[செயற்கை+முத்து]*

**செரகு** *ceragu,* பெ.(n.) பாத்தி கட்டி நீர் பாய்ச்சும் முறை; an irrigation method.

*[சிறகு–செரகு]*

**செரிகளியன்** *cerikaliyan,* பெ.(n.) ஒரு வகை கடல் மீன், sea fish.

*[செரி+களியன்]*

**செரிமானி** *cerimāni,* பெ.(n.) செரிமான ஆற்றலை வளர்க்கும் மருந்து; a medicine that induces the action of digestion.

*[செரி+மானி]*

**செரியாநோய்** *ceriyānōy,* பெ.(n.)செரியாமை; disease caused by indigestion.

*[செரியாத+நோய்]*

**செரக்கனூர்** *cerukkanūr,* பெ.(n.) திருத்தணி வட்டத்திலுள்ள சிற்றூர், a village in Tiruthani Taluk.

*[செருக்கன்+ஊர் (செருக்கு–கரும்பு)]*

**செருகுமுடி** *cerugu-mudi,* பெ.(n.) நெல் கொட்டி வைக்கும் பெரிய தாழியின் கீழுள்ள பக்க வாயை மூடுவதற்கு ஏதுவாகச் செருகிப் பொருத்தப்பட்டுள்ள சதுரமான மூடி; square sliding type of lid fixed to the barrel at the bottom.

*[செருகு+மூடி]*

**செருகுடி,** *cerugudi,* பெ.(n.) நாகப்பட்டினம் வட்டத்திலுள்ள சிற்றூர். a village in Nagapattinam Taluk.

*[செரு(வயல்)+குடி]*

**செருவங்கி** *ceruvangi,* பெ.(n.) குடியேற்றம் (குடியாத்தம்) வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Gudiyattam Taluk.

*[செரு+வங்கி]*

**செருப்பறை** *ceripparai,* பெ.(n.) 1. போரின்போது பாடப்படும் பாடல்; song sung at the battle field. 2. போரின் போது முழக்கப்படும் பறை; drums played at the battle field. செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி (புறம்.)

*[செரு+பறை]*

**செல்பூராணி** *celpūrāni,* பெ.(n.) ஒரு வகை மீன், a kind of fish.

*[செல்+(பூரான்) பூராணி]*

**செல்லபிராட்டி** *cellapiratti,* பெ.(n.) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Cenji Taluk.

*[செள்ளை+பெருமாட்டி–பிராட்டி]*

**செல்லுப்பூச்சி** *cellu-p-pūcci,* பெ.(n.) துளை யிடும் பூச்சி; borer insect.

*[செல்+பூச்சி]*

**செல்லூர்**[1] *cellūr,* பெ.(n.) துளு நாட்டில் கடற்கரைக்கு அருகில் இருந்த ஊர்; one of the small village in Thulunadu situated near seashore.

*[செல்(மழை மேகம்)+ஊர்]*

**செல்லூர்**[2] *cellūr,* பெ.(n.) திருநள்ளாற்றி லிருந்து மேற்கே 3 கி.மீ. தொலைவில் உள்ள ஓர் ஊர்; a village, 3 k.m west of Thirunallar.

*[செல்(மழை, மேகம்)+ஊர்]*

**செல்லூர் கிழான்** *cellūrkiḻāṉ,* பெ.(n.) செல்லூரில் வாழ்ந்த நிலக்கிழார்; name of a landlord in cellur village.

*[செல்லூர்+கிழான்]*

**செல்வழி மங்கலம்** *celvaḻimaṅgalam,* பெ.(n.) திருபெரும்புதூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruperumbudur Taluk.

*[செல்வழி(சாலை, பாதை)+மங்கலம்]*

**செல்வாண்டான்** *celvāṇḍāṉ,* பெ.(n.) திருநள் ளாற்று சிவன் கோயில் கல்வெட்டில் உள்ள பெயர்; name found in inscription of Thirunallāru temple. "தென்மலியுடையான் தேவன் செல்வாண்டான் (கல்)"

*[செல்வு (அழகு, உயர்வு) + ஆண்டான்]*

**செலம்பை** *celambai,* பெ.(n.) கரூர் வட்டத்திலுள்ள சிற்றூர், a village in Karur Taluk.

*[சிலம்பு–சிலம்பை]*

**செலவடை** *celavaḍai,* பெ.(n.) ஓமலூர் வட்டத் திலுள்ள சிற்றூர், a village in Omalur Taluk.

*[செலவு+அடை]*

**செலவு** *celavu,* பெ.(n.) ஆளத்தியிலேயே நிரம்பப் பாடுதல்; musical note of fuller length.

*[செல்–செலவு]*

**செலுப்பு** *celuppu,* பெ.(n.) சேலையின் மேல் முந்தியில் காணப்படும் பூ வேலைப்பாடு; flower designs in saree.

*[செலவு–செலுப்பு]*

**செவ்வத்தி** *cevvatti,* பெ.(n.) தேமல், அரிப்பு, பல்வலி முதலியவற்றிற்கு மருந்தாகப் பயன் படும் மரம்; a tree of medicinal use.

*[செவ்+அத்தி]*

**செவ்வாய்க்குற்றி** *cevvāykkuṟṟi,* பெ.(n.) கொம்பு விளையாட்டுக்காகக் கொண்டு வரப்படும் ஒரு மரக்குற்றி; a wooden piece used in kombu play.

*[செவ்+வாய்+குற்றி]*

**செவ்வாய்ப்பேட்டை** *cevvāppēṭṭai,* பெ.(n.) சேலம் நகரில் உள்ள ஓர் ஊர்; a village in Salem.

*[செவ்வாய் (கிழமை)+பேட்டை]*

**செவ்வாலி** *cevvāli,* பெ.(n.) கெண்டை மீன்வகையுள் ஒன்று; carnatic carp.

*[செம்–செவ்+வாலி]*

**செவ்வாளி** *cevvāḷi,* பெ.(n.) ஒரு வகைக் குருவி இனம்; a variety of swallow.

*[செவ்+வாளி(அம்பு)]*

**செவ்விசை** *cevvisai,* பெ.(n.) நாட்டுப்புற இசையில் இருந்து வளர்ந்த ஓர் இசைவகை; a musical note developed from folksong.

*[செவ்+இசை]*

**செவிக் கோனை** *cevikkōṉai,* பெ.(n.) திருவோத்தூர் கோயிலுக்குப் படையல் (சாதம்) வழங்கியவன் பெயர்; name of a person who made food offering in Tiruvottur temple.

*[ஒருகா. செவ்வி+கோனன்]*

**செவிடன்காடு** *ceviḍaṉ-kāḍu,* பெ.(n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; name of a village in Arantāngi Taluk.

*[செவிடன்+காடு]*

**செவி–த்தல்** *cevi-,* செ.கு.வி. (v.i) 1. செவிக் கொள்ளுதல்; to hear. 2. பாடங்கேட்டல்; to listen lesson. "குவித்து மனத்தைக் குவிந் துள்ளே ஓங்கிப் செவித்தும் பெறுவது எவன்" (ஔவைக்குறள். 284)

*[செவ்வு–செவி]*

**செவியுணவு** *cevi-y-uṇavu,* பெ.(n.) செவியுணவாகிய கேள்வி; listening; (wisdom - food). 'செவியுணவின் கேள்வி உடையார்' (குறள். 413)

*[செவி + உணவு]*

**செவிலிமேடு** *cevilimēḍu,* பெ.(n.) செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Chengalpattu.

*[ஒருகா. செவ்வல்+மேடு]*

**செவுள்இதழ்** cevuḷidaḻ, பெ.(n.) மீனின் காதுப்பகுதி; gill rake.

*[செவி+உள்+இதழ்]*

**செவுள் இழை** *cevuḷiḻai,* பெ.(n.) மீனின் காதுப் பகுதியில் ஒளிரும் இழை; gill filament.

*[செவி+உள்+இழை]*

**செழுங்கிரியம்** *ceḻuṅkiriyam,* பெ.(n.) புருவநடு; space between the eyebrows. "செண்டு வெளியிற் செழுங்கிரியத்திடை கொண்டுகுதிரை குசைசெறுத் தாரே" (திருமந்.601)

*[செழும்+கிரியம்]*

**செளுகை** *ceḷugai,* பெ.(n.) திருவாடானை வட்டத்துச் சிற்றூர்; a village in Tiruvādāṉai Taluk.

*[செழுவை–செளுகை]*

**செளுவத்தி** ceḷuvatti,பெ.(n.) திருவாடாணை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādāṉai Taluk.

*[செழுவை+அத்தி]*

**செறுங்கடம்பூர்** *ceṟuṅkaḍambūr,* பெ.(n.) மயிலாடுதுறைக்கு 16 கி.மீ. தொலைவில் உள்ள ஓர் ஊர்; a village 16km from Mayiladuturai.

*[செறு (வயல்)+கடம்பு+ஊர்)]*

**செனை** *ceṉai,* பெ.(n.) உழும்போது கலப்பையின் கொழுவில் சிக்கிக் கொள்ளும் செடி, கொடி, மண் போன்றவை; vegetation and earth clot that sticks to the plough.

*[சில்–சினு–செனை]*

**சென்னகரை** *ceṉṉakarai,* பெ.(n.) வெள்ளாட்டு மீன்; goat fish

*[ஒருகா. சின்ன+நவிரை]*

**சென்னகிரி** *ceṉṉaikiri,* பெ.(n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[சென்னன்+கிரி]*

**சென்னாகூனி** *ceṉṉākūṉi,* பெ.(n.) கடலில் இருக்கும் மீன் வகைகளுள் ஒன்று; a variety of seafish.

*[சின்ன + (குன்னி) கூனி]*

**சென்னலேரி** *ceṉṉalēri,* பெ.(n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wallajah Taluk.

*[ஒருகா. சேய்நலன்+ஏரி]*

**சேக்கனூர்** *cēkkanūr,* பெ.(n.) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk.

*[சேக்கன்+ஊர்]*

**சேகண்டி** *cēgaṇḍi,* பெ.(n.) கோல் கொண்டு அடிக்கும் வட்டமணி; bell. "எறி மணி சேகண்டி" (நி.க.பி : 6:161)

*[(கை) –செய்+கண்டி]*



**சேகண்யம்** *cēgaṇyam,* பெ.(n.) பொன்னேரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ponneri Taluk.

*[செய்(வயல்) + காணி+அம்]*

**சேகணம்** *cēgaṇam,* பெ.(n.) ஒரு வகையான இசைக்கருவி a kind of musical instrument.

*[சேகண்டி+சேகணம்]*

**சேகல்** *cēgal,* பெ.(n.) நன்னிலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Nannilam Taluk.

*[ஒருகா. செவல்+செகல்+சேகல்]*

**சேங்காலிபுரம்** *ceṅgālipuram,* பெ.(n.), தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Thanjavur.

*[ஒருகா. சேங்காலி (சேங்கன்று+புரம்)]*

**சேடுகட்டை** *cēḍukaṭṭai,* பெ.(n.) சேலையில் அகலத்தை ஒரே சீராக வைக்க உதவும் ஊசி முள்; a needle like tool used in loom.

*[சேடு+கட்டை]*

**சேண்பாக்கம்** *cēṇpākkam,* பெ.(n.) வட ஆர்க்காடு மாவட்டத்தில் பாலாற்றுக்கு அருகில் உள்ள ஓர் ஊர்; a village in north Arcot, near the Palāṟu river.

*[சேண்+பாக்கம்]*

**சேணியன்** *cēṇiyan,* பெ.(n.) செக்கான்; oil monger.

*[ஒருகா. செய்+நன்]*

**சேத்துப்பட்டு** *cēttuppaṭṭu,* பெ.(n.) சென்னையில் உள்ள ஓர் ஊர்; a place in Chennai city.

*[சேற்று+பட்டு]*

**சேத்தியார் தோப்பு** *cēttiyārtōppu,* பெ.(n.) புவனகிரியிலிருந்து 10 மீ தொலைவில் உள்ள ஓர் ஊர்; a village 10 k.m from Puvanagiri.

*[ஒருகா. சாத்து – சாத்தியர் (வணிகர்) – சாத்தியார்+ தோப்பு]*

**சேதாம்பல்** *cēdāmabal,* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[செய்யது(சிவப்பு)–சேது+ஆம்பல்]*

**சேதிராய நல்லூர்** *cedirāyanallūr,* பெ.(n.) தென்னார்க்காடு மாவட்டத்தில் அமைந்துள்ள ஓர் ஊர்; a village in South Arcot.

*[சேதி+அரையன்+நல்லூர்]*

**சேந்தநதி** *cēndanadi,* பெ.(n.) அருப்புக்கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[சிவந்த–சேந்த+நதி]*

**சேந்தமங்கலம்** *cēndamaṅgalam,* பெ.(n.), (மதுரை) பாண்டிய நாட்டில் உள்ள ஓர் ஊர்; a village in Pandiyanādu (Madurai).

*[சேந்தன்+மங்கலம்]*

**சேந்து-தல்** *cēndu-,* செ.குன்றாவி (v.t.) நீர் இறைத்தல்; to draw water, அவள் தண்ணீர் சேந்துகிறாள் (கொங்.வ.)

*[சேண்+து – சேந்து]*

**சேப்பாடு** *cēppāḍu,* பெ.(n.) சிவந்த (செவலை) நிறமுடைய செம்மறியாடு; a sheep of brown colour.

*[சிவப்பு – சேப்பு+ஆடு]*

**சேமங்கரி** *cēmaṅgari,* பெ.(n.) தோன்றியங்கள் (ஆகமங்கள்) கூறுகின்ற காளி சிற்பத்தின் வேறோர் வடிவம்; a different variety of the shape of the sculpture goddess Kāli.

*[ஒருகா. சிம்மம்+காளி]*

**சேமங்குதிரை** *cēmaṅ-kudirai,* பெ.(n.) அய்யனார் தெய்வம் அமர்ந்து இருக்கும் குதிரைச்சிலை; a figure of Ayyanar's horse.

*[ஒருகா. சாமன் சேமன்+குதிரை]*

**சேமன்திருக்கை** *cēmaṉtirukkai,* பெ.(n.) திருக்கை மீன் வகையுள் ஒன்று; whipsting ray.

*[சாமன்–சேமன்+திருக்கை]*



**சேய்ஞ்ஞலூர்** *cēyññalūr,* பெ.(n.) கும்பகோணம் வட்டத்தில் 'திருவாய்ப்பாடி' என்று அழைக்கப் படும் ஊர் ; a village in Kumbakonam Taluk.

*[சேயன்+நல்லூர்]*

**சேயான்** *cēyāṉ,* பெ.(n.) ஒட்டன், பாட்டனுக்குப் பாட்டன்; great - great - grandfather. "பாட்டனுக்கு மேல் பூட்டன், பூட்டனுக்கு மேல் ஒட்டன், ஒட்டனுக்கு மேல் உறவில்லை" (பழ.)

*[சே(ய்மை) + ஆன்]*

**சேர்க்கலூர்** *cērkkalūr,* பெ.(n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakurichi Taluk.

*[செறு+கால்+ஊர்]*

**சேர்ப்பன்** *cērppaṉ,* பெ.(n.) நெய்தல் நிலத் தலைவன்; chieftain of seashore track சேரே திரட்சி (தொல். சொல் 363).

**தெ. சேர்க (மக்கள் குழு. தொகுதி)**

*[சேர்–சேர்ப்பன்]*

**சேர்ப்பெழுத்துப்பா** *cērppeḻuttuppā,* பெ.(n.) ஒரு பொருள் பயப்பதோர் சொற்கூறி அச் சொல்லொடு, ஒரே எழுத்தாகக் கூட்ட வகை; verse composed with a play on words, by adding or deleting letter to words which give different meaning as in kam, nagam, kanagam, kokanagam, or kā, kāvi, kāviri.

*[சேர்ப்பு+எழுத்துப்பா]*

எ–டு. கம், நகம், கனகம், கோகனகம் அல்லது கா–காவி–காவிரி.

**சேர்பேடு** *sērpēḍu,* பெ.(n.) பொன்னேரி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Ponnēri Taluk.

*[ஒருகா.செரு+பேடு]*

**சேர்வை** *cērvai,* பெ.(n.) எட்டுகட்டு வெற்றிலை; eight fold bundles of betel.

*[சேர் – சேர்வை].*

**சேரக்காற்று** *cērakkāṟṟu,* பெ.(n.) கீழ்க்காற்று; easterly wind

*[சேரல் (சேரன் தீவுஇலங்கை) + காற்று]*

**சேரடி மூலை** *cēraḍimūlai,* பெ.(n.) ஆத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Attur Taluk.

*[சேரடி+மூலை]*

**சேரமாதேவி** *cēramādēvi,* பெ.(n.) திருநெல் வேலி மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Thirunelveli.

*[சேரமான்+தேவி]*

**சேரமான் இளங்குட்டுவன்** cēramāṉ ilaṅkuṭṭuvaṉ, பெ.(n.) சேரனின் சங்ககால இயற்பெயர்; name of a person of Cera clan.

*[சேரமான்+இளங்குட்டுவன்]*

**சேரமான் எந்தை** *cēramāṉ endai,* பெ.(n.) சங்ககால சேரமரபினன்; a person of Cera clan in during sangam age.

*[சேரமான்+எந்தை]*

**சேரமான் மாரிவெண்கோ** *cēramāṉ mārivenkō,* பெ.(n.) சேரமன்னன்; a Cera king.

*[சேரமான்+மாரிவெண்கோ]*

**சேராங்கொட்டை** *cērāṅkoṭṭai,* பெ.(n.) மருந்துக்குப் பயன்படும் மரம்; a tree of medical use.

*[சேரான்+கொட்டை]*

**சேராமாறி** *cērāmāṟi,* பெ.(n.) யாரோடும் ஒட்டாதவன்; a seclude person

*[சேரான்+மாறி]*

**சேராமுட்டு** *cērāmuṭṭu,* பெ.(n.) செய்யாறு வட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Ceyyāṟu

*[சேரான்+முட்டு]*

**சேரிகோன்** *cērikōṉ,* பெ.(n.) மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் கி.பி.1314ஆம் ஆண்டில் திருவாய்ப்பாடி நாட்டவர் அவையில் இருந்த ஓர் உறுப்பினன்; a member in the assembly of Tiravaypadi.

*[சேரி+கோன்]*

**சேரிமொழி இலக்கியம்** *cērimoḻiilakkiyam,* பெ.(n.) உரையாடலும், பொதுமக்களின் மொழியும் இசையும் கலந்த இலக்கிய வகை; layman literature.

*[சேரி+மொழி+இலக்கியம்]*

**சேல்கெண்டை** *cēlkeṇḍai,* பெ.(n.) கெண்டை மீன் வகையுள் ஒன்று, white sardine.

*[சேல்+கெண்டை]*

**சேலவாயல்** *cēlavāyal,* பெ.(n.) செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Chengalpattu.

*[ஒருகா. செலவு+வாயில்]*

**சேவாட்டம்** *cēvāṭṭam,* பெ.(n.) ஒரு வகையான ஒயில் ஆட்டம்; a folk dance.

*[சேவை+ஆட்டம்]*

**சேவூர்** *cēvūr,* பெ.(n.) அவினாசி வட்டத்தில் அமைந்துள்ள ஓர் ஊர்; a village in Avinasi.

*[சேவு+(காளை)+ஊர்]*

**சேவூர்** *cēvūr,* பெ.(n.) வேலூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Vellore.

*[சேவு(எருது)+ஊர்]*

**சேற்றுக்கால் செல்வர்கள்** *cēṟṟukkāl selvargaḷ* பெ.(n.) மள்ளர் இன மக்களைக் குறிக்கும் பெயர்; a term referring to Mallar community.

*[சேறு+கால]*

**சேற்றுமடு** *cēṟṟumaḍu,* பெ.(n.) களிமண் கலவை; puddle.

*[சேறு+மடு]*

**சேறு-தல்** *cēṟu,* செ.கு.வி.(v.i.)புடைத்தல்; to winnow.

மறுவ. தென்னு, மாற்றுதல் புடைத்தல் கொழித்தல்.

க. கேறு; தெ. செறுகு; ம. சேறுமுறம்

*[செறு-சேறு]*

**சேறுவை-த்தல்** *cēṟuvai-,* செ.கு.வி. (v.t), நாற்று நடுவதற்குப் பதமாகச் சேறு அமையும் வகையில் உழுது வைத்தல்; to plough softly so as to enable implant sapling.

*[சேறு+வை]*

**சேறு** *cēṟu,* பெ.(n.) தவசங்களைக் கொட்டி வைக்கப்பயன்படும் தாழி; a barrel like utensil to store food grains.

*[செறு-(செறி)>சேறு]*

**சேனமீன்,** *cēṉamīṉ,* பெ.(n.) விலாங்கு மீன் வகையுள் ஒன்று; giant moray eel.

*[சேனை+சேன+மீன]*



**சேனல்** *cēṉal,* பெ.(n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vandavāsi Taluk.

*[ஒருகா. செந்நெல்-சேனல்]*

**சைவசேகரப் பண்டிதன்** *caivasēgarap paṇḍidaṉ,* பெ.(n.) திருவோத்தூர் கல்வெட்டில் திருவுண்ணாழிகை அவையில் ஓர் உறுப் பினராக குறிப்பிடப்பட்டவன். இவரது காலம் கி.பி.16 ஆம் நூற்றாண்டு; a member of Tiruvaṇṇaḻigai avai as per Tiruvottur inscription in 16th Century AD.

*[சைவ+சேகரன்+பாண்டியன்]*

**சைவாதி ராசய்யபட்டன்** caivadi rāsaiyya paṭṭaṉ, பெ.(n.) இளமுலை நாச்சி அம்மன் கோயில் கல்வெட்டில் தேவரடியாருக்கு நிலம் வழங்கிய போது கையெழுத்து இட்டவர்களில் ஒருவன். இவனது காலம் 16-17 ஆம் நூற்றாண்டு; name of a person mentioned in temple inscription.

*[சைவாதி+ராசய்யா+பட்டன்]*

**சொக்கட்டான்** *cokkaṭṭāṉ,* பெ.(n.) பல்லாங்குழி ஆட்டத்தின் பெயர். (வடஆ-வ); a name of pallankuli.

*[சொக்கு-சொக்கட்டார்]*

**சொக்கம்** *cokkam,* பெ.(n.) பாடலின்றி, வெறும் முழக்குதலுக்கு மட்டும் ஆடும் ஆடல்; dance

without song.

*[சொக்கு–சொக்கம்]*

**சொக்கானை** *cokkāṉai,* பெ.(n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madukulattūr Taluk.

*[சொக்கு (மயக்கம், மதம்) + யானை]*

**சொட்டவாளை** *coṭṭavāḷai,* பெ.(n.) வாளைமீன் வகையுள் ஒன்று; thread, gin bream.

*[சொட்டை+வாளை]*



**சொட்டிக்கட்டை** *cotti-k-kaṭṭai,* பெ.(n.) வில்லுப் பாட்டில் குடத்தின் கழுத்துப் பகுதிக்குக் கீழே தட்டி, ஒலியெழுப்ப உதவும் மரத்துண்டு; a wooden piece used as a tool in folk lore.

*[சொட்டு–சொட்டி+கட்டை]*

**சொடுக்கு வாதம்** *coḍukkuvādam,* பெ.(n.) மாடுகளின் காலைச் சொடுக்கி இழுக்கும் ஊதை (வாதம்); a disease of cows.

*[சொடுக்கு+வாதம்]*

**சொடுக்கு** coḍukku, பெ.(n.) கரண்டி; a laddle.

*[சொடு–சொடுக்கு]*

**சொர்னாழி** *corṅāḻi,* பெ.(n.) பறையிசைக் கூட்டியத்தில் இடம்பெறும் ஊதுகுழல்; a wind pipe of played in drum play.

*[சுரை+நாடு]*

**சொரண்டி** *coraṇḍi,* பெ.(n.)களை எடுக்கும் கருவி; a weed removing implement.

*[சுர–சுரண்டி–சொரண்டி]*

**சொரத்தூர்** *corattūr,* பெ.(n.) கடலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Cudalore Taluk.

*[சுரம்+அத்து+ஊர்]*

**சொரையூர்** *coraiyūr,* பெ.(n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wallajah Taluk.

*[சுரம்–சுரை+ஊர்]*

**சொதப்பு–தல்** *coda-p-pu-,* செ.குன்றாவி (v.t.)

1. குழப்பு, குழப்பமடையச் செய்தல்; to confuse
2. சேறாக்குதல்; to make mire.

*[சொது–சொதப்பு]*

**சொல்லாடல்** *collāḍal,* பெ.(n.) 1) பேசுதல் : speaking சொல்லாடாள் சொல்லாடாள் நின்றாள் (சிலம்). 2) சொல்விளையாட்டு; word game of children. 3) எதிராடல் ; speaking against of. சொல்லாடாதே என்றால் நீ கேட்க மாட்டாய் போலிருக்கிறது.

*[சொல்+ஆடல்].*

**சொல்லாய்வு** *col-l-āyvu,* பெ.(n.) சொல்லின் வேர், தோற்றம், வளர்ச்சி மாற்றம்பற்றிய ஆய்வு; study on the origin and history of words and etymology.

*[சொல் + ஆய்வு].*

**சொல்லாராய்ச்சி** *collārāycci,* பெ.(n.) சொல், சொற்பொருள் ஆகியவற்றின் தோற்றம், வரலாறு ஆகியன பற்றிய ஆய்வு; study on words.

*[சொல்+ஆராய்ச்சி]*

**சொல்லியல்நூல்** *col-l-iyalnūl,* பெ.(n.) சொல்லின் தன்மை, வகைப்பாடு முதலிய வற்றை கூறும் நூல்; work on etymology.

*[சொல்+இயல்+நூல்]*

**சொழங்குணம்,** *coḻankuṇam,* பெ.(n.) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Senji taluk.

*[சோழன்+குண்டம்]*

**சொளமாடு-தல்** *cola-mādu,* செ.கு.வி. (v.i.) ஒரு குறிப்பிட்ட பகுதியிலேயே சுற்றிச் சுற்றி வருதல்; to wander around a particular place.

*[சுலவு+ஆடுதல்]*

**சொற்குன்றல்** *corkunral,* பெ.(n.) சொற்குற்றம் பார்க்க, see sor kurram "சொற்குன்ற லின்றித் தொழுமின்" (திருமந் 279)

*[சொல்+குற்றம்]*

**சொற்போர்** *corpōr,* பெ.(n.) எதிராடல், தருக்கம்; logic

*[சொல்+போர் (மற்றவர் பேச்சுக்கு மறுப்பு தரும் திறன்)]*

**சொற்றிறம்** *corriram,* பெ.(n.) சொல்வன்மை; eloquence command on language.

*[சொல் + திறம்]*

**சொன்னலம்** *connalam,* பெ.(n.) சொல்லின் பயன்; good effect of good words. முளைநலமே விளைநலத்தைத் தெரிவித்தல் போல், மக்களின் சொன்னலமே அவர் செயல் நலத்தையும் தெரிவிக்கும். (குறள்.959, தமிழ் மரபுரை).

*[சொல்+நலம்]*

**சோக்காடி,** *cōkkādi,* பெ.(n.) கிருட்டிணகிரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Krishnagiri Taluk.

*[சொக்கன்+பாடி]*

**சோகண்டி,** *cōgandi,* பெ.(n.) செங்கற்பட்டு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chengalpet Taluk.

*[சேகண்டி-சோகண்டி]*

**சோகத்தூர்,** *cōgattūr,* பெ.(n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vandavāsi Taluk.

*[சொகுத்தன்+ஊர்]*

**சோகினி** *cōgini,* பெ.(n.) நள்ளிரவு முதல் அதிகாலை வரை பாடத்தக்க பண்; a music note sung at night.

*[சொக்கு-சொக்கினி-சோகினி]*

**சோடியாட்டம்** *cōdi-yāttam,* பெ.(n.) பல்லாங்குழியில் இருவர் ஆடும் ஆட்ட வகை; a doubles play of pallankuli game.

*[சுவடி+சோடி]*

**சோடு** *cōdu,* பெ.(n.) வாயகன்ற பெரிய ஏனம்; big vessel.

*[தோடு-சோடு]*

**சோடேந்தல்** *cōdendal,* பெ.(n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulathur Taluk.

*[சோழன்(சோமன்)+ஏந்தல் (ஏரி)]*

**சோணா** *cōnā,* பெ.(n.) விடாப்பெரு மழை; incecent rain. "சோணா மேகம் பொழிவது போல்" (வி.பா:45:135)

பட. சோனெ

*[சோணை-சோணா]*

**சோத்தாங்கை** *cōttāngai,* பெ.(n.) உண்ணும் கை (வலது கை); right hand.

*[சோற்று+ஆம்+கை]*

**சோத்துப்பட்டை** *cōttu-p-pattai,* பெ.(n.) மூங்கிலின் உட்பகுதிச் சோறு; inner pulp of bamboo.

*[சோறு+பட்டை]*

**சோபானை** *cōbānai,* பெ.(n.) வெற்றுக் குழியாகத் தோன்றும் நிலை; appearance of an empty pit.

*[குப்பல்-சோபானை]*

**சோம்பன்,** *cōmban,* பெ.(n.) வண்டின் ஒரு வகை; a beetle.

*[சோம்பு-சோம்பின்]*

**சோமாசி,** *cōmāsi,* பெ.(n.) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramagudi Taluk.

*[சோ(எயில், கோட்டை) + மாசி]*

**சோமாசு பாடி** *cōmasupādi,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Kanchipuram.

*[சோ(கோட்டை)+மாசி+பாடி]*

**சோயிசி** *cōyisi,* பெ.(n.) இராமநாதபுரம் பரமக்குடி வட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Ramanathapuram (Dist.) Paramakudi (Taluk).

*[சோமாசி - சோயிசி]*

**சோலணி,** *cōlaṇi,* பெ.(n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantāngi Taluk.

*[சோலை+அணி]*

**சோழ மாருதி நல்லூர்** *cōla mārud inallūr,* பெ.(n.) மன்னார்குடி வட்டத்தில் அமைந்துள்ள ஓர் ஊர்; a village in Mannarkudi.

*[சோழன்+மருதன்+நல்லூர்]*

**சோழவர்தான்** *cōlavandān,* பெ.(n.)மதுரை மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Madurai.

*[ஒருகா. சோழன்+வென்றான்]*

**சோழகங்கம்** *cōlagaṅgam,* பெ.(n.) இராசேந்திர சோழன் கட்டிய பொன்னேரி நீர்நிலை; a large write reservation made by the great Chola emperor Rajendra Chola.

*[சோழன்+கங்கம் (நீர்நிலை)]*

**சோழகம்** *cōlagam,* பெ.(n.) தென்காற்று : southern wind.

*[சோழம்+சோழகம்]*

பாய்மரக்கப்பலை முதலில் கண்டுபிடித்த சோழன் வளிதொழில் ஆண்டவன் என்பதால் தென்காற்று சோழகம் எனப்பட்டது.

**சோழிக்காசு** *cōli-k-kāsu,* பெ.(n.) பண்ட மாற்றுக் காலத்தில் காசாக ஆளப்பட்ட சோழிகள்; cowries used as currency in Africa and Asia.

*[சோழி+காசு]*

நான்கு சோழி ஒரு விடுகாசு, 320 விடுகாசு ஒரு உருபாய் என்பது பழைய கணக்கீட்டு முறை.

**சோளக்குழி** *cōla-k-kuli,* பெ.(n.) சோளம் போட்டு வைக்க பயன்படும் நிலக்குழி; underground store room for storing food grains.

*[சோளம்+குழி]*

**சோற்றுப் பாக்கம்** *cōttuppākkam,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டத்தில் வந்தவாசியிலிருந்து செங்கற்பட்டுக்குச் செல்லும் சாலையில் உள்ள ஊர்; a village in Kanchipuram, on the way to Wanthavasi Chengalpattu salai.

*[சோற்று+பாக்கம்]*

**சோற்றுப்பானை** *cōṟṟuppāṉai,* பெ.(n.) சமையல் செய்வது போல் சிறுமியர் நடித்து விளையாடுதல்; a play of young girls as if they are cooking with pot.

*[சோற்று+பானை]*

**சோனாங்கெளுத்தி** *cōṉaṅkeḷutti,* பெ.(n.) கெளுத்தி மீன் வகையுள் ஒன்று; long whiskerred cat fish

*[சோனை+ஆம்+கெளுத்தி]*



**சௌகர்** *coukar,* பெ.(n.) ஒரு வகை மீன் இனம்; a kind of fish.

*[செவுக்கர்–சௌகர்]*

**சௌசின்** *coucin,* பெ.(n.) இந்தியக் காடுகளில் காணப்படும் நான்கு கொம்புகள் கொண்ட உயிரினம்; a four horned wild animal.

*[சதுரம் (நான்கு) – சௌரம்]*

**சௌக** *causu,* பெ.(n.) ஓடப்பாட்டில் முதலில் பாடப்படுவது; beginning song of the boatmen folk songs.

*[சோ (ஒலிக் குறிப்பு) – சௌசு]*

**ஞெள்ளன்** *ñeḷḷañ,* பெ.(n.) பழங்கால இயற் பெயர்; a proper name. ஞெள்ளா வா (இலக். உரை).

**ம. நெளியுக (நிமிர்தல்), நெளிச்சு நடக்குக.**

*[ஞெள்ளுதல் – நிமிர்தல். ஞெள்ளன் – நிமிர்ந்தவன் நெடியவன் – உயரமானவன் – யாருக்கும் பணியாதவன்).]*

# த

**தக்கட்டி** *takkaṭṭi,* பெ.(n.) ஒசூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Hosur Taluk.

*[தேக்கு>(தக்கு+அட்டி]*

**தக்கடிக்காரன்** *takkaḍi-k-kāraṉ,* பெ.(n.) ஏமாற்றுக்காரன்; a man of guile, treachery.

*[தக்கடி+காரன்]*

**தக்கடிவித்தை** *takkaḍi-vittai,* பெ.(n.) செப்படி வித்தை; deceitful tricks.

*[தக்கடி+வித்தை]*

**தக்கடை** *takkaḍai,* பெ.(n.) கைத்தறி நெசவில் நாடாவைச் செலுத்த உதவும் தோற் கருவி; a leather implement used in handloom weaving.

*[தக்கு – தக்கடை]*



**தக்கம்** *takkam,* பெ.(n.) பல்லாங்குழியின் வெற்றுக்குழியின் பெயர்; empty pit in pallāṅkuḻi, an indoor game.

*[தக்கு – தக்கா]*

**தக்கனாதி** *takkāṉādi,* பெ.(n.) குறிஞ்சியின் முப்பத்திரண்டு பண்களில் ஒன்று; one of the 32 melody types of 'kuriñji'.

*[தெற்கு–தக்கு –தக்கன் +ஆதி]*

**தக்குத்தகான** *takkuttakāṉa,* பெ.அ. (adj.) கண்மூடித்தனமான, வகைதொகையற்ற; indiscriminate.

*[தக்கு+தகா+அன்]*

**தக்குத் தொண்டை** *takku-t-toṇḍai,* பெ.(n.) தாழ்ந்த குரல்; low voice. 'தக்கிலே பாடுகிறார்' (உ.வ.).

*[தாழ்+கு, தக்கு+தொண்டை. தக்கு = தாழ்வு]*

**தக்கேசி** *takkēśi,* பெ.(n.) பழம்பெரும் பண்; a ancient melody type.

*[தக்கம் + தக்கேசி]*

**தக்கை** *takkai,* பெ.(n.) பிரிகளை இணைக்கும் கருவி; an implement used in weavers loom.

*[தகுகை–தககை]*

**தகடி** *takaḍi* பெ.(n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[தகர்–தகரி – தகடி – (தகர் – ஆட்டுக்கடா)]*

**தகடை** *tagaḍai* பெ.(n.) வண்டிச் சக்கரம்; wheel of a cart.

*[தகள்–தக்கு–தகடை]*



**தகரி** *tagari,* பெ.(n.) தொடரிக் கோவை போன் றமைந்த சக்கரத்தைக் கொண்டு இயங்கவல்ல பெரும் படைக்கலன்; an armoured, enclosed, armed vehicle moving on caterpillar wheels, tank.

*[தகர் > தகரி - பெரும் தடைகளையும் தகர்க்கவல்லது]*



**தகுணி** *taguṇi,* பெ.(n.) தகுணிச்சம் எனும் இசைக்கருவி; an musical instrument used to tenor in music.

*[தகுச்சம் – தகுணி]*

**தகுள்–தல்** *tagul-,* 16 செ.கு.வி.(v.t.) 1. சிக்கிக்கொள்ளுதல், அகப்பட்டுக் கொள் ளுதல்; to stick. 2. கோத்தல்; to string. 3. பொருத்துதல்; to fit.

*[தகு>தகுள்]*

**தகையணங்கு** *tagaiyaṇaṅgu,* பெ.(n.) கள்ளப் புணர்ச்சி கொண்ட பெண்; woman who had illicit intercourse. (சா.அக.).

*[தகை+அணங்கு]*

**தங்கடம் சொல்–(லு)–தல்** *taṅgaḍamšol-,* 8 செ.குன்றாவி. (v.t.) நாட்டுப்புறக் கலைகளில் ஒன்றான குறி சொல்லல்; to fortune tell by a priest possessed by a deity.

*[தங்கடம்+சொல்–,]*

**தங்கப்பிரமி** *taṅga-p-pirami,* பெ.(n.) பொன் னாக்கம் (வாதவித்தை); alchemy (சா.அக.).

*[தங்கம்+பிரமி]*

**தங்கரேக்கு** *taṅga-rēkku,* பெ.(n.) உயர்ந்த பொன்னினால் அடித்த மெல்லிய தகடு; thin foils or sheets of refined gold. (சா.அக.).

*[தங்க(ம்)+ரேக்கு]*

**தங்குவேட்டை** *taṅgu-vēṭṭai,* பெ.(n.) மாசிக் களரிக் கொண்டாட்டத்தின் ஒரு கூறு; a part of 'māsikaḷari' celebration.

*[தங்கு+வேட்டை]*

**தங்குவேட்டை வை–த்தல்** *taṅguvēṭṭai-vai-,* 4 செ.கு.வி.(v.i.) வேட்டை பிடிப்பதற்காக வலை கட்டுதல்; to place trap in hunting.

*[தங்கு+வேட்டை+வை–]*

**தச்சாம்பாடி** *taccām-pāḍi,* பெ.(n.) போளூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Polūr Taluk.

*[தச்சன் + பாடி]*

**தச்சு** *taccu,* பெ.(n.) கொம்பு முறி விளையாட்டில் பயன்படுத்தப்படும் கொம்பின் வளைவுப் பகுதி; the curved part of the kombu.

*[தைத்தல் (குத்துதல்) – தச்சு]*

**தச்சுக்கழித்தல் சடங்கு** *taccu-k-kaḻittal-saḍaṅgu,* பெ.(n.) வள்ளம், தோணி கட்டுமரம் முதலானவற்றிற்கு நிகழ்த்தப்படும் ஒரு சடங்கு; a ceremony after the completion of carpentary work of 'catamaran' etc.

*[தச்சுக்கழித்தல்+சடங்கு]*

**தச்சூர்** *taccūr,* பெ.(n.) முதுகுன்றம் வட்டத்தி லுள்ள சிற்றூர்; a village in Vridhachalam Taluk.

*[தச்சு + ஊர்]*

**தசவிளக்கு** *daša-viḷakku,* பெ.(n.) ஓமலூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Omalur Taluk.

**தசைச்சுரப்பு** *tašai-c-curappu,* பெ.(n.) புடைப் புக்கட்டி; a useless out growing of flesh as a tumour. (சா.அக.).

*[தசை+சுரப்பு]*

**தஞ்சாவூர்க் கட்டம்** *tañjāvur-k-kaṭṭam,* பெ.(n.) தாய விளையாட்டில் ஒரு வகை; a dice play.

*[தஞ்சாவூர்+கட்டம்]*

தஞ்சை வட்டாரத்து மக்கள் விரும்பி ஆடும் ஆட்டம்.



**தஞ்சாவூர்பாணி** *tanjavūr-pāṇi,* பெ.(n.) பரதத்தில் கையாளப்படும் ஒரு நடன முறை; a kind of dramatic entertainment with Bharatha natyā.

*[தஞ்சாவூர்+பாணி]*

**தஞ்சை நால்வர்** *tañjai-nālvar,* பெ.(n.) இக் காலப் பரதநாட்டிய வடிவத்தை வரையறுத் தவர்கள்; the exponents (four) who prescribed the modern Baratha nāṭṭiyam.

*[தஞ்சை+நால்வர்]*

(சின்னையா, பொன்னையா, வடிவேலு, சிவானந்தம்)

**தட்டடி**[1] *taṭṭaḍi,* பெ.(n.) உழவின் நில அளவு; a land measurement "ஒரு தட்டடிக்குச் சோளம் விதை" (உ.வ.).

*[தட்டு+அடி]*

**தட்டடி**[2] *taṭṭaḍi,* பெ.(n.) நாற்றங்காலின் சிறுசிறு பகுதி; a small part of a bed on which paddy corn is seen.

*[தட்டு+அடி]*

**தட்டடைவு** *taṭṭaḍaivu,* பெ.(n.) பாதத்தின் முழுப்படத்தையும், குதிங்காலையும் தரையில் சப்பென்று தட்டும் அடைவு; a kind of dance movement.

*[தட்டு+அடைவு]*

**தட்டலங்காபுட்டலங்கா** *taṭṭalaṅgā-puṭṭalaṅgā,* பெ.(n.) குழந்தை விளையாட்டு வகை; a child play. (த.நா.வி.).

*[தட்டலம்+காய்+புட்டலம்+காய்]*

**தட்டளி** *taṭṭaḷi,* பெ.(n.) தோலாற் செய்யப்பட்ட இசைக்கருவி; a musical instrument made by leather.

*[தட்டு+அளி]*

**தட்டாங்கல்** *taṭṭāṅkal,* பெ.(n.) ஐந்து அல்லது ஏழு கற்களைக்கொண்டு விளையாடும் ஒரு வகை விளையாட்டு; forfeit game which consists in throwing five or seven stones up in to the air and catching them in various ways.

**மறுவ: கல்லாங்காய்**

*[தட்டு(தட்டுதல்)+ஆம்+கல்]*

ஐந்தாங்கல் (ஐந்து கற்களைக் கொண்டு விளை யாடுவது), ஏழாங்காய் (ஏழு கற்களைக் கொண்டு விளையாடுவது).

**தட்டாங்காய்** *taṭṭāṅgāi,* பெ.(n.) தட்டைப் பயற்றுக் காய்; an unripe fruit of thattai-p-payaru.

*[தட்டை+அம்+காய்]*

**தட்டாத்திமூலை** *taṭṭatti-mūlai,* பெ.(n.) நன்னிலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Nannilam Taluk. (சா.அக.).

*[தட்டாத்தி+மூலை]*

**தட்டியாங் கொட்டு-தல்** *taṭṭiyāṅkoṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கும்மியாடுதல்; to play the 'kummi' dance.

*[தட்டி+ஆம்+கொட்டு-,]*

**தட்டியோடு-தல்** *tattiyōḍu-,* செ.கு.வி.(v.i.) தொடுபவன் வட்டத்திலுள்ளவரின் முதுகைத் தொட்டுவிட்டுச் செல்லுதல்; a run after touching the back of a pperson who is seated in circle with others. a kind of play.

*[தட்டி+ஓடு-,]*

**தட்டு**[1] *taṭṭu,* பெ.(n.) ஒரு வகையான ஒயிலாட்டம்; a type of oyilāṭṭam.

*[தாட்டு>தட்டு]*

**தட்டு**[2] *taṭṭu,* பெ.(n.) புட்டியின் மூடி; bottle lid. (ம.வ.சொ.).

*[தள் – தடு – தட்டு]*

**தட்டு**[3] *taṭṭu,* பெ. (n.) கால்நடைகளின் பிறப் புறுப்பு; genital part of animals. "எருமை மாட்டுத் தட்டு இறங்கி விட்டது ; நாளைக்குக் கன்று ஈன்று விடும்" (உ.வ.).

*[துள்+து–துட்டு–தட்டு]*

**தட்டுக்குழி** *taṭṭu-k-kuḷi,* பெ.(n.) கால்நடை களின் பிறப்புறுப்பு; genital part of animals.

*[தட்டு + குழி]*

**தட்டுக்கோடு** *taṭṭu-k-kōḍu,* பெ.(n.) கிளித் தட்டு ஆட்டத்தில் முதலில் உள்ள தட்டு. (த.நா.வி.). ; a kind of play which is first in kilittaṭṭu.

*[தட்டு+கோடு]*

**தட்டுச்சக்கை** *taṭṭu-c-cakkai,* பெ.(n.) வாசற் காலுக்கு மேல் சுவரில் தட்டுப் பலகை கீழே விழாமல் தாங்குவதற்காக அடியில் பொருத் தப்படும் சட்டம். (ம.வ.சொ.); supporting property.

*[தட்டு+சக்கை]*

**தட்டுச்சுழி** *taṭṭu-c-cuḷi,* பெ.(n.) வாங்கிய வனுக்கு நட்டம் உண்டாக்குவதாகக் கருதப் படும் மாட்டின் இடுப்புப் பகுதியில் இருக்கும் சுழி; an inauspicious mark.

*[தட்டு+சுழி]*

**தட்டுத்தாள்** *taṭṭut-tāḷ,* பெ.(n.) ஆடல் இயக்கங் களில் ஒன்று; a dance movement.

*[தட்டு+தாள்]*

**தட்டுப்பலகை** *taṭṭu-p-palagai,* பெ.(n.) தடுப்பு அறைகள் உருவாக்கப் பயன்படும் பலகை; wooden screen. (ம.வ.சொ.).

**மறுவ. மறைப்புத் தடுக்கு**

*[தட்டு+பலகை]*

**தட்டுமுட்டுகள்** *taṭṭu-muṭṭugaḷ,* பெ.(n.) 1. அன்றாடப் புழக்கத்துக்குப் பயன்படும் வீட்டுப் பொருள்கள்; household articles. 'வெள்ளம் வீட்டில் புகுந்து தட்டுமுட்டுச் சாமான்களை அடித்துச் சென்றுவிட்டது'. 2. பயன்படுத்தப்படாத பொருள்கள்; odds and ends. 'தட்டுமுட்டுச் சாமான்களைப் போட்டு வைக்க வீட்டில் இடம் இல்லை'.

*[தட்டுமுட்டு+கள்]*

**தட்டுவாட்டம்** *taṭṭu-vāṭṭam,* பெ.(n.) துலை யின் நிலை; a state of a balance 'தராசின் தட்டுவாட்டம் சரியாய் இருப்பதை உறுதி செய்துகொள்'(இ.வ.).

*[தட்டு+வாட்டம்]*

**தட்டை** *taṭṭai,* பெ.(n.) பழம்பெரும் இசைக்கருவி; a good old musical instrument.

*[தட்டு – தட்டை]*

**தட்டைப்படகு** *taṭṭai-paḍagu,* பெ.(n.) படகின் ஒரு பகுதிக்குப் பொருத்தும் மாழையால் (உலோகத்தால்) ஆன ஓர் உருளைப் பொதி யுறை (கவசம்); pontoon.

*[தட்டை+படகு]*

**தட்டோட்டம்** *taṭṭōṭṭam,* பெ.(n.) எடையை நிறுப்பதற்கு முன் துலையைச் சரி செய்கை; correcting the balance before measuring.

*[தட்டு + ஓட்டம்]*

**தடக்காற்று** *taḍa-k-kāṟṟu,* பெ.(n.) வணிகக் காற்று; trade wind.

*[தடம்+காற்று]*

**தடங்கம்** *taḍaṅgam,* பெ.(n.) தருமபுரி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Dharmapuri Taluk.

*[தடாகம் – தடங்கம்]*

**தடங்கனி** *taḍaṅgaṉi,* பெ.(n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[தடாகம் – தடங்கம் + அணி]*

**தடவரல்** *taḍavaral,* பெ.(n.) ஒரு விளையாட்டு; a play.

*[தடவு – தடவரல்]*

**தடவி எடு–த்தல்** *taḍavieḍu-,* செ.குன்றாவி. (v.t.) பல்லாங்குழியாட்டத்தில் குழி துடைத்து வெற்றிக்காய்கள் எடுத்தல்; to take dice completely from a hole in pallāṅkuḻi.

*[தடவி+எடு–,]*

**தடவும் பாண்டி** *taḍavum-pāṇḍi,* பெ.(n.) பல்லாங்குழி ஆட்ட வகை; a game in pallāṅkuḻi

*[தடவும்+பாண்டி]*

**தடாபோடுதல்** *taḍāpōḍu-,* 9 செ.குன்றாவி. (v.t.) கோரா நூலைத் தடாக் கருவியின் மூலம் சுற்றுதல்; spinning the thread.

*[தடு – தடா+போடு]*

**தடி** *taḍi,* பெ.(n.) பனைமரச் செங்கோல்; an upright small pole made of palmyra tree.

*[தடு – தடி]*

நாடார்களிடையே ஆசிரியனின் கைக்கோல், தடி எனப்பட்டது.

**தடித்த** *taḍitta,* பெ.எ. (adj.) சற்றுப் பருத்த; கனமான; thick; heavy. 'தடித்த அட்டை'.

*[தடி > தடித்த]*

**தடி தூக்கு** *taḍi-tūkku,* பெ.(n.) பல்லாங்குழியைச் சற்றுத் தூக்கி வைக்கும் தண்டனை முறை; a kind of punishment.

*[தடி+தூக்கு]*

**தடிப்புரோகம்** *taḍippurōgam,* பெ.(n.) இமைத் துடிப்பு, இளிச்சற் கண், முடமயிர் என மூன்று வகைப்பட்ட கண்ணோய்; an eye disease, which is of three kinds characterised by swelling of the lids. (சா.அக.).

*[தடிப்பு+ரோகம்]*

**தடிவாய்க்கூறு** *taḍi-vāi-k-kūṟu,* பெ.(n.) வெட்டறுவாளின் வாய்க்கூறு; a big sickle's mouth.

*[தடி+வாய்+கூறு]*

**தடைக்கருவி** *taḍaikaruvi,* பெ.(n.) தடுத்து நிறுத்தும் கருவி; stopper.

*[தடை+கருவி]*

**தடைச்சிவலை** *taḍai-c-civalai,* பெ.(n.) பெரிய மீன்களைப் பிடிப்பதற்காகத் தடித்த நூலால் பின்னப்பட்ட வலை; a kind of fishing net.

*[தடி– தடைச்சி+வலை]*



**தண்டகவாதம்** *taṇḍagavādam,* பெ.(n.) உடலுறுப்புகளையும் செயலறச் செய்து உடம்பைத் தண்டத்தைப் போல் வீழ்த்தி, நீட்டல், முடக்கல், அசைத்தல் முதலியவையில்லாமல் பிணத்தைப் போல் கிடக்கச் செய்யும் ஒரு வகை ஊதை (வாத) நோய்; a kind of rhematism characterised by great prostration in which the body is rendered like a log of wood, unable to stretch of fold the limbs and pass motion or urine, the whole body assumes a thorough rigidity as the stiffness appearing after death. (சா.அக.).

*[தண்டு– தண்டகம்+வாதம்]*

**தண்டரை** *taṇḍarai,* பெ.(n.) 1. ஒசூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Hosur Taluk. (ம.வ.சொ.86). 2. திருவண்ணா மலை வட்டத்

தில் உள்ள ஒரு சிற்றூர்; a village in Thiuvannamalai Taluk.

*[தண்டலை-தண்டரை]*

**தண்டவாளம்** *tandavāḷam,* பெ.(n.) இராட்டினத்தில் துரப்பணக் காலையும் குத்துக் காலையும் இணைக்கும் கீழ்க்கட்டை; connecting wooden piece.

*[தண்டு+வாளம்]*



**தண்டையாட்டு** *tandai-y-āṭṭu,* பெ.(n.) நூற்றியெட்டு ஆடலியக்கங்களில் ஒன்று; one among the hundred and eight movements in dance.

*[தண்டை+ஆட்டு (ஆடல்)]*

**தண்டுக்கிரந்தி** *tandu-k-kirandi,* பெ.(n.) பொத்திக் கரப்பான் (சங்.அக.); an eruption that spreads all over the body of a child.

*[தண்டு+கிரந்தி (புண்)]*

**தண்டோல்** *tandōl,* பெ.(n.) ஒரு வகையான இசைக்கருவி; a musical instrument.

*[தண்+தோல்]*

**தண்ணிக்கயிறு** *taṇṇi-k-kayiṟu,* பெ.(n.) ஆறு புரிகளைக் கொண்டு பின்னிய கயிறு; the rope which consists of six strands.

*[தண்ணீர்+கயிறு (கிணற்றில் நீரிறைக்கப் பயன்படும் கயிறு)]*

**தண்ணீர்க்கொம்பு** *taṇṇīr-k-kombu,* பெ.(n.) கொம்பு முறி விளையாட்டில் பயன்படுத்தப்படும் கழிவகையினுள் ஒன்று; a pole used in kombumuri game.

*[தண்ணீர்+கொம்பு]*

**தணக்குமரம்** *tanakku-maram,* பெ.(n.) யாழ் செய்யப் பயன்படுத்தும் மரம்; a tree, used for making 'yāḻ'.

*[தணக்கு+மரம்]*

**தத்தமஞ்சி** *tattamañji,* பெ.(n.) பொன்னேரி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Ponneri Taluk.

*[தத்தன்+அமஞ்சி]*

**தத்தணி** *tattaṇi,* பெ.(n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[தத்து+அணி]*

**தத்தளகம்** *tattaḷagam,* பெ.(n.) அப்பர் தேவாரத்தில் இடம் பெற்ற இசைக்கருவி; a musical instrument, mentioned in Appar tevaram.

*[தத்+தளகம்- ஒலிக் குறிப்பால் பெற்ற பெயர்]*

**தத்தனூர்** *tattaṉūr,* பெ.(n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[தத்தன்+ஊர்]*

பெரியபுராணத்தில் மெய்ப்பொருள் நாயனாரின் மெய்க்காப்பாளராக இருந்தவன் தத்தன். அவனுக்கு இறையிலி ஊராக அளித்த ஊர் இன்றளவும் வழக்கில் உள்ளது குறிப்பிடத்தக்கது.

**தத்திங்காங் கொட்டு-தல்,** *tattiṅgāṅkoṭṭu* 5 செ.கு.வி.(v.i.) கும்மியடித்தல்; to play the kummi dance.

*[தத்திங்காம்+கொட்டு-,]*

**தப்பல்** *tappal,* பெ.(n.) 1. செடி கொடி மரங்களில் பறிக்கப்படாமல் விட்டுப்போன காய்கள்; seeds or fruits not properly collected. 2. தவறான முறையிலமைந்த உடலுறவில் பிறந்த குழந்தை அல்லது அக்குழந்தை பிறப்புக்குக் காரணமானவன்; illegitimate -

child. அது தப்பல் குழந்தை, தப்பலுக்குப் பிறந்த பிள்ளை இது (உ.வ)

*[தப்பு –தப்பல்]*

**தப்பட்டை** *tappaṭṭai,* பெ.(n.) பறை வகை; a kind of drum.

*[தப்பு>தப்பட்டை]*



**தப்பாட்டம்** *tappāṭṭam,* பெ.(n.) 'த்ப்பு' என்னும் பறையை அடித்து ஆடும் ஆட்டம்; a dance to the 'tappu' (tomtom) drum beating.

*[தப்பு+ஆட்டம். ஆடு–ஆட்டம்]*

**தப்புகுத்திருக்கை** *tappuguttirukkai,* பெ.(n.) வண்ணத்துப் பூச்சி போன்ற மீன்; butterfly ray.

*[தப்பு+குத்திருக்கை]*



**தப்புவிளி** *tappuviḷi,* பெ.(n.) தொலைபேசியில் பேசுவோர் தப்பான எண்ணில் அழைக்கும் தொலை விளி; wrong call.

*[தப்பு+விளி]*

**தளரி** *taḷari,* பெ.(n.) ஒரு வகைச் சிறு கடல் மீன்; long finned fish.

*[தளர்–தளரி]*



**தப்பை** *tappai,* பெ.(n.) ஐந்தாங்கல் ஆட்டத்தில் பாடப்படும் பாட்டின் இறுதி குறிக்கும் சொல்; a last word of a stanza for the game aindāṅkal.

*[தப்பு –தப்பை]*

**தம்பட்டம்** *tambattam,* பெ.(n.) தப்பட்டை பார்க்க; see tappaṭṭai.

**தம்பட்டன்காரை** *tambaṭṭaṉ-kārai,* பெ.(n.) ஒரு வகை மீன்; a kind of fish.

*[தம்பட்டன்+காரை]*

**தம்பான்** *tambāṉ,* பெ.(n.) ஒரு வகை மீன்; a kind of fish rock cod.

*[தம்பு+ஆன்]*



**தம்பிட்டு** *tampittu,* பெ.(n.) விளக்குமாவு, மாவிளக்கு; sweetened rice pudding shaped in such a way to be used as thread fixed lamp.

**க. தம்பிட்டு**

*[தீம்+பிட்டு> தம்பிட்டு]*



**தம்பிடி** *tambidi,* பெ.(n.) விடு காசு பார்க்க; see viḍukāsu.

*[செம்பு+இடி – செம்பிடி – தெம்பிடி –தம்பிடி]*

**தமராக்கி** *tamarākki,* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[தமர்+ஆக்கி]*

**தமிழ்ச்சாகித்தியம்** *tami̱l-c-cāgittiyam,* பெ.(n.) பைரவி, தோடி, பிலகிரி முதலான பண் (இராகங்)களில் அமைந்த வண்ணங்களுக்கு ஆபிரகாம் பண்டிதர் இயற்றியது; some melodious tunes which are compiled by Abraham Pandidar.

*[தமிழ்+சாகித்தியம்]*

**தமிழிசையில் சாமகானம்** *tami̱lisaiyil sāmagāṉam,* பெ.(n.) ஒரு இசை நூல்; a musical treatise.

*[தமிழ்+இசையில்+சாமம்+கானம்]*

**தமிழியக்கக் கும்மி** *tami̱liyakkakkummi,* பெ.(n.) தமிழியக்கத்தின் செயற்பாடுகளைக் கூறும் கும்மி; the kummi dance which depicts 'Tamiḻiyakkam'.

*[தமிழ்+இயக்கம்+கும்மி]*

**தமிழியக்கம்** *tami̱l-iyakkam,* பெ.(n.) 1. தமிழ்ப் பண்பாட்டுத் தனித்தன்மையை நிலைநாட்ட விழையுந் தமிழர்களின் அமைப்பு; a social movement which strives for the cultural uniqueness of Tamilians. 2. பாவேந்தர் பாரதிதாசன் தமிழுணர்வு பற்றி இயற்றிய நூல்; a treatise of 'Bharathi dasan'.

*[தமிழ்+இயக்கம்]*

**தமுக்குச் சட்டி** *tamukku-c-catti,* பெ.(n.) மேளம் செய்யப் பயன்படும் சட்டி; broad mouthed mud pot used as tamukku.

*[தமுக்கு+சட்டி]*



**தமுறு** *tamuṟu,* பெ.(n.) இறப்பு நிகழ்வில் இசைக்கப்படும் ஓர் இசைக்கருவி; a musical instrument played in funeral.

*[தமர்–தமுர்–தமுறு]*

**தயிர்த்தாழி** *tayir-t-tāḻi,* பெ.(n.) தயிர் கடையும் தாழி; a vessel in which curdled milk is put and churned. (சா.அக.).

*[தயிர்+தாழி]*



**தயிர்தோய்த்தல்** *tayir-tōyttal,* பெ.(n.) பால் உறையிடல்; thickening or coagulating milk, curdling milk. (சா.அக.).

**தயிர்நீர்ப்பு** *tayirnīrppu,* பெ.(n.) தயிரின் மேல் நிற்கும் தெளிந்த நீர்; water found along with thick portion of the curd, the watery portion of the milk separated from the curd. (சா.அக.).

*[தயிர்+நீர்ப்பு]*

**தயிர்பாளையம்** *tayirpāḷaiyam,* பெ.(n.) ஈரோடு வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Erode Taluk.

*[தயிர்+பாளையம்]*

**தயிர்மீதுதேட்டை** *tayirmīdutēṭṭai,* பெ.(n.) பார்க்க தயிர்நீர்ப்பு; see *tayirnīrppu.*(சா.அக.).

*[தயிர்+மீது+தேட்டை]*

**தயிருறை-,தல்** *tayiruṟai-,* செ.கு.வி (v.i.) தயிர் இறுகுதல்; to thicken of milk into curd or cream. (சா.அக.).

*[தயிர்+உறைதல்]*

**தரங்குத்து-தல்** *taraṅkuttu-,* செ.கு.வி.(v.i.) ஒரு வகையான நாட்டுப் புறச்சடங்கு செய்தல்; to perform a folk ceremony.

*[தரம்+குத்து]*

**தரங்கெட்ட** *taraṅkeṭṭa,* பெ.அ. (adj.) தகுதி இல்லாத; mean, low in worth or excellence. 'அவன் தரங்கெட்டவனாக இருக்கிறான்'.

*[தரம்+கெட்ட. கெடு-கெட்ட]*

**தரவை** *taravai,* பெ.(n.) இராமநாதபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ramanathapuram Taluk.

*[தரை-தரவை(தரிசு)]*

**தராசனம்** *tarāsaṉam,* பெ.(n.) தேர்ச் சிற்பத்தில் நெஞ்சாங்குலைக்கு மேலுள்ள பகுதி; a middle loft sculptures in temple car.

*[தேர்(தரா)+ஆசனம்]*

**தரி-த்தல்** *tari-,* செ.குன்றாவி. (v.t.) உடைத்தல், பிளத்தல்; to split, break as of firewood. விறகு தரித்தான் (இ.வ.)

*[தறித்தல்-தரித்தல்]*

**தரிசல்** *tarisal,* பெ. (n.) அரூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arur Taluk.

*[தரை-தராய்-தரிசு-தரிசல்]*

**தரிசு உழவு** *tarisutuḻauv,* பெ.(n.) நீர்ப் பாய்ச்சி உழும் முதல் உழவு; first ploughing after watering the field.

**மறுவ. தரிசு கீறுதல்**

*[தரிசு+உழவு]*

**தருகு-தல்** *tarugu-,* 5 செ.கு.வி. (v.i.) தளிர்த்தல்; to shoot forth, sprout. "செடி தருகிரிச் சின்னா காய்த்து விடும்" (பேவ.).

*[தளிர்-தளிர்கு-தருகு]*

**தருப்பு** *taruppu,* பெ. (n.) சிற்பங்களின் காதணி வகை; a ear ornament found in sculpture.

*[துரு-தரு-தருப்பு]*

**தருதளை** *arutaḷai,* பெ. (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[தரை+தளை]*

**தருவை** *taruvai,* பெ. (n.) துணி வெளுப்பதற்கான உவர்மண் விளையுமிடம்; fuller's earth imprignated place.

*[தரை>தருவை]*

**தலைப்படு-தல்** *talai-p-paḍu-,* செ.கு.வி.(v.i.) 1. முன்னேறுதல்; to get advancement to come up in life. 2. மேம்பாடு பெறுதல்; to become excellence. "தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே".

*[தலை(உயர்வு)+படு]*

**தலைப்பாடு** *talai-p-pāḍu,* பெ. (n.) முதன்மை, மிக மிகக் கட்டாயம் ; top priority, very very urgent . 'தலைப்பாடாகச் சொன்னேன் அவன் கேட்கவில்லை' (கொ.வ.)

*[தலை+பாடு]

**தலைவுமுடி-தல்** *talaivumuḍi-*, செ.குன்றாவி. (v.t.) பாய் நெசவு செய்த பின்னர் அதன் ஓரங்களைச் சீவி மடித்துக் கட்டுதல்; to fold and stitch the edge of mat after plaiting.

*[தலவு+முடி - தலை > தலவு (கொ.வ.)]*

**தலைஉறுமி** *talaiurumi*, பெ. (n.) சேவை யாட்டத்தில் பயன்படுத்தப்படும் இசைக்கருவி; a musical instrument used in `sevaiyāttam'.

மறுவ. கிணைகொட்டு

*[தலை+உறுமி]*

**தலைக்கெண்டை** *talaikkenḍai*, பெ.(n.) கெண்டை மீன் வகையுள் ஒன்று; a kind of car fish.

*[தலை+கெண்டை]*.



**தலைக்குப் பதமிடல்** *talaikku-p-padamiḍal*, பெ. (n.) 1. தலைக்கு எண்ணெயிடல்; anointing the head. 2. எண்ணெய் தேய்த்து முழுகல்; having an oil bath. (சா.அக.).

*[தலை+கு+பதம்+இடல்]*

**தலைக்குலுக்கம்** *talai-k-kulukkam*, பெ. (n.) 1. கிறுகிறுப்பு; giddiness. 2. முதுமையில் காணும் தலை அசைவு; shaking of head in old persons as a result of advanced age. 3. ஒரு வகை வளி (வாயு); tremer of the head due to vayu. (சா.அக.).

*[தலை+குலுக்கம்]*

**தலைகிறுகிறு-த்தல்** *talai-kiṟukiṟu-*, செ.கு.வி. (v.i.) தலை சுற்றுதல்; பார்க்க; see talai-cuṟṟu-.

*[தலை+கிறு+கிறு]*

**தலைகிறுகிறுப்பு** *talai-kiṟukiṟuppu*, பெ. (n.) 1. தலை மயக்கம்; reeling of the head, giddy sensation. 2. தலை நடுக்கம்; dizziness of the brain. 3. நோயினால் உண்டாகும் தலை மயக்கம்; giddiness arising from ill health or some disorder of the system. (சா.அக.).

*[தலை+கிறு+கிறுப்பு]*

**தலைச்சுமை தொடர் ஓட்டம்**, *talaiccumai-toḍar ōṭṭam*, பெ.(n.) மரக்கட்டை (அ) புத்தகத்தை தலையில் வைத்து ஆடும் விளையாட்டு; head balancing relay.

*[தலை+சுமை+தொடர்+ஓட்டம்]*

**தலைச்சேரி** *talaiccēri*, பெ.(n.) கேரள மாநிலத்தில் வளர்க்கப்படும் ஆட்டினம்; goats of Tellichery.

*[தலை + சேரி]*



**தலைச்சோலை** *talaiccōlai*, பெ.(n.) சேலம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Salem Taluk.

*[தலை(முதல்) + சோலை(காடு)]*

**தலை சாய்தல்** *talai-cāydal*, பெ.(n.) முற்றிய நெற்கதிர் வளைந்து தொங்குதல்; bowing down of the ripe rice-corn.

*[தலை+சாய்]*

**தலைசுற்று–தல்** *talai-cuṟṟu-,* செ.கு.வி. (v.i.) (தன் உணர்வை இழக்கச் செய்யும் வகையில்) சுற்றியுள்ள பொருள்கள் சுழல்வதைப் போன்ற மயக்க உணர்வு ஏற்படுதல்; to feel giddy; reel. 'முதல் முறையாகப் புகையிலை போட்டேன், தலைசுற்றிக் கீழே விழுந்து விட்டேன்', 'நீ சொல்லும் கணக்கைக் கேட்டால் எனக்குத் தலைசுற்றுகிறது'. (உ.வ.)

*[தலை + சுற்று]*

**தலைதாவு–தல்** *talai-tāvu-,* 2 செ.கு.வி. (v.i.) நெருக்கமாக உள்ள மரங்கள் ஒன்றிலிருந்து மற்றொன்றிற்குத் தாவுதல்; to jump from a tree to another in a closely grown trees.

*[தலை+தாவு–]*

**தலைதீபாவளி** *talai-tīpāvaḷi,* பெ. (n.) திருமணம் செய்து கொண்ட பின் கொண்டாடும் முதல் விளக்கணி நாள் விழா; the first deepavali festival (celebrated by the newly married). 'தலை தீபாவளி கொண்டாட மாமனார் வீட்டுக்கு வந்திருந்தான்'.(உ.வ.)

*[தலை +தீபாவளி]*

**தலைநாயர்** *talaināyar,* பெ. (n.) மயிலாடுதுறை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mayiladuthurai Taluk.

மறுவ. தலைஞாயிறு

*[தலை+(ஞாயிறு)–நாயர் (கொ.வ.)]*

**தலைநிம்பம்** *talainimbam,* பெ. (n.) சிவனார் வேம்பு (மலை); wiry indigo.

*[தலை+நிம்பம்]*

**தலைப்பத்து** *talai-p-pattu,* பெ. (n.) 1. தலைக்குப் போடும் மருந்துப் பற்று; an application of ointment or other paste applied to the head. 2. பனை ஓலை; palmyra leaf (சா.அக.).

*[தலை+பற்று > பத்து]*

**தலைப்பாடகம்** *talāi-p-pāḍagam,* பெ.(n.) விளைநிலப்பகுதி; fertile land. "தண்ணீர் பட்டி ஒருமாவரையும் தலைப்பாடகம் அரை மாவும்". (தெ.சா.7:2:எ:47)

*[தலை+பாடகம்]*

**தலைப்பிடிக்கி** *talai-p-piḍikki,* பெ. (n.) கூட்டி வைப்போன்; one who procures for another as a means of gratifying his passions. (சா.அக.).

*[தலை(ஆள்)+பிடிக்கி]*

**தலைப்புரட்டியெறும்பு** *talai-p-puraṭṭi-yeṟumbu,* பெ. (n.) ஒரு வகைக் கறுப்பு எறும்பு; a black ant with a large shaking head. (சா.அக.).

*[தலை+புரட்டி+எறும்பு]*



**தலைபுரட்டல்**[1] *talai-puraṭṭal,* பெ. (n.) தலையை அடிக்கடி உருட்டும் ஒரு சாக்குறி; rolling the head very often. (சா.அக.).

*[தலை+புரட்டல்]*

**தலைபுரட்டல்**[2] *talai-puraṭṭal,* பெ. (n.) பொடுதலை என்னும் மூலிகை; creeping vervain. (சா.அக.).

*[தலை+புரட்டல்]*



**தலைமடக்கு** *talai-madakku,* பெ. (n.) உழும் போது ஏர் சென்று திரும்பும் இடம்; the place where the furrow turns in plough.

*[தலை+மடக்கு. மட > மடக்கு]*

**தலைமைதாங்கு—தல்** *talamai-tāngu-,* செ.கு.வி. (v.i.) (நிகழ்ச்சி, போராட்டம் போன்ற வற்றை அல்லது ஓர் அமைப்பை) வழி நடத்தும் பொறுப்பு ஏற்றல்; to head or lead (a demonstration, etc.,); preside over. 'இது வரை இரு முறை கட்சிக்குத் தலைமை தாங்கியிருக்கிறார்'. 'நடக்கப் போகும் திரைப்பட வெள்ளி விழாவுக்கு அமைச்சர் தலைமை தாங்குவார்'.

*[தலைமை+தாங்கு]*

**தலையசை—த்தல்** *talai-y-šai-,* செ.கு.வி. (v.i.) ஒரு செயலை ஏற்றுக் கொள்வதாக இசைவு தெரிவித்தல்; to shake ones head as a mark of acceptance.

**மறுவ: தலையாட்டுதல், சரி சொல்லல்**

*[தலை+அசை—,]*

**தலையில் கட்டு—தல்** *talaiyil-kaṭṭu-,* செ.குன்றாவி. (v.t.) (தனக்கு விருப்பம் இல்லாத வேலையை மற்றொருவர்) செய்யும் படியாக வைத்தல், (தேவையற்ற பொறுப் பையோ குறைபாடு உடைய பொருளையோ) ஏற்கச் செய்தல்; to saddle (one) with a responsibility, etc., 'நுகர்வோர் அங்கா டிக்குப் போகும் வேலையை யார் தலையில் கட்டலாம் என்று யோசிக்கிறாயா?', 'நீ சற்று அசந்தால் கடைக்காரர் அழுகல் தக்காளியை உன் தலையில் கட்டி விடுவார்'.

*[தலை+இல்+கட்டு]*

**தலையை உருட்டு—தல்** *talaiyai-uruṭṭu-,* செ.கு.வி. (v.i.) ஒருவனைப் பற்றிய பேச்சைப் பரப்புதல்; to backbite. 'இதுலே என் தலையை உருட்டாதே!'.

**மறுவ: புறம்பேசு—தல்**

*[தலையை+ உருட்டு]*

**தவ்வித்திரும்பு—தல்** *tavvittirumbu,* செ.கு.வி. (v.i.) ஒயிலாட்டத்தில் இரு கால்களையும் தூக்கித் திரும்புதல்; to jump and turn with lifting two legs in 'oyilāṭṭam'. (60:68).

*[தவ்வி+திரும்பு. தாவு – தவ்வு]*

**தவங்கினி** *tavangiṇi,* பெ.(n.) வலு குறைந் தவன்; strengthless person.

*[தவ்வல்–தவங்கு–தவங்கிலி] .*

**தவசுக்கூடை** *tavasu-k-kūḍai,* பெ. (n.) தவசங் களை எடுத்துச் செல்லப் பயன்படும் கூடை; basket used for carrying grains.

**மறுவ: கடகாப்பெட்டி, நார்ப்பெட்டி**

*[தவசம்+கூடை – தவசக்கூடை– தவசுக்கூடை]*



**தவண்டை** *tavaṇḍai,* பெ. (n.) விண்ணென ஒலிக்கும் தோலாற் செய்யப்பட்ட இசைக் கருவி; a musical instrument.

*[தவண்டு–தவண்டை]*



**தவத்தில் நிற்றல்** *tavattil-niṟṟal,* பெ. (n.) இடைவிடாது தவம் செய்தல்; being constant in doing penance. (சா.அக.).

*[தவம்+அத்து+இல்+நிற்றல்]*

**தவத்துமுருங்கை** *tavattu-muruṅgai,* பெ. (n.) புண்ணாக்குப் பூண்டு; Tranquebar gendarussa. (சா.அக.).

*[தவம்+அத்து+முருங்கை]*

**தவத்துப்பொலவு** *tavattuvappolavu,* பெ. (n.) மலையாளப் பூடு; Malabar croton. (சா.அக.).

*[தவத்து+புலவு–பொலவு]*

**தவதலம்** *tavatalam,* பெ. (n.) வெள்ளி லோத் திரம்; the bark of lodra tree. (சா.அக.).

*[தவ–தலம்]*

**தவபோதசாதி** *tavapōda-šādi,* பெ. (n.) ஆண் சாதி, நான்கு வகைகளில் ஒன்று; one of the four classes of men divided according to lust. (சா.அக.).

*[தவ+போத+சாதி]*

**தவர்** *tavar,* பெ. (n.) தெருக்கூத்தில் அணியப் பெறும் விறைப்பான பாவாடை; tight dress worn in street.

*[தவல்–தவர்]*



**தவர்தாம்பட்டு** *tavartampaṭṭu,* பெ.(n.) தில்லை (சிதம்பரம்) வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[தமர்–தவர்–தவர்த்தாம்+பட்டு]*

**தவலு** *tavalu,* பெ. (n.) இருளர் பயன்படுத்தும் ஓர் இசைக்கருவி; a musical instrument of Iruḷar.

*[பதலை–தவிலை+தவல்–தவலு]*

**தவளைவாய்க்கச்சம்** *tavaḷaivāykkaccam,* பெ. (n.) தவளையின் வாய் போன்ற தோற்ற முடைய கச்ச வகை; kaccam like the frogs mouth.

*[தவளை+வாய்+கச்சம்]*

**தவளை விளையாட்டு** *tavaḷaiviḷaiyāṭṭu,* பெ.(n.) தாவித்தாவி நகர்வது. (த.நா.வி.); jumping and moving.

*[தவ்வு–தவளை+விளையாட்டு]*

**தவணி** *tavaṇi,* பெ.(n.) வந்தவாசி வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Wandawashi Taluk.

*[தாவணி–தவணி(கொ.வ.)]*

**தவுக்கம்** *tavukkam,* பெ.(n.) தடங்கல், இடைஞ் சல்; hindrance.

*[தவல்–தவு–தவுக்கம்]*

**தழவரை** *taḻavarai,* பெ.(n.) அறந்தாங்கி வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[தாழை+வரை]*

**தழுக்கு** *taḻukku,* பெ. (n.) இரண்டு கைகளும் சேர்த்து அள்ளும் அளவு; measure of taking up in the hollow of two hands. மாட்டுக்கு ஒரு தழுக்கு கூளம் போடு. (பே.வ.).

*[தழைக்கு+தழுக்கு]*

**தழுதாழை** *taḻutāḻai,* பெ.(n.) வந்தவாசி வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Wandawasi Taluk.

*[தாழ்+தாழை–தாழ்தாழை–தழுதாழை]*

**தழுதாளி** *taḻy-tāḷi,* பெ. (n.) திண்டிவனம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[தழுதாழை–தழுதானி–தழுதாளி]*

**தள்ளாதகாலம்** *taḷḷāda-kālam,* பெ. (n.) நடக்கவும் முடியாத முதுமைக் காலம்; old age; infirmity. 'தள்ளாத வயதிலும் அவர் உழைக்க வேண்டியிருந்தது'.

*[தள்ளாத+காலம்]*

**தள்ளாத வயது** *tallāda-vayadu,* பெ. (n.) பார்க்க தள்ளாத காலம்; see tallāta-kālam.

*[தள்ளாத+வயது]*

**தள்ளி** *talli,* பெ.(n.) சிறு ஓட்டினை எறிந்து தள்ளித்தள்ளி விளையாடுதல். (த.நா.வி.); push and play with a round pot-sherd.

*[தள்–தள்ளி]*

**தள்ளுபாண்டி** *tallupāṇḍi,* பெ.(n.) கலியாணப் பாண்டி விளையாட்டுக்கு வழங்கும் வேறு பெயர்; a kind of pāṇdi in South Arcot District.

**தளர்த்து–தல்** *talarttu-,* செ.கு.வி. (v.i.) 1. (பிடி, முடிச்சு போன்றவற்றை) இறுக்கம் இழக்கச் செய்தல்; நெகிழச் செய்தல்; to loosen one's grip,ease. 'புழுக்கம் தாங்காமல் பொத் தானை அவிழ்த்துச் சட்டையைத் தளர்த்திக் கொண்டார்', (உ.வ.) தன் வேடிக்கையான பேச்சின் மூலம் சூழ் நிலையின் இறுக்கத்தைத் தளர்த்த முயன்றார். 2. (சட்டம், விதிமுறை முதலியவற்றை அவற்றின்) கடுமையான நடைமுறையிலிருந்து விலக்குதல்; தீவிரத் தைக் குறைத்தல்; to relax (the curfew); lift (the sanction); make flexible. 'ஊரடங்கு உத்தரவு தளர்த்தப்பட்டது', 'புதிய அரசு மது விலக்கைத் தளர்த்துமா? என்று செய்தியாளர் கேள்வி கேட்டார்.(உ.வ.)

*[தளர்+தளர்த்து–,]*

**தளரி** *talari,* பெ.(n.) ஒரு வகைச் சிறுகடல் மீன்; long finned fish.

*[தளர்–தளரி]*



**தளவாய்பட்டடா** *dalavāypaṭṭaḍā,* பெ.(n.) திருத்தணி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruthani Taluk.

*[தளவாய்+பட்டடை]*

**தளி** *talai,* பெ.(n.) உடுமலைப்பேட்டை வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Udumalpet Taluk.

*[தள்>தளி(நீர்நிலை)]*

**தளிக்கோட்டை** *taḷikkōṭṭai,* பெ.(n.) அறந் தாங்கி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[தளி+கோட்டை]*

**தளிகை** *taligai,* பெ.(n.) நாமக்கல் வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Namakkal Taluk.

*[தளி(நீர்நிலை)+கை]*

**தறிக்குத்துக்கால்** *tarikuttukkāl,* பெ.(n.) தறியை எல்லா அளவிலும் தாங்கி நிற்கும் இரு கால்கள்; two suport pillars of loom.

*[தறி+குத்து+கால்]*

**தறிக்கூடம்** *tari-k-kūḍam,* பெ.(n.) தறி அமைக் கப்பட்டிருக்கும் இடம்; place of loom.

*[தட்டு+சக்கை]*.

**தறித்தண்டவாளம்** *tari-t-tanḍavāḷam,* பெ.(n.) அச்சுமரத்தின் கீழ்ப்பகுதியில் நாடா சென்று வரும் பகுதி ; a device in loom.

*[தறி+தண்ட+வாளம்]*

**தறு–தல்** *taṟu-,* செ. கு.வி.(v.t.) சுற்றி வளைத் துக் கட்டுதல், இறுக உடுத்தல் ; to fasten as cloth around the waist. "தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும்" (குறள்).

*[தல்–தறு]*

**தன்மானியர்** *tanmāṇiyar,* பெ.(n.) நற்குடி மற்றும் கல்வியொழுக்கங்களால் மேம்பட்டுத் தன்மானங்காப்பவர் (குறள்.963,உரை) ; a person of honour, magnanimity.

*[தன்+மானி+ஆர்]*

**தன்மை மிகுத்துரை** *tanmai-migutturai,* பெ. (n.) ஒரு பொருளின் இயல்பை மிகுத்துக் கூறுகை (மிகைப்படுத்திக் கூறுதல்); exaggeration of the nature of an object. "தொகையே தொடர்ச்சி தன்மை மிகுத்துரை" (மணிமே.30,192).

*[தன்மை+மிகுத்து+உரை]*

**தன்விருப்பம்** *tan-viruppam,* பெ. (n.) எழு விழைவு, தன்னியல்பு விருப்பம்; willfulness.

*[தன்+விருப்பம்]*

**தன்வேதனை** *tanvēdanai,* பெ. (n.) தன் வருத்தம்; one's own troubles, self affliction. (சா.அக.).

*[தன்+வேதனை]*

**தன்னன்** *tannan,* பெ.(n.) 1. மகன்; son. 2. ஆண்பால் இயற்பெயர் ; a proper name (masc.).

*[தல்-தன்-தன்னு-தன்னன்]*

இச்சொல் தனையன் எனத் திரிந்தது.

**தன்னாள் சலசலப்பு அடவு** *tannāḷsala salappuaḍavu,* பெ. (n.) ஒயில் கும்மியில் இடம் பெறும் ஓர் அடவு; a kind of tāḷā in dance.

*[தன்+ஆள்+சலசலப்பு+அடவு]*

**தன்னிகரில்லா(த)** *tannigarillā(ta),* பெ.எ. (adj.) ஈடு இணை இல்லாத, தனக்குச் சமமாக (யாரும், எதுவும்) இல்லாத; matchless; peerless. 'தன்னிகரில்லாத தலைவர்'. (உ.வ.)

*[தன்னிகர்+இல்லா]*

**தன்னிலைவிளக்கம்** *tannilai-viḷakkam,* பெ. (n.) (பொ.வ.) சிக்கல், நேராடல் காரணமாகத் தொடர்புடைய ஒருவர் தான் எடுத்த நிலை, செயற்பாடுகள் குறித்து விரிவாக அளிக்கும் விளக்கம்; a statement made by one explaining (and justifying) his action.

*[தன்+நிலை+விளக்கம்]*

**தன்னு-தல்** *tannu,* செ.கு.வி.(v.i.) பிறத்தல், தோன்றுதல்; to give birth, to appear.

*[துல்-தல்-தன்-தன்னு]*

**தன்னுட்கேந்திரம்** *tannuṭ-kēndiram,* பெ. (n.) திருமணி (கோமேதகம்); cinnamon stone. (சா.அக.).

*[தன்+உள்+கேந்திரம்]*

**தன்னைவியந்துதருக்கல்** *tannai-viyandu tarukkal,* பெ. (n.) தன்னையே நினைத்துச் செருக்குக் கொள்ளல்; indulging one self in expansive delusing or delusion of grandeur, self conceitedness. (சா.அக.).

*[தன்+ஐ+வியந்து+தருக்கல்]*

**தனதேர்** *tanadēr,* பெ. (n.) சொந்த ஏர்; own plough.

*[தனது+ஏர்]*

**தனிக்கண்கள்** *tanikkangal,* பெ.(n.) வலையிலுள்ள ஒரு கண்; flymesh.

*[தனி+கண்+கள்]*

**தனிக்காய் ஆட்டம்** *tani-kkāyāṭṭam,* பெ.(n.) குழிக்கு ஒரு காய் வீதம் போட்டாடுதல். (திருச்சி- வழ.); one in each pit placing - an indoor game.

*[தனி+காய்+ஆட்டம்]*

**தனிமகனார்** *tanimaganār,* பெ.(n.) கடைக் கழகப் புலவர்; a poet of sangam age.

*[தனி+மகன்+ஆர்]*

**தனியல்** *taniyal,* பெ.(n.) திண்டிவனம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[தனி+வயல்]*

**தனியறை** *taniyarai,* பெ.(n.) ஒதுக்கப்பட்ட அறை; cabinet.

*[தனி+அறை]*

**தா ஆயி** *tāayi,* பெ.(n.) பெரியம்மாள், தாயின் தமக்கை; mother's elder sister.

பஞ். தாயி

*[தா(பெரிய,மூத்த)+ஆயி]*

**தாக்குருத்து நெல்** *tākkuruttu-nel,* பெ.(n.) அடித்தாளிலிருந்து பயிராகும் நெல்; the paddy which grown from the reaped stalk.

மறுவ: தாளடிப் பயிர்

*[தாள்+குருத்து+நெல்]*

**தாங்கடை** *tāṅgaḍai,* பெ.(n.) முழத்தை விட நீளமானது; a little bit more than the cubit measure.

*[தா(நீட்சி)+கடை]*

**தாங்கல்** *tāṅgal,* பெ.(n.) வாலாசா வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Wallajah Taluk.

*[தாங்கு – தாங்கல் (ஏரி)*

**தாங்கா பாங்கா** *tāṅgā-pāṅgā,* பெ.(n.) மத்தள வகையினுள் ஒன்று; a kind of two side drum.

*[தாங்கு+பாங்கு]*



**தாங்கி** *tāṅgi,* பெ.(n.) காஞ்சிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[தாங்கல் > தாங்கி (ஏரி)]*

**தாச்சு வலை** *tāccuvalai,* பெ.(n.) ஆழ்கடலில் ஆழமாகத் தாழ்த்திக் கீழிறக்கி மீன்பிடிக்க உதவும் வலை; a fishing net.

*[தாழ்த்து–தாச்சு+வலை]*

**தாசரி தப்பட்டை** *tāšari-tappaṭṭai,* பெ.(n.) ஒரு வகையான இசைக்கருவி; an ancient musical instrument.

*[தாதர் > தாசரி+தப்பட்டை]*

**தாசா** *tāšā,* பெ.(n.) புலியாட்டத்தில் பயன்படுத்தப்படும் ஓர் இசைக்கருவி; a musical instrument which is used in 'puliyāṭṭam'.

*[தாசு–தாசா]*

**தாசாசட்டி** *tāšā šaṭṭi,* பெ.(n.) தஞ்சைப் பகுதிகளில் புலியாட்டத்திற்கு இசைக்கப்படும் இசைக்கருவி; a musical instrument. which is used for *'puliyāṭṭam'* in Tanjore District.

*[தாசு–தாசா+சட்டி]*

**தாசேரி** *tāšēri,* பெ.(n.) கம்பளத்தார் சேவையாட்டத்தில் இடம் பெறும் கோமாளியின் பெயர்; name of buffoon.

*[தாசரி–தாசேரி (கொ.வ.)]*

**தாட்டியம்** *tāṭṭiyam,* பெ.(n.) 1. திறமை; cleverness, skill. 2. வலிமை; strength.

*[தடி–தட்டு–தாட்டு – தாட்டியம்]*

**தாட்டு** *tāṭṭu,* பெ.(n.) சோர்வு, அலுப்பு; weariness, tiredness. எனக்கு உடம்பு தாட்டாக இருப்பதால் வேலைக்கு வர இயலாது. (உ.வ.).

*[தா–தாட்டு]*

**தாடரசூர்** *tāḍaršūr,* பெ.(n.) பொன்னேரி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Ponneri Taluk.

*[ஒருகா. தாட்டு+அரசு+ஊர்]*

**தாடான்** *tāḍāṉ,* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[தாடு – தாடான்]*

**தாடி** *tāḍi,* பெ.(n.) சிற்பச் சிறப்பை உணர்த்த இசைத்தூண்களின் உச்சியில் அமைக்கப்படும் சிற்பக்கூறு; a design on musical pillar.

*[தாழ்–தாழி–தாடி]*

**தாடிக்கொப்பு** *tāḍi-k-koppu,* பெ.(n.) மரத்தின் கிளை, அடிக்கிளை; the lower branch of the tree.

*[தாடி + கொப்பு. கொம்பு > கொப்பு]*

**தாடிக்கொம்பு** *tāḍi-k-kombu*, பெ.(n.) தேனி மாவட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Theni District.

*[தாடி + கொம்பு]*

**தாடூர்** *tāḍūr*, பெ.(n.) திருத்தணி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruttaṇi Taluk.

*[தாலம்–தாடு+ஊர்]*

**தாடைச்சன்னி** *tāḍai-c-caṉṉi*, பெ.(n.) நரம்புகளைத் தாக்கும் நோய்; lock-jaw.

*[தாடை+சன்னி]*

**தாண்டவச் சிற்பம்** *tāṇḍava-c-ciṟpam*, பெ.(n.) சிற்ப வகையினுள் ஒன்று; a kind of sculpture.

*[தாண்டவம் + சிற்பம்]*

**தாணிக்காய்** *tāṇikkāy*, பெ.(n.) சிற்பங்களை உருவாக்குவதற்கு மூலப் பொருளான கண்ட சருக்கரைக் கலவையைச் செய்ய உதவும் ஒரு வகைக் காய்; a unriped fruit of tānri tree.

*[தான்றி–தாணி+காய்]*

**தாதத்தப்பு** *tātattappu*, பெ.(n.) தாதரினத்தவர் சேவைப்பலகை எனும் இசைக்கருவியைச் சுட்ட வழங்கும் சொல்; name of the musical instrument šēvai-p-palagai which is used by Tādar.

மறுவ. சேமக்கலம்

*[தாதர்+தப்பு]*

**தாதரா** *tādarā*, பெ.(n.) ஒரு வகைக் களைச் செடி; a weed.

*[ததை–தாதர்]*

**தாதராட்டம்** *tādarāṭṭam*, பெ.(n.) தாதன் குடியினர் ஆடுகின்ற ஆட்டம்; a dance by Tādar community.

*[தாதர்+ஆட்டம்]*

**தாதவல்லி** *tātavalli*, பெ.(n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[தாதன்+பள்ளி]*

**தாந்தோணி** *tāntōṇi*, பெ.(n.) உடுமலைப் பேட்டை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Udumalpet Taluk.

*[தான்+தோன்றி]*

**தாப்புலிப்பா** *tāppuli--p-pā*, பெ.(n.) மறைந்து போன யாப்பு வகை; an extinct poetical meter in prosody.

*[தாவு–தா+புள்+பா]*

**தாம்பணிக் கயிறு** *tāmbaṇi-k-kayiṟu*, பெ.(n.) மாடுகளை வரிசையாகப் பிணைக்கும் கயிறு: tether, halter.

*[தாம்பு+அணி+கயிறு]*

**தாம்பல்** *tāmbal*, பெ.(n.) கரூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Karur Taluk.

*[தாம்பு–தாம்பல்]*

**தாம்புக்கண்ணி** *tāmbu-k-kaṇṇi*, பெ.(n.) போரடிக்கும் களத்திலுள்ள மாடுகளின் பிணைக் கயிறு; rope to tie cattle, tether. பார்க்க; **தாம்பணிக்கயிறு.**

*[தாம்பு + கண்ணி]*

**தாமணிச்சுழி** *tāmaṇi-c-cuḻi*, பெ.(n.) மாட்டின் முதுகு தண்டில் காணப்படும் சுழி; a sign like formation on the back bone side of cow.

*[தனி+அறை]*

**தாமணிப் பிணை** *tāmaṇippiṇai*, பெ.(n.) தாம்புக் கயிறு; long line of rope with halters attached for fastening cattle.

*[தாமணி+பிணை]*

**தாமரைக் கும்பீட்டுக்கை** *tāmarai-k-kumbiṭṭu-k-kai*, பெ.(n.) பிணையல் வகையினுள் ஒன்று (Nātya.); a gesture with both hands.

*[தாமரை+கும்பீட்டு+கை]*

**தாமரைக்கோலம்** *tāmarai-k-kōlam,* பெ.(n.) பச்சைக்கோலத்தின் ஒரு வகை; a kind of decorative design drawn on floor, etc.

*[தாமரை+கோலம்]*

**தாமரைக் கோழி** *tāmaraikkoḻi,* பெ.(n.) ஒரு வகைப் பறவை; a kind of bird.

*[தாமரை+கோழி]*



**தாமல்** *tāmal,* பெ.(n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[தாமன்–தாமல், தாமன்பெயரில் அமைந்த ஊர்.]*

**தாமேனேரி** *tāmaṉēri,* பெ.(n.) திருத்தணி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[தாமன்+ஏரி]*

**தாய்க்குழி** *tāy-k-kuḻi,* பெ.(n.) சேர்ப்புக் குழி; a pit for saving food grains.

*[தாய்+குழி]*

**தாய்ச்சி** *tāycci,* பெ.(n.) கண்ணாமூச்சி விளையாட்டில் தலைமைப் பொறுப்பேற்று நடத்துபவர்; the leader of the children's game of hide-and-seek.

*[தாய் > தாய்ச்சி]*

**தாயாரடி–த்தல்** *tāyār-aḍi,* 4 செ.குன்றாவி. (v.t.) இறப்பு நிகழ்ந்த வீட்டின் முன் பெண்கள் வட்டமாகச் சூழ்ந்து நின்று பாடியவாறு மார்பில் அடித்துக்கொள்ளுதல்; to beat on breast with hands and weep over the death, to lament.

**மறுவ: மாரடித்தல்**

*[தாயார் +அடித்தல்–தாய் போல் அழுதல்]*

**தார்[1]** *tār,* பெ.(n.) வயலில் பல குண்டல்கள் சேர்ந்தது ஒரு தார்; a portion in rice field.

*[தாலி–தார்]*

**தார்[2]** *tār,* பெ.(n.) கைத்தறி நெசவில் நாடாவினுள் செலுத்தி துணி நெய்யப் பயன்படும் கருவி; a device in hand loom weaving.

*[தால்–தார்]*

**தார்[3]** *tār,* பெ.(n.) விளை நிலத்தின் அளவு; a portion of land. கீழ்த்தாரில் சோளம் விதைக்கலாம்

*[தால்–தார்]*

**தார்க்கத்தளை** *tarkattalai,* பெ.(n.) ஒரு வகை மீன் ; silver jew fish.

*[தார்+கத்தளை]*



**தார்க்குற்றி** *tārkkuṟṟi,* பெ.(n.) நெய்வதற்கு உருண்டை நூல் சுற்றிய சிறு நாணல், கொறுக்கை போன்றவற்றின் குற்றி; bobbin.

**மறுவ: தார்க்குச்சி**



[தார் (நீட்சி) + குற்றி]

**தார்ப்பாச்சி** *tār-p-pācci,* பெ.(n.) உழவர்கள் வேலை செய்யும்போது வேட்டியைச் சுருக்கிக் கட்டும் வகை; a mode of wearing cloth round the loins in the fashion of a divided skirt. (நெ.வ.வெ.சொ.).

*[தார்ப்பாய்ச்சி > தார்ப்பாச்சி]*

**தாராபாறை** *tārāpāṟai,* பெ.(n.) ஒரு வகை கடல் மீன் ; horse mackerel.

*[தார் (நீட்சி) – தாரா+பாறை]*



**தாராளிகம்** *tārāḷigam,* பெ.(n.) மிகுதியாகத் தரும் பாங்கு; liberalism.

*[தார்+ஆளம்+இகம்]*

**தாராளிகர்** *tārāḷigar,* பெ.(n.) கொடையாளர்; donator, liberals.

*[தாராளம்+இகர்]*

**தாரை** *tārai,* பெ.(n.) பண்டைய இசைக் கருவியினுள் ஒன்று ; a musical instrument.

*[தா–தாரை]*

**தால்சட்டி** *tāl-caṭṭi,* பெ.(n.) கோரைக்குச் சாயம் ஏத்தும் சட்டி ; the pot used for spreading dye to sedges.

*[தால்+சட்டி, சால் > தால் (பெரிய சட்டி)]*

**தாலியறுப்பு விழா** *tāliyaṟuppu-viḻā,* பெ.(n.) திருமண வரம் வேண்டிக் கூத்தாண்டவருக்காக திருநங்கைகளால் (அலிகளால்) நிகழ்த்தப்பெறும் விழா; a function conducted by transgenders.

*[தாலி+அறுப்பு+விழா]*

**தாவணி** *tāvaṇi,* பெ.(n.) நாராயணி எனும் இசை வகையின் ஒரு பிரிவு; a music.

*[தா+அணி]*

**தாவு¹–தல்,** *tāvu-,* 5 செ.குன்றாவி (v.t.) ஆடு புலி ஆட்டத்தில் ஒரு புள்ளியிலிருந்து காயில் லாத அடுத்த புள்ளிக்குத் தாவுதல்; to jump to a empty square in the game played with pieces representing sheep and tiger.

*[தவ்வு–தாவு]*

**தாவு²–தல்** *tāvu-,* செ.குன்றாவி (v.t.) வைக்கோல்போர், சோளத்தட்டை முதலியவற்றை இரு கையிலும் சேர்த்து அள்ளுதல்; to gather, straw of paddy, dried stalk of great millet etc., by using both of one's hands. (வ.வ.சொ.).

மறுவ. குடங்கை, கொடங்கை

*[தவ்வு–தாவு]*

**தாவேந்தன்** *tāvēndaṉ,* பெ.(n.) மன்னர் மன்னன், கோவேந்தன் (சக்கரவர்த்தி) ; emperor.

*[தா(பெரிய)+வேந்தன்]*

**தாழ்புடைப்புச் சிற்பம்** *tāḻpuḍai-p-pu-c-ciṟpam,* பெ.(n.) புடைப்பு வகைச் சிற்பத்தில் தாழ்ந்திருக்கும் சிற்பம்; a sculpture.

*[தாழ்+புடைப்பு+சிற்பம்]*

**தாழ்மாடம்** *tāḻmāḍam,* பெ.(n.) கதவிலிருக்கும் தாழ்ப்பாள் சுவரில் பொருந்தும் பகுதி; the place of a wall where the latch of door dashes while opening.

*[தாள்–தாழ்+மாடம்]*

**தாழ்வுணா** *tāḻvuṇa,* பெ.(n.) எளிய உணவு; humble food.

*[தாழ்+(உணவு)உணா]*

**தாழகம்** *tāḻagam,* பெ.(n.) சிற்பங்கள் செய்வதற்கு உருவாக்கப்படும் ஒன்பான்கற்களின் (நவபாசாணத்தின்) மூலப்பொருள்; ore of nine type of gems which are useful in sculpturing.

*[தாழ்–தாழகம்]*

**தாழன்காலா** *tāḻaṇkālā,* பெ.(n.) குச்சுப் போன்ற மீன் ; Indian tassel fish.

*[தாழன்+காலா]*



**தாள்குணி** *tāḷguṇi,* பெ.(n.) கோபிசெட்டி பாளையம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Gopichettipalayam Taluk.

*[தாழ்+குழி]*

**தாள் நுடக்கம்** *tāḷnuḍakkam,* பெ.(n.) ஆடல் இயக்கங்களில் ஒன்று; a pose in dance.

*[தாள்–நுடக்கம்]*

**தாளடிப் பயிர்** *tāḷaḍi-p-payir,* பெ.(n.) குறுவை அறுவடைக்குப் பின்பு பயிரடியை மடக்கி உழுது, சேற்றில் அழுத்தி, மறுபடியும் நடப்படும் நெற்பயிர்; repeat crop in the same field.

*[தாள்+அடி+பயிர்]*

**தாளவகையோத்து** *tāḷavagai-y-ōttu,* பெ.(n.) பழம்பெரும் இசை நூல்; an ancient treatise on Tamil music.

*[தாளம்+வகை+ஒத்து]*

**தாளவேடு** *tāḷavēḍu,* பெ.(n.) திருத்தணி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[ஒருகா. தாவளம்+பேடு]*

**தாளி** *tāḷi,* பெ.(n.) நெய்தல் நிலப்பண் பதினாறில் ஒன்று; a musical note.

*[தாள்–தாளி]*

**தாளிகை** *tāḷigai,* பெ.(n.)செய்தித்தாள் ; newspaper.

*[தாள்–தாளிகை]*

**தாற்றுக்கோல்** *tāṟṟu-k-kōl,* பெ.(n.) ஏர் உழும் போது மாடுகளை விரட்டப் பயன்படுத்தும் கோல் ; a small stick held by the farmers while ploughing to drive the cattle.

**மறுவ. உழக்கோல், உழவுக்கோல்**

*[தாறு–தாற்று+கோல்]*



**தானம்பாடு–தல்** *tāṉampāḍu-,* செ.குன்றாவி (v.t.) ஆளத்தியின் ஒரு பகுதி; a feature in musical note.

*[தானம்+பாடு]*

**தானம்** *tāṉam,* பெ.(n.) ஏழிசைகளின் தொகுப்பான "மண்டிலம்" என்பதைக் குறிக்கும் பெயர்; an alternative name for mandilam in music.

*[தாவு–தானம்]*

**தானி** *tāṉi,* பெ.(n.) மூன்று சக்கர உந்து ; auto.

*[தான்+தானி (தானே இயங்குகை)]*



**திக்குமுக்காடிப்போ–தல்** *tikkumukkāḍi-pō-,* செ.கு.வி. (v.i.) திணறித் திண்டாடுதல்; to be choked, shifted, smothered, strangled, unable to respire.

*[திக்கு+முக்கு+ஆடி+போ]*

**திகனாரை** *tigaṉārai,* பெ.(n.) கோபிசெட்டிப் பாளையம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Gopichettipalayam Taluk.

*[திக்கன்+அறை]*

**திங்கள்சந்தை** *tiṅgaḷsandai,* பெ.(n.) கல்குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk.

*[திங்கள்+சந்தை (mondaymarket)]*

**திசைச்சொல்** *tisai-c-col,* பெ.(n.) குறிப்பிட்ட வட்டாரங்களில் மட்டும் வழங்குவனவும் இது வரை கேட்டிராதனவுமாகிய தமிழ்ச் சொல் லாட்சிகள்; different usages in dialects.

*[திசை+சொல்]*

**திட்டிவாசல்** *tiṭṭi-vašal,* பெ.(n.) கோடியம்மன் திருவிழாவில், பச்சைக்காளி, பவளக்காளி அம்மன்கள் சந்திக்குமிடம் ; meeting place of village deities.

*[திட்டி+வாசல்]*

**திட்டுச் சட்டி** *tiṭṭu-c-caṭṭi,* பெ.(n.) உயரம் குறைவுள்ள சட்டி ; a mud pot which has less height.

*[திட்டு+சட்டி, தட்டு >தட்டி >சட்டி]*

**திடல்** *tiḍal,* பெ.(n.) புன்செய்ப் பகுதி; dry land.

*[திட்டு–திடல்]*

**திடியன்** *tiḍian,* பெ.(n.) திருமங்கலம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tirumangalam Taluk.

*[திட்டு–திடு–திடியன்]*

**திடும்** *tiḍum,* பெ.(n.) சிற்றூர் இசைக் கருவியினுள் ஒன்று; a village musical instrument.

*[திடு–திடும் (ஒலிக்குறிப்பு)]*

**திடுமல்** *tiḍumal,* பெ.(n.) நாமக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Namakkal Taluk.

*[திட்டு–திடு–திடுமல்]*

**திடுமுட்டி** *tiḍumuṭṭi,* பெ.(n.) தொடையில் இடுக்கி வைத்து முழக்கும் இசைக்கருவி; a kind of musical instrument.

*[திள்–திடு–திடுமுட்டி]*

**திண்டு**[1] *tiṇḍu,* பெ.(n.) சிறிய திண்ணை ; a raised platform.

*[திண்+து–திண்டு]*



**திண்டு²** *thiṇḍu,* பெ.(n.) தெருக்கூத்தில் பங்கேற்கும் ஆடவர் அணியும் அணி வகை; a kind of costume, worn by male artistes in the village street drama.

*[திண்+திண்டு]*



**திண்ணைத்தூங்கி** *tiṉṉaittūṅgi,* பெ.(n.) சோம்பேறி; sluggard, idler.

*[திண்ணை+தூங்கி. தூங்கு > தூங்கி]*

**திணறித் திண்டாடு-தல்** *tiṉaṟi-t-tiṇḍāḍu-,* செ.கு.வி. (v.i.) திக்குமுக்காடிப்போதல் பார்க்க; see tikku mukkādipō-,

*[திணறி+திண்டாடு-,]*

**திணை** *tiṇai,* பெ.(n.) இடம், பருவம் எனும் நோக்கில் ஐவகை நிலப்பாங்கில் வாழும் மக்களின் வாழ்வியல் கூறுபாடு; climate geographical and environmental life zonal divisions with people and their culture as found in ancient Tamil literature, habitat habits.

*[திண்–திணை]*

**திணைக்களம்** *tiṇai-k-kaḷam,* பெ.(n.) துறை; department.

*[திணை+களம்]*

**திதியன்** *tidiyaṉ,* பெ.(n.) ஒரு சிற்றரசனின் பெயர்; name of a chieftain.

*[ததை–திதி–திதியன்]*

**திப்பி** *tippi,* பெ.(n.) மாவு இடிக்கும்போது இடி படாமல் இருக்கும் கெட்டியான மாவு; course flour not pounded properly.

*[தப்பி–திப்பி]*

**திப்பினி** *tippiṉi,* பெ.(n.) கோலி இனத்தவர் ஆடும் நாட்டுப்புற நடனம்; a kind of folk dance performed by Kōli tribes.

*[திப்பு–திப்பினி]*

**திம்மலை** *timmalai,* பெ.(n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkuricci Taluk.

*[திண்+மலை]*

**திம்மூர்** *timmūr,* பெ.(n.) செங்கற்பட்டு வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Chenglepet Taluk.

*[திம்மன்+ஊர்]*

**திமிங்கலச் சுறா** *timiṅgala-c-cūrā,* பெ.(n.) சுறா மீன் வகை; whale shark.

*[திமிங்கிலம்+சுறா]*



**திமிரி கொம்பு** *timirikombu,* பெ.(n.) அளவில் சிறிய கொம்பு; small size horn.

*[திமிரி+கொம்பு]*

**திமிலை** *timilai,* பெ.(n.) ஒரு வகையான தோற் கருவி; a kind of instrument. (1:25).

*[திமில்–திமிலை]*

**திமிலைத்தண்ணி** *timilaittaṇṇi,* பெ.(n.) விறைத்துப் போன திருக்கை மீன் வகை; numb fish.

*[திமிலை+தண்ணி]*

**தியாகனூர்** *tyāganūr,* பெ.(n.) ஆத்தூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Attur Taluk.

*[தியகன்+ஊர்]*

**தியாகை** *tiyāgai,* பெ.(n.) கள்ளக்குறிச்சி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Kallakurichi Taluk.

*[தியகு–தியாகை]*

**திரக்கோல்** *tirakkōl,* பெ.(n.) வந்தவாசி வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Wandiwash Taluk.

*[ஒருகா. தரை+கால்]*

**திரகை** *tiragai,* பெ.(n.) மண்சட்டி வைப்பதற் காகத் திரவைக் கொடியால் பின்னப்பட்ட புரி மணை; coir or reaper ring.

*[திரக்கு–திரகை]*



**திரள்** *tiraḷ,* பெ.(n.) முடுகிச் செல்லும் விரைந்த நடையையுடைய தாளக்காலம்; fast step.

*[துர–திர–திரள்]*

**திராசி** *tirāši,* பெ.(n:) கடலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Cuddalore Taluk.

*[துறு+தி–துறுத்தி–திராசி (கொ.க)]*

**திராடம்** *tirāḍam,* பெ.(n.) பாலையாழில் தோன் றும் ஒரு வகையான பண் ; a musical note.

*[துராடம்–திராடம்]*

**திராவிடம்** *tirāviḍam,* பெ.(n.) கோயில் கூடக (விமான) அமைப்பில் காணப்பெறும் ஒரு தமிழர் கலைக்கூறு; a Dravidian type of temple construction.

*[தமிழம்–தமிளம்–திரமிளம்–திராவிடம்]*

**திரிக்குத்து** *tiri-k-kuttu,* பெ.(n.) சுருட்டி வைக்கப்பட்டிருக்கும் திரியில் நடுப்பகுதி யினைக் காட்டுவதற்காகக் கம்பியினால் குத்திக்காட்டப்பெறும் சூது விளையாட்டு ; a method of pointing the mid point in a coil by the gamblers in gambling.

*[திரி+குத்து]*

**திரிநர்** *tirinar,* பெ.(n.) அலைபவர் ; rovers.

*[திரி–திரிநர்]*

**திரிவாக்கக் கொள்கை** *tirivākkakkoḷgai,* பெ.(n.) உயிரினங்களின் படி முறை வளர்ச்சிக் கோட்பாடு; evolution theory.

*[திரிவு+ஆக்கம்+கொள்கை]*

**திருக்குக்கோணபீடம்** *tirukku-kōṇapīḍam,* பெ.(n.) சிற்பங்களை அமைப்பதற்கான பீட வகையினுள் ஒன்று; sculpture stand.

*[திருக்கு+கோணம்+பீடம்]*

**திருக்குக்கோணம்** *tirukku-k-kōṇam,* பெ.(n.) ஏழிசையின் பகுப்புகளில் ஒரு வகை; a type in musical note.

**மறுவ. திரிகோணம்**

*[திருக்கு+கோணம்]*

**திருக்குப்பதாகை** *tirukkuppadāgai,* பெ.(n.) பரதத்தில் வெளிப்படுத்தப்படும் ஒற்றை முத்திரை நிலைகளில் ஒன்று ; a dance pose.

**மறுவ. திரிபதாகை.**

*[திருக்கு+பதாகை]*

**திரியாலம்** *tiriyālam,* பெ.(n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruppattur Taluk.

*[திரு+ஆலம்(ஆலமரம்)]*

**திருக்குச்செம்பு** *tirukkuccembu,* பெ.(n.) திருகு மூடிச் செம்பு; a jug with screw lid.



[திருக்கு+செம்பு]

**திருக்குறுக்கை யானைக்கும்மி** *tirukkuru kai-yāṉai-k-kummi-,* பெ.(n.) யானையைப் பற்றிய கும்மிப்பாடல்; a kummi song on elephant.

[திரு+குறுக்கை+யானை+கும்மி]

**திருக்கை** *tirukkai,* பெ.(n.) ஒரு வகை மீன்; spotted eagle ray.

[திருக்கு–திருக்கை]



**திருக்கை ஒட்டி** *tiru-k-kai ōṭṭi,* பெ.(n.) குயவர் மண்பாண்டம்செய்யும் சக்கரம் ; a wheel for making mud-pots. "இக்கோயிலிற் திருக்கை ஒட்டி திருமுன் ஒதுகையும்"...

[திருக்கை+ஒட்டி]

**திருகினி** *tirukiṉi,* பெ.(n.) கொலுசு கழன்று விடாமல் இணைக்கும் ஆணி; a pin in anklet.

[திருகாணி >திருகினி(கொ.வ.)]

**திருகினிச்சொம்பு** *tirugiṉi-c-combu,* பெ.(n.) திருகி மூடும்படி மேல் மூடி அமைந்த சொம்பு; screw lid - cembu.

[திருகுணி – திருகினி + செம்பு]

**திருகுகள்ளி** *tirugukaḷḷi,* பெ.(n.) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramakkudi Taluk.

[திருகு+கள்ளி(செடி)]

**திருகை** *tirugai,* பெ.(n.) பழங்காலத்தில் கேழ் வரகு போன்றவற்றை மாவாக அரைக்கப் பயன் பட்ட கல்லினாலான கருவி; slabs of grinding stone.

[திருகு–திருகை]



**திருச்சாந்து** *tiru-c-cāndu,* பெ.(n.) அணி வகை; a kind of ornament. "திருப்பலிவட்டம் திருச்சாந்து திருமேய்பூச்சு திருவிளக்கு..." (கல்.)

[திரு+சாந்து]

**திருச்சிரை** *tiruccirai,* பெ.(n.) கும்பகோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kumbakonam Taluk.

மறுவ. திருச்சேறை

[திரு+சீரை]

**திருச்சின்னம்** *tiru-c-ciṉṉam,* பெ.(n.) பண் டைய ஊதுகருவி; a wind pipe.



[திரு+சின்னம்]

**திருட்டுக்கும்மி** *tiruṭṭu-k-kummi,* பெ.(n.) ஒரு வகையான கும்மிப்பாடல்; a kummi play.

[திருட்டு+கும்மி]

**திருத்தங்கல்** *tiruttaṅgal,* பெ.(n.) சாத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sattur Taluk.

[திரு+(தாங்கல்) தங்கல்(ஏரி)]

**திருத்தாளச்சதி** *tiruttāḷā-c-cati,* பெ.(n.) சந்த வகையினுள் ஒன்று; a type of melody song.

[திரு+தாளம்+சதி]

**திருநடனம்** *tirunaḍaṉam,* பெ.(n.) இறைவனை மட்டும் நினைத்து ஆடும் ஆட்டம்; dance especially meant for god.

[திரு+நடனம்]

**திருநிலை** *tirunilai,* பெ.(n.) பொன்னேரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ponneri Taluk.

[திரு+நிலை (கோயிலின் பெயர்)]

**திருப்பணி மாலை** *tiru-p-paṇimālai,* பெ.(n.) சிற்பக் கலைச் சிறப்புக் கூறுகளை விளக்குகின்ற நூல்; a treatise on sculpture.

[திருப்பணி+மாலை]

**திருப்பாட்டடைவு** *tiru-p-pāṭṭaḍaivu,* பெ.(n.) தேவாரப்பண்ணிற்கு ஆடும் நடனம்; dance for Thevaram song. (35:117).

[திரு+பாட்டு+அடைவு]

**திருப்புளி** *tiru-p-puḷi,* பெ.(n.) திருகாணியை முறுக்குவதற்குப் பயன்படும் கருவி; screw driver

[திருப்பு+உளி]

**திருப்பூட்டு** *tiru-p-pūṭṭu,* பெ.(n.) தாலி கட்டுதல்; tying marriage knot-tali.

[திரு+பூட்டு]



**திருப்பூமண்டபம்** *tiru-p-pūmaṇḍabam,* பெ.(n.) கோயிலில் மாலைதொடுக்கும் இடம் ; a place where flowers are string to make garland for temple. "நாள் ஒன்றுக்கு குறுணர நாநாளியாக வந்த திருப்பள்ளித் தாமம் திருப்பூ மண்டபத்து முதலாக அளக்கவும்" (கல்.).

[திரு+பூ+மண்டபம்]

**திரும்பாப்பயணம்** *tirumbā-p-payaṇam,* பெ.(n.) சாவு, இறப்பு ; death.

[திரும்பா(த)+பயணம்]

**திருமந்திர ஓலை** *tirumandira ōlai,* பெ.(n.) செப்பேட்டில் ஆணை எழுதும் அதிகாரி; a scribe appointed by the king. ஓலை நாயகம் சரிபார்க்கும் அதிகாரி. திருவாயிக் கேள்வி – அரசன் ஆணையைக் கேட்டுச் சொல்பவன்.

[திருமந்திரம்+ஓலை]

**திருமருகல்** *tirumarugal,* பெ.(n.) நன்னிலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Nannilam Taluk.

[திரு+மருகல்]

**திருமருங்கன்** *tirumaruṅgaṉ,* பெ.(n.) பழம் பெரும் சிற்பக் கலைஞர்; name of a sculpter.

*[திரு+மருங்கன்]*

**திருலோக்கி** *tirulōkki,* பெ.(n.) கும்பகோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kumbakonam Taluk.

*[திரி+லோகி–திரிலோகி, மூவுலக அம்மை]*

**திருவண்பரிசாரம்** *tirvaṇparišāram,* பெ.(n.) திருமால் சிற்பத்தின் நிலைகளில் ஒன்று; a posture of Tirumal.

*[திரு+மண்+பரிசாரம்]*

**திருவதி** *tiruvadi,* பெ.(n.) கடலூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Cuddalore Taluk.

**மறுவ. திருவதிகை**

*[திரு+(அதிகை) அதி–வதி(திருவதிகை)]*

**திருவரங்கி** *tiruvaraṅgi,* பெ.(n.) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramakkuḍi Taluk.

*[திரு+(அரங்கம்) அரங்கி]*

**திருவாக்கி** *tiruvākki,* பெ.(n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[திரு+(பாக்கம்) வாக்கம்– வாக்கி]*

**திருவாசி** *tiruvāsi,* பெ.(n.) இறையின் உருவங்களிற் சிற்பியர் வடிவமைக்கும் மேல் சுற்று வளைவு; ornamental meter ring - sculptural feature. (5:70).

*[திரு+வாசி]*

**திருவாணி** *tiruvāṇi,* பெ.(n.) திருகுக் குச்சி; screw.

*[திருகு+ஆணி]*

**திருவாராதனை** *tiruvārādaṉai,* பெ.(n.) கடவுள் பூசை; ritual worship of God. "இக் கிடக்கை நில முன்றும் திருவாராதனை செய்யும் யோகியார்க்கு..." (கல்).

*[திரு+ஆராதனை]*

**திருவிழா** *tiruviḻā,* பெ.(n.) நாட்டுப்புற மரபுப் பாங்குகளை உள்ளடக்கிய கொண்டாட்டம்; a traditional public function.

*[திரு+விழா]*

**திருவுண்ணாழிகை** *tiruvuṇṇāḻigai,* பெ.(n.) கருவறை; sanctum sanctoreum.

*[திரு+உண்+நாழிகை]*

**திருவை** *tiruvai,* பெ.(n.) பானை செய்யப் பயன்படும் மண்பாண்டச் சக்கரக் கருவி; potter's wheel. (ம.வ.சொ.).

*[திருகு+வை]*

**திருள்** *tiruḷ,* பெ.(n.) மட்பாண்டம் செய்ய உதவும் குயவன் சக்கரம்; potter's wheel.

*[திரு–திருகு–திருள்]*

**தில்லானா** *tillāṉā,* பெ.(n.) மிகக் கடினமான நாட்டிய உறுப்பு. (14:47); a difficult type of dance.

*[தில்–தில்லானா]*

**தில்லைவிடங்கன்** *tillaiviḍaṅgaṉ,* பெ.(n.) இசைச்சான்றோரில் ஒருவர்; a songster.

*[தில்லை+விடங்கன்]*

**திலாப்பியா** *tilāppiyā,* பெ.(n.) ஒரு வகை மீன்; tilapia.

*[துலா–துலாப்பு–துலாப்பியா]*

**திவவு** *tivavu,* பெ.(n.) யாழின் உறுப்புக்களில் ஒன்று; a part of the harp-yāḻ.

*[திவ–திவவு]*

**திற்பரப்பு** *tiṟparappu,* பெ.(n.) கல்குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk.

*[தில்(லை)+பரப்பு (தில்லை–மரப்பெயர்)]*

**திறம்** *tiṟam,* பெ.(n.) ஏழு நரம்புகளிலிருந்து குறைந்த நரம்புகள் கொண்ட இசை நிலை. a harp of lesser number of strings than the number seven.

*[திறு–திறம்]*

**திறவைக்கொடி** *tiravai-k-kodi,* பெ.(n.) பிரம்பு, கொடி போன்றவற்றால் பின்னப்பட்ட புரிமணை; a ring stand made of reaper or reed.

*[திறவை+கொடி]*

**திறன் எழுப்பிரி** *tiraneluppiri,* பெ.(n.) 1/2 அடி முதல் 1 அடி வரை மரம் இழைத்தலுக்குப் பயன்படும் கருவி; *an implement in carpentry.*

*[திறன்+எழு+பிரி]*

**திறனறி ஆட்டம்** *tiran-ari- āttam,* பெ.(n.) சடுகுடு ஆட்டத்தில் பிடித்தவரையெல்லாம் தன் வலிமையினால் விலக்கிவிட்டுத் தம் கட்சிக்குத் திரும்புதல்; *a talent in the game cadukudu.*

*[திறன்+அறி+ஆட்டம்]*

**தின்றிப்போத்து** *tinrri-p-pōttu,* பெ.(n.) 1. பெருந்தீனிக்காரன்; one who eats excessively. 2. தின்றுகொழுத்தவன் ; a big bellied fat person.

***தெ. தின்டிபோத்து***

*[தின்று+போத்து]*

**தினவாட்டு** *tinavāttu,* பெ.(n.) திமிர்; arrogance.

**மறுவ: தெனாவட்டு**

*[தினவு+ஆட்டு]*

**தீக்கணம்** *ti-k-kanam,* பெ.(n.) செய்யுளில் முதற்சீராக அமைக்கத் தகாததும், நிரை நேர் நேர் என வருவதுமாகிய தீய செய்யுட் கணம்; (Pros.) metrical foot of nirai-nēr-nēr, considered inauspicious at the commencement of a poem.

*[தீ + கணம்]*

**தீக்கோழி விளையாட்டு** *tikkōli vilaiyāttu,* பெ.(n.) தொடுபவன் வரும்போது காத்துக் கொள்ள வலது காலை மடக்கி வலது கையை முழங்காலுக்குள் நுழைத்தபடி மூக்கைப் பிடித்துக் கொள்ளும் விளையாட்டு; *ostrich tag (or) nosetag.*

**மறுவ: மூக்கைப்பிடித்தால் தொடாதே**

*[தீ+கோழி+விளையாட்டு]*

**தீச்சட்டி** *ti-c-catti,* பெ.(n.) கோயில் திருவிழா முதலியவற்றில் எடுக்கும் நெருப்புச்சட்டி; fire-pot carried as in temple-procession.

*[தீ + சட்டி]*



**தீச்சட்டி விளையாட்டு** *ticcattivilaiyāttu,* பெ.(n.) கரகத்திற்குப் மாறாக, தலையில் தீச் சட்டியை வைத்தாடும் ஆட்டம்;fire pot play.

*[தீ+சட்டி+விளையாட்டு]*

**தீச்சூடு** *ti-c-cūdu,* பெ.(n.) நோய் நீக்கத் தீயி னாற் சுடல்; actual cauterization (as an ulcer) by means of heated wire or rod thermocautery.

*[தீ+சூடு]*

**தீஞ்சோறு** *tiñjōru,* பெ.(n.) சட்டியின் அடியில் கருகிய சோறு; charred rice in the pot.

**மறுவ. அடிபிடித்த சோறு**

*[தீ(ய்)+சோறு]*

**தீட்டாலம்** *tittālam,* பெ.(n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurantakam Taluk.

*[தீற்று+ஆலம்]*

**தீட்டுக்கட்டை** *tittu-k-kattai,* பெ.(n.) உளி போன்ற தச்சுக் கருவி; an implement in carpentry.



[தீட்டு+கட்டை]

**தீட்டுக்கழிவு** *tīṭṭu-k-kaḻivu,* பெ.(n.) உடல் தூய்மையின் பொருட்டானதொரு குற்ற நீக்கம்; expiation for bodily impurity such as that caused by the death of relative.

[தீட்டு + கழிவு]

**தீட்டுச்சோறு** *tīṭṭu-c-cōṟu,* பெ.(n.) இழவு வீட்டிலும் பூப்பு நன்னீராட்டு விழாவிலும் பரிமாறப்படும் சோறு; meal offered at the house where a death occured and puberty function.

[தீட்டு+சோறு]

**தீத்தட்டிக்கல்** *tī-t-taṭṭi-k-kal,* பெ.(n.) நெருப்புக் கல்; flint used in olden days to strike fire.

**மறுவ. சிக்கிமுக்கிக்கல்**

[தீ+தட்டி+கல்]

**தீத்திறம்** *tī-t-tiṟam,* பெ.(n.) 1. நெருப்பின் வல்லமை; the power of fire. 2. செரிமான ஆற்றல்; the power of digestion, metabolic rate.

[தீ + திறம்]

**தீத்துப்பட்டை** *tīt-tuppaṭṭai,* பெ.(n.) பட்டுச் சேலையைச் சுருக்கமின்றித் தேய்க்கப் பயன் படும் பட்டை ; a bark used while ironing silk saree .

[தீற்று>தீத்து+பட்டை]

**தீப்பந்தம் சுற்று—தல்** *tī-p-pandamcuṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) சிறு கம்பினை வட்டமாக வளைத்து துணிகளைச் சுற்றி எண்ணெய் ஏற்றிப் பற்ற வைத்து விளையாடுதல்; to play with a fire pole.

[தீ+பந்தம்+சுற்றுதல்]

**தீப்பாய்—தல்** *tī-p-pāy-,* செ.கு.வி.(v.i.) கணவன் எரியூட்டப்பட்ட தீயில் மனைவி விழுந்து உயிர் துறத்தல்; to die with the deceased *husband by plunging into the pyre.*

[தீ+பாய்]

**தீப்பாய்வு** *tī-p-pāivu,* பெ.(n.) 1. தீப்புகுதல்; entering fire, as on dead. 2. உடன்கட்டை யேறுகை; sati.

[தீ > பாய்வு (அக்கினிப்பிரவேசம்)]

**தீபங்குடி** *tīpaṅkuḍi,* பெ.(n.) நன்னிலம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Nannilam Taluk.

[தீ–தீவம்–தீபம்+குடி]

**தீபமூட்டி** *tīpamūṭṭi,* பெ.(n.) இந்தளக் கட்டை யின் மற்றோர் பெயர் ; name of the wood indaḷam.

[தூபம்+ஊட்டி]

**தீயெறி சோறு** *tīeṟicōṟu,* பெ.(n.) படையல் இடும் சோறு ; rice oblation.

[தீ+எறி+சோறு]

**தீர்த்தக்காவடி** *tīrtta-k-kāvaḍi,* பெ.(n.) அழல் நாண்மீன் (அக்கினி நட்சத்திர) விழாவில் முருகனுக்கு ஊர் மக்கள் எடுக்கும் காவடி; kāvaḍi festival for god Murugan.

[தீர்த்தம்+காவடி]

**தீர்த்தக்குடமெடு—,த்தல்** *tīrtta-k-kuḍameḍu-,* 4 செ.கு.வி. (v.i.) பங்குனி உத்திர விழாவின் ஒரு கூறாக நீர்க்குடத்தை ஏந்துதல் (63:44); to hold water pot in panguni uttira procession.

[தீர்த்தம்+குடம்+எடுத்தல்]

**தீவளூர்** *tivaḷūr,* பெ.(n.) திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vriddhachalam Taluk.

*[ஒருகா. திருவள்ளூர்]*

**தீவனூர்** *tivaṉūr,* பெ.(n.) புளியங்காடு (திண்டிவனம்) வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[தீவன்+ஊர்]*

**துக்கிலிப்பூண்டு** *tukkili-p-pūṇḍu,* பெ.(n.) மிகச் சிறிய பூண்டு; a small shrub. (கொ.வ.வ.சொ.).

*[துக்குணி–துக்கிலி+பூண்டு]*

**துகங்கால்** *tugaṅkāl,* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[துக்கன்+கால்]*

**துங்கம்** *tuṅgam,* பெ.(n.) சிற்ப முத்திரையினுள் ஒன்று; a feature in sculpture.

*[துங்கு+அம்]*

**துடி** *tuḍi,* பெ.(n.) தாளத்தின் உறுப்புகளில் ஒன்று; a kind of tāḷam.

*[துடு–துடி]*

**துடியலூர்** *tuḍialūr,* பெ.(n.) கோயமுத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Coimbatore Taluk.

*[துடி–துடியல்+ஊர்]*

**துடுக்கு** *tuḍukku,* பெ.(n.) உடுக்கும் துடி எனும் இசைக் கருவியும் சேர்ந்து இசைக்கும் ஒலிப்பு; music produced both from uḍukku and tuḍi.

*[துடு–துடுக்கு]*

**துடுப்பதி** *tuḍuppadi,* பெ.(n.) ஈரோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Erode Taluk.

*[துடு+பதி]*

**துடுப்பு அழுகல்** *tuḍuppuaḻukal,* பெ.(n.) மீன்களுக்கு வரும் ஒரு வகை நோய்; finrot.

*[துடுப்பு+அழுகல்]*

**துடுப்புக்கீரை** *tuḍuppu-k-kīrai,* பெ.(n.) காட்டில் முளைக்கும் கீரை வகை; a kind of greens. (நெ.வ.வ.சொ.).

*[துடுப்பு+கீரை]*

**துடுப்புநாரை** *tuḍuppunārai,* பெ.(n.) நாரை வகையுள் ஒன்று; spoon bill.

*[துடுப்பு+நாரை]*



**துடுப்புவாயன்** *tuḍuppuvāyaṉ,* பெ.(n.) ஒரு வகை பறவை இனம்; spoon bill.

*[துடுப்பு+வாயன்]*

**துடும்பு** *tuḍumbu,* பெ.(n.) ஓர் இசைக்கருவி; a musical instrument.

*[துடும் (ஒலிக்குறிப்பு) – துடும்பு]*

**துடுமை** *tuḍumai,* பெ.(n.) தோலால் செய்யப் பட்ட பண்டைய இசைக்கருவி; an ancient musical instrument.

*[துடும்பு–துடுமை]*

**துடைக்குழி** *tuḍai-k-kuḻi,* பெ.(n.) தோற்ற வெற்றுக்குழி. (சென். வழக்கு).; a empty pit in indoor game plank.

*[துடை(துடைத்த)+குழி]*

**துடைப்பச்சுழி** *tuḍaippaccuḻi,* பெ.(n.) மாட்டின் வால் பகுதியில் இருக்கும் சுழி, தீமை பயக்கும் சுழி; a mark denoting bad omen on cow.

மறுவ. தீச்சுழி

*[துடைப்பம்+சுழி]*

**துண்டம்** *tundam,* பெ.(n.) எலும்பில்லாத பகுதி; fillet.

*[துண்டு+அம்]*

**துண்டு பிடி—த்தல்** *tundu-pidi-,* 4 செ.கு.வி. (v.i.) ஒயிலாட்டம் ஆடுவோர் கையில் துண்டு ஏந்துதல் ; to hold hand kerchief in oyilattam folk dance.

*[துண்டு+பிடி]*

**துண்டு மல்லிகைக் கதைப்பாடல்** *tundu-malligai-k-kadaippādal,* பெ.(n.) கோவைப் பகுதி இருளர்களின் கதைப்பாடல்; a dialogue song of the Irulas of Coimbatore.

*[துண்டு+மல்லிகை+கதை+பாடல்]*

**துண்டுமானியம்** *tundumaniyam,* பெ.(n.) ஓமலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Omalur Taluk.

*[துண்டு+மானியம்]*

**துன்னை** *tunnai,* பெ.(n.) ஆண்குறி ; male organ.

பட. துன்னெ

*[துன்—துன்னு—துன்னை]*

**துணிசிரமேடு** *tunisiramēdu,* பெ.(n.) சிதம் பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[துணி+சீர்+மேடு]*

**துணைப்பச்சை** *tunai-p-pāccai,* பெ.(n.) பூப்பெய்திய பெண்ணுக்குத் துணையாக இருக்கும் பெண்ணுக்குப் பச்சை குத்திவிடும் முறை; tatooing the girl friend of the matured girl.

*[துணை+பச்சை]*

**துத்தம்** *tuttam,* பெ.(n.) எடுப்புக் குரலொலியாக வரும் ஏழிசையினுள் ஒன்று; a musical note.

*[தூ—தூத்தம்—துத்தம்]*

**துத்திக்காடு** *tuttikādu,* பெ.(n.) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in VelloreTaluk.

*[துத்தி(செடி)+காடு]*

**துத்தாரி** *tuttāri,* பெ.(n.) ஊதும் இசைக்கருவி கருவி; a wind musical instrument.

*[துத்(ஒலிக்குறிப்பு)துத்தாரி]*

**துத்திக்குளம்** *tuttikkulam,* பெ.(n.) நாமக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Namakkal Taluk.

*[து(த்தி+குளம்]*

**துதியணி** *tudiyani,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[துதி+அணி]*

**துந்துபி** *tundubi,* பெ.(n.) உறுமியின் வேறு பெயர்; musical instrument tundubi.

*[தும்+துமி]*

**துப்பகூளி** *tuppakuli,* பெ.(n.) கழுகு போன்ற கதிர்; eagle ray.

*[துப்பம்+கூளி]*

**தும்பிப்பாடி** *tumbi-p-pādi* பெ.(n.) ஓமலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in ōmalur Taluk.

*[தும்பி(யானை)+பாடி]*

**தும்பிட்டிக்காய்** *tumbitti-k-kai,* பெ.(n.) கசப்புச் சுவையுடைய காட்டுக் காய் வகை; a bitter unriped fruit.

*[தும்மட்டி+காய்]*

**தும்பித்துள்ளல்** *tumbi-t-tullal,* பெ.(n.) காணிப் பழங்குடியினர் ஆடும் ஆடல்; a folk dance of Kāni community.

*[தும்பி+துள்ளல்]*

**தும்பித் தேர்வு** *tumbi-t-tērvu,* பெ.(n.) தும்பித் துள்ளலில் துள்ளுவதற்காகத் தேர்ந்தெடுக்கப் படும் ஆண் அல்லது பெண்; selected male or female for the play tumbi-t-tuḷḷal.

*[தும்பி+தேர்வு]*

**தும்பிலி** *tumbili,* பெ.(n.) பல்லி போன்ற மீன் ; lizard fish.

*[தும்பு–தும்பிலி]*

**தும்பு**[1] *tumbu,* பெ.(n.) மாடுகளைக் கட்டப் பயன்படும் கழுத்துக் கயிறு ; a small rope tied around the neck of cattle.

*[துள்–துண்டு–தும்பு]*

**தும்புத்துளை** *tumputtuḷai,* பெ.(n.) நுகத் தடியில் தும்பு மாட்டும் துளை;hole in the yoke.

*[தூம்பு–தும்பு+துளை]*



**தும்பூர்** *tumbūr,* பெ.(n.) போளூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Polur Taluk.

*[தூம்பு+ஊர்]*

**தும்பேரி** *tumbēri,* பெ.(n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruppattur Taluk.

*[தூம்பு+ஏரி]*

**துரட்டு** *turaṭṭu,* பெ.(n.) மூங்கில் குச்சியில் காய்களைப் பறிக்க கட்டியிருக்கும் கொக்கி; a hook fixed at the end of a bamboo pole.

மறுவ. தொரட்டி

*[துர+துரட்டு]*



**துரப்பமை ஆணி** *turappamaiāṇi,* பெ.(n.) யாழின் உறுப்பு; a part of harp.

*[துரப்பு+அமை+ஆணி]*

**துரவை** *turavai,* பெ.(n.) விழுப்புரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Villupuram Taluk.

*[துரவு(கிணறு)–துரவை]*

**துரிஞ்சல்** *turiñjal,* பெ.(n.) சிறிய வகை வௌவால் இனங்களில் ஒன்று ; a kind of bat which is in small size.

*[துரிஞ்சி (மரம்) – துரிஞ்சில்]*

**துரிஞ்சில்** *turiñjil,* பெ.(n.) காற்று அடுப்பு வகை; air oven.

**துருங்கூர்** *turuṅgūr,* பெ.(n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakurichi Taluk.

*[துரிஞ்சல்–துருங்கு+ஊர்]*

**துருஞ்சாபுரம்** *turuñjāpuram,* பெ.(n.) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvannamalai Taluk.

*[துரிஞ்சை+புரம்]*

**துருத்தி**[1] *turutti,* பெ.(n.) பொம்மலாட்டத்தில் பயன்படுத்தப்பட்ட ஓர் இசைக்கருவி; a music accompaniment in puppet show.

*[துரு–துருத்தி]*

**துருத்தி**[2] *turutti,* பெ.(n.) காற்று அடிக்கும் கருவி; a wind blower.

*[துரு–துருத்தி]*

**துரும்பன்** *turumbaṉ,* பெ.(n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[துரு(செம்மறி)–துரும்பன்]*

**துருவை** *turuvai,* பெ.(n.) விழுப்புரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Villupuram Taluk.

*[துரு–துருவை]*

**துல்லிகை** *tulligai,* பெ.(n.) வழக்கற்றுப்போன ஓர் இசைக்கருவி; a musical instrument not extant.

*[துல்–துல்லிகை]*

**துவரடிமனை** *tuvaraḍimaṉai,* பெ.(n.) அறந் தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantāngi Taluk.

*[துவரை+அடி+மனை]*

**துவரிமான்** *tuvarimāṉ,* பெ.(n.) மதுரை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Madurai Taluk.

*[துவரை(செந்நிறம்)+மான்]*

**துவார்** *tuvār,* பெ.(n.) திருவாடானை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadānai Taluk.

*[துவல்(செம்மண்)–துவார்]*

**துவைமுக வடிவம்** *tuvaimugavaḍivam,* பெ.(n.) இரண்டு திருமுகங்களைக் கொண்ட வடமொழி சிற்பம் ; a statue with two faces.

*[துவை+முக+வடிவம்]*

**துவைக்கடை** *tuvai-k-kaḍai,* பெ.(n.) யாழின் ஓர் உறுப்பு ; a part of harp-yāḷ

*[துவை+கடை]*

**துள்ளல் அடைவு** *tuḷḷal-āḍaivu,* பெ.(n.) அரைமண்டியில் இருந்து குதிகால் இரண்டும் தொடையில் படும்படித் துள்ளியாடுதல்; a dance feature.

*[துள்ளல்+அடைவு]*

**துள்ளல்** *tuḷḷal,* பெ.(n.) காணிப்பழங்குடியினர் ஆடல் ; a folk dance performed by peole of Kāni community.

*[துள்ளு+அல்]*

**துளசிலம்மா கதைப்பாடல்** *tuḷacilammā-kadaippāḍal,* பெ.(n.) கோவைப் பகுதி இருளர்களிடம் புழக்கத்தில் உள்ள ஒரு கதைப்பாடல்; a dialogue combined song of the Irulas of Coimbatore.

*[துளசில்+அம்மை+கதை+பாடல்]*

**துளைச் சிறுதாரை** *tuḷai-c-ciṟutārai,* பெ.(n.) ஒரு வகையான இசைக்கருவி; a musical instrument.

*[துளை+சிறு+தாரை]*

**துளைமேழி** *tuḷaimēḻi,* பெ.(n.) கைப்பிடியில் துளையிட்டிருக்கும் மேழி ; wodden hand hold of plough with hole.

*[துளை+மேழி]*

**துஞ்சம்** *tuñjam,* பெ.(n.) செங்கற்பட்டு வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Chengelpet Taluk.

*[துஞ்சை– துரிஞ்சல்–துரிஞ்சை+துஞ்சம்]*

**துள்ளுகெண்டை** *tuḷḷukkeṇḍai,* பெ.(n.) கெண்டை மீன் ; thread brean.

*[துள்ளு+கெண்டை]*



**துளைக்கும் புழு** *tuḷaikkumpuḻu,* பெ.(n.) துளை இடும் பூச்சி ; boring worm.

*[துளைக்கும்+புழு]*

**துன்னற்காரர்** *tuṉṉaṟkārar,* பெ.(n.) ஆடைகளைத் தைப்பவர்; tailor.

*[துன்னல்+காரர]*

**துன்னுதல்** *tuṉṉu-,* செ.குன்றாவி. (v.t.)
1. நிலத்தை உழுதல்; to till the land.
2. தின்னுதல் ; to eat.

**தெ. துன்னு**

*[துன்(உட்செலுத்து)–துன்னு]*

**தூக்காய்** *tūkkāy,* பெ.(n.) பல்லாங்குழியாட்டத்தில் தோற்று நிரப்பப்படாத வெற்றுக் குழியில் அடுத்தவர் மறந்து தவறுதலாகப் போடும் காய். (திருச்சி); empty pit in pāllankuḻi game filled by some one by mistake.

*[தூக்கு+காய்]*

**தூக்குக் குண்டு** *tūkkukkuṇḍu,* பெ.(n.) தூக்குக் கட்டையில் மட்டம் பார்க்கும் குண்டு ; a weight verifier.

*[தூக்கு+குண்டு]*



**தூக்குக் கூடை** *tūkku-k-kūḍai,* பெ.(n.) காய்களை எலி கடிக்காமல் கயிற்றில் தொங்க வைக்கும் கூடை; a hang-basket to save the input from the damage of rats.

*[தூக்கு+கடை]*

**தூக்குப்போகி** *tūkku-p-pōgi,* பெ.(n.) கையில் பிடிக்கும் வளையம் உடைய ஏனம்; a vessel with ring.

*[தூக்கு+போகி]*

**தூங்கல் ஓரியார்** *tūngalōriyār,* பெ.(n.) கடைகழகப் புலவர்; a poet of Sangam age.

*[தூங்கல் (மலை)+ஓரியார்]*

**தூங்காவி** *tūṅgāvi,* பெ.(n.) உடுமலைப்பேட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Udumalpet Taluk.

*[தாங்கு(நீளம்,ஆழம்)+ஆவி(குளம்)]*

**தூங்குணி பிடி–த்தல்** *tūṅguṇipiḍi-,* 4 செ.கு.வி. (v.i.) முக்குவர் இனத்தில் குழந்தைகள் நோய் பிடித்தாற் போல் இருத்தல்; to appear of Mukkuva children as if affected by disease.

*[தூங்குணி+பிடி]*

**தூக்கி** *tūkki,* பெ.(n.) நொண்டி விளையாட்டில் சொல்லப்படும் சொல் ; a word used in limping play by the children.

*[தூக்கு–தூக்கி]*

**தூங்கலார்** *tūṅgalār,* பெ.(n.) தழும்பனைப் பாடிய புலவரின்பெயர்; name of sangam poet.

*[தூங்கல் (மலை)+ஆர்]*

**தூங்கெயில்** *tūṅgēyil,* பெ.(n.) தொடிதோள் செம்பியனால் வெல்லப்பட்ட உயரம் மிகுந்த நெடுங்கோட்டை ; very high fort conquered by the Chola king Toditōl cembiyan.

*[தூங்கு(உயரம்)+எயில்(கோட்டை)]*

**தூண்டிலார்கழகம்** *tūṇḍilārkaḻagam,* பெ.(n.) தூண்டில் போடுவோருக்கான கழகம்; angler's club.

*[தூண்டில்+ஆர்+கழகம்]*

**தூண்டில்முள்** *tūṇḍilmuḷ,* பெ.(n.) மீன் பிடிக்கும் தூண்டிலில் உள்ள கொக்கி ; hook.

*[தூண்டில்+முள்]*

**தூத்துக்கூடை** *tūttukkūḍai,* பெ.(n.) எள் போன்றவற்றில் உள்ள குப்பையைத் தூற்று வதற்குப் பயன்படும் கூடை; winnowing basket.

*[தூற்று+கூடை -தூற்றுக்கூடை - தூத்துக் கூடை (கொ.வ)]*

**தூதை** *tūdai,* பெ.(n.) சிவகங்கை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[துதை-தூதை]*

**தூபமூட்டி** *tūbamūṭṭi,* பெ.(n.) இந்தளக் கட்டையின் மற்றோர் பெயர் ; other name of the wood indalam.

*[தூபம்+ஊட்டி]*

**தூம்பா** *tūmbā,* பெ.(n.) கழிவு நீர்க் கால்வாய், சாக்கடை ; drainage.

*[தூம்பு-தூம்பா மண்ணால் செய்த வடி குழாய்]*

**தூம்பி** *tūmbi,* பெ.(n.) செங்குத்தாக மேலே எழும்பி இறங்க வல்ல திருகு வானூர்தி ; helicopter.

*[தூம்பு - தூம்பி]*

**தூம்பு** *tūmbu,* பெ.(n.) மூங்கிலாற் செய்யப்பட்ட குழற்கருவி; a kind of musical instrument.

*[தூ-தூம்பு]*

**தூமன்** *tūmaṉ,* பெ.(n.) கொடியவன் ; evil person.

*[தீ-தீயன்-தீமன்-தூமன் (கொ.வ.)]*

**தூய தைவதம்** *tūyataivadam,* பெ.(n.) மென் பண் (சுர) வகை; a melody type.

*[தூய+தைவதம்]*

**தூய பட்டு** *tūya paṭṭu,* பெ.(n.) கலப்படம் இல்லாத பட்டுநூலால் நெய்த பட்டாடை ; pure silk.

*[தூ-தூய+பட்டு]*

தூய பட்டாடை உடுத்தால் வியர்க்காது. கோடையில் தணுப்பும் குளிர் காலத்தில் வெதுப்பும் தரும். தூய பட்டுத் துணியை எரித்தால் புகை நாற்றம் தந்து கரிந்த மண்டியாகும், வெண்சாம்பல் ஆகாது என்பர்.

**தூர் எடு-த்தல்** *tūr eḍu-,* பெ.(n.) தூய்மைப் படுத்தல்; to desilt.

*[தூர்+எடு]*

**தூர்வை** *tūrvai,* பெ.(n.) பல்லாங்குழியில் தோற்று நிரப்பப்படாத வெற்றுக் குழிக்குப் புதுக் கோட்டையில் வழங்கும் பெயர்; empty pit in pallankuḷi indoor game of Pudukottai.

*[தூர்-தூர்வை]*

**தூரியம்** *tūriyam,* பெ.(n.) ஓர் இசைக்கருவி; a kind of musical instrument.

*[தூர்-தூரியம்]*

**தூரிகை** *tūrigai,* பெ.(n.) தூரிகையைப் பற்றிக் கூறும் சிற்ப நூல்; a treatise which deals with making tūrikai.

*[தூரிகை > Skt. தூரிகா]*

**தூரிகை** *tūrigai,* பெ.(n.) தூசு துடைக்கும் கருவி; brush.

*[தூர்-தூரிகை]*

**தூரி வலை** *tūrivalai,* பெ.(n.) மீன் பிடிக்கும் வலையுள் ஒன்று ; trawl net.

*[தூர்-தூரி]*

**தூவக்கால்** *tūvakkāl,* பெ.(n.) சாம்பிராணி காட்டப் பயன்படும் கருவி ; perfume stand.

*[தூவம்+கால்]*

**தூவல்** *tūval,* பெ.(n.) எழுதுமை கோல் ; ink pen.

*[தூவி-தூவல்]*

பண்டைக் காலத்தில் இறகுக் கட்டை எழுது கோலாகப் பயன்பட்டதால் 'தூவல்' எனப் பெயர் பெற்றது.



**தூவாச்சி** *tūvācci,* பெ.(n.) விளையாட்டினை இடையில் நிறுத்த சொல்லப்படும் சொல்; a word uttered to stop the game.

*[தூவு+(ஆற்று)ஆத்து–ஆச்சி]*

**தூவிடு–தல்** *tūvidu-,* செ.கு.வி.(v.i..) சிறுவர் சண்டை முடிவில் இனி ஒருவரோடொருவர் பேசுவதில்லை என்பதைக்குறிப்பிடக் குறிப் பாகச் சொல்லும் சொல் ; a term used to denote unwillingness to speak with each other at the end of a quarrel among children. அவன் என்னோடு தூ(டு) விட்டு விட்டான் (உ.வ.)

**மறுவ. காய் விடுதல்.**

*[தூ+விடு– இது 'டு' விடுதல் எனத் திரிந்தது]*

**தெக்கத்தி நையாண்டி இசை** *tekkatti, naiyāṇḍiisai* பெ.(n.) நையாண்டியிசையின் ஒரு கூறு; a type of naiyandi music concert.

*[தெற்கு+அத்தி+நையாண்டி+இசை]*

**தெக்கத்தித்தெம்மாங்கு** *tekkatti-t-temmāṅgu,* பெ.(n.) தென்பாண்டிச் சீமையில் பாடப்பெறும் தெம்மாங்கு வகை; a folklore of southern tip of Tamilnadu.

*[தெற்கு+அத்தி+தெம்மாங்கு]*

**தெகை** *tegai,* பெ.(n.) உறுதி, இறுதி நிலை; a final settlement of bargain. "மாடு விலை தெகைஞ்சாச்சு" (பே.வ.).

*[திகை–தெகை]*

**தெங்காஞ்சி** *teṅgāñji,* பெ.(n.) திடுமெனத் தோன்றல், எதிர்பாரா காட்சி ; sudden and unexpected appearance .அவன் தெங் காஞ்சியாக வந்தான் (வடார்க்)

*[தீம்–தேம்–தெம்+(காட்சி)–காஞ்சி (கொ.வ.)]*

**தெங்கால்** *teṅgāl,* பெ.(n.) வாலாசா வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Walajah Taluk.

*[தென்+கால்]*

**தெங்கு திட்டு** *teṅgu-tiṭṭu,* பெ.(n.) கருநாடகத் தெருக்கூத்தின் ஒரு வகைப் பாணி; a kind of street dance of Karnātaka.

*[தெங்கு+திட்டு]*

**தெத்தி** *tetti,* பெ.(n.) நாகபட்டினம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Nagapattinam Taluk.

*[தெற்றி(திட்டு)–தெத்தி]*

**தெப்பக்கட்டை** *teppa-k-kaṭṭai,* பெ.(n.) மிதக்கப் பயன்படுத்தும் கட்டை; floating block of timber.

**மறுவ: மிதப்புக்கட்டை**

*[தெப்பம்+கட்டை]*

**தெப்பக்குளம்** *teppakkuḷam,* பெ.(n.) ஒரு வகையான பச்சைக்கோலம்; a kind of green 'kolam'.

*[தெப்பம்+குளம்]*

**தெப்பெடுத்தல்** *teppeḍu-,* தொ.பெ. (vbl.n.) 'தத்தெடுத்தல்' என்பதனைக் குறிக்கும் கதைப்பாடல் சொல்; a word used in folklore.

*[தெப்பு+எடுத்தல்]*

**தெம்மாங்கு** *temmāṅgu,* பெ.(n.) நாட்டுப்புறப் பாடல் வகைகளுள் ஒன்று; a kind of folklore.

*[தெம்+பாங்கு]*

**தெம்மாடி** *temmāḍi,* பெ.(n.) கோழை, அறிவில் லாதவன்; coward. (நெ.வ.வ. சொ.).

*[தன்பாடு–தம்பாடு–தெம்மாடு–தெம்மாடி]*

**தெய்யார்** *teyyār,* பெ.(n.) வந்தவாசி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Wandiwash Taluk.

*[தெய்+ஊர்–தெய்யூர்–தெய்யார்]*

**தெய்வத்தை வருத்து–தல்** *teyvattaivaruttu-,* செ.கு.வி. (v.i.) வில்லுப்பாட்டின் தொடக் கத்தில், தெய்வத்தை அழைத்தல்; to invoke

deities in folklore villuppāṭṭufor open as a opening song.

*[தெய்வம்+அத்து+ஐ+வருத்து]*

**தெய்வப் பிறவி** *teyva-p-piṟavi,* பெ.(n.) வில்லுப்பாட்டில் ஆண், பெண் தெய்வங்களின் வரலாற்றைச் சொல்லும் முறை; a method in villuppāttu to narrate the history of male andfemale deities.

*[தெய்வம்+பிறவி]*

**தெய்வமுறுதல்** *teyvamuṟu-,* தொ.பெ. (vbl.n.) வில்லுப்பாட்டின் ஒரு கூறு; a part of villu-p-pāṭṭuinfolklore.

*[தெய்வம்+உறுதல்]*

**தெய்வமேறி ஆடல்** *teyvamēṟiāḍal,* பெ.(n.) தன்னுள் தெய்வமேறிய நிலையில் ஒருவன் ஆடுகின்ற ஆடல் ; dancing of a person possessed by a diety.

*[தெய்வம்+ஏறி+ஆடல்]*

**தெய்விகம்** *teivigam,* பெ.(n.) சிற்பங்களை அமைப்பதில் உள்ள அளவு முறை; a measurement in making a sculpture.

*[தெய்வம்–தெய்வீகம்]*

**தெய்வேந்திரி** *teyvēndri,* பெ.(n.) திருவில்லிப் புத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Srivilliputtur Taluk.

*[தெய்வம்+(ஏந்தல்) ஏந்திலி–ஏந்திரி (கொ.வ.)]*

**தெரங்கண்ணி** *teraṅgaṇṇi,* பெ.(n.) தூண்டில் முள்ளில் வைக்கப்படும் இறை; bait.

*[திரள்+கண்ணி]*

**தெரட்டை** *teraṭṭai,* பெ.(n.) வெளவால் மீன் ; bat fish.

*[தெரள்–தெரட்டை]*

**தெரணை** *teraṇai,* பெ.(n.) அறுந்து போன இழை; cut off thread.

*[தெரள்–தெரணை]*

**தெரவல்** *teraval,* பெ.(n.) திறவுகோல் (சாவி); key (நெ.வ.சொ.).

*[திறவல்–தெரவல், (கொ.வ.)]*



**தெரிகுச்சி** *terikucci,* பெ.(n.) விழுது கயிற்றை இழுத்துக் கட்டும் குச்சி ; a stick used to unite the rope.(ம.வ.தொ.89).

*[தெரி+குச்சி]*

**தெரிநிலை** *tērinilai,* பெ.(n.) ஒற்றை முத்திரை நிலையின் ஒரு பிரிவு ; a dance pose.

*[தெரி+நிலை]*

**தெருட்டல்** *teruṭṭal,* பெ.(n.) இசைக்கரணத் தின் ஒரு வகை; a type in musical performance.

*[தெருள்–தெருட்டு+அல்]*

**தெல்லுக்காய்** *tellu-k-kāy,* பெ.(n.) தெல்லுக் காய் கொண்டு ஒளிந்து விளையாடுதல்; a hide and seek game.

*[தெல்லு–காய்]*

**தெலக்கம்வை-த்தல்** *telakkamvai-,* செ.கு.வி. (v.i.) மரம் அறுக்கும் வாளின் பல் வரிசையில் ஒன்றின் கூர்மை இடசாய்வாகவும் அடுத்த பல்லின் கூர்மை வலசாய்வாகவும் வைக்கப் படும் விலக்கம்; shaping the filing system in a saw.

*[தெலக்கம்–வை]*

**தெலக்கு–தல்** *telakku-,* செ.குன்றாவி. (v.t.) வழியில் நிற்கும் ஒருவரை ஒதுக்குதல்; to make way by clearing the tresspassers on the road.

*[தில–தெல–தெலக்கம்]*

**தெலக்கம்** *telakkam,* பெ.(n.) விலக்கம்; removal, giving space in between.

*[திலக்கு–தெலக்கம்]*

**தெலகு–தல்** *telagu,* செ.கு.வி. (v.i.) விலகுதல்; move, get away.

*[துலகு–திலகு]*

**தெள்ளாரி** *te!!āri,* பெ.(n.) பெண்களைப் பகடி செய்து கொண்டு ஊர் சுற்றும் இளைஞன். (கொ.வ.வ.சொ.). ; an youngster who goes on teasing girls toitering casanova.

*[தெள்ளல்+ஆரி]*

**தெள்ளுப்பூச்சி** *te!!uppūchi,* பெ.(n.) வண்டின் ஒரு வகை; a kind of bee.

*[தெள்ளு+பூச்சி]*

**தெள்ளூர்** *thellur,* பெ.(n.) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk.

*[தெள்+ஊர்]*

**தெளி** *te!i,* பெ.(n.) விழுப்புரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Villupuram Taluk.

*[தளி–தெளி]*

**தெளிந்த வலை** *te!intavalai,* பெ.(n.) அகலமான கண்கள் உள்ள வலை; a net with large holes.

*[தெளி–தெளிந்த+வலை]*

**தெளுவு** *te!uvu,* பெ.(n.) பதநீர்; tender palm juice.

*[தெள்–தெளுவு]*

**தெற்கத்தி மெட்டு** *terkattimettu,* பெ.(n.) தென்னாட்டுத் தெருக்கூத்தில் காணப்படும் மெட்டு வகை; a rythm in street drama.

*[தெற்கு+அத்தி+மெட்டு]*

**தெற்குகூடலி** *therkukūdali,* பெ.(n.) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramakkudi Taluk.

*[தெற்கு+கூடல்+இ]*

**தெற்றி** *terri,* பெ.(n.) மகளிர் விளையாட்டு (புறம்–53); a game of young women.

*[தெற்று+இ]*

**தெறிப்பு** *terippu,* பெ.(n.) மரம், பலகை போன்ற வற்றில் பிளவு; crevice in a wooden plank or rafter.

*[தெறி–தெறிப்பு]*

**தென்பாங்கு** *tenpāngu,* பெ.(n.) தென் பகுதியில் வாழும் மக்கள் பெரும்பாலும் பாடுகின்ற பாடல் வகை; a southern type of melodious folk song.

**மறுவ. தெம்மாங்கு**

*[தென்+பாங்கு]*

**தென்முனைக் கண்டம்** *tenmunai-k-kandam,* பெ.(n.) நிலவுருண்டையின் தென் முனைப் பகுதி; Antartica.

*[தென்+முனை+கண்டம்]*

**தென்னந்தடுக்கு** *tenna-n-tadukku,* பெ.(n.) தென்னை ஓலையால் பின்னப்பட்ட கீற்று; a side screen made of coconut leaves.

*[தென்னை+தடுக்கு]*

**தென்னை மரத்து விளையாட்டு** *tenai-marattuvi!ayāttu,* பெ.(n.) காலில் குழந்தையினை வைத்து ஆடும் விளையாட்டு; a play sitting the child on the fore-leg.

*[தென்னை+மரத்து+விளையாட்டு]*

**தென்னங்குளி** *tennanguli,* பெ.(n.) ஒரு வகை மீன்; a kind of fish.

*[தென்னம்+(குள்ளி)குளி]*

**தெனாவட்டு** *tenāvattu,* பெ.(n.) தினவாட்டு பார்க்க; see tinavāttu.

*[தினவாட்டு – தெனாவட்டு]*

**தேக்கநிலை** *tēkkanilai,* பெ.(n.) தேங்கிய நீர்; stagnant water.

*[தேக்கம்+நிலை]*

**தேக்கித் தள்ளு–தல்** *tēkki-t-tallu-,* 6 செ.குன்றாவி.(v.t.) குண்டினைக் கையை அல்லது காலினை மடக்கிக்கொண்டு தள்ளுதல்; to push away a ball with the knee or elbow.

*[தேக்கி+தள்ளு–]*

**தேக்கு–தல்** *tēkku-,* 6 செ.கு.வி.(v.i.) நகர்தல்; to move with a little pause.

*[துக்கு–தெக்கு–தேக்கு]*

**தேங்காத்தொட்டி** *teñkā-t-totti,* பெ.(n.) தேங்காய் மூடி; one part of the coconut-shell.

*[தேங்காய்+தொட்டி]*

**தேங்காய் உடைத்தல்** *tēnkāy udaittal,* தொ.பெ. (vbl.n.) கரகாட்டக் கலைஞர் நிகழ்த்தும் ஒரு திறம்சார் விளையாட்டு; a skillful play of the folklorists in karagam play.

*[தேங்காய்+உடைத்தல்]*

**தேங்காய்நார்புல்** *tēngāinārpul,* பெ.(n.) புல் வகை; a kind of grass.

*[தேங்காய்+நார்+புல்]*

**தேங்காய்ப்போர்** *tēṅkāy-p-pōr,* பெ.(n.) இரண்டு தேங்காய்களை உருட்டி ஒன்றுட னொன்று மோத விடுதல்; making coconuts to dash with each other with force.

*[தேங்காய்+போர்]*

**தேடாக்கி** *tēdākki,* பெ.(n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[தோடு–தேடு+ஆக்கி]*

**தேய்புரிபழங்கயிற்றனார்** *tēypuri-palaṅ kayirranār,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்; a poet of sangam age.

**தேர்ச் சிற்பாசாரிகள்** *tēr-c-cirpāsārikal,* பெ.(n.) கம்மாளர் இனத்திலுள்ள ஒரு பிரிவினர்; a sub caste of Kammālar.

*[தேர்+சிற்பம்+ஆசாரிகள்]*

**தேர்நூல்** *tērnūl,* பெ.(n.) தேர் செய்யும் முறை களைக் கூறும் நூல்; a treatise on chariot making. நீளியல் நெடுந்தேர் (அகம்.234) நூலமை சிறப்பின் வாமான் திண்தேர். (அகம்.400)

*[தேர்+நூல்]*

**தேர்வகச்சீட்டு** *tērvagaccițțu,* பெ.(n.) தேர்வு எழுதும் மாணவர்க்கு வழங்கும் புகவுச்சீட்டு; hall ticket.

மறுவ. நுழைவுச்சீட்டு

*[தேர்வு+அகம்+சீட்டு]*

**தேர்ப்புரை** *tērppurai,* பெ.(n.) கொம்பு முறி விளையாட்டில் இரு சாராரும் உருவாக்கு கின்ற தேர்களை வைக்கும் கூடம் ; a common place station to place temple cars of two groups.

*[தேர்+புரை]*

**தேர்பாவுக் குச்சி** *tērpāvu-k-kucci,* பெ.(n.) நூல் இழைத்தலின் பயன்படுத்தப்படும் கருவி; a device in weaving.

*[தேர்+பாவு+குச்சி]*

**தேர்போகி** *tēr-pōgi,* பெ.(n.) இராமநாதபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ramanathapuram Taluk.

*[தேர்+போகி]*

**தேர்வளி** *tērvali,* பெ.(n.) பொன்னேரி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Ponneri Taluk.

*[தேர்+வழி]*

**தேர்வாய்** *tērvāy,* பெ.(n.) பொன்னேரி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Ponneri Taluk.

*[தேர்+வாய்]*

**தேரம்** *tēram,* பெ.(n.) நேரம்; time. (நெ.வ. வ.சொ.).

*[நேரம்–தேரம்(கொ.வ.)]*

**தேரிக்காட்டான்** *tēri-k-kāțțān,* பெ.(n.) பாலைவனப் பகுதியில் வாழ்பவன் ; one who dwells in desert like place.

*[தேரி+காடு+ஆன்]*

**தேரிவிளை** *tērviḷai,* பெ.(n.) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[தேரி+விளை(மிளை)]*

**தேவகோட்ட தோரணங்கள்** *tēvakōṭṭa-tōra ṇaṅgaḷ,* பெ.(n.) சோழர் காலக் கோயில்களில் சிற்பங்கள் உள்ள இடம்; a place where the Chola period sculptures are preserved.

*[தேவர்+கோட்டம்+தோரணங்கள்]*

**தேவதாசிகள்** *tēvadāsigaḷ,* பெ.(n.) கோயில் தெய்வத்தின் முன் பரதம் ஆடுபவர்; dancing women in temples.

**மறுவ. தேவரடியார்**

*[தேவ+தாசிகள்]*

**தேவதாரு**[1] *tēvatāru,* பெ.(n.) மரத்தாலான சிற்பங்கள் செய்யப் பயன்படும் மர வகை; wood variety used to make chariots.

*[துவை+தாரு]*

**தேவதாரு**[2] *tēvatāru,* பெ.(n.) மருந்துக்குப் பயன்படும் மரம் ; a tree of medical use.

*[தேவை+தாரு]*

**தேவ துந்துமி** *tēvadundumi,* பெ.(n.) தேவராட்டத்தில் இடம் பெறும் "உறுமி" எனும் இசைக் கருவி; urumi, a musical instrument.

*[தேவன்+துந்துமி]*



**தேவரடியார்** *tēvaradiyār,* பெ.(n.) கோயில்களில் பரதம் ஆடும் பெண்கள்; temple dancers.

*[தேவர்+அடியார்]*

**தேவராட்டம்** *tēvarāṭṭam,* பெ.(n.) கம்பளத்து நாயக்கர் ஆடும் ஆட்டம்; a folk dance.

*[தேவர்+ஆட்டம்]*

**தேவராட்டி** *tēvarāṭṭi,* பெ.(n.) குரவைக் கூத்தாடும் பெண்டிர்; dancer of kuravai dance.

*[தேவர்+ஆட்டி]*

**தேவராளன்** *tēvarāḷan,* பெ.(n.) குரவைக் கூத்தாடும் ஆடவர்; male dancer *of kuravai.* (6:120).

*[தேவர்+ஆளன்]*

**தேவாசனம்** *tēvācānam,* பெ.(n.) தேர்ச் சிற்பத்திற்கு முறையாகப் பூசை புரிவோர்க்குரிய பங்கு; a traditional share for the priests who perform ritual to a temple car sculptures.

*[தேவர்+அசனம்]*

**தேவானந்தல்** *tēvanandal,* பெ.(n.) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvannamalai Taluk.

*[தேவன்+ஏந்தல்]*

**தேளி**[1] *teḷi,* பெ.(n.) அருப்புக்கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[தெள்–தெள்ளி–தேளி]*

**தேளி**[2] *tēḷi,* பெ.(n.) ஒரு வகை மீன்; a kind of fish.

*[தேள்–தேளி]*

**தேற்றான்கொட்டை** *tēṟṟānkōṭṭai,* பெ.(n.) உடல் நோய்களுக்கு மருந்தாகப் பயன்படும் மரம்; a tree of medical use.

*[தேற்று–தேற்றான்+கொட்டை]*

**தேன்மெழுகு முறை** *tēṉmeḷugumuṟai,* பெ.(n.) செப்புப் படிமங்கள் செய்யும் முறை

களில் ஒன்று; a method of making bronze statues.

*[தேன்+மெழுகு+முறை]*

**தை நோம்பி** *tainōmbi,* பெ.(n.) பொங்கல் பண்டிகை. (கொ.வ.வ.சொ.).

*[தை+நோன்பு–நோம்பி (கொ.வ.)]*



**தையல் குருவி** *taiyalkuruvi,* பெ.(n.) ஒரு வகை குருவி இனம்; a kind of sparrow.

*[தையல்+குருவி]*

**தைலக்காப்பு** *taila-k-kāppu,* பெ.(n.) கரு வறையில் அமைந்துள்ள சுதைச் சிற்பங் களுக்குச் செய்யப்படும் காப்பு; embalming ointment for the conservation of wooden or concrete statues.

*[தைலம்+காப்பு]*

**தைவரல்** *taivaral,* பெ.(n.) பண்ணின் சுரங்களை ஆறுசுருதியுடன் அழகுறப் பாடுதல்; singing perfectly.

*[தை+வா]*

**தைவரல் எழால்** *taivaralelāl,* பெ.(n.) ஒரு இசை வகைக்குரிய எழால் ; a musical note.

*[தைவரல்+எழால்]*

**தொக்கம்** *tokkam,* பெ.(n.) பல்லாங்குழியில் தேவையான கற்களைப் பெறாவிடின் துரும் பினை எடுத்துப்போடுதல்; a playing method in palankuḻi game.

*[தொக்கு–தொக்கம்]*

**தொக்கடவு** *tokkaḍaivu,* பெ.(n.) அடவு முறை களில் ஒன்று; a stepping method in dance.

*[தொக்கு+அடைவு]*

**தொக்கு** *tōkku,* பெ.(n.) 1. காரணம், சாக்கு ; excuse, pretex. 2. இளக்காரம் ; laxity state. நான் என்றால் எல்லாருக்கும் தொக்காப் போச்சு.(பே.வ.)

*[தொள்கு–தொக்கு]*

**தொங்கல்** *toṅgal,* பெ.(n.) பாடலில் அமையும் தனிச்சீர், சொற்சீர் போன்றவற்றைக் குறிக்குஞ் சொல்; metric gradation in prosody.

*[தொங்கு+கல்]*

**தொங்கல்** *toṅgal,* பெ.(n.) அடிமுந்தி; border.

*[தொங்கு–தொங்கல்]*

**தொங்கலில் விடு–தல்** *toṅgalil-viḍu-,* 8 செ.கு.வி. (v.i.) 1. ஏமாற்றத்தில் விடுதல்; to deceive. 2. இணைந்திருந்து இடையிலேயே விட்டுவிடுதல்; to omit in the middle.

*[தொங்கலில்+விழு]*

**தொங்கன்** *toṅkaṉ,* பெ.(n.) தொங்கவிடும் கொக்கி; hanger.

*[தொங்கு–தொங்கன்]*

**தொங்குக் கம்பி** *toṅgu-k-kambi,* பெ.(n.) பேட்டு அட்டையில் அடியில் உள்ள ஒரு சாண் கம்பி ; a string in loom.

*[தொங்கு+கம்பி]*

**தொங்குமதி** *toṅgumadi,* பெ.(n.) திருவா டானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[தூங்கு+மடி]*

**தொட்டுத் தொட்டாட்டம்** *toṭṭu-t-toṭṭāṭṭam,* பெ.(n.) தொடுபவன் தான் தொட்ட பாகத்தைப் பிடித்துக்கொண்டு ஓடுதல்; a sport.

*[தொட்டு+தொட்டு+ஆட்டம்]*

**தொட்டாணி** *toṭṭāṇi,* பெ.(n.) ஈரோடு வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Erode Taluk.

*[தோடு+அணி]*

**தொட்டில் பாடல்** *toṭṭil-pāḍal,* பெ.(n.) தாலாட்டுப் பாடலில் ஒரு பிரிவு; variety of lullaby.

*[தொட்டில்+பாடல்]*

**தொட்டிய நாயக்கர்** *toṭṭiyanāyakkar,* பெ.(n.) இராமநாதபுரம், திண்டுக்கல் மாவட்டங்களில் வாழும் கம்பளத்து நாயக்கரைச் சுட்டும் பெயர்; a community name in Ramnad Tindukkal districts.

*[தொட்டியம்+நாயக்கர்]*

**தொட்டு விளையாட்டு** *toṭṭuviḷaiyāṭṭu,* பெ.(n.) பட்டவரை (தோற்றவரை) பாடல் மூலம் தேர்ந்தெடுப்பது; pointing the defeat through song.

*[தொட்டு+விளையாட்டு]*

**தொட்டு** *toṭṭu,* பெ.(n.) காய்கறிகளின் மேற் புறத்தில் காம்பை ஒட்டியுள்ள பகுதி; a stalk portion of vegetable. (கொ.வ.வ.சொ.).

**மறுவ. தோடு**

*[தோடு-தொட்டு]*

**தொடக்கு-தல்** *toḍakku-,* 3 செ.கு.வி.(v.t.) இயந்திரம் போன்றவற்றை முதலில் இயக்கச் செய்தல் ; to start machine or engine.

*[தொடு-தொடக்கு]*

**தொடக்கு** *todakku,* பெ.(n.) இயந்திரம் போன்றவற்றில் தொடக்க இயக்கம் ; starting as of an engine. இந்தப் பேருந்து தொடக்கு ஆகவில்லை.

*[தொடு-தொடக்கு]*

**தொடந்தனூர்** *toḍandanūr,* பெ.(n.) விழுப்புரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Villupuram Taluk.

*[தொடந்தன்+ஊர்]*

**தொடர் உறு சுற்றுகையாட்டம்** *todar urucurrugaiyāṭṭam,* பெ.(n.) பாடலுக்கு ஆடி முடித்த பின், மாற்றத்திற்காக ஆடும் ஆட்டம் ; dance for a change after advance for a song. (35:244).

*[தொடர்+உறு+சுற்றுகை+ஆட்டம்]*

**தொடர் தாவு-தல்** *todartāvu-,* 3 செ.கு.வி. (v.i.) விளையாட்டில் குனிந்தவரைத் தொடர்ந்து தாவுதல்; to climb on the bending person in play. (த.நா.வி.).

*[தொடர்+தாவு]*

**தொடருறு சுற்றுகை** *todaruṟu-cuṟṟgai,* பெ.(n.) நடனத்திற்குரிய வினைகளில் ஒன்று; one of the action in dance.

*[தொடர்+உறு+சுற்றுகை]*

**தொடலைவயல்** *toḍalaivayal,* பெ.(n.) அறந் தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[தொடலை+வயல்]*

**தொடிதோட் செம்பியன்** *toḍitōṭcembiyam,* பெ.(n.) சோழ அரசனின் பெயர்; name of a Chola king.

*[தொடி+தோள்+செம்பியன்]*

**தொடுக்கை** *toḍukkai,* பெ.(n.) வைக்கோல் வைக்கும் தடுப்புப் பகுதி; a stopper in straw heap.

*[தொடு-தொடுக்கை]*

**தொடுப்பு** *toḍuppu,* பெ.(n.) கள்ள உறவு; illicit contact liaison. (கொ.வ.வ.சொ.).

*[தொடு-தொடுப்பு]*

**தொடு பந்து** *toḍupandu,* பெ.(n.) வட்டக் கோட்டின் மீது நின்றிருப்பவர்கள் பந்தினை மாறி மாறிப் போட்டு விளையாடும்போது தொடுபவன் பந்தைப் பிடிக்க முயலுதல்; ball tag.

*[தொடு+பந்து]*

**தொடூர்** *toḍūr,* பெ.(n.) காஞ்சிபுரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[தொடு+ஊர்]*

**தொடையல்** *toḍaiyal,* பெ.(n.) யாழின் ஒரு உறுப்பு; a part of harp.

*[தொடு-தொடையல்]*

**தொண்டகப்பறை** *tondaga-p-parai,* பெ.(n.) பழம் பெரும் பறை வகை; a drum belong to ancient period.

*[தொண்டகம்+பறை]*

**தொண்டகம்** *tondakam,* பெ.(n.) ஒரு வகை யான பறை; a drum.

*[தொண்டு(துளை)+அகம்]*

**தொண்டன்** *tondan,* பெ.(n.) ஒரு வகை சிறு கடல் மீன் ; rainbow sardine.

*[தொண்டு+அன்]*

**தொண்டான்** *tondān,* பெ.(n.) வயலுக்கு நீர் இறைக்கப் பயன்படும் தோலால் ஆகிய சால்; a leather bag like basket used for the irrigation purpose.

*[தொண்டு–தொண்டி(துளை, பள்ளம்)–தொண்டான்]*

**தொண்டான் தொடுபிடித் தொண்டான்** *tondān-todupidi-t-tondān,* பெ.(n.) நெல்லிக் காய் விளையாட்டின் வேறு பெயர் (மதுரை வட்டாரம்) ; a kind of playing.

*[தொண்டான்+தொடுபிடி+தொண்டான்]*

**தொண்டிக்கட்டை** *tondi-k-kattai,* பெ.(n.) மாடு களுக்குக் கழுத்தில் தொங்கவிடும் கட்டிக் கட்டை; small wooden block which is tied in the neck of cattles. (ம.வ.சொ.).

*[தொண்டி+கட்டை]*



**தொண்டி** *tondi,* பெ.(n.) திருவாடானை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādanai Taluk.

*[தொள்–தொண்டி]*

**தொண்டுப்பட்டி** *tondu-p-patti,* பெ.(n.) சிறு (பள்ளமான பகுதி) பொருள்கள் வைக்கும் குடிசை போன்ற அமைப்பு. (கொ.வ.வ.சொ.93); a hut for stock little things.

*[தொள்–தொண்டு+பட்டி]*

**தொண்டுமுட்டி** *tondumutti,* பெ.(n.) எருமையோ, மாந்தனோ தப்பி ஓடாதிருக்க முன்னங்கால் களுக்கிடையே கட்டப்படும் முட்டி. (கொ.வ.வ.சொ.); a wooden piece tied between fasten the knees with rope to prevent them from escaping.

*[தொண்டு+முட்டி]*

**தொண்டூர்** *tondūr,* பெ.(n.) செஞ்சி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Senji Taluk.

*[தொண்டி+ஊர்–தொண்டூர்]*

**தொத்தளவு** *tottalavu,* பெ.(n.) பாவில் ஒட்டு நீக்குவதற்கும் தெளிவு எளிதில் உண்டாக்கவும் பயன்படுத்தும் கோல்கள்; a pole used by the weavers to remove the tangle in the lengthwise thread in a loom.

*[தெழி–தொழித்து–தொத்து+அளவு]*

**தொப்பிச் சம்பா** *toppi-c-cambā,* பெ.(n.) நெல் வகை. (வ.வ.வே.க.); a kind of paddy.

*[தொப்பி+சம்பா]*

**தொப்பித் தலைகுயில்** *toppittalai kuyil,* பெ.(n.) ஒரு வகை பறவை ; black cap.

*[தொப்பி+தலை+குயில்]*

**தொப்பி மத்தளம்** *toppi mattalam,* பெ.(n.) கேரளக்கோயிலில் இசைக்கப்படும் இசைக் கருவி; an instrument which is used in temples of Kērala state.

*[தொப்பி+மத்தளம்]*

**தொப்புள் கட்டை** *toppuḷ kaṭṭai,* பெ.(n.) பட மரத்தை இருபுறமும், சமமாகத் தாங்கிக் கொண்டிருக்கும் கருவி; a wooden supporter.

*[தொப்புள்+கட்டை]*

**தொப்பைக் கூத்தாடி** *toppai-k-kūttāḍi,* பெ.(n.) கம்பளத்தார் சேவையாட்டத்தில், பங்கு பெறும் நகைச்சுவை கலைஞர். (4:26).

*[தொப்பை+கூத்தாடி]*

**தொம்பு வெறு** *tombu veṟu,* பெ.(n.) பொரப் பாவிலும், பட்டுப் பாவிலும் விசை முன் கீழ் நோக்கி அழுத்திப் பிடித்து நெசவு அழுத்தமா யிருக்கப் பயன்படுத்தும் அமைப்பு முறை; a device in loom.

*[தொம்பு+வெறு]*

**தொம்பை**[1] *tombai,* பெ.(n.) தேவையற்ற பொருள்களை வைக்க மூங்கிலால் பின்னப்பட்ட பெரிய கூடை; dust bin which is made from bamboo.

*[தூம்பு - தொம்பை]*

**தொம்பை**[2] *tombai,* பெ.(n.) தவசங்களைக் கொட்டி வைக்கும் இடம்; a container of the grain. (ம.வ.தொ.).

*[தூம்பு–தொம்பு–தொம்பை]*

**தொய்யகம்** *toyyagam,* பெ.(n.) அம்மன் சிற்பத் திலுள்ள தலையணி; a head ornament in sculpture.

*[தை+தொய்+அகம்]*

**தொய்வம்** *toyvam,* பெ.(n.) தேய்வை; rubber.

*[தொய்–தொய்வம்]*

**தொய்வுறல்** *thoiuṟal,* பெ.(n.) பின்வாங்கல், தளர்தல்; sagging

*[தொய்வு+உறல்]*

**தொயில்கீரை** *toyil kīrai,* பெ.(n.) காட்டில் முளைக்கும் கீரை வகை; an edible green which is grown in forest. (நெ.வ.வ.சொ.192).

மறுவ. தொய்யாக்கரை

*[தொய்யில்–தொயில்+கீரை]*

**தொரக்குழி** *torakkuḻi,* பெ.(n.) சிதம்பரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[துவர+குழி]*

**தொரட்டி** *thoraṭṭi,* பெ.(n.) அரிவாள் மீன் ; sickle fish.

*[துரட்டி–தொட்டி]*

**தொரலை** *toralai,* பெ.(n.) காய் கறிகளின் மேலிருக்கும் தோல் ; a peal of the vegetable. (கொ.வ.வ.சொ.).

*[துரலை–தொரலைாமணி+பிணை]*

**தொரவி** *toravi,* பெ.(n.) விழுப்புரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Villupuram Taluk.

*[துரவை–தொரவை–தொரவி]*

**தொல்கணியாதன்** *tolkaṇiyādaṉ,* பெ.(n.) சுழியத்தைக் கண்டுபிடித்த பழந்தமிழ்க் கணித வல்லுநர் ; an ancient mathematical genius who invented zero for arithmatical and astronomical calculations.

*[தொல்+கணி+ஆதன்]*

**தொல் பெருங்குன்றூர் கிழார்** *tolperuṅ kuṉṟur kiḻār,* பெ.(n.) கடைக்கழகம் பெரு மகன் பெயர்; name of a land owner of sangam age.

*[தொல்+பெரும்+குன்றூர்+கிழார்]*

**தொலாகுழி** *tolākuḻi,* பெ.(n.) ஏற்றம் இறைக் கத் தோண்டும் குழி. (வ.வ.வே.க.29); a pit digged for lift irrigation.

*[துலை+குழி]*

**தொலிம்பு** *tolimbu,* பெ.(n.) நிலக்கடலைப் போன்றவற்றின் மேல் உள்ள தோல் கூடு; the outer shell like ground nut.

*[தோல்–தொலி–தொலிம்பு]*

**தொலை** *tolai,* பெ.(n.) ஏற்றம் உள்ள கிணற்றுப் பகுதி; provided with well sweep. (கொ.வ. வ.சொ.94).

*[துலை–தொலை]*

**தொழிற்கை** *tolirkai,* பெ.(n.) நடனத்தில் மெய் குறிப்பிற்காகப் பிடிக்கப்படும் கைகள்; a hand pose in dance.

*[தொழில்+கை]*

**தொலைக்கடல்** *tolai-k-kadal,* பெ.(n.) தொலை விடத்தில் இருக்கும் கடலோரம்; offshore.

*[தொலை+கடல்]*

**தொலைவரி** *tolaivari,* பெ.(n.) கம்பி வழியும், கம்பியில்லா வழியும் அனுப்பப்படும் செய்தி; telegram.

*[தொலை+வரி]*

**தொழில் அதிபர்** *toliladibar,* பெ.(n.) தொழில் நடத்துபவர், தொழிலதிபர்; entrepreneur, tycoon.

*[தொழில்+அதிபர்]*

**தொழுகைப்பாய்** *tolugai-p-pāy,* பெ.(n.) முகமதியர்கள் தொழுகைக்குப் பயன்படுத்தும் பாய்; a mat which is used for Mohammadan worship in mosque, prayer mat.

*[தொழுகை+பாய்]*

**தொழுகைப்பூச்சி** *tolukaipūcci,* பெ.(n.) வண்டின் ஒரு வகை; a beetle, praying mantis insect that hold its fore legs like hands folded in prayer.

*[தொழுகை+பூச்சி]*

**தொழுதெடுப்பு** *toludeduppu,* பெ.(n.) போர்க் கலைப் பயிற்றும் களரிப் பயிற்றுக்கு இளை ஞரைத் தெரிந்தெடுக்கும் முறைகளில் முதலா வது; a method of selecting youngsters for martial fight.

*[தொழுது+எடுப்பு]*

**தொழுநையாறு** *tolunaiyāru,* பெ.(n.) யமுனை ஆறு; river Jamuna.

ம.தொழிக்க(அடி,தாக்கு)–கூட்டு,சேர்.

*[தொழு–தொழுநை+யாறு]*

**தொள்ளவாய்** *tollavāy-,* பெ.(n.) பெரிய வாய்; big mouth.

*[தொள்–தொள்ளை+வாய்]*

**தொள்ளாளி** *tollāli,* பெ.(n.) சிற்றூர்ப் புறங் களில் வண்ணக்கோலமிட்டுப் பேயை விரட்டு பவர்; driving out the goast by drawing a 'kolam'

தொழிலாளி என்பதன் மறு வழக்கு.

**தொளவேடு** *tolavēdu,* பெ.(n.) திருவள்ளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvallur Taluk.

*[துளவு+பேடு]*

**தொளிச்சல்** *toliccal,* பெ.(n.) கல்குளம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk.

*[தொளி–தொளிச்சல்]*

**தொற்றிளை** *torrilai,* பெ.(n.) கைத்தறி நெசவுப் பாவில் உடன் சேர்ந்த வேண்டாத நூலிழை; unwanted thread included by mistake in the process by weaving.

*[தொற்று+இழை]*

**தொறக்கோல்** *tora-k-kōl,* பெ.(n.) திறவுக் கோல் பார்க்க; see tiravu-kōl.

*[திறவுக்கோல்–தொறக்கோல் (கொ.வ.)]*

**தொன்மைக்கூத்து** *tonmai-k-kūttu,* பெ.(n.) குறும்பர் இனத்தவர் ஆடுகின்ற கூத்து; kūttu, whichis adorned by kurumbar.

*[தொன்மை+கூத்து]*

**தொனத்து–தல்** *tonattu-,* 15 செ.கு.வி.(v.i.) தொடர்ந்து பேசிக் கொண்டிருத்தல், பயனில் சொல் (வீண் பேச்சு) பேசுதல்; blabbering indulging in useless talk.

*[துனை–துனைத்தல்–தொனத்து]*

**தோக்கியம்** *tōkkiyam,* பெ.(n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruppattur Taluk.

*[தூக்கு–தோக்கு–தோக்கியம்]*

**தோகாரை** *tōkārai,* பெ.(n.) ஒரு வகை மீன்; Indian thread finned thevally.

*[தூவாலை–தூகாரை–தோகாரை]*

**தோகை** *tōgai,* பெ.(n.) ஒரு வகை மீன் ; band fish.

*[தொகு–தோகை]*

**தோசி** *tōci,* பெ.(n.) நாட்டுப்புறக் கதைப் பாடல்களில், மலட்டுத்தன்மை உடைய பெண்டிரைக் குறிக்குஞ் சொல்; word referring to a barren woman in folklore.

*[துச்சம்–தோக்கம்–தோச்சி–தோசி]*

**தோட்டாளம்** *tōṭṭāḷam,* பெ.(n.) வேலூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk.

*[தோடு+ஆளம்]*

**தோட்டுகாரிக் கதைப்பாடல்** *tōṭṭukāri-k-kadaippāḍal,* பெ.(n.) வாய்மொழி இலக் கியத்தின் ஒரு வகை; a folk ballad.

*[தோடு+காரி+கதை]*

**தோண்டி** *tōṇḍi,* பெ.(n.) மண், மாழையால் செய்த குடம் ; a pot designed by clay, or metal. (கொ.வ.வ.சொ.95).

*[தோண்டு+இ)]*



**தோணி** *tōṇi,* பெ.(n.) துடுப்புகளால் இயக்கப் படும் சிறு படகு ; canoe.

*[துளை–தொளை–தோணி]*



**தோணித்துறை** *tōṇi-t-tuṟai,* பெ.(n.) ஆற் றைக் கடக்கும் படகு இருக்கும் இடம் ; ferry.

*[தோணி+துறை]*

**தோத்தாங்குழி** *tōttāṅguḻi,* பெ.(n.) தோற்ற வெற்றுக்குழி; empty square in a play board.

*[தோற்ற+ஆம்+குழி]*

**தோத்தாணி தோல்பிடுங்கி** *tōttāṇi-tōlpiḍuṅgi,* பெ.(n.) தோற்றவர் பெயர் (குமரி); a failure person.

*[தோற்றவன்+தோல்பிடுங்கி]*

**தோது** *tōdu,* பெ.(n.) செப்பம், பொருத்தம்; proper. (கொ.வ.வ.சொ.).

*[துத்து–தோது]*

**தோப்பாமீன்** *tōppāmīṉ,* பெ.(n.) ஒரு வகை மீன் ; one kind of fish.

*[தோப்பை+மீன்]*

**தோம்பு நூல்** *tōmbu-nūl,* பெ.(n.) ஊடையும், பாவும் ஒரே நிறமுடைய சாரம் (லுங்கி); chequerred cloth of men.

*[தோம்பு+நூல்]*

**தோரம்** *tōram,* பெ.(n.) ஒரு வகையான இரட்டைக் கை முத்திரை; double hand pose in dance.

*[துரம் – தோரம்]*

**தோரி** *tōri,* பெ.(n.) ஆட்டிடையரின் தலைவன்; head of the sheperds.

*[துரு–துரி–தோரி, துரு–செம்மறியாடு]*

**தோல் கன்றுக்குட்டி** *tōlkanru-k-kutti,* பெ.(n.) இறந்த கன்றுக்குட்டியிலிருந்து தோலை உரித் தெடுத்து வைக்கோல் திணித்து செய்யப்பட்ட கன்றுக்குட்டி பொம்மை; duplicate calf made by using its skin after death.

*[தோல்+கன்று+குட்டி]*

**தோல்பாரை** *tōlpārai,* பெ.(n.) தோலால் மூடப் பட்ட ஒரு மேலங்கி; leather jacket.

*[தோல்+பாரை]*

**தோல் முட்டை** *tōlmuttai,* பெ.(n.) சுண்ணாம்பு பற்றாக் குறைவினால் மேல் ஓடு இல்லாமல் கோழி வைக்கும் முட்டை ; the egg without white shell by deficiency of calcium. (கொ.வ.வ.சொ.).

*[தோல்+முட்டை]*

**தோலன்** *tōlan,* பெ.(n.) ஒரு வகைமீன்; a kind of fish.

*[தோல்–தோலன்]*

**தோவாளம்** *tōvālam,* பெ.(n.) கிணற்றுக் கைப்பிடிச் சுவர்; support wall around the well.

*[தூ+வாளம்]*

**தோள்** *tōl,* பெ.(n.) கருவறை சிற்பத்தின் ஓர் உறுப்பு; a feature in sculpture.

**தோள்கத்தளை** *tōlkattalai,* பெ.(n.) ஒரு வகை மீன்; leather spined jew fish.

**தோற்கூத்து ஓவியங்கள்** *tōr-kūttu-ōviyangal,* பெ.(n.) ஒரு வகையான கை வினைக் கவின் கலை; leather puppet art.

*[தோல்+கூத்து+ஓவியங்கள்]*

**தோற்பாவைக் கூத்து** *tōr-pāvai-k-kūttu,* பெ.(n.) தோலால் செய்யப்பட்ட பாவைகளைத் திரைக்குப் பின்னிருந்து ஆட்டியசைத்து கதைகளைச் சொல்லும் கலை; puppet show.

*[தோல்+பாவை+கூற்று]*

**தோற்றான்** *tōrrān,* பெ.(n.) சில விளையாட்டு களில் இறுதியில் யாரேனும் தோற்க நேர்ந்தால், அவருக்காக இறுதியில் தொடரும் ஆட்டத்தின் பெயர். (எ.கா.) பல்லாங்குழி, உருட்டான், அச்சுப்பூட்டு; continuing game for a defeated person.

*[தோல்–தோற்றான்]*

**தோனி** *tōni,* பெ.(n.) இரு கூரைகளுக்கிடையில் நீர் ஒடுமாறு தகட்டால் ஆன அமைப்பு; rain water drainer.

*[தோணி–தோனி]*

**தோனை** *tōnai,* பெ.(n.) பாவு நூல் சுற்றும் கருவி; a device in loom.

*[தூல்–தூனை–தோனை]*



**தோனைக்கம்பி** *tōnai-k-kambi,* பெ.(n.) சேலை நுனியை முடியும் சன்னமான கம்பி (ம.வ.சொ.); thin wire used to make knot at border of a saree.

*[நுனை–துனை–தோனை+கம்பி]*

**தோனைக்குச்சி** *tōnai-k-kucci,* பெ.(n.) தோனையைத் திருகுவதற்குப் பயன்படும் குச்சி; a stick used as a screw driver.

*[தோனை+குச்சி]*

# ந

**நக்கண்ணையார்** *nakkaṇṇaiyār,* பெ.(n.) பெருங்கோழி நாய்கன் மகளாகிய புலமைப் பெருமாட்டி; poetess of sangam age and daughter of Perunkōḻi nāygan.

*[நல்+(கண்)கண்ணை+ஆர்]*

**நக்கம்பாடி** *nakkampāḍi,* பெ.(n.) மயிலாடு துறையிலிருந்து 10 அயிரமாத்திரி (கி.மீ.) தொலைவில் உள்ள ஓர் ஊர்; name of a village 10 k.m. from Mayiladudurai.

*[நக்கன்+பாடி]*

**நகர்ப்படுகை** *nagar-p-paḍugai,* பெ.(n.) மன்னார்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mannarkudi Taluk.

*[நகர்+படுகை]*

**நகரம்** *nagaram,* பெ.(n.) வேலூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; name of the village in Vellore.

*[நகர்+அம்]*

**நகவெதும்பல்** *nagavēdumbal,* பெ.(n.) இளஞ் சூடு; gentle heat, luke warmness.

*[நகம்+வெதும்பல்]*

**நகார்** *nagār,* பெ.(n.) பண்டைய நாட்டுப்புற இசைக்கருவியினுள் ஒன்று; an ancient musical instrument.

**நகையாண்டி** *nagaiyāṇḍi,* பெ.(n.) நகைச் சுவையூட்டுபவன்; jester.

*[நகை+ஆண்டி: நகைச்சுவையை ஆள்பவன்]*



**நங்கவள்ளி** *naṅgavaḷḷi,* பெ.(n.) ஓமலூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Omalur Taluk.

*[நங்கன்+வள்ளி(பள்ளி)]*

**நங்குடி** *naṅkuḍi,* பெ.(n.) சிதம்பரம் வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[நன்+குடி]*

**நங்கூரமிடு-தல்** *naṅgūramiḍu-,* 18 செ. குன்றாவி. (v.i.) மரக்கலம் (அ) கப்பல் நகராமல் ஓரிடத்தில் நிற்பதற்காக நீருக்குள் நங் கூரத்தை இறக்குதல்; to cast anchor.

*[நங்கூரம்+இடு-,]*

**நச்சீடு** *nacciḍu,* பெ.(n.) தொந்தரவு; trouble, hindrance.

**மறுவ. நச்சரவு**

*[நச்சு+ஈடு]*

**நச்சுத்தீனி** *naccu-t-tīṉi,* பெ.(n.) அடிக்கடி தின்னும் தின்பண்டம். (கொ.வ.வ.சொ.95); snacks taken frequently.

**மறுவ. நொறுக்குத்தீனி, மேல்தீனி**

*[நை-நச்சு+தீனி]*

**நச்சுழி** *nacculi,* பெ.(n.) நற்சுழி பார்க்க; see naṟculi.

*[(நல்) > நற்சுழி > நச்சுழி]*

**நச்செலி** *nacceli,* பெ.(n.) மூஞ்சுறு; a musk-rat. (நெ.வ.வ.சொ.194).

*[நச்சு+எலி]*

**நச்செள்ளையார்** *naccellaiyār,* பெ.(n.) காக்கைப் பாடினியார் நற்செள்ளையார் எனப் பெயர் பெற்ற கடைக்கழகக் காலப் பெண்பாற் புலவர்; a sangam poetess known as a 'kākkai pāḍiṉi naccellaiyar'.

*[நல்+செள்ளை+ஆர்]*

**நசியனூர்** *naśiyanūr,* பெ.(n.) ஈரோடு வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Erode Taluk.

*[நசையன்–நசியன்+உரைஊர்]*

**நசும்பு** *naśumbu,* பெ.(n.) மீன் வகைகளுள் மிகச் சிறிய வகை; a kind of tiny fish.

*[அசும்பு–நசும்பு]*

**நட்டந்தி** *naṭṭandi,* பெ.(n.) சிவகங்கை வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[நடு+அந்தி]*

**நட்டபாடை** *naṭṭapāḍai,* பெ.(n.) பகற்பொழுதில் இசைக்கப்படும் பண் வகை; a kind of melody tune sung in the day time.

*[நண்–நட்டு+(பாடு)பாடை]*

**நட்டம்** *naṭṭam,* பெ.(n.) பாடல் இன்றித் தாளத்திற்கு மட்டும் ஆடும் ஆட்டம்; dance without song.

*[நள்–நளி–நடி–நட்டம்]*

**நட்டுக்கால்** *naṭṭu-k-kāl,* பெ.(n.) நடுவில் உள்ள கால்வாய்; channel in the middle part.

*[நடு+கால்–நட்டுக்கால்]*

**நட்டுவதாளம்** *naṭṭuvatāḷam,* பெ.(n.) நட்டுவனார் கையால் ஒலிக்கச் செய்கின்ற தாள வகை; cymbal.

*[நட்டுவம்+தாளம்]*

**நட்டுவாய்க்குடி** *naṭṭuvāyikkuḍi,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tanjavoor district.

*[நடு–நட்டு+வாய்+குடி]*

**நட்புக்கை** *naṭpu-k-kai,* பெ.(n.) ஒரு வகையான இரட்டைக்கை; a kind of dance posture. (35:201).

*[நட்பு+கை]*



**நட்பு** *naṭpu,* பெ.(n.) ஏழிசைத் தொகுதியில் நான்காம் இசை; fourth sound of the seven sounds of the diatonic scale.

*[நள்>நட்பு]*

**நடக்கதவு** *naḍa-k-kaḍavu,* பெ.(n.) எதி ரெதிராக அமைந்த வீடுகளுக்குப் பொதுவாக அமைந்து இருக்கும் வழி; a common path of the two opposite side houses.

*[(நடை+கடவு)–நடைக்கதவு–நடக்கதவு (கொ.வ) – கடவு–பாதை]*

**நடந்தை** *naḍandai,* பெ.(n.) நாமக்கல் வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Namakkal Taluk.

*[நாள்+அந்தி–நாடந்தி–நடந்தை]*

**நடவாவி விழா** *naḍavāvi-viḻa,* பெ.(n.) காஞ்சி புரத்தில் மேழ வெள்ளுவா (சித்திரைப் பௌர்ணமி)யன்று நடைபெறும் விழா; a festival in Kanchipuram, on the full moon day of the month Chittirai.

*[நடை+வாவு+விழா]*

**நடம்** *naḍam,* பெ.(n.) நாட்டியம்; another name for dance.

*[நள்–நடு–நட்டம்–நடம்(இடைக்குறை)]*

**நடராசர் சடை** *nadarāšarsadai,* பெ.(n.) சிற்ப வல்லுநர் செதுக்கும் மகுடம்; engraving as hair in Nataraja sculpture by sculpter.

*[நடராசர்+சடை]*

**நடவாள்** *nadavāl,* பெ.(n.) நடவுத்தொழில் செய்வோர்; workers for transplanting in the paddy field.

*[நடவு+(பயிரிடுதல்)ஆள்–நடவாள்]*



**நடவுப் பள்ளத்தி** *nadavu-p-pallatti,* பெ.(n.) நடவு நடும் பள்ளரினப் பெண்கள்; women engaged in transplanting.

*[நடவு+பள்ளத்தி]*

**நடனபாணி** *nadana-pāni,* பெ.(n.) பரதம் ஆடும் முறைகளில் ஒன்று;one of dancing methods, a way of dancing Bharatam.

*[நடனம்+பாணி]*

**நடுக்காத்தான்** *nadukkāttān,* பெ.(n.) இயற்பெயர்; a proper noun.

*[ஒருகா. நாடு+காத்தான்]*

**நடுகட்டி மணிவலை** *nadukatti mani valai,* பெ.(n.) நடுத்தரமான மணி வலை; a medium size net.

*[நடு+கட்டி+மணி+வலை]*

**நடுப்பட்டம்** *nadu-p-pattam,* பெ.(n.) கன்னி (புரட்டாசி) மாத 10 முதல் 20 வரையிலான வேளாண் பட்டம்; in between season, from 10th to 20th Purattāsi.

*[நடு+பட்டம்]*

**நடுத்தி** *nadutti,* பெ.(n.) நடன அரங்கத்தில் நடுவேயுள்ள பகுதி; central part of the dance dias.

*[நடு–நடுத்தி]*

**நடையன்** *nadaiyan,* பெ.(n.) 1. கழுதை; donkey. 2. செருப்பு, மிதியடி; shoe.

*[நடை+அன்]*

**நடையாட்டி** *nadaiyātti,* பெ.(n.) கோயில் வழிபாட்டிற்கு நீர் எடுக்கப்படும் குளம்; a pond used for temple purpose. மேதகு நடையாட்டி குளத்தில் சால நீர் கோளுக்கும்....

*[நடை+(அட்டி)ஆட்டி. நடை–படிக்கட்டு]*

**நடைவாசல்** *nadai-vāšal,* பெ.(n.) முன்வாசல்; gateway, portal, entrance.

*[நடை+வாசல், வாயில் > வாசல்]*

**நண்டன்** *nandan,* பெ.(n.) வளர்ச்சி குன்றியவன்; one who is of undergrowth.

*[நள்–நண்டு+அன்]*

**நண்டுக்கை** *nandu-k-kai,* பெ.(n.) ஆடற் கலையின் ஒரு வகையான இரட்டைக்கை; gesture with both the hands.

*[நண்டு+கை]*



**நண்டுகாச்சி** *nandukācci,* பெ.(n.) அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[ஒருகா. நண்டு+ (கயம்–கயத்தி–காய்ச்சி]*

**நத்தபுரக்கி** *nattapurakki,* பெ.(n.) மானாமதுரை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[நத்தம்+(புறத்தி)-புறக்கு-புரக்கி(கொ.வ.)]*

**நத்தமலை** *nattamalai,* பெ.(n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[நத்தம்+மலை]*

**நந்தர்** *nandar,* பெ.(n.) கி.மு.472 முதல் கி.மு.372 வரை மகத நாடாண்ட அரச மரபினர்; Nanda kings who ruled Magada from 472 B.C to 372 B.C.

*[நந்து>நந்தர்]*

**நத்து** *nattu,* பெ.(n.) 1. ஓரிசைக்குழல்; a kind of flute.(1:138). 2. ஏக்கம் கொள்ளுதல்; disappointed aspiring, yearning.

*[நன்-நத்து]*

**நந்திகுண்டு** *nandikundu,* பெ.(n.) அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[நந்தி+குண்டு]*

**நந்திபுரம்**[1] *nantipuram,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திற்கு அருகில் உள்ள ஓர் ஊர்; name of the village in Tanjavur near by Kumbakonam.

*[நந்தி+புரம்]*

இவ்வூர் நந்திவருமன் காலத்தில் புகழ்பெற்று இருந்தது. தற்போது இவ்வூர் 'நாதன் கோயில்' என்று வழங்கப்படுகிறது.

**நந்திபுரம்**[2] *nantipuram,* பெ.(n.) செஞ்சி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Senji Taluk.

*[நந்தி+புரம்]*

**நந்திமார்** *nandimār,* பெ.(n.) கடலோர உவர்க்கரம்பு நிலத்தில் (தரிசில்) புதராக வளர்ந்திருக்கும் குத்துச் செடிகள்; sea-side shrubs.

*[நந்து-நந்தி+(வளார்)-மளார் - மார்]*

**நந்துணி** *nanduni,* பெ.(n.) கேரளத்தின் பண்டைய இசைக்கருவி; an ancient musical instrument in Kerala.

*[நந்து-நந்துணி]*

**நப்பசலையார்** *nappasalaiyār,* பெ.(n.) கடைக் கழகப் பெண்பாற் புலவர்; a poetess of sangam period.

*[நல்+பசலை]*

**நப்பாலத்தனார்** *nappālattanār,* பெ.(n.) கடைக்கழகக் காலப் புலவர்; a poet of sangam period.

**நம்பிகுட்டுவன்** *nambikuṭṭuvan,* பெ.(n.) கடைக்கழகக் காலத்திய குறுநிலத் தலைவன்; Chieftain of sangam period.

**நப்பூதனார்** *nappūdanār,* பெ.(n.) கடைக் கழகப் புலவர்; a poet of sangam period.

*[நல்+பூதன்+ஆர்]*

**நப்பி** *nappi,* பெ.(n.) யாருக்கும் ஒன்றும் கொடாதவன் (கஞ்சன்); miser.

*[நை-நைப்பி]*

**நம்பிகோன்** *nambikkōn,* பெ.(n.) மாறவருமன் சுந்தரபாண்டியன் ஆட்சியின்போது (கி.பி.1314) திருவாய்ப்பாடி அவையில் இருந்தவன்; member of the royal assembly of the king Māravarman Sundara Pandiyan (1314 AD).

*[நம்பி+கோன்]*

**நம்புதளை** *nambudalai,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[ஒருகா. நாம்பு+உதளை]*

**நமதோடு** *namatōḍu,* பெ.(n.) வந்தவாசி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Wandawashi Taluk.

*[நமை+தோடு]*

**நயக்கேடு** *naya-k-kēḍu,* பெ.(n.) அட்டூழியம்; atrocity.

*[நயன்+கேடு]

**நரங்கியான்** *naraṅgiyāṉ,* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[ஒருகா. நரங்கு+அன்–நரங்கியன்–நரங்கியான்]*

**நரதாரு** *naradāru,* பெ.(n.) மரத்தாலான சிற்பங்களைச் செய்ய உதவும் மர வகைகள்; a kind of trees which are used for making wooden sculpture. (5:21).

*[நரல்+தாரு]*

**நரம்பு** *narambu,* பெ.(n.) யாழின் ஓர் உறுப்பு; a part of lute.

*[நுல்–நுரும்பு–நரம்பு]*

**நரமாகாணி** *naramāgāṇi,* பெ.(n.) திண்டிவனம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[நரையன்+மாகாணி]*

**நரயன்விளை** *narayaṉviḷai,* பெ.(n.) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[நாரையன்+விளை–நரையன்–நரயன் (கொ.வ.)]*

**நரிக்கல்லு** *nari-k-kalu,* பெ.(n.) ஒரு வகைக் கல்; stone useful in making the gypsum.

*[நரி+கல்]*

**நரியனேரி** *nariyaṉeri,* பெ.(n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Thiruppattur Taluk.

*[நரியன்+ஏரி]*

**நரிவால்** *nari-vāl,* பெ.(n.) மாட்டு வால் வகையில் ஒன்று; name of a tail type of the cow.

*[நரி+வால்]*

**நரிவெரூஉத் தலையார்** *nariverūut talaiyār,* பெ.(n.) நரிவெரூஉத்தலை என்னும் ஊரில் வாழ்ந்த புலவர்; a poet who lived in the village Nariveruu-t-talai.

*[நரி+வெரூஉ+தலை]*

கொங்கு நாட்டுப்பகுதியில் நரிவெருவிப் பாளையம் என்னும் ஊர் இருத்தல் ஒப்பு நோக்கத் தக்கது.

**நரிவெருவிப்பாளையம்** *nariveruvippāḷayam,* பெ.(n.) கொங்கு நாட்டில் உள்ள ஒரு ஊர்; name of the village in Kongunāḍu.

மறுவ. நரிப்பாளையம்

*[நரி+வெருவி+பாளையம்]*

**நரையூர்** *naraiyur,* பெ.(n.) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Thiruvannamalai Taluk.

*[நாரை+ஊர்]*

**நல்முக்கல்** *nalmukkal,* பெ.(n.) திண்டிவனம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[நல்+முக்கல்(பிளவுபட்ட பாறை]*

**நல்லதரை** *nallatarai,* பெ.(n.) அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[நல்ல+தலை]*

**நல்லந்துவன்** *nallanduvaṉ,* பெ.(n.) கடைக் கழகக் காலத்திய புலவர்; a poet of sangam period.

*[நல்+அந்துவன்]*

நல் எனும் அடைமொழிப் பெற்ற புலவர்கள்: நல்வெள்ளியர், நல்வேட்டனார், நல்லாவூர்கிழார், நல்வழுதி, நல்லச்சுதன், நத்தத்தனார், நல்லெழினி, நல்லழிசி, நல்லாதன், நல்லிறையார்.

**நல்லம்பர்** *nallambar,* பெ.(n.) திருநள்ளாற்றுக்கு வடமேற்கே 14 அயிரமாத்திரி (கி.மீ.) தொலைவில் உள்ள ஒரு ஊர்; name of the village 14 k.m. from Thirunallar.

*[நல்+(ஆம்பல்)–அம்பல்–அம்பர்(கொ.வ.)]*

இக்காலத்தில் இவ்வூர் நல்லாம்பல் என்னும் பெயருடன் உள்ளது.

**நல்லாடை** *nallāḍai,* பெ.(n.) மயிலாடுதுறை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Mailadudurai Taluk.

*[நல்+(ஓடை)–ஆடை(கொ.வ.)]*

**நல்லாலம்** *nallalam,* பெ.(n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Arkkonam Taluk.

*[நல்+ஆலம்]*

**நல்லாற்றூர்** *nallarrūr,* பெ.(n.) திருநள்ளாற் றுக்கு வடக்கே 10 அயிரமாத்திரி (கி.மி.) தொலைவில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village 10 k.m. from north Thirunallār.

*[நல்+ஆற்றூர்]*

**நல்லூர்க்கா நாடு** *nallurkkā nādu,* பெ.(n.) பொள்ளாச்சி வட்டத்தில் அமைந்துள்ள ஒரு சிற்றூர்; name of the village in Pollachi.

*[நல்+ஊர்க்கால்+நாடு. ஊர்க்கால்–ஊர் அருகில் உள்ள ஓடை]*

**நவ்வத்தாவு** *navvattāvu,* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[நவ்வி+தரவு]*

**நவ்வுங்குளி** *navvunguli,* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[நவ்வி+குளம்]*

**நவக்காடு** *navakkādu,* பெ.(n.) ஈரோடு வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Erode Taluk.

*[நா(வல்+காடு)]*

**நவக்காணி** *nava-k-kāni,* பெ.(n.) பழனி வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Palani Taluk.

*[நாவல்+காணி]*

**நவம்பட்டு** *navampattu,* பெ.(n.) திருவண்ணா மலை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Thiruvannamalai Taluk.

*[நாவல்+பற்று]*

**நவரைப்பட்டம்** *navarai-p-pattam,* பெ.(n.) சுறவ (தை) மாத நவரை நெல் பயிரிடும் பருவம்; paddy cultivation period during thai month.

*[நவரை+பாட்டம்]*

**நவகண்டி** *navakandi,* பெ.(n.) சிற்பங்களில் காணலாகும் ஒரு வகையான காதணி; ear rings which are adorned in sculptures.

*[நாவல்+கண்டி]*

**நவலை** *navalai,* பெ.(n.) கரூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Karur Taluk.

*[நாவல்–நவலை]*

**நவனாரி** *navanāri,* பெ.(n.) தாராபுரம் வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Dharapuram Taluk.

*[ஒருகா. நாவல்–நவல்+ஏரி–நாவலேரி – நவனாரி (கொ.வ.)]*

**நவனி** *navani,* பெ.(n.) நாமக்கல் வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Namakkal Taluk.

*[ஒருகா. நாவல்–நவல்–நவனி]*

**நவிர்** *navir,* பெ.(n.) மருத நிலத்திற்குரிய பண் வகை; a tune for marudām agricultural tract.

*[நவில்–நவிர். நவிலல்–சொல்லுதல், செப்புதல். ஒருகா. செப்பலோசை தழுவிய பாடல் ஆகலாம்.]*

**நள்ளி அண்ணன் பாளையம்** *nalliannnan pālaiyam,* பெ.(n.) கோபிச் செட்டிப் பாளையத் திற்கு அருகில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village near Gopichettipalayam.

*[நள்ளி+அண்ணன்+பாளையம்]*

**நள்ளி**[1] *nalli,* பெ.(n.) 1. நாணல்; weed. 2. மென்மை; softness. 3. அழகு; beauty. 4. ஒளி; light.

*[நள்+நள்ளி]*

**நள்ளி**[2] *nalli,* பெ.(n.) கடையேழு வள்ளல்களில் தோட்டி மலையின் தலைவன்; a beneficient chieftain who ruled over the area of Thōttimalai. 'வல்வில் இளையர் பெருமகன் நள்ளி'. (புறம்–150).

*[நள்–(நட்பு,அன்பு)நள்ளி]*

**நள்ளியம் பாளையம்** *naḻḻiyam palayam,* பெ.(n.) ஈரோடு மாவட்டத்தில் மேற்கில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village in west Erode.

*[நள்ளியன்+பாளையம்]*

**நள்ளியூர்** *naḻḻiyūr,* பெ.(n.) கோவை மாவட்டத்தில் உள்ள பழைய ஊர்; name of a oldest village in Coimbatore.

*[நள்ளி+ஊர்]*

**நற்கனி** *naṟkaṉi,* பெ.(n.) பரமக்குடி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Paramagudi Taluk.

*[நல்+(காணி)–கனி (கொ.வ.)]*

**நற்சுழி** *naṟcuḻi,* பெ.(n.) மாட்டு முதுகிலுள்ள ஒரு வகை நல்ல சுழி; circular or curved mark on the back of a cow indicating good luck.

*[நல்+சுழி > நற்சுழி]*

**நற்சேந்தனார்** *naṟcēndaṉār,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்; a poet of sangam period.

**நற்பழங்காசு** *naṟpaḻaṅkāšu,* பெ.(n.) அளவு குறையாத காசு; a coin of correct value. "கைக்கொண்ட நற்பழங்காசு ஒன்று இப் பழங்கள்..." (தெ.சா.7:5:எ:395).

*[நல்+பழம்+காசு]*

**நறவு** *naṟavu,* பெ.(n.) இது துளு நாட்டில் (கருநாடகம்) கடற்கரையில் இருந்த துறைமுகப் பட்டினம்; name of village in Tulunadu near the sea shore.

*[நறு–நறவு]*

**நன்னன்** *naṉṉaṉ,* பெ.(n.) கடைக்கழகக் குறுநில மன்னன்; a chieftain of Sangam period.

*[நல்–நன்+அன்]*

**நன்னாகனார்** *nannāgaṉār,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்; a name of sangam period.

*[நல்+நாகன்+ஆர்]*

**நன்னாரம்** *naṉṉāram,* பெ.(n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[ஒருகா. நன்னன்–பாரம்]*

**நன்னான கொட்டுதல்** *naṉṉā-koṭṭu-,* செ.கு.வி. (v.i.) கும்மி கொட்டுதல்; to perform gummi dance.

*[நன்னானம்+கொட்டுதல்–நன்னானம்–தாளக் கட்டின் குறிப்போசை]*

**நன்னி** *naṉṉi,* பெ.(n.) 1. உண்மை; truth. 2. அன்பு; love, affection.

**க. நன்னி; பட. நன்னி (நன்றி)**

*[நல்–நன்–நன்னி]*

**நன்னூல் எடு–த்தல்** *nannūl eḍu-,* செ.கு.வி.(v.i.) ஏதேனும் ஒன்றைக் குறித்து நுட்பமாக ஆராய்தல், கூர்மையாகச் சிந்தித்தல்; to think and discover minute details as it refering written documents or works of reference. அவன் எதற்கும் நன்னூல் எடுப்பான் (மீனவ.).

*[நல்–நூல்+எடு]*

**நன்றா மலை** *nandrāmalai,* பெ.(n.) கொங்கு நாட்டில் உள்ள ஒரு நெடுங்குன்று; name of a village in Coimbatore. நன்றா எனும் குன்றேறி தன் கண்ணிற்கண்டன வெல்லாம் காட்டிக் கொடுத்தான் அக்கோ (பதிற்.)

**மறுவ. நணாமலை**

*[நன்று–நன்றா+மலை]*

**நாக்குடி** *nākkuḍi,* பெ.(n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Arandangi Taluk.

*[நல்+குடி–நற்குடி–நாக்குடி(கொ.வ.)]*

**நாக்கினால் தள்ளு–தல்** *nākkināl-taḻḻu-,* செ.குன்றாவி. (v.t.) கோலிக்குண்டு விளையாட்டில் தோற்றவர் குண்டினை நாக்கினால் தள்ளுதல்; to push with tongue. a children's game. (த.நா.வி.).

*[நாக்கு+இன்+ஆல்+தள்ளு]*

**நாகக்குடி** *nāgakkuḍi,* பெ.(n.) கும்பகோணம் (குடமூக்கு) வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Kumbakonam Taluk.

*[நாகம்+குடி]*

**நாகத்துவனி** *nāgattuvaṉi,* பெ.(n.) இசைக் கலை வழக்குச் சொற்களில் ஒன்று; a word in music terms.

*[நாகம்+துவனி]*

**நாகம்** *nāgam,* பெ.(n.) பண் (இராக) வகையினுள் ஒன்று; a kind of tune.

*[நா–நாகம்]*

**நாகமங்கலம்** *nagamangalam,* பெ.(n.) திருநள்ளாற்றுக்கு வடமேற்கே 14 அயிர மாத்திரி (கி.மீ.) தொலைவிலுள்ள ஒரு சிற்றூர்; name of a village 18 k.m. from Thirunallar.

*[நாகன்+மங்கலம்]*

**நாகமரை** *nāgamarai,* பெ.(n.) தருமபுரி மாவட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Dharmapuri district.

*[நாகன்+துறை–நாகந்துறை–நாகமரை (கொ.வ.)]*

**நாகர்** *nāgar,* பெ.(n.) கழுத்தில் அணியப்படும் நீண்ட சங்கிலியொத்த அணிகலன்; an ornament which is like a chain worn on neck. (65:74).

*[நகு+நாகர்]*

**நாகரம்** *nāgaram,* பெ.(n.) கோயில் விமான அமைப்பின் ஒரு பகுதி; a temple tower structure.

*[நகர்–நாகரம்]*



**நாகவயல்** *nāgavayal,* பெ.(n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[நாகன்+வயல்]*

**நாகனி** *nāgaṉi,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruvādānai Taluk.

*[நாவல்+கனி–நாவல்கனி–நாகனி (கொ.வ.)]*

**நாகாச்சி**[1] *nākācci,* பெ.(n.) 1. அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Aruppukkottai Taluk. 2. பரமக்குடி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Paramagudi Taluk.

*[நாகன்+குறிஞ்சி–குறிச்சி–காச்சி (கொ.வ.)]*

**நாகாடி** *nāgāḍi,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[நாகன்+பாடி–நாகன்பாடி–நாகாடி (கொ.வ.)]*

**நாகிமரா** *nāgimarā,* பெ.(n.) இருளர் இன மக்களின் இசைக்கருவிகளிலொன்று; a musical instrument of the Irula tribe.

**நாகு** *nāgu,* பெ.(n.) எருமையின் பெண் கன்று; female buffalo cub.

*[நாள்–நாள்கு–நாகு]*

நாகு என்பதை நாவு என வட ஆற்காடு பகுதியில் வழங்குவது கொச்சை வழக்கு.

**நாகுணி** *nāguṇi,* பெ.(n.) கிளியாற்றூர்க்குத் தெற்கில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village in South Kiliyāṟṟūr.

*[ஒருகா. நாகன்+ஊருணி]*

(இரண்டாம் இராதிராசன் 11ஆம் ஆட்சி ஆண்டு கல்வெட்டில் நாகுணி என இடம் பெற்றுள்ளது.)

**நாங்கு** *nāṅgu,* பெ.(n.) வயலில் நடவுக்குப் பின் மண்புழுக்கள் ஏற்படுத்தும் சிறு துளை; small holes made by earth worms in the paddy

field after plantation.

*[நள்-நாள்-நாங்கு(உட்டுளை)]*

**நாச்சி** *nācci,* பெ.(n.) கோயில் விளக்கெரிக்க கறவை மாடு தந்த சோழர்காலத்துப் பெண்; name of a woman who donated cows to use the ghee for lighting lamp in temple.

*[நாயன்-நாயத்தி-நாச்சி]*

மூன்றாம் இராசராசன் காலத்தில் (கி.பி.1231) அத்தி என்ற ஊரில் வாழ்ந்த பரிக்கிரகத்து நிலைப் பெண்டுகளில் வம்புழுத்தாள் மகள் நாச்சி விளக்கெரிக்க வேண்டி கறவை மாடுகளை வழங்கியுள்ளாள்.

**நாச்சியார் கோயில்** *nācciyārkōyil,* பெ.(n.) திருவாரூர் மாவட்டத்திலுள்ளல் பூந்தோட்டம் கும்பகோணம் வழிச் சாலையில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village in Thiruvarur district on the way to Poonthottam Kumbakkam salai.

*[நாச்சி+ஆர்+கோயில்]*

**நாசுவன்விளை** *nāśuvaṉviḷai,* பெ.(n.) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[நாவு-நாவுவன்-நாசுவன்+விளை]*

**நாசுவன்** *nāśuvaṉ,* பெ.(n.) முடி ஒப்பனையர்; barber.

மறுவ. குடிமகன்

*[நாவு-நாயு-நாசு-நாசுவன்]*

**நாஞ்சிவயல்** *nāñjivayal,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruvādānai Taluk.

*[நாஞ்சில்+வயல்]*

**நாஞ்சில் வள்ளுவன்** *nāñjil vaḷḷuvaṉ,* பெ.(n.) கடைக்கழகக் காலத்திய குறுநில மன்னன்; a chieftarin of sangam period.

*[நாஞ்சில்+வள்ளுவன்]*

**நாட்டம்** *nāṭṭam,* பெ.(n.) ஒரு வகையான நெய்தற் பண்; a kind of tune which is concerned with coastal region, Maritime melody, melody belongs to litteral region.

*[நடு-நாட்டம்]*

**நாட்டடைவு** *nāṭṭaḍaivu,* பெ.(n.) பரத நாட்டியத்தில் இடம் பெறும் ஓர் அடைவு வகை; a stepping type in dance.

*[நாட்டு+அடவு]*

**நாட்டன்** *nāṭṭaṉ,* பெ.(n.) 1. நாட்டகத்து வாழ்வோன்; native man of an area. 2. நாட்டகப் பகுதியின் ஆள்குடித் தலைவன்; an administrative officer of an area in a land.

*[நாடு>நாட்டன்]*

**நாட்டாவளி** *nāṭṭāvaḷi,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruvādāai Taluk.

*[நாட்டு+ஆவளி]*

**நாட்டியக்கோலம்** *nāṭṭiya-k-kōlam,* பெ.(n.) சிற்ப வடிவிலான இறை வடிவம்; a pose of the god in sculpture.

*[நாட்டியம்+கோலம்]*

**நாட்டுக்கூத்து** *nāṭṭṭu-k-kūttu,* பெ.(n.) நாட்டுப்புறக் கூத்து வகை; a kind of folk dance.

*[நாட்டு+கூத்து]*

**நாட்டுப்புற கும்மி** *nāṭṭu-p-pura-kummi,* பெ.(n.) கும்மியாட்டத்தின் ஒரு வகை; girls dance accompanied by clapping.

*[நாட்டு+புறம்+கும்மி]*



**நாட்டுப்புற மக்கள்** *nāttuppura-makkal,* பெ.(n.) சிற்றூர்களில் வாழும் மக்கள்; people living in rural areas.

*[நாட்டு+புற(ம்)+மக்கள்]*

**நாட்டுப்புற வழக்கு** *nattuppura valakku,* பெ.(n.) ஊர்ப்புறத்து வழக்கு; usage of countryside.

*[நாட்டு+புறம்+வழக்கு]*

**நாட்டை** *nāttai,* பெ.(n.) பாடலிசையரங்கு தொடங்குங்கால் பாடப்படும் பண்; improvised introduction to a melody meant to notify to the audience the nature of the raga and get into its swing.

*[நாள்–நாட்டு+ஐ]*

**நாடக மடந்தையர்** *nādaga-madandaiyar,* பெ.(n.) கூத்தில் பங்கேற்கும் மகளிர்; dancing girls.

*[நாடகம்+மடந்தையர்]*

**நாடன்** *nādan,* பெ.(n.) 1. குறுநிலத் தலைவன்; a chieftain head of a land track. 2. மண்ணின் மைந்தன்; son of the soil.

*[நாடு+அன்= நாடன். காடன் என்பதின் எதிர்ச்சொல்]*

ஒ.நோ: குறும்பொறை நாடன்

**நாடா ஆணி** *nādā-āni,* பெ.(n.) நாடாவின் நடுப்பகுதியில் அமைக்கப்பட்டிருக்கும் கம்பி; a string which runs in the middle of tape.

*[நாடா+ஆணி]*

**நாடா** *nādā,* பெ.(n.) கைத்தறியில் குறுக்காகச் சென்று வரும் கருவி; to and fro moving device in handloom weaving.

*[நள்–நாள்–நாளா–நாடா]*

**நாடாந்தல்** *nādāndal,* பெ.(n.) விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village in Viluppuram.

*[நாடு+ஏந்தல்(ஏரி)–நாடேந்தல்–நாடாந்தல்]*

**நாடா எகிறு–தல்** *nādā-egiru-,* செ.கு.வி. (v.i.) நாடா பாவினிடையே தாண்டிச் செல்லல்; tape which passes through the warp.

*[நாடா+எகிர்]*

**நாடாழ்வா நாடு** *nadālvānādu,* பெ.(n.) நாடாழ்வான் பெயரிலமைந்த நாடு; an area named of the nādalvān.

*[நாடு+ஆழ்வான்+நாடு]*

11ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டில் அகளங்க நாடாழ்வான் கொல்லி மலையை வென்றான் எனும் குறிப்பு உள்ளது.

**நாடா[1]** *nādā,* பெ.(n.) தறியில் வாட்டு போடு வதற்குரிய கருவி; a weavers device.

*[நள்–நாளா–நாடா]*

**நாடா[2]** *nādā,* பெ.(n.) பாவு நூலில் இடையே ஊடு நூலாகச் செல்லும் நாடா; yarn which intervene through a warp.

*[நடு–நாடு–நாடா]*

**நாடு தலையாரிக்கம்** *nadutalāiyārikkam,* பெ.(n.) நாடு காவல் புரிவோர் செலுத்தும் வரி; watch-man's dues.

*[நாடு+தலையாரி–தலையாரிக்கா]*

**நாணக்குடி** *nānakkudi,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[நாணன்+குடி–நாணன்குடி–நாணக்குடி]*

**நாணல்பந்தி** *nānalpandi,* பெ.(n.) அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[நாணல்+பந்தி(வரிசை)]*

**நாணாக்குடி** *nānākkudi,* பெ.(n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[நாணன்+குடி–நாணன்குடி–நாணாக்குடி (கொ.வ.)]*

**நாத்திக்கலி** *nātti-k-kali,* பெ.(n.) அடிப்பகுதி தடிப்பு இல்லாத பிஞ்சு மூங்கில்; a tender bamboo tree, which has not broad base.

*[நாற்று-நாத்து+கலி-நாத்துக்கலி-நாத்திக்கலி]*

**நாதந்தி** *nādandi,* பெ.(n.) இலாவணிப் பாடலில் பயன்படுத்தப்படுகின்ற மெட்டு வகை; a melody which is used in songs which are sung in debating an issue on several subjects.

*[நாதந்த-நாதந்தி-வண்ணச் சுழிப்புத் தாளக் குறிப்பொலி]*

**நாதி** *nādi,* பெ.(n.) பற்றுக்கோடு, காப்பாற்றும் உறவு; protector. 'எனக்கு நாதி யாரும் இல்லை' (பே.வ.).

*[நள்-நல்-நற்று-நத்து-நாதி]*

**நாபளூர்** *nābaḷūr,* பெ.(n.) திருத்தணி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruthani Taluk.

*[நாவலூர்-நாபளூர் (கொ.வ.)]*

**நாமக்கல்** *nāmakkal,* பெ.(n.) நில அளவைக்காக அரசினரால் நடப்படும் குறியீட்டுடன் கூடிய கல்; boundary stone of Revenue department.

*[நாமம்+கல்]*

**நாயகவாடி** *nāyagavāḍi,* பெ.(n.) அறுவடைப் பயிரைப் பாதுகாக்கும் காவல்காரன்; one who guards the crops.

மறுவ. பந்தற்காரன்

*[நாயக+(ஆளி-வாளி)-வாடி]*

**நாயகனி இசை** *nāyagaṉi-isai,* பெ.(n.) கரகத்தின் துணை நிலை ஆட்டமான பாம்பு நடனத்திற்கு இசைக்கப்படும் இசை; a wind instrument used in snake dance of folklore.

*[நாயனக்காரன்+இசை]*

**நாயர்** *nāyar,* பெ.(n.) செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village in Chengalpet.

*[ஞாயில்-நாயிர்-நாயர்]*

கோட்டையை உணர்த்தும் 'ஞாயில்' என்பது காலப்போக்கில் 'நாயர்' என்று மருவி இருக்கலாம்.

**நாயனேந்தல்** *nāyaṉēndal,* பெ.(n.) அருப்புக்கோட்டை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[நாயன்+ஏந்தல்(ஏரி)]*

**நாவீறு** *nāvīṟu,* பெ.(n.) சொல்லாடும் திறமை, பேச்சு வன்மை; talent in debate and conversation; gift of the gab.

*[நா(நாக்கு)+வீறு]*

**நாவீறுடையபுரம்** *nāvīṟudiyapuram,* பெ.(n.) நெல்லை மாவட்டத்தில் அமைந்துள்ள ஒரு சிற்றூர்; name of the village in Nellai.

*[நா+வீறு+உடையர்+புரம்]*

'நாவீறுடையார் என்னும் புலவரின் பெயரால் நாவீறு' என அமைந்த ஊர்.

**நார்க்கடவான்** *nār-k-kaḍavāṉ,* பெ.(n.) பனை நாரால் செய்த பெட்டி; basket woven by palmyra dried leaf.

மறுவ. ஓலைப்பெட்டி

*[நார்+(கடகம்)கடவன்-நார்க் கடவன்]*

**நார்த்தவாடா** *nārttavāḍa,* பெ.(n.) திருத்தணி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[நாரத்தை+பாடி-நாரத்தைப்பாடி-நாரத்தைவாடி-நார்த்தவாடா]*

**நார்ப்பெட்டி** *nār-p-peṭṭi,* பெ.(n.) பனை நார்க்கடகம்; tray made of palmyra-stems.

*[நார்+பெட்டி]*

**நார்கத்தை** *nār-kattai,* பெ.(n.) மட்டையிலிருந்து பிரித்த நார்க்கட்டு; bundle of fibre taken from palmyra.

*[நார்+கத்தை]*

**நார்சீப்பு** *nārcīppu,* பெ.(n.) கற்றாழையைக் காய வைத்து சீவப் பயன்படும் கருவி; a device used to obtain fibre from kaṟṟāḻai-aloe.

*[நார்+சீப்பு]*

**நார்முடிச்சேரல்** *nārmudic-c-cēral,* பெ.(n.) களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் என்னும் சேர மன்னன்; name of a Cera king known as Kalankāy kanninārmudi-c-ceral.

*[நார்(தலைமயிர்)+முடி+சேரல்]*

பதிற்றுப்பத்தில் பாடப்பட்டுள்ள இம்மன்னன் நாரால் ஆகிய முடி புனைந்தவன் எனக் கூறுகின்றன ஆயின் மலையாள மொழியில் தலைமயிரைத் தலை நார் என்பதால் அப்பொருள் பொருந்தவில்லை. மரவுரியைக் கன்னட மொழியில் நார்மடி என்பர். நார்மடி என்பது பாடவேறு பாடாயின் மரவுரி உடுத்திய மன்னன் என்றும் பொருள் கொள்ள வாய்ப்புள்ளது. பொன் அணிகலன் அணியாமல் களங்கால் கண்ணி சூடியதாலுற்ற மேற்கொண்ட மன்னனாக அறியப்படுகிறான்.

**நார்முடிச்சேலை** *nārmudiccēlai,* பெ.(n.) நாரால் செய்த துணி. மரவுரி; cloth woven by the fibre of the tree bark formerly worn by our ascetics.

க. நார்மடி– நாரால் செய்த துணி – மரவுரி

**நாரட்டை** *nārattai,* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[நார்+அட்டு–நாரட்டு–நாரட்டை]*

**நாரைக்கிணறு** *nāraikkinaru,* பெ.(n.) 1. இராசிபுரம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Rasipuram Taluk. 2. திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர்; a village in Tirunelveli District.

*[நாரை+கிணறு]*

**நாலடித்தாளம்** *nāladi-t-tālam,* பெ.(n.) பறை .முழக்கத்தில் ஆளப்படும் தாளக்கட்டு; time measure variation in beating in percussion instruments.

*[நாலடி+தாளம்]*

**நாலடித் தெம்மாங்கு** *nāladi-t-tēmmāngu,* பெ.(n.) நான்கடிகளைக் கொண்ட தெம்மாங்கு வகை; a type of folk melody which has four lines usually sung by a lover addressing his beloved.

*[நாலடி+தெம்மாங்கு]*

**நாலன் அலகு** *nālan-alagu,* பெ.(n.) ஒரு தட்டும் மூன்று எண்ணிக்கையும் உடையது; beat variation in musical time measure.

*[நால்+அன்+அலகு]*

**நாலு வீடு கட்டு–தல்** *nālu-vidu-kattu,* செ.கு.வி. (v.i.) சந்தத்திற்கு ஏற்ப ஆடும் கும்மியாட்டம்; dancing, accompanied with the clapping of hands for the same metre.

*[நாலு+வீடு+கட்டு]*

**நாலறுவை மணிகள்** *nālaruvai-manigal,* பெ.(n.) கூட்டல் அடையாளம் போன்ற திறப்பினையுடைய மணிகள்; a bead variety.

*[நால+அறுவ+மணி]*

**நாவடம்** *nāvadam,* பெ.(n.) பெண்களின் அணிகலன்; an ornament of women. நாவடத்துக்காரியிடம் நாயத்தைச் சொன்னால் நாவடத்தைப் பார்ப்பாளா நாயத்தைக் கேட்பாளா (கொ.வ.).

*[நாண்+வடம்–நாவடம்]*

**நாழிகைவழி** *nāligai vali,* பெ.(n.) ஒரு நாழிகையில் (24 நிமிடம்) நடக்கும் தொலைவு, ஒரு கட்டை (1 மைல்); a distance of one mile - distance in a nāligai (24 minutes) (யாழ்ப்.).

*[நாழிகை+வழி]*

**நாழிவயல்** *nalivayal,* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[நாழி+வயல்]*

**நாளத்தி** *nālatti,* பெ.(n.) இசைக்கலையில் இறக்கப் பண்ணோசை (அவரோகணம்); a singing complete descent of the gamut.

*[நாள்+நாளத்தி]*

**நாற்பண்** *nāṟpaṇ,* பெ.(n.) குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் எனும் நாற்பெரும் பண்கள்; four major melodies of Tamil music.

*[நால்(நான்கு)+பண்]*

பண்கள்: குறிஞ்சி – படுமலைப் பாலை– முல்லை – செம்பாலை, தீம்பாலை (அரிகாம்போதி, மோகனம்– சாதாரி, மருதம் – கோடிப்பாலை, நெய்தல் – விளரிப்பாலை.

**நாற்பாலைப்பண்** *nāṟpālaippaṇ,* பெ.(n.) முல்லைக்குரிய செம்பாலை, குறிஞ்சிக்குரிய படுமலைப்பாலை, மருதத்துக்குரிய கோடிப் பாலை நெய்தலுக் குரிய விளரிப் பாலை எனும் நான்கு நிறைப் பண்களாகிய பாலை பண்கள்; melodies which belongs to hill tract, forest tract, agricultural tract and maritime tract, and desert tract.

*[நால்+பாலை+பண்]*

**நாற்றுப்பருவம்** *nāṟṟu-p-paruvam,* பெ.(n.) சோளக்கதிர் விளையாட்டின் பெயர்; a children's play.

*[நாற்று+பருவம்]*

**நாற்று மாலை** *nāṟṟu-mālai,* பெ.(n.) நாற்று முடிகளைக் கட்டி வாய்க்காலில் இழுத்தல்; pulling the bundle of saplings.

*[நாற்று+மாலை]*

**நாறி நலங்குலை–தல்** *nāṟinalaṅkulai-,* செ.கு.வி.(v.i.) கெடுமனத்தனாய் வன் கொடுமை பலி செய்து உறவினராலும் ஊரின ராலும் இகழப்படுதல்; to be abused and condemned for one's misdeeds. அவன் ஏன் இப்படி நாறி நலங்குலைகிறான்.

*[நாறு–நாறி+நலம்+குலை]*

**நான்கு மூலைக்கல்** *nāṉgu-mūlaikkal,* பெ.(n.) நான்கு மூலையில் உள்ளவர்களும் ஒவ்வொரு கல்லாக எடுத்து விளையாடும் ஆட்டம்; a children's game.

*[நான்கு+மூலை+கல்]*

**நிகழ்ச்சி வளைவர்** *nigaḻccivaḷaivar,* பெ.(n.) தொலைக்காட்சி, வானொலி, காணொலிகளில் நாட்டு நடப்புகள், விழாக்கள், கலை நிகழ்ச்சி கள் புறத்தீடு செய்வதற்காக நிகழ்ச்சிகளை நேரிற் சென்று காணொலியில் அல்லது கேட்பொலியில் பதிவு செய்யும் தொழில்நுட்பப் பணியாளர்; technicians for video coverage or audio coverage.

*[நிகழ்ச்சி+வளைவர்]*

**நிகழ்த்துநர்** *nigaḻttunar,* பெ.(n.) பொம்ம லாட்டம், காளியாட்டம் முதலான நாட்டுப்புறக் கலைகளை நடத்துபவர்; organiser of puppet show.

*[நிகழ்த்து+நர்]*

**நிசாகம்** *niśāgam,* பெ.(n.) ஒரு வகையான வீர முழவு; a percussion instrument.

*[நிசாளம்–நிசாகம்]*

**நிசாளம்** *niśāḷam,* பெ.(n.) பழம்பெரும் தோற் கருவியினுள் ஒரு வகை; an ancient percussion instrument.

*[நிசை+நிசாளம்]*

**நிடதம்** *niḍadam,* பெ.(n.) ஓர் இரட்டைக்கை முத்திரை நிலை; a hand pose in dance.

*[நீடு–நிடுதம்–நிடதம்]*

**நிண்ணையூர்** *niṇṇaiyūr,* பெ.(n.) கள்ளக் குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakurichi Taluk.

*[திண்ணன்–நிண்ணன்+ஊர்]*

**நிந்தைத்துதி** *nintai-t-tudi,* பெ.(n.) பழிப்பதைப் போல் புகழ்ந்து பாடுதல்; apparent praise or censure suggesting the opposite.

*[நிந்(தை+துதி)]*

**நிமந்தம்** *nimandam,* பெ.(n.) கோயில் நிருவா கத்திற்கான திட்டம்; a committee to supervise to temple administration. "ஆள்வார்க்கு நித்தல் நிமந்தம் சந்நியாதிபம் செல்லக்கடவதாக...." (தெ.சா. **8:4:எ:456**).

*[நிவந்தம் – நிமந்தம்]*

**நிமித்தம் காக்கும் நாயகன்** *nimittam kākkum nāyagaṉ,* பெ.(n.) நிமித்தம் சொல்பவன்; foreteller of omens.

*[நிமித்தம்+காக்கும்+நாயகன்]*

விக்கிரம சோழன் 7ஆம் ஆட்சி ஆண்டில் கி.பி.1125ஆம் ஆண்டு அரியாலூர் ஊர்ச்சபையில் நிமித்தம் காக்கும் நாயகன் இருந்துள்ளான்.

**நியமக்குறைப்பு** *niyama-k-kuṟaippu,* பெ.(n.) பெரிய எண் படிப்படியாக குறைந்து வருதல்; decreasing in total.

*[நெய்(நெய்தல்)-சேர்த்தல்-நெயமம்-நியமம்+குறைப்பு]*

**நிரமதி** *niramadi,* பெ.(n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Kallakurichi Taluk.

*[நிரல்+மதி]*

**நிரவல்** *niraval,* பெ.(n.) காட்டாளத்தி பண் வகையினுள் ஒன்று; a tune type.

*[நிரவு-நிரவல்]*

**நிருத்தம்** *niruttam,* பெ.(n.) தாளங்களின் வேறுபாடுகளைக் கொண்டு கை, கால், முகம் இவற்றின் நிலைகளோடு கூடிய அடவுகள் கொண்ட ஆடல் வகை; gesture of hands, face and movement of limbs to express emotion, ideas through dance according to the variation of beating of time.

மறுவ. நிறுத்தம்

*[நில்-நிறுத்து+அம்-நிறுத்தம்-நிருத்தம் (கொ.வ.)]*

அடவுகளுக்கும், தாளத்துக்கும், பண்ணிசைக்கும் ஏற்ப மெய்ப்பாடுகளைக் கால ஒழுங்குக்கு ஏற்ப நிறுத்திக் காட்டுதலால் நிறுத்தம் எனப் பெயர் பெற்றது. இது வடமொழியில் நிருத்தம் எனத் திரிந்தது.

**நிலக்கிடைக்கோடு** *nila-k-kiḍai-k-kōḍu,* பெ.(n.) உலகப்படத்தில் நிலநடுக்கோட்டின் இருபாலும் உள்ள கிடை வரை; terrestrial latitude; imagenary horizontal line drawn on earth called as lattitudes.

மறுவ. கிடைவேரைக்கோடு

*[நிலம்+கிடை+கோடு]*

**நில விலை ஆவணம்** *nila vilai āvaṇam,* பெ.(n.) ஒரு நிலத்திற்கு மாற்றாக வேறோர் நிலம் வழுங்குவதைக் குறிக்கும் ஆவணம்; document which shows the land transfer mutually.

*[நிலம்+விலை+ஆவணம்]*

**நிலந்தரு திருவின் பாண்டியன்** *nilantaru-tiruviṉpāṇḍiyaṉ,* பெ.(n.) தொல்காப்பியத்தை அரங்கேற்றிய பாண்டிய மன்னன்; Pandiya king in whose presence ancient Tamil grammer Tōlkappiyam approval of the learned assembly.

**நிலாப்பூச்சி** *nilā-p-pūcci,* பெ.(n.) நிலா வெளிச்சத்தின் நிழலைக் கொண்டு தோற்றவனைத் தேர்ந்தெடுக்கும் விளையாட்டு வகை; a children's game.

*[நிலா+பூச்சி]*

**நிலைகுலையான்** *nilaikulaiyāṉ,* பெ.(n.) ஆண்பாற் பெயர்; name of a person.

*[நிலை+குலையா(தவ)ன்]*

நாஞ்சில் நாட்டில் 1645இல் நாகராசர் கோயில் விளக்கெரிக்க இவனிடமிருந்து பணம் 600 பெறப்பட்டது.

**நிலை** *nilai,* பெ.(n.) ஒயிலாட்டத்தின் தொடக்கத்தில், ஆட்டக்காரர் நிற்கும் முறை; standing pose in the folk dance oyilaṭṭam.

*[நில்-நிலை]*

**நிலைமரம்** *nilaimaram,* பெ.(n.) வாயில் நிலையான பக்க நெடுங்கால், கரிகால்; side wodden rafters of door frame.

*[நிலை+மரம்]*

**நிலையூர்** *nilaiyūr,* பெ.(n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Kallakurichi Taluk.

*[நிலை+ஊர்]*

**நிற ஆளத்தி** *nira-āladdi,* பெ.(n.) நெட்டெழுத்துகள் அடிப்படையில் எழும் இசை; song composed with long vowels.

*[நிறம்+ஆளத்தி]*

**நிறாமணி** *nirāmaṇi,* பெ.(n.) திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Vriudhachalam Taluk.

*[நிறம்+மணி]*

**நிறைப்பு சுவடிப்பு** *niraippu-cuvaḍippu,* பெ.(n.) பாடலில் ஒலி வடிவம் முதலில் சிறுத்தும், செல்லச்செல்ல பெருத்தும் அமைதல்; tone variation in singing songs.

*[நிறைப்பு+சுவடிப்பு]*

**நிறை** *nirai,* பெ.(n.) ஆளத்தி பாடப்படும் ஒரு முறை; raising tone system in music.

*[நிறு–நிறை]*

**நிறைநிலை** *nirai-nilai,* பெ.(n.) சிற்ப வடிவைத் தேவிகமாக மாற்றும் நிலை; elevating the statue to divinity.

*[நிறை+நிலை]*

**நின்னாங்கூலி** *ninnāṅkūli,* பெ.(n.) வேலை செய்யாமல் வெறுமனே நின்று கொண்டு கூலி பெறுதல்; getting wages without doing any work.

*[நின்றான்+கூலி. நின்றான் – நின்னான் (கொ.வ.)]*

**நீங்கெழுத்துப்பா** *niṅgeluttu-p-pā,* பெ.(n.) ஒரு பொருள் பயப்பதோர் சொற்கூறி, அச் சொல்லில், ஓரோரெழுத்தாக நீக்க, வேறுவேறு பொருள் பயக்கும் சித்திரப்பா; verse composed with a play on words, a word by gradual elimination becoming different word with different meaning as in Kanakāri, nakāri, kāri or pālāvi, pālā, pā.

*[நீங்கு+எழுத்து+பா]*

**நீசத்தனம்** *nīśattaṉam,* பெ.(n.) திட்டும் சொல்; an abusing word.

*[நீசம்+தனம்]*

**நீட்டம்** *niṭṭam,* பெ.(n.) நீளம்; length.

**மறுவ. நீளம், நீட்டு**

*[நீள்–நீட்டு–நீட்டம்]*

நீளத்தை நீட்டு அல்லது நீட்டம் என்பது வடதமிழ்நாட்டு வழக்காறு.

**நீட்டு** *niṭṭu,* பெ.(n.) நீளம்; length.

**மறுவ. நீட்டம்**

*[நீள்+து–நீட்டு–நீளம்]*

நீட்டு என்னும் பிறவினைச் சொல் முதனிலைத் தொழிற்பெயராகி நீளத்தைக் குறித்தது.

**நீடாமங்கலம்** *niḍāmaṅgalam,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village in Thanjavur.

*[நீராட்டு+மங்கலம்]*

நீடாமங்கலம் என்ற பெயர் 'நீராட்டுமங்கலம்' என்பதன் திரிபு. கரிகாற் சோழன் போர் முடித்து வெற்றி தந்த தன் வாளுக்கு 'நீராட்டுமங்கலம்' இங்கே செய்ததால் இவ்வூர் அப்பெயர் பெற்றது. நாளடைவில் 'நீடாமங்கலம்' எனப்பட்டது.

தஞ்சையை ஆண்ட மன்னன் பிரதாபசிங் தன் மனைவியருள் ஒருத்தியான யமுனாம்பாளுக்காக இவ்வூரில் அரண்மனையும், பிற வசதிகளும் செய்து கொடுத்துள்ளான். இவ்வூரில் இவ்வம்மையாரின் பெயரில் சத்திரமும், கோயிலும் அமைக்கப்பட்டதால் யமுனாம்பாள்புரம் எனும் பெயரும் பெற்றது.

**நீண்ட குழல்** *nīṇḍa-kūḻal,* பெ.(n.) ஒயிலாட்டத்தில் இசைக்கப்பெறும் ஒரு வகை இசைக்கருவி; a musical instrument, used in 'oyilāṭṭam'.

*[நீண்ட+குழல்]*

**நீண்ட வளை கொம்பு** *ninda-valaikōmbu,* பெ.(n.) திருந்தா ஊது கருவி; a musical instrument.

*[நீண்ட+வளை+கொம்பு]*



**நீத்தடி** *nittadi,* பெ.(n.) நீச்சல். (கொ.வ.வ. சொ.98); swimming.

*[நீந்தல்+அடி–நீத்தலடி–நீத்தடி (கொ.வ.)]*

**நீர்க்குண்டம்** *nirkkundam,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[நீர்+குண்டம்(குட்டை)]*

**நீர் திரட்டுதல்** *nir-tirattudal,* பெ.(n.) தீமிதி விழாவுக்கு முன் பூசாரி பாடல் பாடியவாறே, தீக் குண்டத்திற்குச் சென்று திரும்புதல்; a ritual walking acrose a fire - pit by singing hymn.

*[நீர்+திரட்டுதல்]*

**நீர்பாய்ச்சி** *nirpāycci,* பெ.(n.) விளைச்சல் நிலங்களுக்கு நீர்பாய்ச்சும் பணியாளன்; servant employed for irrigation work.

**மறுவ. நீர்கட்டி**

*[நீர்+பாய்ச்சி]*

**நீர்மாலை** *nirmālai,* பெ.(n.) இறந்தவர்க்கு மகன் செய்யும் சடங்கு; a death ritual done by the decease son.

*[நீர்+மாலை]*

**நீர்மை** *nirmai,* பெ.(n.) பண்ணின் இசை வகை; a musical note.

*[நீர்–நீர்மை–புறநீர்மை (பூண்டளம்)]*

**நீர்வண்ணம்** *nir-vannam,* பெ.(n.) வண்ணக் குழம்பின் ஒரு வகை; coloured water.

*[நீர்+வண்ணம்]*

**நீரலைக்கிண்ணி** *niralai-k-kinni,* பெ.(n.) நீர் நிரப்பிய கிண்ணங்களைத் தட்டி இன்னிசை எழுப்பும் இசைக்கருவி (சலதரங்கம்); water glass musical instrument.

*[நீர்+அலை+கிண்ணி]*

**நீராடி** *nirādi,* பெ.(n.) செங்கற்பட்டு வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Chenglepet Taluk.

*[நீராட்டு–நீராட்டி–நீராடி]*

**நீராணிக்கர்** *nirāni-k-kar* பெ.(n.) வயலுக்கு நீர் பாய்ச்சும் தொழில் உரிமையாளர்; one who manages the village irrigation.

*[நீர்+(ஆளுநர்) ஆணிக்காரர்–ஆணிக்கர்]*

**நீரேந்தல்** *nir-ēndal,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruvadānai Taluk.

*[நீர்+ஏந்தல்(ஏரி)]*

**நீலகந்தி** *nilakandi,* பெ.(n.) கொற்றவைச் சிற்பத்தின் வேறு வடிவம்; a different posture of 'korrawai' Durga.

*[நீல+கந்தி]*

**நீலோற்பலம்** *nilōrpalam,* பெ.(n.) திருத்தணி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[நீல+உற்பலம்]*

**நீள் கம்பு** *nilkambu,* பெ.(n.) இரண்டு முழம் முதல் மூன்று முழம் வரை அளவுள்ள கம்பு; a millet variety.

*[நீள்+கம்பு]*

**நுகல்தடி** *nugaltaḍi,* பெ.(n.) உழவுப் பணி களுக்கு மாடுகளை ஏர், வண்டி, கவலை இறைப்பு ஆகியவற்றில் இணைக்க உதவும் மரத்தடி; a wooden pole used to tie two cow or bulls enabling the operations of ploughing, well irrigation, cart driving etc.

மறுவ. நுகத்தடி

*[நுகு(புகு)-நுகல்+தடி]*



**நுகும்பல்** *nugumbal,* பெ.(n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Madurantagam Taluk.

*[நுகும்பு+நுகும்பல்]*

**நுங்கு மட்டை** *nuṅgu-maṭṭai,* பெ.(n.) வண்டி யுருட்டி விளையாட்டில் கருவிப் பொருள், (பனங்காய் மட்டை); play wheel from the palmyrah nut shell.

*[நுங்கு+மட்டை]*

**நுடங்குகை** *nuḍaṅgugai* பெ.(n.) ஓர் ஆட லியக்கம்; a dance movement.

*[நுடங்கு-நுடங்குகை]*

**நுண்கலைச்செல்வர்** *nuṇ-kalaicelvar,* பெ.(n.) இசைச் சான்றோரைச் சுட்டுஞ் சொல்; experts in music, a word which denotes the stalwarts in music.

*[நுண்+கலை+செல்வர்]*

**நுமுட்டு-தல்** *numuṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கம்பு மற்றும் சோளக்கதிர்களிலுள்ள தவச மணி களை அதனின்றும் பிரித்தெடுத்தல்; to separate the grains such as kambu and cōlam.

*[நுமுள்-நுமுட்டு]*

**நுவம்** *nuvam* பெ.(n.) நெசவு நெட்டுப்பாரில் இணைந்திருப்பது; a device in handloom.

*[நாவு-நுவம்]*

**நுளையர்** *nuḷaiyar,* பெ.(n.) கடல்வாழ் உயிர் களை வேட்டையாடும் குடியினர்; marine track people killed in fishing operation.

*[நுளை>நுளையர்]*

**நுனிப்பாசி** *nuṇi-p-pāśi*, பெ.(n.) குடுகுடுப் பையில் ஓசையெழுப்ப பயன்படும் நுனிப்பகுதி; the end bud in the percussion instrument - kudukuduppai.

*[நுனி+பாசி]*

**நூபுரம்** *nūpuram,* பெ.(n.) கிண்கிணி எனும் காலணி; a kind of ankle. "நாகச்சிரம் செய் நூபுரமும் வண்டும் சிலம்பொடு சிலம்பி ஆர்ப்ப" (பால:22:22).

*[நூவுரம் - நூபுரம்]*

**நூம்பல்** *nūmbal,* பெ.(n.) சைதாப்பேட்டை, வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Saidapet Taluk.

*[நாம்பு-நாம்பல்>நூம்பல்]*

**நூரோலை** *nūrōlai,* பெ.(n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Kallakurichi Taluk.

*[நூரை+உலை]*

**நூல்** *nūl,* பெ.(n.) மரத்தை அறுக்க அளவு எடுக்கப் பயன்படும் அளவு முறை; measuring method for finding the thickness of wooden planks.

*[நுல்-நூல்]*

**நூல்-தல்** *nūl-*, செ.கு.வி.(v.i.) இழுத்தல்; to pull.

**க. நூல்**

*[நூ-நூல்(இழுத்தல்)]*

**நூல்கயிறு** *nūlkayiru*, பெ.(n.) நூலால் திரித்த கயிறு; tender rope made of thread.

*[நூல்+கயிறு]*

**நூல்பாய்** *nūl-pāi*, பெ.(n.) நூலால் பின்னிய பாய்; mat made of threads.

*[நூல்+பாய்]*

**நூள்** *nūḷ*, பெ.(n.) பொய்; lie, falsehood.

**க. நூள்**

*[நுள்-(துளை,உள்ளீடு இன்மை)-நூள். ஒ.நோ.நூழை-உள்வாயில்-நொள்ளை(குழி)]*

**நூற்றுவர்கன்னர்** *nūṟṟuvarkaṉṉar*, பெ.(n.) சாதவாகனர் என்னும் குடியினரின் தமிழ்ப் பெயர்; Tamil name of Satavahan class of Andra royal family.

*[நூறு>நூற்றுவர்+கன்னர்]*

**நொதி** *nodi*, பெ.(n.) அருவருக்கத்தக்க சேறு; mud. "நொதி அருவருத்த சேறு" (நிக.க.5:28).

*[நொது-நொதி]*

**நெக்கணாமலை** *nekkaṇāmalai*, பெ.(n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Thiruppattur Taluk.

*[நெக்கணன்+மலை]*

**நெக்குண்டி** *nekkuṇḍi*, பெ.(n.) தருமபுரி வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Dharmapuri Taluk.

*[நெல்+குன்றம்-நெற்குன்றம்-நெக்குண்டி]*

**நெக்குந்தி** *nekkundi*, பெ.(n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Thiruppattur Taluk.

*[நெல்+குன்றம்-நெக்குந்தி]*

**நெகிழிக்குழல்** *negiḻi-k-kūḻal*, பெ.(n.) பண்டைய இசைக்கருவி; an ancient musical instrument.

*[நெகிழி+குழல்]*

**நெசல்**[1] *nešal*, பெ.(n.) அரக்கோணம் வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Arakonam Taluk.

*[நெய்தல்-நெசல்]*

**நெசல்**[2] *nešal*, பெ.(n.) திண்டிவனம் வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[நெய்தல்-நெசல்]*

**நெசவுத் திண்ணை** *nešavu-t-tiṇṇai*, பெ.(n.) நெசவு நெய்பவர் அமர்ந்து இருக்கும் மேடை; peal where the weavers sit while wearing.

*[நெசவு+திண்ணை]*

**நெஞ்சுவில்லை** *neñjuvillai*, பெ.(n.) சேவை யாட்டக் கலைஞர்களின் ஒப்பனைப் பொருள்; a makeup object which is used in 'sēvaiyattam'.

*[நெஞ்சு+வில்லை]*

**நெட்டிமையார்** *neṭṭimaiyar*, பெ.(n.) கடைக் கழகப் பெண்பாற் புலவர்; poetess of sangam period.

**க. நெட்டம் மிளகு, மூங்கில். நெட்டி - அழகு, செம்மை**

*[நெட்டு-நெட்டிமை(செம்மை)+ஆர்]*

**நெட்டி வேலை** *neṭṭivēlai*, பெ.(n.) ஒரு வகையான கைவினைக் கலை ; a decoration art.

*[நெட்டி+வேலை]*

**நெட்டுக்குச்சி** *neṭṭu-k-kucci*, பெ.(n.) கட்டிலில் நெட்டு வாக்கில் இரண்டு கால்களை இணைக்கும் கட்டை; lengthy wooden raft connecting two legs of the cot.

*[நெட்டு+குச்சி]*

**நெட்டுச் சட்டம்** *neṭṭu-c-caṭṭam,* பெ.(n.) கதவுகளில் தட்டுப் பலகையினை இணைக்கும் சட்டம்; wooden planks connecting pieces in a door.

*[நெட்டு+சட்டம்]*

**நெட்டுப் பலகை** *neṭṭu-p-palagai,* பெ.(n.) பேழை (அலமாரி)யின் ஓரத்தில் உள்ள பலகை; vertical wooden piece in an almyrah.

*[நெட்டு+பலகை]*

**நெட்டுப் பார்** *neṭṭu-p-pār,* பெ.(n.) வண்டியின் நடுவில் இருக்கும் மரப்பார்; central core wooden long in a cart.

*[நெட்டு+பார்]*

**நெடம்பரம்** *neḍambaram,* பெ.(n.) திருத்தணி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[நெடு+அம்பலம்]*

**நெடியம்** *neḍiyam,* பெ.(n.) திருத்தணி வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[நெடு-நெடியம்]*

**நெடியோன்** *neḍiyōṉ,* பெ.(n.) பாண்டிய மன்னர் மரபில் முதல் மன்னன்; the first king in Pandya dynasty. நிலந்தந்த பேருதவி பொலந்தார் மார்பின் நெடியோன் (மதுரைக்.).

*[நெடு+நெடியோன்]*

**நெடுக்குச் சால்** *neḍukku-c-cāl,* பெ.(n.) நீள வாக்கில் செய்யும் உழவு. (வ.வ.வே.க.31); tilling the land length wise.

**மறுவ. நெடுஞ்சால்**

*[நெடுக்கு+சால்]*

**நெடுங்கிள்ளி** *neḍuṅkiḷḷi,* பெ.(n.) கடைக்கழகக் காலத்திய சோழ மன்னன்; name of Chola king.

**நெடுந்தாரை** *neḍu-n-tārai,* பெ.(n.) பண்டைய இசைக் கருவியினுள் ஒன்று; an ancient musical instrument.

*[நெடும்+தாரை]*

**நெடுந்தோண்டி** *neḍuntōṇḍi,* பெ.(n.) திண்டி வனம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[நெடும்+தோண்டி(பன்மை)]*

**நெடும்பல்லியத்தனார்** *neḍumpalliyattaṉār,* பெ.(n.) கடைக்கழகக் காலத்திய புலவர்; name of a sangam period.

*[நெடும்+பல்+இயம்+அத்து+அன்+ஆர்]*

**நெடும்புலம்** *neḍumbulam,* பெ.(n.) திருத் துறைப் பூண்டி வட்டத்தில் அமைந்துள்ள ஒரு சிற்றூர்; name of the village in Thiruthuraippundi Taluk.

*[நெடும்+புலம்]*

**நெடும்புலி** *neḍumpuli,* பெ.(n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Arakonam Taluk.

*[நெடும்+புலி]*

**நெடுமாயக் கள்வன்** *neḍumāyakaḷvan* பெ.(n.) திருமால்; Kannan, the god. "கண்டிலம் இவன் நெடுமாயக் கள்வனால்" (யுத்.31:174).

*[நெடு+மாயன்+கள்வன்]*

**நெய்விழா** *neyviḻa,* பெ.(n.) மங்கலமாக இடும் நெய் முழுக்கு; considered auspicious anointment. "நிரம்பின உலகு எலாம் உவகை நெய் விழா".

*[நெய்+விழா]*

**நெடுவங்கியம்** *neḍuvaṅgiyam,* பெ.(n.) ஏழு துளைகள் கொண்ட குழல் வகை; flute which has seven holes.



*[நெடு+வங்கியம்]*

**நெடுவரை** *neḍuvarai,* பெ.(n.) இலண்டனிலுள்ள கிரீன்விச்சுக்கு ஊடாகச் செல்லும் வட-தென் துருவ நிரை கோட்டிலிருந்து மேற்கில் அல்லது கிழக்கில் நிரலாக உலக வரைபடத்தில் இடப்படும் நெடுங்கோடு; longitude. imaginary vertical lines drawn goes through greenwich from North to South.

*[நெடு+வரை]*

**நெடுவாய்க் கலப்பை** *neḍuvāi-k-kalappai,* பெ.(n.) கலப்பையின் உழும் பகுதி; long plough share.

*[நெடு+வாய்+கலப்பை]*



**நெடோடை** *neḍōdai,* பெ.(n.) அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[நெடு+ஓடை]*

**நெத்திக்கட்டுதடி** *netti-k-kaṭṭutadi,* பெ.(n.) தடி விளையாட்டில் தன்னுடைய உயரத்திற்கு வைத்திருக்கும் கெட்டியான மூங்கில் கழி; a bamboo pole used in martial fight. (கொ.வ.வ.சொ.99).

*[நெற்றி+கட்டு+தடி]*

**நெப்பியல்** *neppiyal,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[நெப்பு+இயல்]*

**நெம்பை** *nembai,* பெ.(n.) வீட்டினுள் வாசலின் மேற் பகுதியில் உள்ள சிறிய அறை; a small room above the entrance of a house.

*[நும்பு-நெம்பை]*

**நெமிலி** *nemili,* பெ.(n.) செங்கற்பட்டு மாவட் டத்தில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village in Chenglepet Taluk.

*[மயில்-மிஞில்-மிஞிலி-ஞமிலி-நெமிலி]*

**நெய்க்குப்பை** *neykkuppai,* பெ.(n.) கும்ப கோணம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Kumbakonam Taluk.

*[நெய்+குப்பை]*

**நெய்க்கோணம்** *ney-k-kōnam,* பெ.(n.) புதுக் கோட்டையிலிருந்து 20 அயிர மாத்திரி (கி.மீ.) தொலைவிலுள்ள சிற்றூர்; name of a village 20 k.m. from Pudukottai.

*[நெல்(நெய்)+(குன்றம்-குணம்) கோணம் (கொ.வ.)]*

இவ்வூர் 'நெல்குன்றம்' எனக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது.

**நெய்குப்பி** *neykuppi,* பெ.(n.) திண்டிவனம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[நெல்(நெய்)+குப்பம்(குப்பி)]*

**நெய்தல்தத்தனார்** *neidal tattaṉār,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்; poet of sangam period.

*[நெய்தல்+தத்தன்+ஆர்]*

**நெய்வண்ணம்** *ney-vannam,* பெ.(n.) வண்ணக் குழம்பின் ஒரு வகை; a kind of colour mix.

*[நெய்+வண்ணம்]*

**நெய்வனை** *neyvanai,* பெ.(n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[நெல்(நெய்)+மனை–வனை]*

**நெய்வாசல்** *neyvāsal,* பெ.(n.) சிதம்பரம் வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[நெல்(நெய்)+வாசல்]*

**நெய்வாய்க்குடி** *nayvāi-k-kuḍi,* பெ.(n.) மயிலாடுதுறை வட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர்; name of village in Mayiladuturai.

*[நெல்(நெய்)+வாய்+குடி]*

தற்போது இவ்வூர் நல்லத்துக்குடி என்னும் பெயருடன் உள்ளது.

**நெல்வாய்க்குடி** *nelvāi-k-kuḍi,* பெ.(n.) நாகை மாவட்டத்தில் மயிலாடுதுறைக்கு அருகில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village in nagai near the Mayiladuturai.

*[நெல்+வாய்+குடி]*

**நெய்விளக்கு** *neyviḷaku,* பெ.(n.) நெய்யால் எரியும் விளக்கு; a lamp which is lighted in ghee.

*[நெய்+விளக்கு]*

**நெரசல்** *nerasal,* பெ.(n.) ஓலையால் மறைத்துக் கட்டப்படும் தட்டி; a screen like seperation made with dried leaves of palmyra or coconut tree leaves.

*[நிரவு–நெரசல்]*

**நெரிகம்** *nerigam,* பெ.(n.) ஒசூர் வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Hosur Taluk.

*[நரி–நரியகம்–நெரிகம்]*

**நெருப்புக்கொட்டை** *neru-p-pukkoṭṭai,* பெ.(n.) முள் முருங்கை விதை; seed of mulmurungai.

*[நெருப்பு+கொட்டை]*

இவ்விதையைத் தரையில் தேய்த்து உடம்பில் வைத்தால் சுடும் தன்மையாதலால் இப்பெயர் பெற்றது எனலாம்.

**நெருப்பெரிச்சல்** *neruppericcal,* பெ.(n.) பல்லடம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Palladam Taluk.

*[நெருப்பு+எரிச்சல்]*

**நெருப்பு நடனம்** *neruppunaḍanam,* பெ.(n.) மாலி வகுப்பைச் சார்ந்த பெண்டிர் ஆடும் நடனம்; a kind of dance performed by Māli group ladies. (4:14).

*[நெருப்பு+நடனம்]*

**நெல்நடவுப் பாடல்** *nelnaḍavu-p-pāḍal,* பெ.(n.) மள்ளர் இனத்தவரின் வேளாண்மைத் தொடர்பான பாடல்; a song sung by Maḷḷar.

*[நெல்+நடவு+பாடல்]*

**நெல் பட்டரை** *nel-paṭṭari,* பெ.(n.) நெல் குவியல்; heap of paddy.

*[நெல்+பட்டரை]*

**நெல்லி** *nelli,* பெ.(n.) மதுராந்தகம் வட்டத் திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Madurantakam Taluk.

*[நெல்லி–நெல்லிமரத்தூர்]*

**நெல்லின் தோற்றக் கதை** *nellin-tōṟṟa-k-kadai,* பெ.(n.) மள்ளர் குடியின் தோற்றத்தைக் கூறும் கதை; a story which says the origin of the Maḷḷar community.

*[நெல்லின்+தோற்றம்+கதை]*

**நெல்வாய்** *nelvāy,* பெ.(n.) 1. வட ஆற்காடு மாவட்டத்தில் வேலூர்க்கு அருகில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village in north Arcot near Vellore. 2. அரக்கோணம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Arkonam Taluk.

*[நெல்+வாய்]*

**நெற்குப்பை** *neṟkuppai,* பெ.(n.) திருநள்ளாற்றுக்கு மேற்கே 32 அயிரமாத்திரி (கி.மீ.) தொலைவில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village 32 k.m. from Thirunallar.

*[நெல்+(குப்பம்)குப்பை]*

**நெறியறஞ்செய்வார்** *neṟi-y-aṟañceyvār,* பெ.(n.) அசோகன் காலத்தில் புத்தமதம் பரப்புவதற்காக அமர்த்தப்பட்ட தர்மமகா மாத்திரர் என்னும் துறவிகள்; Dharma maha mātras of Asokan period.

*[நெறி+அறம்+செய்வார்]*

களப்பிரர் காலக் கல்வெட்டில் இடம் பெற்ற இச்சொல்லாட்சி வேற்று மொழிச்சொற்களை உடனுக்குடன் தமிழாக்கிக் கொண்ட வழக்கத்தைக் காட்டுகிறது.

**நென்மலி** *neṉmali,* பெ.(n.) மன்னார் குடி வட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village in Mannarkudi.

*[நெல்+மலி]*

இவ்வூர் தற்போது நெம்மேலி என்னும் பெயருடன் உள்ளது.

**நென்மேனி** *neṉmēṉi,* பெ.(n.) சாத்தூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Sattur Taluk.

*[நெல்+மேனி]*

**நேசனூர்** *nēšaṉūr,* பெ.(n.) திருத்தணி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[நேயன்+ஊர்]*

**நேமத்தான் பட்டி** *nēmattāṉpaṭṭi,* பெ.(n.) புதுக்கோட்டை மாவட்டத்தில் காரைக்குடி வட்டத்தில் அமைந்துள்ளது; name of the village from Pudukkoṭṭai (dist.).

*[நியமத்தான்(நேமத்தான்)+பட்டி]*

**நேமூர்** *nemūr,* பெ.(n.) விழுப்புரம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Villupuram Taluk.

*[நியமம்(நேமம்)+ஊர்]*

**நேரலகிரி** *nēralagiri,* பெ.(n.) கிருட்டிணகிரி வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Krishnagiri Taluk.

*[நேரல்(நாவல்மரம்)+கிரி]*

**நையாண்டி** *naiyāṇḍi,* பெ.(n.) நகையாட்டு வகையிலமைந்த நாட்டுப்புறக்கலை நிகழ்ச்சி; a folklore of comedy type, farce.

*[நைதல்–பிறரை எள்ளற் பொருளாக்கிச் சிரித்தல். நை –நையாடு – நையாளு– நையாண்டி]*

**நைவார்** *naivār,* பெ.(n.) மனம் கனிபவர்; mellower. "நின்று நைவார் இடன் களையாய் நெடுங் களம் மேவியவனே".

*[நைபவர்+நைவார்]*

**நைவினை** *naivinai,* பெ.(n.) நலிவு தரும் செயல்; humiliating actions. "நைவினை நணுகேல்" (ஔ.).

*[நை+வினை]*

**நைனாக்குடி** *niaṉākkuḍi,* பெ.(n.) ஆசாரி எனும் கம்மியக்குடியினர் வாழும் பகுதி; a settlement of artisens.

*[நாயன்–நைனா+குடி]*

**நேம்பு–தல்** *nēmbu-,* செ.கு.வி.(v.i.) புடைத்தல்; to winnow.

*[நாம்பு–நேம்பு]*

**நேரான்** *nērāṉ,* பெ.(n.) சோழ மன்னன் செங்கணானை எதிர்த்தவன்; one who opposed the Chola king Senganān.

*[நேர்+ஆ+அன்]*

**நொச்சிக்குச்சி** *nocci-k-kucci,* பெ.(n.) ஆணித் தட்டுப் பின்னப் பயன்படும் வளார்; a plant twine which is used to make chase of 'āṇittaṭṭu'.

*[நொச்சி+குச்சி]*

**நொச்சி நியமங்கிழார்** *nocciniyamaṅgiār,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்; name of a sangam poet.

*[நொச்சி+நியமம்+கிழார்]*

இவர் காஞ்சித் திணையைப் பாடியுள்ளார். பூந்துறைக்கு அருகில் உள்ள நொச்சியூரை சேர்ந்தவர்.

**நொச்சியம்** *nocciyam,* பெ.(n.) கருவூர்க்குக் கிழக்கில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village in east Karuvur.

*[நொச்சி+ஆம்]*

**நொச்சியூர்** *nocciyūr,* பெ.(n.) பூந்துறை நாட்டுச் சிற்றோடைக்கு மேற்கில் உள்ள ஒரு சிற்றூர்; name of the village on the western side of pūndurai cirrōḍai.

*[நொச்சி+ஊர்]*

இப்பொழுது நொச்சிப் பாளையம் என்று வழங்கப்படுகிறது.

**நொசி குறங்கு** *noši-kuṟaṅgu,* பெ.(n.) ஒரு வகையான ஆடலியக்கம்; a kind of dance movement.

*[நொசி+குறங்கு(தொடை)]*

**நொட்டுக்கை** *noṭṭu-k-kai,* பெ.(n.) இடை விடாமல் எதையாவது செய்து கொண்டே இருப்பவர்; one who is working continuously.

*[நொடு–நொட்டுக்கை]*

**நொட்டு–தல்** *noṭṭu,* செ.குன்றாவி (v.t.) 1. செய்து முடித்தல்; to finish a work. 2. நெடுங்காலக் கடனை அடைத்தல்; to repay a loan of long due. எவனாலும் முடியவில்லை இவன் நொட்டுவானா (கொங்கு.பழ.).

*[நொள்>நொடு>நொட்டு]*

**நொண்டிக்கருப்பு** *noṇḍi-k-karuppu,* பெ.(n.) சிற்றூர்க் காவல் தெய்வம்; a village deity.

*[நொண்டி+கருப்பு]*

**நொண்டு சில்லி** *noṇḍu-cilli,* பெ.(n.) நம்பர் நொண்டி; வட்டமான அரங்கில் எண்களைக் குறித்துச் சில்லினை எறிந்து சிறுவர் ஆடும் நொண்டி விளையாட்டு; the game of hopping with folded legs.

*[நொண்டு+சில்லி]*



**நொணலாமணிவலை** *noṇalāmaṇivalai,* பெ.(n.) கொழ கொழப்பான மணி வலை; a party net.

*[நொணல்–நொணலா+மணி+வலை]*

**நொரண்டு–தல்** *noraṇḍu-,* செ.கு.வி.(v.i.) குறும்பு செய்தல்; to behave; mischeviously playing pranks on others. (நெல்லை.வ.).

**மறுவ. சுழித்தனம், குறும்பு.**

*[நுரண்டு–நொரண்டு]*

**நொறுநாட்டியம்** *noṟunāṭṭiyam,* பெ.(n.) குற்றம் குறை; fault, accusation.

*[நொறு+(நொட்டு)–நொட்டியம்–நாட்டியம்]*

**நோக்குரு** *nōkkuru,* பெ.(n.) 1. பார்வைக்காகத் தரப்படும் ஒரு பொருளின் மிகைப் பொருள்; sample of a thing or article. 2. ஒரு பொருளை முற்றிலும் ஒத்திருக்கும் செயற்கை வடிவம்; a model.

**மறுவ. மாதிரி**

*[நோக்கு+உரு]*

**நோம்பி அழைப்பு** *nōmbi aḻaippu,* பெ.(n.) திருவிழாவிற்கு உறவுக்காரர்களை அழைத்தல்; to invite the relatives for village festival.

*[நோன்பு–நோம்பி+அழைப்பு]*

**நௌலி** *nauli,* பெ.(n.) தாராபுரம் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; a village in Dharapuram Taluk.

*[நெமிலி–நௌலி]*

# ப

**பக்கச்சட்டம்** *pakka-c-caṭṭam,* பெ.(n.) குறுக்குச்சட்டம் இரண்டையும் இணைக்கும் பக்கச்சட்டம்; a side wooden plank connecting the other two.

*[பக்கம்+சட்டம்]*

**பக்கப்பிளாச்சு** *pakka-p-piḷāccu,* பெ.(n.) கட்டை வண்டியில் ஒட்டுபவர் அமர்வதற்காகப் பொருத்தப்படும் சட்டம்; wooden piece fixed in a cart to enable the cart driver to sit.

*[பக்கம்+பிளாச்சு]*



**பக்கி** *pakki,* பெ.(n.) இருளர் குடியினரின் நீண்ட கதைப்பாடல்; a narrative song of the Irula tribes.

*[ஒருகா. பறவை – பறக்கி –பக்கி]*

**பகஞ்சான்** *pagañjāṉ,* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[ஒருகா. பாகன்+சால்]*

**பகடப்பாடி** *pagaḍappāḍi,* பெ.(n.) ஆத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Attur Taluk.

*[பகடை+பாடி]*

**பகடை** *pagaḍai,* பெ.(n.) செருமான் இனத்தைச் சேர்ந்தவன் (நெல்லை); a man belonging to cobbler community.

**பகண்டை** *pagaṇḍai,* பெ.(n.) விழுப்புரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilupuram Taluk.

*[பகன்றை+பகண்டை]*

**பகல்வேடக்கலை** *pagal-vēḍa-k-kalai,* பெ.(n.) விழுப்புரம், திண்டிவனம் பகுதியைச் சார்ந்த குல்லுக்கவர இன மக்கள் நிகழ்த்தும் நாட்டுப் புறக்கலை; folk dance of Kullukkavara people.

*[பகல்+வேடம்+கலை]*

**பகை** *pagai,* பெ.(n.) ஏழிசைத் தொகுதியில் மூன்று மற்றும் ஆறாம் நரம்பு குறிக்கின்ற சொல். a word referring to 3rd and 6th string in harp.

*[பகு–பகை]*

**பகையணி** *pagaiyaṇi,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[பகை+அணி]*

**பங்கலத்தான்** *paṅgalattāṉ,* பெ.(n.) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk.

*[பங்கலம்+அத்து+ஆன்]*

**பங்காரம்** *paṅgāram,* பெ.(n.) கள்ளக்குறிஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkuricci Taluk.

*[பங்கு+ஆரம்]*

**பச்சைக்கரகம்** *paccai-k-karagam,* பெ.(n.) அம்மன் வழிபாட்டில் எடுக்கும் கரக வகை; temple ritual.

*[பச்சை+கரகம்]*

**பச்சைத்தாலி** *paccai-t-tāli,* பெ.(n.) திருமணப் புதிய தாலி; the tali as it is on the marriage day.

*[பச்சை+தாலி]*



**பச்சைக்கோலம்** *paccai-k-kōlam,* பெ.(n.) நாட்டுப்புறக் கைவினைக் கலை; fineart feature in rural handicrafts.

*[பச்சை+கோலம்]*

**பசலிக்குட்டை** *pasalikkuṭṭai,* பெ.(n.) திருப் பத்தூா் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruppattur Taluk.

*[பாசி–பாசல்–பசலி+குட்டை]*

**பசார்** *pasār,* பெ.(n.) திண்டிவனம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[பசளை–பசர்–பசார்]*

**பசியார்** *pasiyār,* பெ.(n.) திண்டிவனம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[பாசி+ஆர்]*

**பசுப்பாண்டி** *pasu-p-pāṇḍi,* பெ.(n.) பல்லாங் குழியின் வகை; a kind of 'pallankuli' game.

*[பசு + பாண்டி]*

**பசுவபட்டி** *pasuvapaṭṭi,* பெ.(n.) ஈரோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Erode Taluk.

*[பசுவன்+பட்டி]*

**பஞ்சக்கும்மி** *pañja-k-kummi,* பெ.(n.) வறகடத்தின்(பஞ்சத்தின்) கொடுமையைப் பாடும் கும்மி; a kummi play narrating the woes of famine.

*[பஞ்சம்+கும்மி]*

**பஞ்சபாரதியம்** *pañjapāradiyam* பெ.(n.) பண்டைய இசை நூல்; a treatise on music, not extant.

*[பஞ்சம் (ஐந்து) +பாரதியம்]*

**பஞ்சமாரி** *pañjamāri,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[புன்செய்+வாரி]*

**பஞ்சா** *pañja,* பெ.(n.) புலியாட்டம் ஆடுபவர் வைத்திருக்கும் கருவி; musical instrument.

*[புஞ்சு+பஞ்சா]*

**பஞ்சாடரி** *pañjāḍari* பெ.(n.) சிற்பங்கள் நிறுவப் பெறும் மேடை; gallery with sculptures.

*[பஞ்ச(ம்) + ஆடரி]*

**பஞ்சாத்தி** *pañjātti,* பெ.(n.) விழுப்புரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Vilupuram Taluk.

*[பஞ்சு+அத்தி]*

**பஞ்சாதி** *pañjādi,* பெ.(n.) சிவகங்கை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[பஞ்சு+(அத்தி)ஆதி]*

**பஞ்சாரம்** *pañjāram,* பெ.(n.) மூங்கில் கீற்றால் பின்னப்பட்ட கோழிக்கூடு; a basket for hen.

*[பஞ்சாரம் – பஞ்சாரம்]*

**பஞ்செட்டி** *pañjeṭṭi,* பெ.(n.) பொன்னேரி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Ponneri Taluk.

*[பஞ்சு+அட்டி]*

**பட்டடை** *paṭṭaḍai,* பெ.(n.) இசைக்கரண வகை களில் ஒன்று; a musical variety.

*[பாட்டு–பட்டடை]*

**பட்டடையரம்** *pattai-y-aram,* பெ.(n.) வரிவரியாகக் கோடு போன்ற அமைப்பைக் கொண்டு இரும்பை மட்டமாகத் தேய்த்து அராவுவதற்குப் பயன்படும் அரம்; a file.

*[பட்டடை+அரம்]*

**பட்டணக்கரை** *pattana-k-karai,* பெ.(n.) நகரம், பட்டணம்; town; city.

*[பட்டினக்கரை–பட்டணக்கரை]*

**பட்டம்** *pattam,* பெ.(n.) கதவுகளைத் தாங்கி நிற்கும் குந்து; the base part of the door.

*[படு–பட்டம்]*

**பட்டரையாள்** *pattaraiyāl,* பெ.(n.) ஒத்த அகவையு(வயது)டைய ஆள் (நெல்லை); person in equal age.

*[படு–பட்டடை+ஆள்]*

**பட்டாளி முத்து** *pattāli-muttu,* பெ.(n.) காக்கா முத்து; a pearl of low variety, inferior quality of pearl.

*[பட்டாளி+முத்து]*

**பட்டிநாய்** *patti-nāy,* பெ.(n.) ஆடுகள் அடைக்கும் பட்டிக்குக் காவலுக்கு இருக்கும் நாய் watch dog.

*[பட்டி+நாய்]*

**பட்டிமாடு** *patti-mādu,* பெ.(n.) பட்டியில் அடைக்கப்படும் மாடு; farm cattle.

*[பட்டி+மாடு]*

**பட்டுநோன்பு** *pattu-nōnbu,* பெ.(n) மாட்டுப் பொங்கல் திருநாள்; the second day of pongal festival.

*[பட்டு+நோன்பு]*

**பட்டுத்தாளம்** *pattu-t-tālam,* பெ.(n.) பறை மேளத்தின் துணையால் இசைக்கப் பெறும் பொது நிகழ்வுக்கான தாளவிசை; general music.

**பட்டுத்துறை** *pattutturai,* பெ.(n.) ஆத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Attur Taluk.

*[பட்டி–பட்டு+துறை]*

**பட்டுப்பட்டை** *pattu-p-pattai,* பெ.(n.) பட்டுநூல் சிட்டையில் இருந்து நூலைச் சுற்றப் பயன்படும் பட்டையான தார்க்குச்சி; bobbin.

*[பட்டு+பட்டை]*

**பட்டுளி** *pattuli,* பெ.(n.) மர உளி; wooden chisel.

*[படு+உளி]*

**பட்டையுளி** *pattai-yuli,* பெ.(n.) மரம் செதுக்கப் பயன்படுத்தும் அகன்ற பட்டை வடிவ உளி; broad chisel.

*[பட்டை+உளி]*



**பட்டைக்காம்பு** *pattai-k-kāmbu,* பெ.(n.) குறத்தியர் அணியும் காப்பு போன்ற வெள்ளி வளையம்; an anklet of kuruatti women.

*[பட்டை+காம்பு]*

**பட்டைச்சோறு** *pattai-c-cōru,* பெ.(n.) ஊக்க மற்று இருக்கும் முக்குவர் இனக் குழந்தையைக் குணப்படுத்துவதற்காகச் செய்யப் படும் சோறு; a medical food preparation for healthless children of Mukkuvar caste.

*[பட்டை+சோறு]*

**பட்டைத்தாழ்ப்பாள்** *pattai-t-tālppāl,* பெ.(n.) கதவின் உட்புறத்தில் பொருத்தப்படும் பட்டையான அமைப்புடைய தாழ்ப்பாள்; *a kind of padlock.*

*[பட்டை+தாழ்ப்பாள்]*

**படகு ஓட்டம்** *padaku-ōttam,* பெ. (n.) தங்களுக்கு இடையே போட்டியின் போது நீண்ட மூங்கில் கழிகளை ஊன்றிப் படகு ஓட்டுதல். boat centipede race.

*[படகு+ஓட்டம்]*

**படப்பம்** *padappam,* பெ. (n.) காஞ்சிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[படப்பை-படப்பம்]*

**படப்பை** *padappai,* பெ. (n.) காஞ்சிபுரம் வட்டத் திலுள்ள ஓர் ஊர்; a village in Kanchipuram Taluk.

*[பாடம் -படம்-படப்பை]*

**படமஞ்சி** *padamañji,* பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[படை+மஞ்சி]*

**படமரக்காடி** *pada-mara-k-kādi,* பெ. (n) நெசவுக் கருவியான படமரத்திலுள்ள சிறிய நீண்ட பள்ளம்; middle furrow in the wooden component in loom.

*[படமரம்+காடி]*

**படமரக்குச்சி** *pada-mara-k-kucci,* பெ. (n.) படமரத்தைச் சுழற்றுவதற்குரிய சிறிய கொம்பு; *a stick in loom.*

*[படை+மரம்+குச்சி]*

**படமரத்து மெட்டுக் கம்பி** *pada-marattu-mettu-k-kambi,* பெ. (n.) படமரத்தைச் சுழற்றுவதற்குரிய கம்பி; a stick used to rotate.

*[படமரம்+அத்து+மெட்டு+கம்பி]*

**படமரத்துளை** *pada-mara-t-tulai,* பெ. (n.) படமரக்குச்சி செருகப்படும் துளை; a hole in the boat to pole.

*[படை+மரம்+துளை]*

**படலிகை** *padaligai,* பெ. (n) தோலாற் செய்யப் பட்ட இசைக்கருவி; a percussion muscial instrument.

*[படலி-படலிகை]*

**படவம்**[1] *padavam,* பெ. (n.) பண்டைய இசைக்கருவி; an ancient musical instrument.

**மறுவ. படகம்**

*[படகம்-படவம்]*

**படவம்**[2] *padavam,* பெ. (n.) புகைப்படக் கருவி; camera;

*[படம்-படவம்]*



**படவீடு** *padavēdu,* பெ. (n.) திருச்செங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengode Taluk.

*[படை+வீடு]*

**படிமுறைக் குறைப்பு** *padi-murai-k-kuraippu,* பெ. (n.) நியமக்குறைப்பின் வேறு பெயர்; deficiency of formalities.

*[படி+முறை+குறைப்பு]*

**படுக்கைகள்** *padukkaigal,* பெ. (n.) மகாபாரதத் தெருக்கூத்தில், இறுதி நாளன்று வடிவமைக் கப்படும் மேடையின் பெயர்; a raised platform - a stage setting in folklore.

*[படுகை-படுக்கைகள்]*

**படுகளம்** *padukaḷam,* பெ. (n.) பொன்னர் சங்கர் விழாவின் ஒரு கூறு; a feature of Ponnar Sankar function.

*[படு+களம்]*

**படுதலம்** *padutaḷam,* பெ. (n.) திருத்தணி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[படு (தலை) – தலம்]*

**பண்டராப்பள்ளி** *paṇḍarāppaḷḷi,* பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[பண்டாரம்+பள்ளி]*

**பண்டாரம்** *paṇḍāram,* பெ. (n.) சிற்றூர்த் தெய்வங்களுக்குப் பூசை செய்பவர்; priest of a village deity.

*[பண்டம்–பண்டாரம்]*

**பண்டுகிராமம்** *paṇḍu-kirāmam,* பெ. (n.) சிற்றூர்கள் வழங்கும் வரி; a tax levied from the village.

*[பண்டு (விளைச்சல்) + கிராமம்]*

**பண்டூழியம்** *paṇḍūḻiyam,* பெ. (n.) பண்ட ஏன(பாத்திர)ங்கள்; vessal and other things.

*[பண்டம்+ஊழியம்]*



**பண்ணல்** *paṇṇal,* பெ. (n.) பாடப்புகுந்த பண்ணிற்கு, இணை, கிளை, பகை, நட்பான நரம்புகள் பெயருந்தன்மை மாத்திரையறிந்து இசைத்தல்; careful recitating of song considering the time measure.

*[பண்ணு–பண்ணல்]*

**பண்ணாட்டு** *paṇṇāṭṭu,* பெ. (n.) வேளாண்மை எனும் பண்ணையத்தை மேற்பார்வை செய்யும் மேலாண்மை அதிகாரம்; farm management.

*[பண்ணை–பண்ணாட்டு]*

**பண்ணாடி** *paṇṇāḍi,* பெ. (n.) 1. முதலாளி, land lord, owner, 2. கணவன்; husband.

*[பண்ணை+ (ஆளி) ஆடி]*

**பண்ணாளத்தி** *paṇṇāḷatti,* பெ. (n.) ஆளத்தி வகைகளில் ஒரு பிரிவு; a musical tune.

*[பண்+ஆளத்தி]*

**பண்ணிக்கட்டு** *paṇṇi-k-kaṭṭu,* பெ. (n.) ஒரு வகை ஆடைக் கட்டு. a kind of dressing.

*[பண்ணு+கட்டு]*

**பண்ணிக்குண்டு** *paṇṇikkuṇḍu,* பெ. (n.) திருமங்கலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirumangalam Taluk.

*[பண்ணை – பண்ணி + குண்டு]*

**பண்ணியான்** *paṇṇiyān,* பெ. (n.) திருமங்கலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirumangalam Taluk.

*[பண்ணியம்+ஆன்]*

**பண்ணுப்பெயர்த்தல்** *paṇṇu-p-peyarttal,* பெ. (n.) தமிழிசையின் ஒரு கூறு; a feature in Tamil music.

*[பண்–பண்ணு+பெயர்த்தல்]*

**பண்ணை** *paṇṇai,* பெ. (n.) அச்சில் பிணைத்த நூல், மூங்கிலால் ஆன பண்ணையில் சிறு துளைகள் வழியாக வந்து குறுக்கே போகும் ஊடை நூலை அடித்து நெருக்கமாக்க செய்யும் பண்ணை; a part in the handloom.

*[பண்–பண்ணை]*

**பணக்கல்** *paṇakkal,* பெ. (n.) பட்டறையில் இருக்கும் பட்டடைக் கல்; anvil

*[பணை+கல்]*

**பணம் பெத்த பச்சை** *paṇam-petta-paccai,* பெ (n) நாட்டுப்புறங்களில் பச்சைக் குத்தலுக்கு வழங்கும் பெயர்; marking on the skin.

*[படம்–பணம்+பெத்த+பச்சை]*

**பணிக்கத்தாவு** *paṇikkattāvu,* பெ. (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[பணிக்கன்+தாவு]*

**பணிதிவயல்** *paṇidivayal,* பெ. (n.) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramakudi Taluk.

*[பணத்தி+வயல்]*

**பணியாரக்கல்** *paṇiyārakkal,* பெ. (n.) பணியாரம் சுடும் கல்; *pan.* (நெல்லை)

*[பணியாரம்+கல்]*

**பத்தகரை** *patta-karai,* பெ. (n.) சேலைகள் வேட்டிகள் அறுத்தலுக்குரிய இடம்; point of seperating the viewed woven length.

*[பற்று–பற்ற+கரை]*

**பத்தநிதி** *patta-nidi,* பெ. (n.) சிற்ப வகையினுள் மங்கலச் சின்ன சிற்பம்; an auspicious sculpture.

*[பற்று–பற்ற+நிதி]*

**பத்தவாட்டு** *patta-vāṭṭu,* பெ. (n.) ஓசை இல்லாமல் நெய்யும் வாட்டு; a noiseless weaving method.

*[பற்று+வாட்டு]*

**பத்தாங்கல்** *pattāṅkal,* பெ. (n.) தட்டங்கல் ஆட்டத்தின் வகை; a kind of Tattankal play.

*[பற்று+பத்து+ஆம்+கல்]*

**பத்தி** *patti,* பெ. (n.) வில்லுப்பாட்டில் பயன் படுத்தப்படும் கமுகுப் பாளையினாற் செய்யப் பட்ட ஒரு மட்டை; arecanut sheath.

*[பற்றை–பத்தி]*

**பத்தியம் பாடல்** *pattiyam-pāḍal,* பெ. (n.) நாட்டுப்புறப் பாடலின் ஒரு பிரிவு; a variety of folk song.

*[பத்தியம்+பாடல்]*

**பத்திரி** *pattiri,* பெ. (n.) அம்மை நோய்க்குத் தடவிட வேப்பிலையும் ஆமணக்கு விதையும் கலந்து அரைக்கப்பட்ட சாந்து; a pasty medicine prepared by the Siddha doctors.

*[பத்தல்–பத்திரி]*

**பதநீர்க்கலயம்** *pada-nīr-k-kalayam,* பெ. (n.) தென்னை மரத்தில் பதநீரெடுக்கக் கட்டப்படும் கலயம், ஊறல் முட்டி; small earthen pot to hold juice.

*[பதம்+நீர்+கலயம்]*

**பதவல்** *padaval,* பெ. (n.) காடுகளுக்குள் தேவையில்லாமல் வளர்ந்து கிடக்கும் செடி கொடிகள்; unwanted growth of vegetation.

*[பதவு–பதவல்]*

**பதனக்குடி** *padaṉakkuḍi,* பெ. (n.) திருவா டானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[பதனம்+குடி]*

**பதினாறு தட்டு அடைவு** *padi-ṉ-āṟu-taṭṭu-adaivu,* பெ. (n.) கும்மியாட்டத்தில் பின்பற்றப் படும் அடவு; steps in kummi play.

*[பதினாறு+தட்டு+அடவு]*

**பதிலை** *padilai,* பெ. (n.) ஒரு வகையான இசைக் கருவி; a kind of musical instrument.

*[பதலை–பதிலை]*

**பந்தணை நல்லூர் பாணி** *pandaṇainallūr pāṇi,* பெ. (n.) பரதத்தில் பின்பற்றப்படும் ஊர்ப்பாங்கு நடைமுறைகளில் ஒன்று; a variety in South Indian dance.

*[பந்தணைநல்லூர்+பாணி]*

**பந்தம்** *pandam,* பெ. (n.) கையளவுள்ள நெற் கதிர்க் கட்டு; a paddy shealth.

*[பாந்து–பாந்தம்–பந்தம்]*

**பந்தாடு** *pandāḍu,* பெ. (n.) திண்டிவனம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[பணம்+தோடு]*

**பந்தாடை** *pandāḍai,* பெ. (n.) வில்லுப்பாட்டில் இடம் பெறும் குடத்தை வைக்க உதவும் வைக்கோலில் திரிக்கப்பட்ட பிரிமணை; ring stand for keeping the pot in bowsong.

*[பாந்து+அடை]*

**பம்மதுகுளம்** *pammadukuḷam,* பெ. (n) சைதாப்பேட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Saidapet Taluk.

*[முகமது–மம்மது–பம்மது+குளம்]*

**பம்மு–தல்** *pam-mu,* செ.கு.வி. (v.i.) பதுங்குதல்; to hide.

*[பம்–பம்மு]*

**பய்யமிழிப்பான்** *payyam-iḻippāṉ,* பெ. (n) பழம்பெரும் சிற்பியரில் ஒருவர்; name of a sculptor.

*[பய்யம்+இழிப்பான்]*

**பயம்** *payam,* பெ. (n.) இரட்டைக் கை முத்திரை நிலைகளில் ஒன்று; a double hand pose in dance.

*[பய்–பய–பயம்]*

**பயித்தாம்பாடி** *payittāmpāḍi,* பெ. (n.) கடலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Cuddalore Taluk.

*[பயிற்றம்பாடி > பயித்தம்பாடி]*

**பரங்கணி** *paraṅkaṇi,* பெ. (n.) விழுப்புரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilupuram Taluk.

*[பாரம்+கணி]*

**பரடாபட்டு** *paraḍāpaṭṭu,* பெ. (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

**பரசி** *parasi,* பெ. (n.) மேலாக அறுத்து எடுத்த பகுதி; *slice of the upper portion.*

*[பரள் – பரசு – பரசி]*

**பரசு** *pa,* பெ. (n.) சாங்கம் வடிவச் சிற்பத்தின் ஒரு கூறு; a feature in sculpture.

*[பரள் – பரய்– பரசு]*

**பரணப்பலகை** *paraṇa-p-palagai,* பெ. (n.) வீட்டின் நிலையின் மேல் உள்ள பலகை; the wooden bar place on a door - frame.

*[பரணம்+பலகை]*

**பரதராமி** *paradarāmi,* பெ. (n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Walajah Taluk.

*[பாரதம்+ராமி]*

**பரதூர்** *paradūr,* பெ. (n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[பாரம்+பாரந்தூர்–பரதூர்]*

**பரவிளாகம்** *paraviḷāgam,* பெ. (n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[புர+வளாகம்]*

**பரந்தூர்** *parandūr,* பெ. (n.) காஞ்சிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[பாரம் – பாரந்தூர் – பரந்தூர்]*

**பரப்புவிளை** *parappuviḷai,* பெ. (n.) அகத்தீச்சுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agaththeechwaram Taluk.

*[பரம்பு – பரப்பு – விளை (மிளை) ]*

**பரமத்தி** *paramatti,* பெ. (n.) நாமக்கல் வட்டத்திலுள்ள ஊர்; a village in Namakkal Taluk.

*[பெரு–பர+மத்தி]*

**பரல் ஆடும் குழி** *paral-āḍum-kuḻi,* பெ. (n.) முத்து அல்லது மாணிக்கம் வைத்து ஆடும் பல்லாங்குழி விளையாட்டு; an indoor game, a type of 'pallankuli'.

*[பரல்+ஆடும்+குழி]*

**பரலி** *parali,* பெ. (n.) நிலக்கோட்டை வட்டத் திலுள்ள ஊர்; a village in Nilakottai Taluk.

*[பரல் (சிறுகல்) – பரலி]*

**பரளச்சி** *paraḷacci,* பெ. (n.) அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[பரல+அத்தம்–பரலத்தம்–பரலச்சி]*

**பரளி** *paraḷi,* பெ. (n.) நாமக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Namakkal Taluk.

*[பரல்–பரலி–பரளி]*

**பரான்** *parāṉ,* பெ. (n.) பரத நாட்டியத்தின் அடைவு சதிகளுடன் ஒப்புமையுடைய 'கதக்கு' நடனத்தின் இன்றைய அமைப்பு; a similar steps of Bharatha Natiya modernised as Kathak dance.

*[பொருவு–பொருவன்–பரான்]*

**பரிகம்** *parigam,* பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkuricci Taluk.

*[பரியம் (ஏற்றம்) – பரிசம்–பரிகம்]*

**பரித்தினி** *parittiṉi,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[பரியம்+அத்தினி]*

**பரிமளமதம்** *parimaḷa-madam,* பெ. (n.) சிற்பக்கலையின் நடைமுறைகளில் ஒன்று; a feature in sculpture.

*[பரிமளம்+மதம்]*

**பரியம்** *pariyam,* பெ. (n.) ஏற்றத்தில் நீரிறைக்கும் முறை; irrigation method with piccotah.

*[பரி–பரியம்]*

**பருக்கல்** *parukkal,* பெ. (n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurantakam Taluk.

*[புரை+கல்]*

**பருப்பஞ்சோற்று விருந்து** *paruppañj-cōṟṟu virundu,* பெ. (n.) கொங்கு வேளாளரிடையில் மணமகன் வீட்டார்க்கு, மணமகள் வீட்டார் கொடுக்கும் விருந்து; a feast given to the bridegroom family.

*[பருப்பு+அம்+சோறு+விருந்து]*

**பருப்பாமுட்டி** *paruppā-muṭṭi,* பெ. (n.) பருப்புக் கடையும் மத்து. (கொங்கு); clubbed stick for churning.

*[பருப்பு+அமுட்டி]*

**பருப்பு கடை** *paruppukaḍai,* பெ. (n.) குழந்தை விளையாட்டு; *a baby play.*

*[பருப்பு+கடை]*

**பருப்புச்சட்டி** *paruppu-c-caṭṭi,* பெ. (n.) பட்டவரைக் (தோற்றவரை) கிண்டல் செய்யும் பெயர்; *a term use to ridicule the person who lost the game.*

*[பருப்பு+சட்டி]*

**பருமடம்** *parumaḍam,* பெ. (n.) கோரா, பட்டு, நூலிழைகளைச் சுற்ற உதவும் கருவி; an instrument used in loom.

*[பரு+மடம்]*



**பருவத்தி** *paruvatti,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[பெரு+அத்தி]*

**பருவாச்சி** *paruvācci,* பெ. (n.) பவானி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Bhavani Taluk.

*[பெரு+ஆத்தி]*

**பல்பாகி** *palpāgi,* பெ. (n.) ஓமலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Omalur Taluk.

*[பால+பாகி (மம்)]*

**பல்லவகை** *pallava-kai,* பெ. (n.) 1. ஒரு வகையான கை முத்திரை; an hand pose. 2. இறை வடிவங்களுக்காக அமைக்கப்பெறும் கைகளின் இலக்கணம்; the description for making hand of a deity in sculpture.

*[பல்லவம்+கை]*

**பல்லாக்குத்தாளம்** *pallākku-t-tāḷam,* பெ. (n.) பொது நிகழ்வுகளுக்கான பறை இசை; a drum beat.

*[பல்லக்கு+தாளம்]*

**பல்லாங்குழி மணை** *pallānkuḻi-maṇai,* பெ. (n.) பல்லாங்குழிப் பலகை; wooden board for the game pallankuli.

*[பல்-பல்லாம்-குழி+மணை]*

**பலகல்** *palakal,* பெ. (n.) தட்டாங்கல் ஆட்டத்தின் வகை; a kind of tattankal play.

*[பல+கல்]*

**பலகறை** *palagaṟai,* பெ. (n.) சோழி; cowrie. (செங்கை)

*[பலகு+அறை]*

**பலவரசன்** *palavarasan,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[பலவு+அரசன்]*

**பலவரணை** *palavaraṇai,* பெ. (n.) பல்லாங்குழி மணை; wooden board for the indoor game pallankuli.

*[பலகறை+மணை]*

**பலவரிக்கூத்து** *palavari-k-kūttu,* பெ. (n.) சிற்றூர் மக்களின் பாடல் வகை; folk dance variety.

*[பல+வரி+கூத்து]*

**பலவாய்கிண்டன்** *palavāykiṇḍan,* பெ. (n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[பலவாய்+கிண்டன்]*

**பலவேட ஆட்டம்** *palavēḍa-āṭṭam,* பெ. (n.) கம்பள இனத்தாரில், ஆண்கள் ஆடும் நடனம்; a folk dance of kambala people.

*[பலவேடம் + ஆட்டம்]*

**பவ்வீக்குழி** *pavvī-k-kuḻi,* பெ. (n.) பல்லாங்குழியில் துரும்புள்ள குழியின் பெயர்; a dip in pallankuli plank.

*[பவ்வீ-குழி]*

**பவளக்கொடி** *pavaḷa-k-koḍi,* பெ. (n.) கரகாட்டத்தின் அமைப்பு முறைகளில் ஒன்று; a feature of karagattam.

*[பவளம்+கொடி]*

**பவுடு** *pavuḍu,* பெ. (n.) முகத்தின் கீழ்ப்பகுதி; low chin of the face. (கொங்கு)

*[அவல்-பவல்-பவுடு]*

**படசுழற்று குச்சு** *paḍa-cuḻaṟṟu-kuccu,* பெ. (n.) நெசவாளி படமரத்தை எதிர்பக்கமாகச் சுழற்றி முட்டும் குச்சி; a stick used for anti rotation in weaving.

*[படம்+சுழற்று+குச்சு]*

**பழம் காய்ச்சு-தல்** *paḻam-kāyccu-,* செ.கு.வி. (v.i.) விளையாட்டில் தோற்றவருக்கு தண்டனை வழங்குதல்; to punish the defeated in game. (எ.கா.). குதிரைச் சில்லி, குண்டு, தெல்லுக்காய்.

*[பழம்+காய்த்து]*

**பழம் கருகு** *paḻam-karugu-,* பெ. (n.) கிட்டிப்புள் விளையாட்டில் கம்பினைப் பிடித்து விட்டால் வழங்கும் பெயர்; a term used in kittipul game.

*[பழம்+கருகு]*

**பழிநீலம்** *paḻi-nīlam,* பெ. (n.) செய்யாத குற்றத்தைச் செய்ததாகப் பழி போடுவது; false accusation. (நெல்லை).

*[பழி+ (நீளம்) நீலம் ]*

**பழவேரி** *paḻavēri,* பெ. (n.) காஞ்சிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[பழைய+ஏரி]*

**பவுஞ்சூர்** *pavuñjūr,* பெ. (n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Maduranagam Taluk.

*[பவுஞ்சன்+ஊர்]*

**பவளக்கண்ணி** *pavaḷakkaṇṇi,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[பவளம்+கண்ணி]*

**பவித்திரம்** *pavittram,* பெ. (n.) நாமக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Namakkal Taluk.

*[பவித்திரை–பவித்திரம்]*

**பழங்களி** *paḻan-kaḷi,* பெ. (n.) காணிப் பழங்குடியினரின் விளையாட்டுப் பாடல்கள்; a joyful folk song of Kani people.

*[பழம்+களி]*

**பழந்தக்கராகம்** *paḻantakka-rāgam,* பெ. (n.) பண்வகையினுள் ஒன்று; a musical note.

*[பழம்+தக்கம்+ராகம்]*

**பழந்தாமரை** *paḻantāmarai,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[பழைய+தாமரை]*

**பழவலம்** *paḻavalam,* பெ. (n.) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Senji Taluk.

*[பழைய+வல்லம்]*

**பழம்பத்து** *paḻam-pattu,* பெ. (n.) பத்து முறை இலக்கினை அடித்தவர்; a talented player.

*[பழம்+பத்து]*

**பழமேறியவர்** *paḻam-ēṟiyavar,* பெ. (n.) குரங்கு விளையாட்டில் சுற்றி வருபவர்; one who comes round in kurangu play.

*[பழம்+ஏறியவர்]*

**பழையனூர் நீலிக்கதை** *paḻaiyaṉūr-nīli-kkadai,* பெ. (n.) இசக்கியம்மன் கோவில் விழாக்களில் வில்லுப்பாட்டாகப் பாடப்படும் சிற்றூர்க்கதை; a folk song.

*[பழையனூர்+நீலி+கதை]*

**பள்ளிப்படை** *paḷḷippaḍai,* பெ. (n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[பள்ளி+படை]*

**பள்ளுச் சட்டம்** *paḷḷu-ccaṭṭam,* பெ. (n.) தறியின் மேல் பகுதியில் அமைந்துள்ள மரம்; an upper frame in handloom.

*[பள்ளு+சட்டம்]*

**பள்ளு சீவு–தல்** *paḷḷu-cīvu,* செ.கு.வி. (v.i) பாய் நெசவு செய்த பின்னர் அதன் ஓரங்களைச் சீவி மடித்துக் கட்டுதல்; a final finishing work in mat making.

*[பள்ளு+சீவுதல்]*

**பளூகல்** *paḷūkal,* பெ. (n.) விளவங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilavancode Taluk.

*[பள்ளு+கல்]*

**பற்சக்கரம்** *paṟcakkaram,* பெ. (n) படமரத்தைச் சுற்றுவதற்கு ஏற்ற வகையில் படமரத்தின் ஓரத்தில் அமைக்கப்பட்டிருக்கும் பற்களைக் கொண்ட சக்கரம்; a wheel in handloom.

*[பல்+சக்கரம்]*

**பறைக்கூத்து** *parai-k-kūttu,* பெ. (n) இலங்கையில் தப்பாட்டத்திற்கு வழங்கப்பெறும் பெயர்; a name used to 'tappattam' in Ceylon.

*[பறை+கூத்து]*

**பற்றுக்கரை** *parru-k-karai,* பெ. (n.) வேட்டி சேலை அறுத்தற்குரிய குறிகரை; mark denoting the point to cut.

*[பற்று+கரை]*

**பற்றுக்கோல்** *parru-k-kōl,* பெ. (n) ஏற்றத்தில் நீர் இறைக்க உதவும் நீண்ட மூங்கில் கழி; long pole used in piccotah.

*[பற்று+கோல்]*



**பறைமேளம்** *parai-mēlam,* பெ. (n) குச்சியாலும் கையாலும் முழக்கப்படும் இசைக் கருவி; drum beaten with hand and stick.

*[பறை+மேளம்(பறைதல்–அடித்தல்)]*

**பன்னிமடை** *pannimadai,* பெ. (n.) கோயமுத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Coimbatore Taluk.

*[வன்னி+மடை]*

**பன்னாங்குழி** *pannāṅkuli,* பெ. (n.) ஒரு விளையாட்டு; an indoor game.

*[பல்லாங்குழி–பன்னாங்குழி (கொ.வ.)]*

**பன்னாடி** *pannadi,* பெ. (n.) தலைவன் chieftain **பண்ணாடி பார்க்க** *see pannādi.*

*[பள்ளாடி–பன்னாடி]*

**பனங்காடை** *panaṅkādai,* பெ. (n.) ஒரு வகைக் குருவி; a kind of 'kadai' bird.

*[பனை+அம்+காடை]*



**பனைக்கல்** *panai-k-kal,* பெ. (n.) உலையில் காய்ந்த இரும்பை வைத்து அடிப்பதற்குப் பயன்படும் இரும்பாலான பட்டடை; anvil **பணைக்கல் பார்க்க;** *see panai-k-kul.*

*[பணை–பனை+கல்]*

**பன்னையம்** *pannaiyam,* பெ. (n) விடையாற்றிச் சடங்கில், காளி வேடம் பூண்டவர்க்குத் தரப்படும் உணவு வகைகள்; edibe varieties given to priest of 'kāḷi' temple.

*[பல்+நயம்]*

**பன்னீர்செம்பு** *pannir-cembu,* பெ. (n.) ஒரு வகையான பச்சைக்கோலம்; a floral design in green colour.

*[பன்னீர்+செம்பு]*

**பனைமரக்கும்மி** *panai-mara-k-kummi,* பெ. (n.) கும்மி வகையினுள் ஒன்று; a kind of kummi play.

*[பனைமரம்+கும்மி]*

**பற்றோவியம்** *parrōviyam,* பெ. (n.) சுவரோவிய வகைகளில் ஒன்று; a kind of mural painting.

*[பற்று+ஓவியம்]*

**பற்றுவண்ணம்** *parru-vannam,* பெ. (n.) ஒரு வகையான வண்ணக்குழம்பு; a paint of particular colour.

*[பற்று+வண்ணம்]*

**பனைமடல்** *panaimadal,* பெ. (n.) ஆத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Attur Taluk.

*[பனை+மடல்]*

**பறக்கை** *parakkai,* பெ. (n.) அகத்தீச்சுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in AgatheechwaramTaluk.

*[பறம்பு+பறக்கை]*

**பன்னிப்படி** *pannippadi,* பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichchi Taluk.

*[வன்னிப்பட்டி–பன்னிப்படி]*

**பாகசாலை** *pāgasālai,* பெ. (n.) திருத்தணி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[பாகம் (சமையல்)+சாலை]*

**பாகம்** *pagam,* பெ. (n.) தோலாற் செய்யப்பட்ட ஓர் இசைக்கருவி; a musical instrument.

*[பாகு–பாகம்]*

**பாகாடி** *pāgādi,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[பாகாளம் – பாகாடி]*

**பாச்சல்**[1] *pāccal,* பெ. (n.) 1. திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thirup patturTaluk. 2. நாமக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Namakkal Taluk.

*[பாய்ச்சல் – பாச்சல்]*

**பாசம்** *pāsam,* பெ. (n.) சிற்பங்களில் உள்ள ஒரு பொதுப்பாங்கு; a feature in sculpture.

*[பாசு–பாசம்]*

**பாசாந்தி** *pāsāndi,* பெ. (n.) கிருட்டிணகிரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Krishnagiri Taluk.

*[பாயச்சல்–பாசல்+அந்தி]*

**பாஞ்சரை** *pāñjarai,* பெ. (n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vandivasi Taluk.

*[பைஞ்சாய்+தரை]*

**பாஞ்சார்** *pāñjār,* பெ. (n.) அருப்புக்கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arupukkottai Taluk.

*[பைஞ்சாய்>பாஞ்சார்]*

**பாட்டன்** *pāttan,* பெ. (n.) பழுங்காகளி ஆட்டத்தில் நடுவில் நிற்பவன்; a person standing in middle of the folk play.

*[பாட்டு–பாட்டன்]*

**பாட்டம்** *pāttam,* பெ. (n.) மூக்கினை அடக்கி விளையாடும் ஆட்டத்தில் பாடல் பாடுவோர் மூச்சுவிட்டுத் தோற்றுப் போவதைக் குறிக்கும் சொல்; a word to mean defeat in the game.

*[படு–பாடு–பாட்டம்]*

**பாடகம்** *pādagam,* பெ. (n.) போளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Polur Taluk.

*[பாடம் (வயல்) – பாடகம்]*

**பாண்ட ஓவியம்** *pānda ōviyam,* பெ. (n.) கலயங்களில் வரையும் கைவினைக் கலைகளில் ஒன்று; pottery design.

*[பாண்டம்+ஓவியம்]*



**பாண்டனி** *pāndani,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[பாண்டம்+அணி]*

**பாண்டங்குழி** *pāndankuli,* பெ. (n.) பழங் காலத்தில் கூலங்களைச் சேர்த்து வைக்க நிலத்தில் வெட்டப்பட்டு கல்லால் மூடப்

பட்டிருக்கும் குழி; underground storage cell to preserve food grains.

*[பாண்டம்+குழி]*

**பாண்டில்** *pāṇḍil,* பெ. (n.) பண்டைய இசைக்கருவி; a musical instrument.

*[பாண்டு–பாண்டில்]*

**பாதமானம்** *pādamāṉam,* பெ. (n.) படிமங் களின் உயரத்தினை அமைக்கும்போது கையாளப் படும் மரபு; a measure to decide the height of statue.

*[பாதம்+மானம்]*

**பாம்படம்** *pāmpaḍam,* பெ. (n.) துளைக்காதில் அணியப்படும் பொன் அணிகலன்; a gold pendant worn by women in the ablong ear lobe. (நெல்லை)

*[பாவு–பாம்+படம்]*



**பாந்து** *pāndu,* பெ. (n.) வீட்டுக் கூரைக்கும் சுவருக்கும் இடையில் இருக்கும் சந்து பொந்துகள்; open space in between the top of the wall and the ceiling roof. (கொங்கு)

*[பள்–பாள்–பாந்து]*

**பாப்பா நொண்டி** *pāppānoṇḍi,* பெ. (n) குழந்தையின் நடையினைப்போல் குதித்து குதித்து நடக்கும் நொண்டி விளையாட்டு; a limping game like the child walk.

*[பாப்பா+நொண்டி]*

**பாப்பாத்தி மூலை** *pāppāttimūlai,* பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichchi Taluk.

*[பாப்பான்+அத்தி+மூலை]*

**பாப்பினி** *pāppiṉi,* பெ. (n.) தாராபுரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Dharapuram Taluk.

*[பார்ப்பான்–பாப்பினி]*

**பாம்பு தொடர் ஓட்டம்** *pāmbutoḍarōṭṭam,* பெ. (n.) நிலைக்கட்டைகளை வரிசையாக நிறுத்தி அவற்றினைச் சுற்றிச்சுற்றி வருதல்; snake relay race.

*[பாம்பு+தொடர்ஓட்டம்]*

**பாமணி** *pāmaṇi,* பெ. (n.) மன்னார்குடி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Mannargudi Taluk.

*[பம்மல்+அணி]*

**பாமூலை** *pā-mūlai,* பெ. (n) வளி மூலை; north western direction.

*[பாய் (காற்று பாய்கின்ற) – பா+மூலை]*

**பாய் சரடு** *pāi-carḍu,* பெ. (n.) கற்றாழை நாரைச் சரடு சரடாகப் பாய் பின்ன நூலாக் குதல்; aloe fibre used for making rope.

*[பாய்+சரடு]*

**பாய்ச்சக்கால்** *paicca-k-kāl,* பெ. (n) புணி பிரித்துக் கொடுப்பதற்கு மிதி பலகையை மிதித்தல்; an operation in loom.

*[பாய்ச்சல்+கால்]*

**பாய்த்தூக்கு** *pāittūkku,* பெ. (n.) தலையணை, பாய் போன்றவற்றை வைப்பதற்கு உத்தரப் பலகையில் பொருத்தப்படும் சட்டங்களான தட்டி; barrack.

*[பாய்+தூக்கு]*

**பாய்தலடைவு** *pāydal-aḍaivu,* பெ. (n) அரைமண்டியிலிருந்து பக்கங்களிலும் முன்னு மாகவும் பாய்ந்தாடுவது; a speedy dance

movement.

*[பாய்தல்+அடைவு]*

**பாயா** *pāya*, பெ. (n.) உடுக்கையின் உறுப்புகளிற் ஒன்று; a part of 'udukkai' musical instrument.

*[பாய்+ஆ]*

**பாரணை** *pāraṇai*, பெ. (n) ஆளத்தி வகையினுள் ஒன்று; a feature of ālatti-a muscial note.

*[பார்+அணை]*

**பாரம் இறக்குதல்** *pāramirakkudal*, பெ. (n.) முக்குவர் இனத்தாரிடமுள்ள ஒரு சடங்கு; a ceremony of Mukkuvar.

*[பாரம்+இறக்குதல்]*

**பாராவயல்** *parāvayal*, பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[பார்+வயல்]*

**பாரி கொம்பு** *pārikombu*, பெ. (n.) அளவில் பெரிய கொம்பு; big horn used as muscial instrument.

*[பாரித்தல்–பாரி+கொம்பு]*

**பாரி வேட்டை** *pāri-vēṭṭai*, பெ. (n.) கொட்டு முழக்கத்துடன் இரவில் வேட்டைக்குச் செல்லுதல்; going for hunting at night with drumming pomp.

*[பாரி+வேட்டை]*

**பாரேரி** *pārēri*, பெ. (n.) செங்கற்பட்டு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chengalpat Taluk.

*[பார்+ஏரி]*

**பால்குழி** *pāl-kuḻi*, பெ. (n.) தீக்குழிக்கு அருகில் அமைக்கப்பெறும் நீர்க்குழி; a water pool near the fire pit.

*[பால்+குழி]*

**பால்பூடு** *pāl-pūḍu*, பெ (n) இலையைக் கிள்ளினால் பால் வடியும் இலை; a milky leafed plant. (கொங்கு)

*[பால்+பூடு]*

**பால்வாதங்கரை** *pālvādaṅkarai*, பெ. (n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[பால்+வாதன்+கரை]*

**பாலகுருக்கி** *pālakurukki*, பெ. (n.) கிருட்டிணகிரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Krishnagiri Taluk.

*[பாலை+குறிச்சி]*

**பாலதோபி** *palatōbi*, பெ. (n) குறவர்கள் நடனம் ஆடுகையில், தலையில் அணிகின்ற அணி (தொப்பி); a head dress used in Kuravar dance.

*[பாலை+தொப்பி–பாலதோபி]*

**பாலமதி** *pālamadi*, பெ. (n.) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk.

*[பால்+மத்தி]*

**பாலனந்தல்** *pālaṉandal*, பெ. (n.) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvannamali Taluk.

*[பாலன்+நந்தல்]*

**பாலி** *pāli*, பெ. (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thirukkoyilur Taluk.

*[பாழி–பாலி]*

**பாலிகைக்கும்மி** *pāligai-k-kummi*, பெ (n) முளைப்பாரிக்கும்மி விழாவின் வேறு பெயர்; a play, kummi. (14:157).

*[பாலினை+கும்மி]*

**பாலூத்து** *pālūttu*, பெ. (n.) பெரியகுளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Periyakulam Taluk.

*[பால்+ஊற்று]*

**பாலை** *pālai*, பெ. (n.) இணை, கிளை தொடர்பால் பிறக்கும் இசைக்குறிப்பு; section of musical note.

*[பகல்–பால்–பாலை]*

**பாவக்கல்** *pāvakkal*, பெ. (n.) கிருட்டிணகிரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Krishnagiri Taluk.

*[பாவு+கல்]*

**பாவந்தூர்** *pāvandūr*, பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichi Taluk.

*[பாவு–பாவல்+அந்தூர்]*

**பாவம்** *pāvam*, பெ. (n.) பாயின் அளவு; measure of mat.

*[பா–பாவம்]*

**பாவாசி** *pāvāsi*, பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvadanai Taluk.

**பாவாலி** *pāvāli*, பெ. (n.) சாத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sattur Taluk.

*[பாவு–வழி]*

**பாவு**[1] *pāvu* பெ. (n) 90 அடி, 12 அடி, 24 அடி என உள்ள பாவு நூல் அமைப்பு; thread pattern of particular length of 90, 12, 24 ft.

*[பம்மல்+அணி]*

**பாவு**[2] *pāvu*, பெ. (n.) கலப்பையிலுள்ள மேழியின் கைப் பிடி; handle of the plough. (நெல்லை)

*[பால்–பாவு]*

**பாவு அறு–த்தல்** *pavu-aṟu*-செ.குன்றாவி. (v.t.) நெய்யப்பட்ட துணியைப் பாவினின்று அறுத்தெடுத்தல்; to seperate the cloth from the loom.

*[பாவு+அறுத்தல்]*

**பாவு கம்பி** *pāvu-kambi*, பெ. (n.) சேலை முந்தானையைப் பாவில் இழுத்துப் பிடிக்கும் கம்பி; a string used in loom.

*[பாவு+கம்பி]*

**பாவு போடு–தல்** *pāvu-pōḍu*, செ.குன்றாவி (v.t) தெரு ஓரங்களில் கடப்பாறை அல்லது மூங்கிலால் ஆன நீண்ட பாவு அமைப்பு உண்டாக்குதல்; to prepare in handloom weaving.

*[பாவு+போடு]*

**பாவையாட்டி** *pāvai-y-āṭṭi*, பெ. (n) பாவைகளை ஆட்டியபடி கதையை நடத்திச் செல்பவர்; story teller using the puppets.

*[பாவை+ஆட்டி]*

**பாழி** *pāḻi*, பெ. (n.) பாறையில் நீர் தேங்கி நிற்கும் பெரிய குழி; a large water pool in a rocky surface. (கொங்கு)

*[பாள்–பாழி]*

**பாறப்பட்டி** *pāṟappaṭṭi*, பெ. (n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[பாறை+பட்டி]*

**பாறை ஒதுக்கு** *pārai-odukku*, பெ. (n.) சிறுமலை (திண்டுக்கல்) பகுதியில் ஓவியம் அதிகம் காணப்படும் பகுதியைக் குறிக்கும் பெயர்; a rock art area near sirumalai.

*[பாறை+ஒதுக்கு]*

**பாறை உறைவிட ஓவியங்கள்** *pāṟai-uṟai-viḍa-ōviyaṅgal*, பெ. (n.) பாறைகளாலான உறைவிடங்களில் காணப்பெறுகின்ற ஓவியங்கள்; rock art in rock shelters.

*[பாறை+உறைவிட+ஓவியங்கள்]*



**பாறைச் செதுக்கு** *pārai-c-cedukku,* பெ. (n.) பழங்காலத்திய ஓவியம் வரையும் முறை; ancient rock art.

*[பாறை+செதுக்கு]*

**பானை உடை-த்தல்** *panai-udai,* செ.குன் றாவி. (v.t.) கண்ணினைத் துணியால் கட்டிக் கொண்டு கையிலுள்ள கம்பினால் பானை யினைக் குறிப்பாக அடித்து உடைத்தல்; to strike the pot blind folded.

மறுவ. உறியடித்தல்

*[பானை+உடைத்தல்]*

**பானை ஓவியம்** *pānai-ōviyam,* பெ. (n.) கைவினைக் கலைகளில் பானையில் ஓவியம் வரைதல்; art designs on pottery.

*[பானை+ஓவியம்]*

**பானைத்தாளம்** *pānai-t-tālam,* பெ. (n) ஒயிலாட்டத்தில் பயன்படுத்தப்படும் ஓர் இசைக் கருவி; a musical drum in 'oyilattam'.

*[பானை+தாளம்]*

**பாளை** *pālai,* பெ. (n.) சிற்பியின் கற்பனை வளத்தில் அமைந்த சிற்பங்களைக் குறிக்குஞ் சொல்; sculpture of sculptors imagination.

*[பாள்–பாளை]*

**பிக்கிலி** *pikkili,* பெ. (n.) தருமபுரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dharmapuri Taluk.

*[பெருங்கல்–பெக்கல்–பிக்கிலி]*

**பிச்சன்வயல்** *piccanvayal,* பெ. (n) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[பிச்சன்+வயல்]*

**பிச்சாளி** *piccāli,* பெ. (n.) கோரையைக் குத்தி இழுப்பதற்குப் பயன்படும் ஒரு துளை கொண்ட குச்சி; one holed pole.

*[பிய்த்தல்–பிச்சாளி]*

**பிச்சுவாக்கத்தி** *piccuvā-k-katti,* பெ (n) உறைக்குள் வைத்திருக்கும் ஆயுதம்; scimitar (கொங்கு).

*[பொத்துகாய்–பிச்சுவா+கத்தி]*



**பிச்சுவாங்கு** *piccu-vāngu,* பெ (n) நல்ல முறையில் செய்தல் (கொங்கு); performing perfectly.

**பிச்சை** *piccai,* பெ. (n) பாவைக் கூத்து கலைஞர்கள் வழிபடுகின்ற சிறு தெய்வம்; a deity worshipped by the folklorists.

*[பேய்ச்சி–பிச்சை]*

**பிசாகம்** *piśāgam,* பெ. (n.) ஒற்றை முத்திரை நிலை வகைகளில் ஒன்று; a dance pose.

*[பிசை–பிசாகம்]*

**பிசிண்டி** *piśindi,* பெ (n) அருப்புக்கோட்டை வட்டத்தில் உள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[பிசிர்+(ஊற்று)பிசி–பிசிண்டி]*

**பிஞ்சி** *piñji,* பெ. (n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Walajah Taluk.

*[புன்செய்–புஞ்சி–பிஞ்சி]*

**பிடாகம்** *pidāgam,* பெ. (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[பிடாகை–பிடாகம்]*

**பிடி** *piḍi,* பெ. (n.) சிற்பக்கலையோடு தொடர்புடைய கலைச்சொல்; a term used in sculpture.

*[பிடு–பிடி]*

**பிடிமண்** *piḍi-maṇ,* பெ. (n.) நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டு மரபினுள் ஒன்று; a rural custom of workship.

*[பிடி+மண்]*

**பிடிமண் கோவில்கள்** *piḍimaṇ-kōvil-kaḷ,* பெ. (n.) பழைய வழிபாட்டிடங்களில் இருந்து, ஒரு பிடி மண் எடுத்துப்போய் கட்டப்படும் கோவில்கள்; a handful of earth taken from the site of old temple and placed before the construction of a new temple.

*[பிடி+மண்+கோயில்]*

**பிடிமானம்** *piḍi-māṉam,* பெ. (n.) ஆதாரம், சொத்து; a hold; a document. (நெல்லை).

*[பிடி+மான்]*

**பிண்டி[1]** *piṇḍi,* பெ. (n.) ஒரு வகையான ஒற்றை முத்திரை நிலை; a hand pose in dance.

*[பிண்டு–பிண்டி]*

**பிண்டி[2]** *piṇḍi,* பெ. (n.) குழலின் வடிவத்தைக் குறிக்கும் சொல்; a shape of flute.

*[பிண்டு–பிண்டி]*

**பிண்டிதாங்கல்** *piṇḍitāṅgal,* பெ. (n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Walajah Taluk.

*[பூண்டி+தாங்கல்]*

**பிண்டியிலக்கணம்** *piṇḍi-ilakkaṇam,* பெ. (n.) வங்கியம் எனும் குழலுக்குரிய இலக்கணம்; structure of a flute.

*[பிண்டி+இலக்கணம்]*

**பிணக்கானம்** *piṇa-k-kāṉam,* பெ. (n.) ஒப்பாரி பாடலைக் குறிக்குஞ்சொல்; a song of lamentation.

*[பிணம் +கானம்]*

**பிணைக்கை** *piṇaikkai,* பெ. (n.) இரண்டு கைகளைச் சேர்த்து அவிநயம் செய்வது; double hand pose in dance.

*[பிணை+கை]*



**பிணையல்** *piṇaiyal,* பெ. (n.) இரட்டைக் கையினைச் சுட்டும் வேறு பெயர்; double hand pose.

*[பிணை+அல்]*

**பித்தர் நடம்** *pittar-naḍam,* பெ. (n.) ஒரு வகையான ஆடல் இயக்கம்; a type of dance.

*[பித்தர்+நடம்]*

**பித்தளைச்சரிகை** *pittaḷai-c-carigai,* பெ. (n.) பித்தளையால் ஆன ஒள்ளிழை ; a glittering lining made up of metal.

*[பித்தளை+சரிகை]*

**பித்தளைப் பண்ணை** *pittaḷai-p-paṇṇai,* பெ. (n) அச்சில் பிணைத்த நூல் மூங்கிலால் ஆன பண்ணையில் சிறு துளைகள் வழியாக வரும் குறுக்கே போகும் ஊடை நூலை அடித்து நெருக்கமாக்கச் செய்யும் பண்ணை; a device in handloom.

*[பித்தளை+பண்ணை]*

**பிப்பு** *pippu,* பெ. (n.) உடலில் அரிப்பு ஏற்படுத்தும் தோல் நோய்; itching. (கொங்கு)

*[பிய்ப்பு > பிப்பு]*

**பியந்தைக் காந்தாரம்** *piyandai-k-kāndāram,* பெ. (n.) பகற்பொழுதுக்குரிய ஒரு பண் வகை; a day time melody song.

*[பியந்தை+காந்தாரம்]*

**பிரந்தனி** *pirandaṉi,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[பெருந்தளி–பிரந்தளி]*

**பிரமலைக்கள்ளர்** *piramalai-k-kaḷḷar,* பெ. (n.) "பச்சைக் கோலம்" எனும் கைவினைக் கலையின் உரிமையாளர்; people who are skilled in fine art 'pachai kolam'.

*[பெருமான்–பிரான்மலை+கள்ளர்]*

**பிரமனூர்** *piramaṉūr,* பெ. (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[பெருமன்–பிரமன்+ஊர்]*

**பிரலைகள்** *piralai,* பெ. (n.) மகாநாசிகள் சிற்பத்தின் வேறு பெயர்; a different name of maganasi sculpture.

*[பரல்–பரலை–பிரலைகள்]*

**பிரளகட்டை** *piraḷa-k-kaṭṭai,* பெ (n) ஏற்றக் காலில் உள்ள சிறு கட்டை; a part of piccotah.

*[புரள்+கட்டை]*

**பிரளகழி** *piraḷa-kaḻi,* பெ. (n.) புரள்கட்டை பார்க்க; see pural kattai.

*[புரள்+கழி]*

**பிராக்குடி** *pirākkuḍi,* பெ. (n.) மதுரை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Madurai Taluk.

*[பெயரா–பேரா+குடி–பிராக்குடி]*

**பிராந்தகம்** *pirāndagam,* பெ. (n.) நாமக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Namakkal Taluk.

*[பராந்தகன் – பிராந்தகன் – பிராந்தகம்]*

**பிராந்தன்** *pirāndaṉ,* பெ. (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[பிராந்தகர் – பிராந்தன்]*

**பிரிக்குச்சி** *piri-k-kucci,* பெ. (n.) மோட்டு வளையையும் பக்க வளையையும் கொண்டு இறுக்கும் குச்சி; a stick used by fisherman.

*[பிரி+குச்சி]*

**பிரிதல்** *piridal,* பெ. (n.) கொம்பு விளையாட்டில் நிகழ்த்தப்பெறும் ஒரு பிரிவு; a type of 'kombu' play.

*[பிரி–பிரிதல்]*

**பிரிதி** *piridi,* பெ. (n.) திருச்செங்கோடு வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengode Taluk.

*[பரிதி–பிரிதி]*

**பிரிப்பாண்டி** *piri-p-pāṇḍi,* பெ. (n.) இயல்பான பல்லாங்குழி ஆட்டம்; an indoor game.

*[பிரிப்பு+பாண்டி]*

**பிருதூர்** *pirudūr,* பெ. (n.) வந்தவாசி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Wandiwasi Taluk.

*[பிருது+ஊர்]*

**பில்பருத்தி** *pilparutti,* பெ. (n.) அரூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Arūr Taluk.

*[புல்+பருத்தம்]*

**பில்லக்கட்டை** *pilla-k-kaṭṭai,* பெ. (n.) சுவரில் துளையிட்டு அடிக்கும் கட்டை; a wooden piece driven in a wall.

*[வில்லை+கட்டை]*

**பில்லத்தி** *pillatti,* பெ. (n.) சிவகங்கை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[வில்வம்+அத்தி]*

**பில்லவாரி** *pillavāri*, பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[வல்லம்+வாரி]*

**பில்லி** *pilli*, பெ. (n.) கொம்புமுறி விளையாட்டில் பயன்படுத்தப்படும் குறுந்தடி; a short pole used in kombu muri game. (6:111).

*[புல்லி–பில்லி]*

**பில்லிந்தடி** *pillindaḍi*, பெ. (n.) சிறு குச்சியை வைத்து விளையாடும் விளையாட்டு; a children game. (கொங்கு)

*[புல்லி–பில்லி+தடி]*

**பிலாத்து** *pilāttu*, பெ. (n.) திண்டுக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dindugal Taluk.

*[புல்லாற்றூர் – புல்லாத்து– பிலாத்து]*

**பிலாவிளை** *pilāviḷai*, பெ. (n.) அகத்தீச்சுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agestheeswaram Taluk.

*[பலா+விளை]*

**பிலிகுத்தி** *pilikutti*, பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[புலி+குத்தி]*

**பிலிச்சி** *pilicci*, பெ. (n.) கோயமுத்தூர் மாவட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Coimbatore Taluk.

*[புலி–புலித்தி]*

**பிள்ளைக்குழு** *piḷḷai-k-kuḻu*, பெ. (n.) பல்லாங்குழியில் ஐந்து கற்களுக்கும் குறைவாகப் பூட்டிய குழியின் பெயர்; name of a dip hole in the pallankuli board.

*[பிள்ளை+குழு]*

**பிள்ளைப்பாண்டி** *piḷḷai-p-pāṇḍi*, பெ. (n.) ஒரு வகைப் பாண்டியாட்டம் (குமரி); a type of pandi play.

*[பிள்ளை+பாண்டி]*

**பிளந்த இடம்** *piḷanda-iḍam*, பெ. (n.) தாயவிளையாட்டில் துவையும் மலையிலிருந்து ஐந்து கட்டங்கள் தள்ளி இன்னொரு மலையிருக்கும் இடம்; the term used in a rural chess game.

*[பிளந்த+இடம்]*

**பிளார்** *piḷār*, பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[பிள்ளை+ஊர்]*

**பிறந்த கதை** *piṟanda-kadai*, பெ. (n.) கதையாடலின் ஒரு வகை; a story type.

*[பிறந்த+கதை]*

**பிறழ்ச்சி இராகம்** *piṟaḻcci-irāgam*, பெ. (n.) நேர்வரிசையிற் செல்லாமல், புரண்டு செல்லும் பண்; a side tracking musical note.

*[பிற–பிறழ்ச்சி+இராகம்]*

**பின்குத்து** *piṉkuttu*, பெ. (n) குத்து என்ற இயக்கத் தொகுதியின் ஒரு வகை; a term used in wrestling.

*[பின்+குத்து]*

**பின்சன்னம்** *piṉsaṉṉam*, பெ. (n.) தேர் சக்கரத்திற்குப் போடும் நீண்ட சன்னக் கட்டை; a hand piece of wooden log used in temple car festival.

*[பின்+சன்னம்]*

**பின்னப்பூ போடு–தல்** *piṉṉa-p-pu-pōḍu-*, செ.கு.வி. (v.i.) இறந்தவர்களின் மகள் வயிற்றுப் சீர் பேரனால் நடத்துதல்; to perform a death ceremony by daughters son. (கொங்கு)

*[பின்னை–பூ+போடு]*

**பின்னல் கோலாட்டம்** *piṉṉal-kōlāṭṭam*, பெ. (n.) கோலாட்ட வகைகளில் ஒன்று; a type in 'kolattam' play.

*[பின்னல்+கோலாட்டம்]*

**பின்னிறக்கம்** *pin-n-irakkam,* பெ. (n.) ஒயி லாட்டத்தில், மூன்று குதிகள் பின்னோக்கி அமைவதைக் கொண்ட ஓர் இயக்கத் தொகுதி; backward movement in 'oyilattam' play.

*[பின்–இறக்கம்]*

**பின்னோக்குத் தொடர் ஓட்டம்** *pinnōkkut-todar-ōttam,* பெ (n) பின்னோக்கி ஓடுதல்; backward running relay.

*[பின்+நோக்கு+தொடர்+ஓட்டம்]*

**பின்பாட்டு** *pin-pāttu,* பெ. (n.) சிற்றூர் கலை களில் இசைக்கருவியாளர், பின்பாட்டுக் குழுவினர் பாடும் பாட்டு; play back in folk lore.

*[பின்+பாட்டு]*

**பினாயூர்** *pināyūr,* பெ. (n.) காஞ்சீபுரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[பிணை–பனா+ஊர்]*

**பீத்தக்கூடை** *pītta-k-kūdai,* பெ. (n.) பயன் படுத்த முடியாத கூடை; wornout basket. (கொங்கு)

*[பீத்தல்+கூடை]*

**பீத்தத்துணி** *pītta-t-tuni,* பெ. (n.) நைந்துபோன துணி; worn out cloth. (கொங்கு).

*[பிய்த்தல்–பீத்தல்+துணி]*

**பீத்தை** *pīttai,* பெ. (n.) கெட்டுப்போன பொருள்; waste material. (கொங்கு).

*[பிய்த்து–பீத்தை]*

**பீத்தைக்குழி** *pīttai-k-kuli,* பெ. (n.) காய் நிரப்ப இயலாத வெற்றுக்குழி; empty pit in 'pallankuli' board.

**மறுவ. பொய்த்தல் – பொத்தல்**

*[பீத்தை+குழி]*

**பீக்காடு** *pī-k-kādu,* பெ (n) மலம் கழிக்கக்கூடிய இடம்; a place of open lavatory. (நெல்லை)

*[பீ+காடு]*

**பீளமேடு** *pīlamēdu,* பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichi Taluk.

*[பூளை–பீளை+மேடு]*

**பீர்க்கடவு** *pīrkkadavu,* பெ. (n.) கோபிப் பாளையம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Gopipalayam Taluk.

*[பீர்க்கன்+கடவு]*

**புத்தளி** *puttali,* பெ (n) காஞ்சீபுரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Kanchepuram Taluk.

*[புது+தளி]*

**புல்லேரி** *pullēri,* பெ. (n.) செங்கற்பட்டு வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Chengalpet Taluk.

*[புல்+ஏரி]*

**புனவாசல்** *punavāsal,* பெ. (n.) மன்னார்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mannargudi Taluk.

*[புன்னை+(வயல்)வாசல்]*

**புக்கிரி** *pukkiri,* பெ (n) கோரையை இரண்டாகக் கிழிக்கும் கருவி; a cleaver.

*[பிய்த்தல்–பிக்கல்–புக்கிரி]*

**புகடி** *pugadi,* பெ. (n.) சிற்ப நூல்கள் கூறும் ஒரு காதணி; an ear ornament of women.

*[புகு–புகடி]*

**புகல்பண்** *pugal-pan,* பெ. (n.) பண் வகையினுள் ஒன்று; a melody type.

*[புகல்+பண்]*

**புங்கத்துறை** *pungatturai,* பெ. (n.) தாராபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dharapuram Taluk.

*[புங்கன்+துறை]*

**புங்கமடுவு** *pungamaduvu,* பெ. (n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[புங்கன்+மடுவு]*

**புங்கவாடி** *puṅgavāḍi,* பெ (n) ஆத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Attur Taluk.

*[புங்கன்+வாடி]*

**புட்டா** *puṭṭā* , பெ. (n.) சேலையில் உள்ள புள்ளிகள்; dots in saree design. (கொங்கு)

*[பொட்டு–புட்டா]*

**புடகம்** *puḍagam,* பெ. (n.) காளிகாபுராணத்தில் கூறப்பெறும் ஒரு சிற்ப முத்திரை; a pose in dance.

*[புட்டகம்–புடகம்]*

**புடவைக்காரர்** *puḍavai-k-kārar,* பெ. (n.) அருமைக்காரர்க்கு வழங்கும் மற்றொரு பெயர்; a name for Arumai-karan.

*[புடைவை+காரர்]*

**புடைப்புச்சிற்பம்** *puḍaippu-c-ciṟpam,* பெ. (n.) பாறையில் பதித்ததுபோல் ஒரு பக்கத் தோற்றத்தை மட்டும் காட்டும் சிற்பம்; embossed sculptured.

*[புடைப்பு+சிற்பம்]*

**புதையல்** *pudaiyal,* பெ. (n.) 1. ஓர் ஆட்ட வகை. type of a game (நெ.வ.). 2. இயல்பான பாண்டி விளையாட்டு; a 'pandy' game (தஞ்சை)

*[புதை–புதையல்]*

வெற்றிக்காய் ஒரு குழியில் நிறைய கிடைத்தால் புதையல் கிடைத்தது என்பது வழக்கம்;

**புத்தளம்** *puttaḷam,* பெ. (n.) அகத்தீச்சுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[புற்று+தளம்]*

**புத்துருத்தி** *putturutti,* பெ. (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[புற்று+துருத்தி]*

**புதுப்பை** *puduppai,* பெ. (n.) தாராபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dharapuram Taluk.

*[புது+பாயல்]*

**புதையல் வேட்டை** *pudaiyal-vēṭṭai,* பெ (n) புதையல் இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்தல்; treasure hunt.

*[புதையல்+வேட்டை]*

**புமுகம்** *pumugam,* பெ. (n.) புல்லாங்குழலில் இசைப்பவரின் வாயருகே இருக்கும் துளை; air hold at the end of flute.

*[புகு+முகம்]*

**புயகீர்த்தி** *puya-kīrtti,* பெ. (n.) தெருக் கூத்தாடும் ஆண்கள் அணியும் அணிகலன்; an ornament used by street dramatists.

*[புய்யம்+கீர்த்தி]*

**புரையெடு–த்தல்** *puraiedu-,* 4 செ.குன்றாவி (v.t.) பாவிலுள்ள குறைகளை நீக்குதல், ஒட்டியிருக்கும் இழைகளை நீக்குதல்; to remove the defects in loom.

*[புரை+எடுத்தல்]*

**புரைஇழை** *purai-iḻai,* பெ. (n.) மாறி மாறி இருக்கும் இழை; alternate thread.

*[புரை+இழை]*

**புரகால்** *puragal,* பெ. (n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Maduran-tagam Taluk.

*[புறம்+கால்]*

**புரங்கணி** *puraṅgaṇi,* பெ. (n.) கடலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Cuddalore Taluk.

*[புறம்–புறங்கு+அணி]*

**புரண்டை** *puraṇḍai,* பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[பிரண்டை–புரண்டை]*

**புரட்டு** *puraṭṭu,* பெ. (n.) கேரளாவின் நாட்டுப்புற நடன நாடகம்; a folk dance of Kerala.

*[புரள்–பாட்டு]*

**புரலாட்டு** *puralāṭṭu,* பெ. (n.) பாவில் சில இழைகளை விட்டு நாடா ஊடுருவிச் செல்லும் பகுதி; the intermediate unwoven part in weaving.

*[புரள்+ஆட்டு]*

**புரவி எடுப்பு** *puravi-eḍuppu,* பெ. (n.) ஐயனார் கோயிலில் நிகழும் விழாச் சடங்கு; a ceremony in Ayyanar temple.

*[புரவி (குதிரை)+எடுப்பு]*

**புரவியாட்டம்** *puravi-y-āṭṭam,* பெ. (n.) பொய்க்கால் குதிரையாட்டம்; a folk dance of dummy horse.

*[புரவி+ஆட்டம்]*



**புரளல்** *puraḷal,* பெ. (n.) படுத்துப் புரளுவதைப் போல, நின்று கொண்டே புரளும் உடலியக்கம்; a rotating body movement in dance that too in standing pose.

*[புரள்+அல்]*

**புரிநரம்பு** *purinarambu,* பெ. (n.) யாழிலுள்ள நரம்பு; a string in harp.

*[புரி+நரம்பு]*

**புருடு** *puruḍu,* பெ. (n.) 1. புடைத்துத் தனியே வெளியில் தெரியும் கட்டி. a protrubed eruption 2. மாவு போன்ற அல்லது குழைவு உணவுப் பொருள்களில் கட்டிப்படும் திரள்; a ball like objects in food stuff.

*[புரு–புருடு]*

**புல்லந்தை** *pullandai,* பெ. (n.) இராமநாதபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ramanathapuram Taluk.

*[புல்லன்+அந்தை]*

**புல்லமடை** *pullamaḍai,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[புல்–புல்லம்+மடை]*

**புல்லாங்குழல்** *pullāṅ-kuḻal* பெ. (n.) ஒன்றேகால் அடியில் ஏழு துளைகளைக் கொண்டிருக்கும் மூங்கிலால் ஆன இசைக் கருவி; flute.

*[புல்+அம்+குழல்]*

**புல்லுதம்** *pulludam,* பெ. (n.) பன்னிரண்டு எண்ணிக்கை கொண்டது தாளக் குறியீடு; a time measure of steps.

*[புல்லு–புல்லுதம்]*

**புல்லுமாரி** *pullumāri,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[புல்–புல்லு+மாரி]*

**புலம்பல்** *pulambal,* பெ. (n.) ஒப்பாரி; lamenting song of death.

*[புலம்பு+அல்]*

**புலிக்கொரடு** *pulikkoraḍu,* பெ. (n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurandagam Taluk.

*[புலி+கரடு]*

**புலிதம்** *pulidam,* பெ. (n.) தாளத்தின் உறுப்புகளில் ஒரு வகை. **புல்லுதம் பார்க்க;** see pulludam.

*[புல்லுதம்+புலிதம்]*

**புலியூரான்** *puliyūran,* பெ. (n.) அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[புலி+ஊரான்]*

**புலிவலம்** *pulivalam,* பெ. (n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arakkonam Taluk.

*[புலி+வல்லம்]*

**புலிவந்தி** *pulivandi,* பெ. (n.) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Senji Taluk.

*[புலி+(வந்து) வந்தி]*

**புலிவாநந்தல்** *pulivānandal,* பெ. (n.) போளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Polur Taluk.

*[புலி+வாய்+நந்தல்]*

**புலிவாய்** *pulivāy,* பெ. (n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wandavasi Taluk.

*[புலி+வாய்]*

**புலிவேடம்** *puli-vēḍam,* பெ. (n.) விழாக் காலங்களில் புலி வேடம் அணிந்து விளையாடும் ஆட்டம்; tiger dance.

*[புலி+வேடம்]*

**புலையூர்** *pulaiyūr,* பெ. (n) திண்டிவனம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[பூளை – புலை+ஊர்]*

**புழங்கும் பொருள்** *pulaṅgum-poruḷ,* பெ. (n.) வீட்டுப் பொருள்களைக் குறிக்கும் பயன்பாட்டுச் சொல்; a word used to denote household materials.

*[புழங்கும்+பொருள்கள்]*

**புழுதண்ணி** *pulu-taṇṇi,* பெ. (n.) நீச்சத் தண்ணீர் (கொங்கு); rice water, usually kept overnight.

*[புளி – புழு+தண்ணீர் ]*

**புழுதிக்காடு** *puludi-k-kāḍu,* பெ (n) வேளாண்மை செய்யாமல் இருக்கும் நிலம்; uncultivated waste land.

*[புகுதி+காடு]*

**புழுதியுழவு** *puludi-y-uḷavu,* பெ. (n.) நீர் பாய்ச்சாது செய்யும் உழவு; dry land cultivation.

*[புழுதி+உழவு]*

**புழை** *pulai,* பெ. (n.) வங்கியத்தில் உள்ள துளை; hole in the flute.

*[புலி–புள்–புழை]*

**புள்ளத் தடுக்கு** *pulla-t-taḍukku,* பெ. (n.) சிறிய அளவிலான குழந்தைகள் பாய்; children's mat.

*[பிள்ளை+தடுக்கு]*

**புள்ளி** *pulli,* பெ. (n.) கட்ட விளையாட்டில் காய்களை வைப்பதற்குள்ள இடம்; a place for keeping play materials.

*[புல்+புள்+புள்ளி]*

**புளிக்கல்** *puḷikkal,* பெ. (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[புள்ளி+கல்]*

**புள்ளிக்காரன்** *pulli-k-kāran,* பெ. (n.) ஆண் குறியைக் குறிக்கும் மறைமுகமான குழூஉக் குறிச்சொல்; a secret term used among a group of people.

மறுவ. புள்ளிராசா

*[புள்ளி+காரன்]*

**புளிக்கோல்** *puḷi-k-kōl* பெ (n) இழைகளைப் பிரித்துவிடவும் இழைகள் அறுந்தால் கண்டு பிடிக்கவும் உதவும் கோல். seperating stick.

*[புள்ளி – புளி+கோல்]*

**புளிச்சக்கரம்** *puḷi-c-cakkaram,* பெ. (n.) வடியை மேலும் கீழும் இறக்கப் பயன்படும் சக்கரம்; a wheel in handloom.

*[புளிச்+சக்கரம்]*

**புளிச்சாறு** *puḷi-c-cāṟu,* பெ. (n.) புளிக்குழம்பு; gravy like juice.

*[புளி+சாறு]*

**புளியங்கடை** *puḷiyaṅkaḍai,* பெ. (n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[புளி+அன்+கடை]*

**புளியமுத்து** *puḷiya-muttu* பெ. (n.) பல்லாங்குழி ஆடும் கருவிகளில் ஒன்றான புளியங் கொட்டை; tamarind seed used in 'pallankuli' play.

*[புளியன்+முத்து]*

**புளுச்சான்** *puluccān*, பெ. (n.) நெல் வகை; a variety of paddy. (கொங்கு).

*[புள்–புளுச்சான்]*

**புளிச்சைநார்** *puliccai-nār* பெ (n) கயிறு செய்யப் பயன்படும் நார்; a fibre from puliccai plant.

*[புளிச்சை+நார்]*

**புற்றுமண்** *purrumaṇ* பெ. (n.) செப்புப் படிமங்கள் செய்ய உதவும் கருவி – கரு; mould, crucible used to make icons.

*[புற்று+மண்]*

**புறநீர்மை** *pura-nīrmai*, பெ. (n.) 1. பகற் பொழுதுக்குரிய பண் வகைகளிற் ஒன்று; a day time melody song. 2. விடியற்காலத்தில் பாடும் பள்ளியெழுச்சிப்பாடல்; melody song sung at dawn.

**மறுவ.** பூபாளம், துயிலெடைநிலை, திருப்பள்ளி எழுச்சி

*[புறம்+நீர்மை]*

**புறாக்கை** *purākkai*, பெ. (n.) இரண்டு கை களையும் புறா வடிவில் இணைப்பது; a dance pose of hands.

*[புறா+கை]*



**புன்னமை** *punnamai*, பெ. (n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurandagam Taluk.

*[புன்னை+மொய்]*

**புன்னை** *punnai*, பெ. (n.) வந்தவாசி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in vandiwasi Taluk.

*[புன்கு–புன்னை]*

**புன்னையடி** *punnayadi*, பெ. (n.) அகத்தீச் சுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[புன்னை+அடி]*

**புனல் வைத்த கொம்பு** *punalvaittakombu*, பெ. (n.) பண்டைய இசைக்கருவியினுள் ஒன்று; an ancient musical instrument. (12:2).

*[புனல்+வைத்த+கொம்பு]*

**புனவாசல்** *punavāsal*, பெ. (n.) ஆத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Attur Taluk.

*[புனம்+வாசல்]*

**புனுகுச் சட்டப்பூச்சு** *punuguccattappūccu*, பெ. (n.) சுதைச் சிற்பங்களுக்குச் செய்யப்படுகின்ற பூச்சு முறை; type of painting.

*[புனுகு+சட்டம்+பூச்சு]*

**புனுச்சல்** *punuccal*, பெ. (n.) மாடுகளுக்கு வரும் கோமாரி நோய்; a disease of cattle.

*[புன்–புனுச்சல்]*

**பூக்கட்டிப் போட்டுப் பார்த்தல்** *pūkattipōttu-pārttal*, பெ. (n.) கொங்கு வேளாளரின் திருமணச் சடங்கு; marriage ceremony of Kongu Vellalar.

*[பூ+கட்டி+போட்டு+பார்]*

**பூக்குதிரை** *pūkkudirai*, பெ. (n.) பூவின் பெயரினைச் சொல்லியும் குதிரை போல் குனிந்தும் விளையாடும் விளையாட்டு வகை; a childrens game. (த.நா.வி.).

*[பூ+குதிரை]*

**பூக்குழி** *pūk-kuli*, பெ. (n.) 1. இறைப்பற்றின் பொருட்டு நீண்ட நேரம் அடக்கமாக இருக்கும் குழி; pit used self buried to fulfill a vow. 2. தீக்குழி; a fire pit.

*[பூ+குழி]*

**பூக்குழி இறங்கு-தல்** *pūkkuḷi-iṟaṅgu-,* செ.கு.வி. (v.t.) தீக்குழியில் இறங்கி நடத்தல்; to walk on a fire pit.

*[பூ+குழி+இறங்கு]*

**பூக்கூடை** *pūk-kūḍai,* பெ. (n.) ஒன்றரையடி அகலத்தில் அடியிலும், மூன்றடி நீளத்தில் மேலே விரிந்தும் செய்யப்பட்டு பூப்பறிக்க உதவும் கூடை; flower basket.

*[பூ+கூடை]*

**பூங்கரகம்** *pūṉ-karagam,* பெ. (n.) கரக வகை யினுள் ஒன்று; a folk dance of karagam.

*[பூ+கரகம்]*

**பூங்குணம்** *pūṅguṇam,* பெ. (n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurandagam Taluk.

*[பூ+குன்றம்]*

**பூங்கோடு** *pūṅkōḍu,* பெ. (n.) வாலாசா வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Walajah Taluk.

*[பூ+கோடு (ஏரி) ]*

**பூச்சட்டி** *pū-c-caṭṭi,* பெ. (n.) தோட்டங்களில் தொங்க விடப்படும் சட்டி; flower pot.

*[பூ+சட்டி]*

**பூச்சிக்கூடு** *pūcci-k-kūḍu,* பெ. (n.) பல்லாங் குழி ஆடப் பயன்படுத்தும் சோழி வகை; cowrie used for playing 'pallankuli'.

*[பூச்சி+கூடு]*

**பூச்சி முறை** *pūcci-muṟai,* பெ. (n.) விளை யாட்டில் தோற்றவரை அறியும் வகை; method of determining the loser.

*[பூச்சி+முறை]*

நிலாக்காலத்து விளையாட்டில் கலந்து கொள்பவர் அனைவரும் வரிசையாக நிற்க, தலைவன் உருட்டிவிட்ட கல் வரிசையில் உள்ளவர்களில் தோற்றவன் நிழலில் வந்து நின்றால் பட்டவரா (தோற்றவரா)கக் கருதப்படுவார்.

**பூச்சியம்மன் கதை** *pūcci-y-ammaṉ-kadai,* பெ. (n.) வில்லுப்பாடல் வகைகளில் ஒன்று; name of a bowsong.

*[பூச்சி+அம்மன்+கதை]*

**பூச்சிவிளாகம்** *pūcciviḷāgam,* பெ (n) அகத்தீச்சுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[பூச்சி+வளாகம்]*

**பூச்சிவிளையாட்டு** *pūccviḷayāṭṭu,* பெ.(n.) தோற்றவர் நிலவொளியில் நிற்க மற்றவர் நிலவொளிபடாத இருண்ட பகுதியில் நிற்கும் நிலாக்காலத்து விளையாட்டு; children's game.

*[பூச்சி+விளையாட்டு]*

**பூச்சொரி-தல்** *pūc-cori-*செ.குன்றாவி (v.t.) பூத்தூவுதல்; to throw flowers lightly.

*[பூ+சொரி]*

**பூசிவாக்கம்** *pūśi-vākkam,* பெ. (n.) காஞ்சீ புரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[பூச்சை+வாக்கம்]*

**பூசைத்தாளம்** *pūsai-t-tāḷam,* பெ. (n.) பறை வாசிப்பின் வகையினுள் ஒன்று; a type of drum beat.

*[பூசை+தாளம்]*

**பூஞ்சுத்தி** *pūñjutti,* பெ. (n.) மேலூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Melur Taluk.

*[பூ+சுற்று]*

**பூட்டன்** *pūṭṭaṉ,* பெ. (n.) மாட்டுக்குப் பூட்டும் தும்பு; halter, tethering rope.

*[பூட்டு+அன்]*

**பூட்டி** *pūṭṭi,* பெ (n) நெல்லுக்காயினை அடுக்குதல்; a type of game.

*[பூ>பூட்டி]*

**பூட்டு-தல்**[1] *pūṭṭu*, செ.குன்றாவி. (v.t.) அடுக்கு முறையில் அடுக்குதல்; to set one above another.

*[பூண்-பூட்டு]*

**பூட்டு-தல்**[2] *pūṭṭu*, செ.குன்றாவி (v.t.) பல்லாங்குழியில் மீண்டும் காய்களை நிரப்புதல்; to fill the pit in pallankuli game.

*[பூண்-பூட்டு]*

**பூட்டுத்தலைக்கட்டை** *pūṭṭu-t-talaikkaṭṭai*, பெ. (n.) மீதமுள்ள பட்டு இழையைச் சுற்றி எடுக்கப் பயன்படுத்தப்படும் குறுக்குச் சட்டங்களைக் கொண்ட குறுக்குவாக்கில் சுற்றும் இராட்டின வகை; a handloom wheel used in weaving.

*[பூட்டு+தலை+கட்டை]*

**பூட்டு** *pūṭṭu*, பெ. (n.) 5 வாழை இலை கொண்ட கட்டு; a bundle of five plantain leaves.

*[பூண்+பூட்டு]*

**பூட்டை** *pūṭṭai*, பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichi Taluk.

*[பூள்-பூளை-பூட்டை]*

**பூணாரி** *pūṇāri*, பெ. (n.) மதுரை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurai Taluk.

*[பூணன்+ஏரி]*

**பூண் அடி-த்தல்** *pūṇaḍi-*, செ.குன்றாவி (v.t.) உலக்கையின் இரு பக்கங்களிலும் பூண் போடுதல்; to fix the brim ring of pestle.

*[பூண்+அடி]*

**பூத்தொட்டி** *pūttoṭṭi*, பெ. (n.) பூச்செடிகளை வளர்க்க உதவும் மண் தொட்டி; flower pot.

*[பூ+தொட்டி]*

**பூத நடனம்** *pūda-naḍaṇam*, பெ. (n.) பூதம் போன்ற முகமூடிகளை அணிந்து ஆடும் ஆட்டம்; devil dance of youngsters.

*[பூதம்+நடனம்]*

**பூதப்பார்** *pūda-p-pār*, பெ. (n.) சிற்ப நூல் நெறிப்படி தேரின் அடிப்பாகத்தில் சுமையைத் தாங்கக்கூடிய குறுக்குக் கட்டை; a strong wooden bar fixed at the bottom of the temple car.

*[பூதம் (பெரியது)+பார்]*

**பூதம்பாடி** *pūdampāḍi*, பெ. (n.) கடலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Cuddalore Taluk.

*[பூதன்+பாடி]*

**பூந்தாண்டை** *pūntāṇḍai*, பெ. (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[பூ+தண்டலை]*

**பூப்படல்** *pū-p-pāḍal*, பெ. (n.) பாடல் வழியாக நடைபெறும் விளையாட்டு; a play by songs.

*[பூ+பாடல்]*

**பூம்பிடாகை** *pūmpiḍāgai*, பெ. (n.) அருப்புக்கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[பூ+படாகை]*

**பூம்பூ புளியம்பூ** *pūmpū-puḷiyampū*, பெ. (n.) சிறுவர் விளையாட்டு; a children's game.

*[பூம்+பூ+புளியம்பூ]*.

பாடலில் இடம் பெறும் சொல்லால் பெற்ற பெயர்.

**பூமலக்குண்டு** *pūmalakkuṇḍu*, பெ. (n.) பெரியகுளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Periyakulam Taluk.

*[பூமாலை+குண்டம் (குண்டு)]*

**பூமாடு** *pūmāḍu*, பெ. (n.) பண்டைய இசைக் கருவியினுள் ஒன்று; musical instrument.

*[பூ+மாடு]*

**பூமாடு வாத்தியம்** *pūmāḍu-vāttiyam*, பெ (n) இசைக்கருவி வகையினுள் ஒன்று; a musical instrument. **(1:167).**

*[பூ+மாடு+வாத்தியம்]*

**பூரத்தான்குடி** *pūrattāṉkuḍi,* பெ. (n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[பூரம்+அத்து+ஆன்+குடி]*

**பூரம்** *pūram,* பெ. (n.) செய்நஞ்சு (நவபாடாணம்) செய்ய உதவும் மூலப் பொருள்களில் ஒன்று; a ingredient to prepare 'nava pasana'.

**பூராஞ்சுளி** *pūrāñ-cuḷi,* பெ. (n.) மாட்டின் முதுகில் உள்ள சுழி; a omen sign on the back of the cow.

*[பூரான்+சுழி]*

**பூலங் கொண்டாள் அம்மன் கதை** *pūlaṅ koṇḍāḷ ammaṉkadai,* பெ. (n.) ஒரு வகை யான கதைப்பாடல்; a folk song.

*[பூலம்+கொண்டாள்+அம்மன்+கதை]*

**பூலாங்கால்** *pūlāṅkāl,* பெ. (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[பூலான்+கால்]*

**பூலாங்குச்சி** *pūlāṅ-kucci,* பெ. (n.) தட்டு பின்னப் பயன்படும் குச்சி; sticks useful to make basket.

*[பூலாம்+குச்சி]*

**பூலவாக்கு** *pūla-vākku,* பெ. (n.) ஒருவருக்குத் தெரியாத பிறரின் கமுக்கச் (ரகசியம்) செய்திகள் (கொங்கு); utmost secrets.

*[பூலம்+வாக்கு]*

**பூவங்காபறம்பு** *pūvaṅgāpaṟambu,* பெ. (n.) கல்குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk.

*[பூம்+காய்+பறம்பு]*

**பூவந்தி** *pūvandi,* பெ. (n.) 1. இராமநாதபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ramanathapuram Taluk. 2. சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[பூ+அந்தி]*

**பூவாமி** *pūvāmi,* பெ. (n.) பொன்னேரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ponneri Taluk.

*[பூ+(வாவி)வாமி]*

**பூவாலை** *pūvālai,* பெ. (n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[பூவல்–பூவாலை]*

**பூவிழந்தூர்** *pūviḻandūr,* பெ. (n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[பூவிழு+அந்தூர்]*

**பூவோடு** *pūvōḍu,* பெ. (n.) கோயில் திருவிழாவில் எடுக்கும் தீச்சட்டி; fire pot.

*[பூ+ஓடு]*



**பூனாச்சி** *pūnācci,* பெ. (n.) பவானி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Bavani Taluk.

*[பூ+நொச்சி]*

**பூனையான்குண்டு** *pūnaiyāṉkuṇḍu,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[பூனையான்+குண்டு]*

**பூனையும் எலியும்** *pūnaiyum eliyum,* பெ.(n.) பூனை எலியை விரட்டுவது போன்ற விளையாட்டு; a children's game.

*[பூனை+உம்+எலி+உம்]*

**பெடாகம்** *peḍāgam,* பெ. (n.) விழுப்புரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilupuram Taluk.

*[படாகை-படாகம்]*

**பெண்கல்விக்கும்மிப்பாட்டு** *peṇ-kalvi-kummippāttu,* பெ. (n.) பெண் கல்வியின் சிறப்புகளை இயம்பும் கும்மிப்பாடல்; a kummi play pressing the need for women's education.

*[பெண்+கல்வி+கும்மி+பாட்டு]*

**பெத்தூர்** *pettūr,* பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruppattur Taluk.

*[புத்தூர்-பெத்தூர்]*

**பெரண்டவயல்** *peraṇḍavayal,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[பிரண்டை+வயல்]*

**பெரப்பஞ்சோலை** *perappañjōlai,* பெ. (n.) இராசிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Rasipuram Taluk.

*[பிரம்பு-பிரப்பம்+சோலை]*

**பெரப்படி** *perappaḍi,* பெ. (n.) கும்பகோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kumbakonam Taluk.

*[புறம்பு+அடி]*

**பெரம்பை** *perambai,* பெ. (n.) விழுப்புரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilupuram Taluk.

*[புறம்பு-புறம்பை]*

**பெரியகரம்** *periyagaram,* பெ. (n.) போளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Polur Taluk.

*[பெரிய+அகரம்]*

**பெரியகளந்தை** *periakaḷandai,* பெ. (n.) பொள்ளாச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Pollachi Taluk.

*[பெரிய+களந்தை]*

**பெரியநெகமம்** *periyanegamam,* பெ. (n.) பொள்ளாச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Pollachi Taluk.

*[பெரிய+(நியமம்)நிகமம்]*

**பெரியபோது** *periyapōdu,* பெ. (n.) பொள்ளாச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Pollachi Taluk.

*[பெரிய+போது]*

**பெருங்கால்மேடு** *peruṅgālmēḍu,* பெ. (n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Walajah Taluk.

*[பெரும்+கால்+மேடு]*

**பெருந்துரவு** *perunturavu,* பெ. (n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurandagam Taluk.

*[பெரும்+துரவு]*

**பெருமாண்டி** *perumāṇḍi,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[பெரும்+ஆண்டி]*

**பெருமாள்மாடு வாத்தியம்** *perumāḷmāḍu-vāttiyam,* பெ. (n.) சேவையாட்டத்திற்குத் துணை செய்யும் தேவதுந்துமியின் வேறு பெயர்; name of a music instrument.

*[பெருமாள்+மாடு+வாத்தியம்]*

**பெருமாள் வாய்ச்சியம்** *perumāḷ vāycciyam,* பெ. (n.) ஒரு பக்கம் அடித்தும் மறுபக்கம் தடவியும் இசைக்கப்படும் ஓர் இசைக்கருவி; a musical instrument.

*[பெருமாள்+வாச்சியம்]*

**பெருமுகை** *perumugai,* பெ. (n.) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk.

*[பெரு+முகை(முக்கல்-முக்கு-முகை]*

**பெருமுருக்கு** *perumuruku,* பெ. (n.) பாயின் ஓரம் கட்டும் முருக்கு; a tight knit on the sides of mat.

*[பெரும் + முருக்கு]*

**பெருமூங்கில்** *perumūṅgil*, பெ. (n.) முற்றிய மூங்கில்; a fully grown bamboo.

*[பெரு+மூங்கில்]*

**பெலாந்துரை** *pelānduraí*, பெ. (n.) விருத்தாசலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vriddhachalam Taluk.

*[பூலான்+துறை]*

**பெலப்பாடி** *pelappāḍi*, பெ. (n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[பூலாம்+பாடி]*

**பெள்ளாதி** *pellādi*, பெ. (n.) அவினாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Avanashi Taluk.

*[வல்லாளி–பெல்லாளி–பெள்ளாதி]*

**பொடிக்குச்சி** *poḍi-k-kucci*, பெ. (n.) புலியாட்டக்காரரின் மூன்று அல்லது நான்கடி நீளமுடைய மெல்லிய மூங்கில் கம்பு; a shin bamboo stick of the tiger dancer.

*[பொடி+குச்சி]*

**பேகடை** *pēgaḍai*, பெ. (n.) ஒரு வகையான பண்; a musical note.

*[பியகடை–பேகடை]*

**பேட்டிவயல்** *pēṭṭivayal*, பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[பேடு–பேட்டி+வயல்]*

**பேடி** *pēḍi*, பெ. (n.) சிற்றூர் ஆண்கள். மணிக்கட்டில் அணியும் ஒரு நகை; an ornament worned by men on wrist.

*[பிடி–பேடி]*

**பேந்தா** *pēndā*, பெ. (n.) குண்டு ஆட்ட செவ்வக வடிவ அரங்கின் பெயர்; name of the stadium.

*[பறந்தலை–பரந்தா–பேந்தா]*

**பேய்க்கரும்பு** *pēy-k-karumbu*, பெ. (n.) வேருடன் கூடிய கரும்பு; a full length sugarcane with root.

*[பேய்+கரும்பு]*

**பேய்ப்படை** *pey-p-paḍai*, பெ. (n.) வில்லுப் பாட்டில் இறப்புப் பற்றிய கதைப்பாடல்களுக்கு பாடுபவர்; a singer of elegies.

*[பேய்+படை]*

**பேய்ப்பந்து** *pey-p-pandu*, பெ. (n.) எறிபந்தின் வேறொரு பெயர்; a devil ball in games.

*[பேய்+பந்து]*

**பேய்மாரல்** *pēymāral*, பெ. (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[பேய்+மரல்]*

**பேரலி** *pērali*, பெ. (n.) விளவங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilavancode Taluk.

*[பெரு+அல்லி–பேரல்லி–பேரலி]*

**பேராங்குல மானம்** *pērāṅgula-māṉam*, பெ. (n.) படிமங்களின் உயரமைப்பில் பின்பற்றப் படும் மரபு; a measurement in sculpture.

*[பெரு+அங்குல+மானம்]*

**பேரயன் துள்ளல்** *pērayaṉ-tuḷḷal*, பெ. (n.) ஒரு வகையான காணிப்பழங்குடியினரின் ஆடல்; a dance of Kani tribes.

*[பெரு+ஆயன்+துள்ளல்]*

**பேரால்** *pērāl*, பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichi Taluk.

*[பெரு–பேர்+ஆல்]*

**பேரிகை** *pērigai*, பெ. (n.) ஒசூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Hosur Taluk.

*[ஒருகா. பெருமுகை–பேரிகை]*

**பேரிசை** *pērisai*, பெ. (n.) ஒரு வகையான இசைநூல்; an ancient treatise on Tamil music.

*[பெரு+இசை]*

**பேறங்கியம்** *pērangiyam*, பெ. (n.) விருத்தாசலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vriddhachalam Taluk.

*[பெரு+அங்கியம்]*

**பைக்கட்டு** *pai-k-kaṭṭu*, பெ. (n.) புத்தகப்பை; a bag for books.

*[பை+கட்டு]*



**பைங்கிணறு** *paiṅkiṇaṟu*, பெ. (n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arakonam Taluk.

*[பசும்+கிணறு]*

**பைவலசா** *paivalasā*, பெ. (n.) திருத்தணி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[பை+வலசு]*

**பொங்கக்கட்டி** *poṅga-k-kaṭṭi*, பெ. (n.) மண் குழைத்துச் செய்யப்படும் மண் கட்டி; a damp earth clot.

*[புங்கு+பொங்கு+கட்டி]*

**பொக்கனி** *pokkaṉi*, பெ. (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[முக்கல்(பாறைப்பிளவு)–பொக்கல்–பொக்கனி]*

**பொங்கற்சட்டி** *poṅgaṟ-caṭṭi*, பெ. (n.) பொங்கல் வைக்கும் மண் சட்டி; new pot.

*[பொங்கல்+சட்டி]*

**பொங்கு** *poṅgu*, பெ. (n.) பறவைகளின் இறகு; feather of bird.

*[புய–புங்கு–பொங்கு]*

**பொசுக்கணி** *posukkaṇi*, பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[புசல்+காணி]*

**பொட்டிப் பலகை** *poṭṭi-p-palagai*, பெ. (n.) தறியில் இரு புறமும் தக்கட்டையைத் தாங்கி இருக்கும் கருவி; an instrument in handloom.

*[பொட்டி+பலகை]*

**பொட்டிப்பணம்** *poṭṭippaṇam*, பெ. (n.) திருமணத்திற்குப் பின் பெண்களுக்குச் சீர் வரிசையாகக் கொடுக்கும் பணம்; a gift given to bride after marriage.

*[பொட்டி+பணம்]*

**பொட்டியம்** *poṭṭiyam*, பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichi Taluk.

*[பேடு–பேட்டு–பெட்டியம்–பொட்டியம்]*

**பொடவூர்** *poḍavūr*, பெ. (n.) காஞ்சீபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[பிடவு–பிடவூர்]*

**பொடிகழியாட்டம்** *poḍikaḻi-y-āṭṭam*, பெ. (n.) எட்டு முதல் பதினாறு ஆண்கள் சிறிய கம்புகளைப் பயன்படுத்தி ஆடுகின்ற ஆட்டம்; a game of youngsters.

*[பொடி+கழி+ஆட்டம்]*

**பொத்தவிளை** *pottaviḷai*, பெ. (n.) அகத்தீச்சுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[பொத்து+விளை]*

**பொதிகை** *podigai*, பெ (n) இசைத்தூண்களின் உச்சியில் செதுக்கப்படும் சிற்ப வகை; a

design on the top of the musical stone pillar.

*[போதிகை–பொதிகை]*

**பொதும்பு** *podumbu,* பெ. (n.) மதுரை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurai Taluk.

*[பொது–பொதும்பு]*

**பொய்யாங்குழி** *poyyāṅ-kuḻi,* பெ. (n.) தோற்று நிரப்பப்படாமலிருக்கும் வெறுங்குழி; an empty pit in pallankuli game.

*[பொய்யன்+குழி]*

**பொற்றுச் சட்டம்** *poṟṟu-c-caṭṭam,* பெ. (n.) பாவினைச் சுற்றி வைக்க உதவும் மரக்கட்டை; a part in handloom.

*[பொற்று+சட்டம்]*

**பொம்மிடி** *pommiḍi,* பெ. (n.) தருமபுரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dharmapuri Taluk.

*[பொன்+முடி]*

**பொய்க்குதிரையாட்டம்** *poy-k-kudirai-y-āṭṭam,* பெ. (n.) கட்டையின்றி, வெறுங்காலால் பொய்க்குதிரைக் கூட்டைச் சுமந்தாடும் ஆட்டம்; a folk dance.

*[பொய்+குதிரை+ஆட்டம்]*

**பொய்யரசூர்** *poyyarasūr,* பெ. (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[பொய்கை+அரசூர்]*

**பொரசப்பட்டு** *porasappaṭṭu,* பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakurichi Taluk.

*[புரசன்+பற்று]*

**பொரிக்கல்** *porikkal,* பெ. (n.) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvannamalai Taluk.

*[புரை>பொரி+கல்]*

**பொரிப்பாண்டி** *pori-p-pāṇḍi,* பெ. (n.) பொதுவான பாண்டி விளையாட்டில் இன்னொரு பெயர் (குமரி மாவட்டம்); a name of 'pandi' play.

*[பொரி+பாண்டி]*

**பொருப்பம்** *poruppam,* பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichi Taluk.

*[பொருப்பு+அம்]*

**பொருள் நுவற்சிக் கற்பனை** *poruḷ-nuvaṟcci-k-kaṟpanai,* பெ. (n.) முற்காலச் சிற்பியர்களின் கலைத்திறமையை அறிய உதவும் கற்பனை வகை; a talent of the ancient sculptors

*[பொருள்+நுவற்சி+கற்பனை]*

**பொருளைத்தொடு** *poruḷai-t-toḍu,* பெ. (n.) தொடுபவர்களை அருகிலுள்ள மரத்தைத் தொட்டு வரும்படி விளையாடல்; object tag.

*[பொருள்+ஐ+தொடு]*

**பொலி** *poli,* பெ. (n.) இரண்டு நிலத்திற்கு இடையில் உள்ள வரப்பு; a ridge in land.

*[பொலி–பொலி]*

**பொளிக்கால்** *poḷikkāl,* பெ. (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[பொலி+கால்]*

**பொற்குணம்** *poṟkuṇam,* பெ (n) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvannamalai Taluk.

**பொற்பந்தல்** *poṟpandal,* பெ. (n.) காஞ்சீபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[பொன்+பந்தல்]*

**பொறே** *porē,* பெ. (n.) இருளர் இனத்தின் இசைக்கருவிகளுள் ஒன்று; a musical instrument.

*[புரை+பொறெ]*

**பொன்பத்தி** *popatti,* பெ. (n.) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Senji Taluk.

*[பொன்+பற்றி]*

**பொன்மதி** *popmadi,* பெ. (n.) திருத்தணி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[பொன்+மதி]*

**பொன்பேத்தி** *popētti,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[பொன்+பற்றி]*

**பொன்மார்** *popmar,* பெ. (n.) செங்கற்பட்டு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chenglepet Taluk.

*[பொன்+மார்]*

**பொன்னத்தி** *poppatti,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[பொன்+அத்தி]*

**பொன்னலி** *poppali,* பெ. (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[பொன்+ஆலி]*

**போட்டுப் பாண்டி** *pōṭṭu-p-pāṇḍi,* பெ. (n.) ஒரு பாண்டி ஆட்ட வகை (மதுரை); a children's play.

*[போட்டு+பாண்டி]*

**போண்டி** *pōṇḍi,* பெ. (n.) தோற்றவர்; defeated person.

*[போ–போண்டி]*

**போதக்காடு** *pōdakkāḍu,* பெ. (n.) அரூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Harur Taluk.

*[புதர்+காடு]*

**போதலை** *pōḍalai,* பெ. (n.) மேல் முந்தி; upper part of the cloth or saree.

*[பூ+தலை]*



**போதிகை** *pōdigai,* பெ. (n.) பல்லவர்காலச் சிற்பப் பாணியிலமைந்த சிற்ப வடிவம்; a feature in sculpture.

*[போது+போதிகள்+கள்]*

**போந்தை** *pōndai,* பெ. (n.) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Senji Taluk.

*[போந்து–போந்தை (பனை)]*

**போர்த் தேங்காய் அடி–த்தல்** *por-t-tēngāy-adi-,* செ.கு.வி. (v.t.) கொம்பு முறி விளையாட்டுக்கு முன் நிகழ்த்தப்பெறும் சிற்றூர் விளையாட்டு;

*[போர்+தேங்காய்+அடி]*

**போர்வை** *pōrvai,* பெ. (n.) யாழின் உறுப்புகளில் ஒன்று; a part of the harp.

*[போர்–போர்வை]*

**பௌளி** *pouli,* பெ. (n.) ஒரு வகையான பண்; a melody type.

*[புவானி–பௌணி–பௌளி]*

# ம

**மக்கள்நாச்சி** *makkaḷnācci*, பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[மக்கள்+நாச்சி]*

**மக்களவை** *makkaḷavai*, பெ. (n.) நாடாளு மன்றம்; parliament, loksaba.

**மறுவ. நாடாளுமன்றம்**

*[மக்கள்+அவை]*

**மக்களவைத் தலைவர்** *makkaḷavai-t-talaivar*, பெ. (n.) நாடாளுமன்ற உறுப்பினர்களால் தலைமைப் பொறுப்புக்குத் தெரிவு செய்யப் படுபவர்; speaker of the parliament.

*[மக்களவை+தலைவர்]*

**மக்களாட்சி** *makkaḷ-āṭci*, பெ. (n.) வாக் களிக்கும் உரிமை பெற்ற மக்களால் தெரிந் தெடுக்கப் பெறும் உறுப்பினர்கள் பங்கேற்று நடத்தும் ஆட்சி முறை; democracy.

*[மக்கள்+ஆட்சி]*

**மக்காணி** *makkāṇi*, பெ. (n.) மக்காச் சோளம். (கொ.வ.); maize, Indian corn, zea mays.



**மக்கிரி** *makkiri*, பெ. (n.) உழவு வேலைகளுக்குப் பயன்படும் கூடை; basket. (கொ.வ.).

*[முக்கு–முக்குரி–மக்கிரி (கொ.வ.)]*

**மகணம்** *magaṇam*, பெ. (n.) இசை உருக்களில் ஒன்று; a musical note.

*[மகுன்–மகணம்]*

**மகதியாழ்** *magadiyāḻ*, பெ. (n.) புத்தர் காலத்து யாழ் வகையினுள் ஒன்று; a harp.

*[மகதம்+யாழ்]*



**மகர்நோன்பு** *magar-nōṉbu*, பெ. (n.) ஒன்பான் இரவின் (நவராத்திரி) பண்டிகையின் போது குழந்தைகள் பல புனைவுகள் புனைந்து நடித்தல்; a children's dance.

*[மகார்–மகர்+நோன்பு]*

**மகர்நோன்பு சாவடி** *magarnōnbu-cāvaḍi*, பெ. (n.) குழந்தைகள் கலை நிகழ்ச்சிகள் நடத்துவதற்காக, தஞ்சையிலுள்ள சாவடி; a theatre for children's dance of Tanjavur.

*[மகார் > மகர்+நோன்பு+சாவடி]*

**மகரம்** *magaram*, பெ. (n.) ஒரு வகையான இரட்டைக்கை முத்திரை; an hand pose.

*[மகரம் (மீன்) – மகரம்]*

**மகரமுகம்** *magara-mugam*, பெ. (n.) நாட்டியத்தில் பின்பற்றப்படும் ஒரு வகையான முத்திரை நிலை; an handpose in dance.

*[மகரம்+முகம்]*

**மகரி** *magari*, பெ. (n.) சிற்பத்தின் காதணி களில் ஒன்று; a ear ornament in sculpture.

*[மகரம் - மகரி]*

**மகரூர்** *magarūr*, பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichi Taluk.

*[மகர்+ஊர்]*

**மகாக்கு** *magākku*, பெ. (n.) குரங்குகளில் ஒரு வகை; a kind of monkey.

*[மங்கன்–மங்கு–மகாக்கு]*

**மகாநாசிகள்** *magānāsigaḷ*, பெ. (n.) கோபுரங்களில் அமைக்கப்பெறும் ஒரு வகையான சிற்பம்; a sculpture in the tower of temple.

*[மா–மகா+நாசிகள்]*

**மகாம்புய பீடம்** *magāmbuya pīḍam*, பெ. (n.) சிற்பங்களைத் தாங்கும் பீடம்; a stand structure of the sculptures.

*[மா–மகா+அம்புயம்+பீடம்]*

**மகான்யம்** *magānyam*, பெ. (n.) திருப்பெரும் புதூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sriperumbudur Taluk.

*[ஒருகா. மாகாணம் – மாகான்யம்]*

**மகிண்டி** *magiṇḍi*, பெ. (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[மகிழ்–மகிழ்ந்தி–மகிண்டி]*

**மகிழ்வட்ட ஓட்டம்** *magiḻvaṭṭa-ōṭṭam*, பெ. (n.) வட்டத்தில் உள்ளும் வெளிப்புறத்தும் உள்ளவர்கள் இணை சேர்ந்து விளையாடல்; merry go round.

*[மகிழ்+வட்டம்+ஓட்டம்]*

**மகுட ஆட்டம்** *maguḍa-āṭṭam*, பெ. (n.) கணியான் கூத்தின் வேறு பெயர்; a name for 'kaniyān āṭṭam'.

*[மகுடம்+ஆட்டம்]*

**மகுடம்** *maguḍam*, பெ. (n.) கணியான் கூத்தில் இசைக்கப்பெறும் தப்பு போன்ற ஓர் இசைக்கருவி; a musical instrument in *'kaniyān kūttu'*.

*[மகிழ்–மகிழம் – மகுடம்]*

**மங்கண்டம்** *maṅgaṇḍam*, பெ. (n.) ஆழமான பகுதியில் பாறை இல்லாமல் மணல் உள்ள பகுதி; sandy bed of a water reservoir or river. (கொ.வ.).

*[மணல்–கண்டம்]*

**மங்கல நீராட்டு விழா** *maṅgalanīrāṭṭu-viḻā*, பெ. (n.) பூப்பெய்தவளுக்குச் செய்யும் சடங்கு; purificatory ceremony for the girl who has attained puberty.

*[மக்கல நீராட்டு+விழா]*



**மங்கலரேவு** *mangalarēvu*, பெ. (n.) திருமங்கலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirumangalam Taluk.

*[மங்கல+இறவு]*

**மங்கள கைசி** *maṅgaḷakaisi*, பெ. (n.) பண் வகைகளிற் ஒன்று; a musical note.

*[மங்களம்–கைசி]*

**மங்கள தேசிகம்** *maṅgalatēsigam*, பெ. (n.) ஒரு வகையான பண்; a musical note.

*[மங்களம்+தேசிகம்]*

**மங்கை நல்லூர்** *maṅgai-nallūr*, பெ. (n.) மயிலாடுதுறையிலிருந்து 8 கல்மாத்திரி தொலைவில் உள்ள ஒரு ஊர்; name of a village 8 k.m. from Mayiladuturai.

*[மங்கை+நல்லூர்]*

**மச்சக்கெண்டை** *macca-k-keṇḍai*, பெ. (n.) கரும்புள்ளியுள்ள கெண்டை மீன் வகையுள் ஒன்று; a kind of fish.

*[மச்சம்+கெண்டை]*

**மச்சூர்** *maccur,* பெ. (n.) திருவாடானை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[மாச்சு+ஊர்]*

**மசகு** *mašagu,* பெ. (n.) மாட்டு வண்டியின் கொடைக் கட்டைக்கு இடும் கரிநெய்; grease.

*[மை–மயகு–மசகு]*

**மசயன்** *mašayan,* பெ. (n.) தெளிவில்லாதவன்; a dull headed person.

*[மசை+அன்]*

**மசநாய்** *mašanāy,* பெ. (n.) வெறி பிடித்த நாய்; rogue dog. (கொ.வ.).

*[மிசை>மச+நாய்]*

**மசனப்பாறை** *mašana-p-pārai,* பெ. (n.) உறுதியில்லாமல் நொறுங்கும் தன்மை கொண்ட பாறை; breakable stone.

*[மசி–மசினம்+பாறை]*

**மசாலைமீன்** *masālaimīn,* பெ. (n.) மீன் வகையுளுள் ஒன்று; a kind of fish.

*[மசாலை+மீன்]*

**மஞ்சபத்தூர்** *mañjapattūr,* பெ. (n.) திரு வண்ணாமலை மாவட்டத்தில் உள்ள ஒரு ஊர்; name of the village in Tiruvannamalai.

*[மஞ்சம்+பற்று+ஊர்]*

**மஞ்ச விளையாட்டு** *mañjaviḷaiyāṭṭu,* பெ. (n.) தீமிதி விழாவிற்கு மறுநாள், திருமண முறை யுடையவர்கள் ஒருவர் மீது ஒருவர் மஞ்சள் நீரை ஊற்றி விளையாடும் விளையாட்டு; spraying play of coloured water among teen agers on the next day of fire pit festival.

*[மஞ்சள்(நீர்)+விளையாட்டு]*

**மஞ்சள்சுறா** *mañjaḷ-sūrā,* பெ. (n.) சுறாமீன் வகையுள் ஒன்று; yellow dog fish.

*[மஞ்சள்+சுறா]*

**மஞ்சள்பாரை** *mañjalpārai,* பெ. (n.) ஒரு வகை மீன்; a kind of fish.

*[மஞ்சள்+பாரை]*

**மஞ்சள் நீர்** *manja-nīr,* பெ. (n.) பச்சைக் கோலத்தின் வகைகளிற் ஒன்று; a floral decoration.

*[மஞ்சள்+நீர்]*

**மஞ்சனி** *mañjaṉi,* பெ. (n.) ஆத்தூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Attur Taluk.

*[மஞ்சள்–மஞ்சளி–மஞ்சனி]*

**மஞ்சாடி**[1] *mañjāḍi,* பெ. (n.) சிவப்பான உருண்டை விதை; a round shaped seed red in colour .

*[மஞ்சி–மஞ்சாடி]*

**மஞ்சாடி**[2] *mañjāḍi,* பெ. (n.) இரண்டு குன்றி மணிகள் கொண்ட பொன் எடை; a gold weights equal to two crab eyes. "முக்கழஞ்செ மூன்று மஞ்சாடியுங் குன்றியும் பொன்" (தெ.சா.8:2:எ.529). .

*[மஞ்சு+ஆடி]*

**மஞ்சி** *mañji,* பெ. (n.) யாழ் நரம்பிற்குத் தகாத ஒன்று; unappropriate string in harp.

*[மாஞ்சி–மஞ்சி]*

**மஞ்சிக் கோரை** *mañji-k-kōrai,* பெ. (n.) கோரைக் களை வகை; reed. (வே.க.36).

*[மஞ்சி+கோரை]*

**மஞ்சிகள்** *mañjigaḷ,* பெ. (n.) வில் யாழிலுள்ள நரம்புகளைச் சுட்டும் பெயர்; name of strings in bow harp.

*[மஞ்சி+கள்]*

**மஞ்சு**[1] *mañju,* பெ. (n.) தேங்காய் மட்டையிலி ருந்து நார் எடுத்த பின் வரும் துகள்; the dust particles from coconut shell coir.

*[மய்–மஞ்சு]*

**மஞ்சு**[2] *mañju,* பெ. (n.) வயலில் அமைக்கப்படும் பாத்தித் திட்டு; raised row of earth in the field.

*[முஞ்சு–மஞ்சு]*

**மஞ்சுவிரட்டு** *mañjuvirattu,* பெ. (n.) எருதுபிடி விளையாட்டு; காளையை அடக்கும் திறப்பாடு; capturing a bull at large as a proof of bravery.

மறுவ. சல்லிக்கட்டு, ஏறுதழுவுதல், ஏறுகோள், ஏறுகோடல்

*[மைந்து(வலிமை)-மஞ்சு+விரட்டு]*



**மட்டகீச்சான்** *matta-kīccān,* பெ. (n.) ஒரு வகை மீன்; squeaking porch.

*[மட்டம்+கீச்சான்]*

**மட்டப்பாரை** *matta-p-pārai,* பெ. (n.) மலபார் கடற்கரையில் இருக்கும் மீன் வகை; Malabar trevally.

*[மட்டம்+பாரை]*

**மட்டி** *matti,* பெ. (n.) கள் மிடாவின் அடியில் தேங்கியிருக்கும் கழிவு; sediment in toddy pot.

*[மள்-மடு-மட்டி]*

**மட்டிகை** *mattigai,* பெ. (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[மட்டு-மட்டிகை]*

**மட்டுக்கட்டு-தல்** *mattu-k-kattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வேலையைக் குறைத்துக் கொள்ளுதல்; to decrease the range of work. இப்பொழு தெல்லாம் அவன் தன் வேலையை மட்டுக்கட்டிக் கொண்டான். (மீனவ.).

*[மட்டு+கட்டு]*

**மட்டுப்படு-தல்** *mattu-p-padu-,* 17 செ.குன்றாவி. (v.t.) துப்புத் தெரிதல்; to spy and find out.

*[மட்டு+படு]*

**மட்டை[1]** *mattai,* பெ. (n.) தலைகீழாகச் சுற்றும் பம்பரம் (த.நா.வி.); inverse top.

*[மொட்டு-மட்டு-மட்டை]*

**மட்டை[2]** *mattai,* பெ. (n.) செய்யாறு வட்டத்தில் ஒரு ஊர்; name of the village in Seyyāru taluk.

*[மட்டு-மட்டை]*

மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டில் வரும் மட்டை செய்யாறிலிருந்து சேத்துப்பட்டு செல்லும் சாலையில் உள்ளது.

**மட்டை[3]** *mattai,* பெ. (n.) இழவுச் சடங்கில் வாசிக்கப்பெறும் இசைக்கருவி; a funeral music instrument.

*[மட்டு-மட்டை]*

**மடக்கு[1]** *madakku,* பெ. (n.) அரைத்தட்டுப் போன்று இருக்கும் சட்டி; earthen flat pot.

*[மட-மடக்கு]*

**மடக்கு[2]** *madakku,* பெ. (n.) ஒயிலாட்டத்தில் வலக்காலால் மட்டும் செய்யப்படும் ஓர் உடல் இயக்கம்; right leg movement in folk dance 'oyilāttam'.

*[மட-மடக்கு]*

**மடக்கு[3]** *madakku,* பெ. (n.) விளக்கெரிக்க உதவும் அகன்ற அகல்; earthen vessel used as lamp plate.

*[மடு-மடக்கு (பள்ளமானது)]*

**மடக்குத் தட்டி** *madakku-t-tatti,* பெ. (n.) இரண்டாக மடக்கிய தட்டி; folded bamboo mat.

*[மடக்கு+தட்டி]*

**மடக்குப்பாய்** *madakku-p-pāy,* பெ. (n.) நெட்டுவாக்கில் மடக்கும் பாய்; mat to be folded length wise.

*[மடக்கு+பாய்]*

**மடச்சாம்பிராணி** *mada-c-cāmbirāṇi,* பெ. (n.) அடிமுட்டாள் (திட்டும் சொல்); fool. (கொ.வ.வ.சொ.119).

*[மட்டம்–மட+சாம்பிராணி]*

**மடச்சீலி** *mada-c-cīli,* பெ. (n.) கிச்சிலி மீன் வகை; squeaking perch.

*[மட+சீலி]*

**மடப்புறம்** *madappuram,* பெ. (n.) மடத்துக்கு விடப்பெற்ற இறையிலி நிலம்; free land donated for monastery. "நிலம் நாலுமாவும் இம்மடத்துக்கு மடப்புறமாக ஆயம் பாடி தூவல்...".

*[மடம்+புறம்]*

**மடல்** *madal,* பெ. (n.) சாயம் ஏற்றிய கோரை களை மடல் மடலாக எடுத்து வைத்த அடுக்கு; layers of coloured fiber.

*[மடு–மடல்]*

**மடல்உளி** *madāluḷi,* பெ. (n.) மரத்தில் பூ வேலைப்பாடு செய்வதற்குப் பயன்படுத்தப் படும் வளைந்த கூர்மையான நுனிப்பகுதி கொண்ட உளி வகை; a kind of chisel.

*[மடல்+உளி]*

**மடாவிளக்கு** *madāviḷakku,* பெ. (n.) கோயில் களில் பெரிய திரி போட்டு எரியும் விளக்கு; a large temple lamp.

*[மருடா–மடா+விளக்கு]*



**மடி**[1] *madi,* பெ. (n.) எட்டு முழ வேட்டிகள் இரண்டு கொண்டது; twin dhoties.

*[மடு–மடி]*

**மடி**[2] *madi,* பெ. (n.) மீன்பிடி வலை வகை; a kind of fishing net.

*[மடு–மடி]*

**மடிக்கணினி** *madi-k-kaṇiṇi,* பெ. (n.) மடியில் வைத்து இயக்கும் கணினி; lap top.

*[மடி+கணினி]*

**மடிக்கெட்டி** *madi-k-ketti,* பெ. (n.) முக்குவர் இனத்தில் மீன்பிடி வலையைச் செய்பவர்; net makers.

*[மடி+கட்டி–மடிக்கட்டி–மடிக்கெட்டி (கொ.வ.]*

**மடிக்கோல் சிம்பு** *madi-k-kōl-simbu,* பெ. (n.) சற்று உருளை வடிவில் தட்டையாகவும் மெல்லிய தாகவும் உள்ள மூங்கில் பத்தை; bamboo pieces.

*[மடி+கோல்+சிம்பு]*

**மடிகோல்** *madikōl,* பெ. (n.) நெய்யப்பட்ட ஆடைகளை மடிப்பதற்குரிய கோல்; a kind of weavers implement.

*[மடி+கோல்]*

**மடிச்சல்** *madiccal,* பெ. (n.) விளவங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilavancode Taluk.

*[மடி–மடிச்சல். மடி – வயல்]*

**மடிசார்** *madisār,* பெ. (n.) நடக்கும்போது கால் தடுக்காமலிருப்பதற்காக வேட்டி அல்லது புடவையைக் கால் சுற்றி மேல் வளைத்து உடுக்கும் முறை; way of tucking cloth or saree around the waist allowing legs for free movement of walking. மாமி மடிசார் உடுத்திருக்கிறாள் (இ.வ.).

*[மடிதறு–மடிதற்று–மடிசற்று–மடிசார்]*



**மடித்துக்கட்டுதல்** *madittukkattudal,* பெ. (n.) பாய் நெசவு செய்த பின்னர் அதன் ஓரங்களைச் சீவி மடித்துக் கட்டுவது; giving final finishing to mats.

*[மடித்து+கட்டு]*

**மடிப்புசால்** *madippušāl,* பெ. (n.) உழுத நிலத்தை மீண்டும் உழுதல்; ploughing a land already ploughed.

*[மடி–மடிப்பு+சால்]*

**மடிமைகண்டிகை** *madimai-kandigai,* பெ. (n.) பொன்னேரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ponneri Taluk.

*[மடி–மடிமை+கண்டிகை]*

**மடிவாளம்** *madivālam,* பெ. (n.) ஒசூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Hosur Taluk.

*[மடி(வயல்)+வாளம்]*

**மடு**[1] *madu,* பெ. (n.) புலி வேடமிடுபவர் கையில் வைத்து இருக்கும் கருவி; a small weapon held by the tiger dancers.

*[மடூ–மடு]*

**மடு**[2] *madu,* பெ. (n.) தற்காப்புக் கலைகளில் ஒன்று; an art of self protection.

*[மல்–மண்–மடு]*

**மடு சுற்றுதல்** *madu-surrudal,* பெ. (n.) புலியாட்டத்தின் ஒரு கூறு; an action in the play of tiger dance.

*[மடு+சுற்றுதல்]*

**மடுப்பு** *maduppu,* பெ. (n.) பாவை நெய்வதற்கு நீட்டி வைத்திருத்தல்; extending the weaving material.

*[மடு–மடுப்பு]*

**மடைக்கருப்பு** *madai-karuppu,* பெ. (n.) நாட்டுப்புறங்களில் நீர்நிலைகளைக் காக்கும் சிறு தெய்வம்; a village deity near water tanks.

**மறுவ: மடையாண்டி**

*[மடை+கருப்பு]*

**மடைக்கலம்** *madai-k-kalam,* பெ. (n.) கொங்கு திருமணத்தில் சமையலுக்குக் காணிக்கை அளித்தல்; amount given to the cooks in marriage. (கொ.வ.வ.சொ.120).

*[மடை+கலம்]*

**மண்ணார்முழவு** *mannār-mulavu,* பெ. (n.) முழவு வகையினுள் ஒன்று; a kind of musical instrument.

**மறுவ: மண்முழவு**

*[மண்+ஆர்+முழவு]*

**மண்உளுவை** *man-uluvai,* பெ. (n.) ஒரு வகை உளுவை மீன்; a kind of fish.

*[மண்+உளுவை]*



**மண்குதிர்** *man-kudir,* பெ. (n.) 1. நெல்லைச் சேர்த்துவைக்கும் மண்ணாலான குதிர்; grains storing pot. 2. தவசங்களைச் சேமித்து வைக்க வைக்கோல் கொண்டு செய்யப்பட்ட குதிர்; storage device made of paddy stalk -rope. (வ.வ.வே.க.36).

*[மண்+குதிர்]*

**மண்கூடை** *man-kūdai,* பெ. (n.) வெட்டிய மண்ணை எடுக்கும் கூடை; basket used for carrying earth.

*[மண்+கூடை]*

**மண்டலிப்பு** *mandalippu,* பெ. (n.) ஓர் இசைக் கலைச்சொல்; a musical term.

*[மண்டலம் – மண்டலிப்பு]*

**மண்டி சறுக்கலடைவு** *mandi-śarukkal-aḍaivu,* பெ. (n.) நடனத்தில் இடம் பெறும் ஓர் அடைவு வகை; a step variety in dance.

*[மண்டி+சறுக்கல்+அடைவு]*

**மண்டி சுற்றலடைவு** *mandicuṟṟalaḍaivu,* பெ. (n.) முழு மண்டியில் சுழன்று ஆடுவது; a surrounding movement in dance.

*[மண்டி+சுற்றல்+அடைவு]*

**மண்டியடைவு** *mandiyaḍaivu,* பெ. (n.) நடன (பரத)த்தில், பொதுவாக முழு மண்டியில் அமர்ந்து முழங்கால்கள் தரையில் படும்படி மாற்றி மாற்றியாடுதல், எழுந்து நின்றாடுதல்; a dance movement.

*[மண்டி+அடைவு]*

**மண்டீகர்** *mandīgar,* பெ. (n.) தமிழகத்தில், பாவைக்கூத்துக் கலைக்கு உரியவராகச் சொல்லப்படுகின்ற ஒரு பிரிவினர்; experts of puppet show.

*[மண்டு+ஈகர்]*

**மண்டைக்காடு** *mandaikkāḍu,* பெ. (n.) கல்குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk.

*[மண்டு–மண்டை+காடு. அடர்ந்த காடு]*

**மண்டைப்பாணன்** *mandai-p-pāṇaṉ,* பெ. (n.) பாணர் பிரிவினரில் ஒரு வகை; a class of Pāṇar community.

*[மண்டை+பாணர்]*

**மண்ணரை** *maṇṇarai,* பெ. (n.) பல்லடம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Palladam Taluk.

*[மண்+அடை–மண்ணடை – மண்ணரை]*

**மண்வீடு** *maṇvīḍu,* பெ. (n.) மண்ணால் அமைக்கப்பட்ட வீடு; a mud walled house. (கொ.வ.வ.சொ.120).

*[மண்+வீடு]*

**மண்ணின் மைந்தர்** *maṇṇiṉ-maindar,* பெ. (n.) ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு உரியவர்களாகக் கருதப்படுபவர்கள்; sons of the soil.

*[மண்+இன்+மைந்தர்]*

**மண்திருவை** *maṇtiruvai,* பெ. (n.) பானை செய்யப் பயன்படும் கருவி; an implement used in pottery.

*[மண்+திருவை]*



**மண்தூங்கி** *maṇtūṅgi,* பெ. (n.) தவளை; frog.

*[மண்+தூங்கி–மண்ணுக்குள் தூங்குவது (தவளை)]* மண்தூங்கி எனும் சொல் வடமொழியில் மண்டூகம் எனத்திரிந்தது.



**மண்மேளம்** *maṇmēḷam,* பெ. (n.) அண்ணன்மார்சுவாமி திருவிழாவில் இசைக்கப்பெறும் ஓர் இசைக்கருவி; a musical instrument.

*[மண்+மேளம்]*

**மணக்கடவு** *manakkadavu,* பெ. (n.) பொள்ளாச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Pollachi Taluk.

*[மண்+கடவு]*

**மணச்சாரி பங்கு** *mana-c-cāri-pangu,* பெ. (n.) மணற்பாங்கான வயல்; a sandy field. (வ.வ.வே.க.36).

*[மணல்+சாரி+பங்கு]*

**மணச்சை** *manaccai,* பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[மணத்தி–மணச்சை]*

**மணப்பாக்கம்** *mana-p-pākkam,* பெ. (n.) வேலூர் மாவட்டத்தில் செய்யார் ஆரணி வழித்தடத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Vellore district.

*[மணம்+பாக்கம்]*

**மணலூர்பேட்டை** *manalūr-pēttai,* பெ. (n.) விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Vilupuram district.

*[மணல்+ஊர்+பேட்டை]*

திருவண்ணாமலையிலிருந்து செஞ்சி செல்லும் வழித்தடத்தில் உள்ளது.

**மணவாளக்கோன்** *manavāla-k-kōn,* பெ. (n.) மூன்றாம் இராசராசன் 15ஆம் ஆட்சியாண்டில் வம்புபழுத்தாள் மகள் நாச்சி வைத்த விளக்கிற்காக ஆ(பசு)க்களைப் பெற்றுக் கொண்டு நெய் வழங்கிய இடையன் கீரந்தை திருவாய் குலம் மணவாளன்; an herdsman who got cows and offered ghee to a particular lamp for its glow.

**மணவூர்** *manavūr,* பெ. (n.) திருத்தணி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[மணவை+ஊர்]*

**மணற்கிளரி** *manarkilari,* பெ. (n.) ஒரு வகைப் பறவை; a kind of bird.

*[மணல்+கிளறி]*

**மணற்குடி** *manarkudi,* பெ. (n.) நாகப்பட்டினம் மாவட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Nagappattinam District.

*[மணல்+குடி]*

**மணிக்கொல்லை** *mani-k-kollai,* பெ. (n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[மணி+கொல்லை]*

**மணிக்கோடு** *mani-k-kōdu,* பெ. (n.) கடலில் மூழ்கிய குமரிக்கோட்டு மணிமேலை; a peak of the mountain 'Mani' in submerged land of the Tamils. (செங்கோன் தரைச்செலவு).

*[மணி+கோடு]*

**மணித்தாளம்** *mani-t-tālam,* பெ. (n.) ஒரு தாள விசைக் கருவி; a musical instrument.

*[மணி+தாளம்]*

**மணியங்கயிறு** *maniyankayiru,* பெ. (n.) பாய் ஓரம் கட்டப் பயன்படும் நார்; fibre tied at the end of the mat.

*[மணி+அம்+கயிறு]*

**மணியஞ்சி** *manianji,* பெ. (n.) நிலக்கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Nilakottai Taluk.

*[ஒருகா. மணி+இலஞ்சி–மணியிலஞ்சி–மணியஞ்சி]*

**மணியன் கூட்டம்** *manyan-kūttam,* பெ. (n.) கொங்கு வேளாளரின் குடிப் பெயர்; a clan name among Kongu Vellalar.

*[மணியன் + கூட்டம்]*

**மணியாரச் சீலை** *manyāra-c-cilai,* பெ. (n.) பானைகளில் வடிவம் பொறிக்கும் கலை; art of making decorative designs on the pottery.

*[மணி+ஆரம்+சீலை]*

**மணிவிளக்கு** *mani-vilakku,* பெ. (n.) சிறிய விளக்கு வகை; a small lamp.

*[மணி+விளக்கு]*

**மணிவிளான்** *maṉiviḷāṉ,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[மணி+(விளை)விளான்]*

**மணைவாள்** *maṉaivāḷ,* பெ. (n.) அரிவாள் மணை; knife or blade fixed wooden plank used to slice vegetables.

*[மணை+வாள்]*

**மத்தகோகிலம்** *mattakōkilam,* பெ. (n.) போற்றிப் பாடலில் பாடப்படுகின்ற ஓர் இசைப்பாட்டு; a song of chorus in religious prayer.

*[மத்தம்+கோகிலம்]*

**மத்தரி** *mattari,* பெ. (n.) மத்தளம்; percussion instrument.

*[மத்தளம்–மத்திரி(கொ.வ.)]*

**மத்தாளிக்கொக்கு** *mattāḷi-k-kokku,* பெ. (n.) கொக்கு வகையுள் ஒன்று; grey pelicon.

*[மத்தாளி+கொக்கு]*

**மத்திம அடைவு** *mattima-aḍaivu,* பெ. (n.) அடைவு வகைகளில் ஒன்று; a kind of stepping in dance.

*[மத்திம+அடைவு]*

**மத்துக்கயிறு** *mattu-k-kayiṟu,* பெ. (n.) தயிர் கடையும் மத்தில் இருக்கும் கயிறு; churning rope. (கொ.வ.வ.சொ.120).

*[மத்து+கயிறு]*

**மதங்க சூளாமணி**[1] *madaṅga-sūḷamaṉi,* பெ. (n.) ஒரு தமிழ் நூல்; a treatise in Tamil.

*[மதங்கம்+சூளாமணி]*

**மதங்க சூளாமணி**[2] *madaṅga-sūḷamaṉi,* பெ. (n.) நடிப்புக் கலையில் சிறந்தோரைச் சுட்டுஞ்சொல்; a term denoting talented actor.

*[மதங்க+சூளாமணி]*

**மதர்வாடி** *madarvāḍi,* பெ. (n.) பொன்னேரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ponneri Taluk.

*[மதில்–மதர்+வாடி]*

**மதவலி** *madavali,* பெ. (n.) வளமான உடல் வலிமை கொண்ட மல்லன், மற்போர் மறவன் (சான்றோர்); a fully trained wrestler.

**மதிப்பெண்** *madippeṉ,* பெ. (n.) எழுத்துத் தேர்வு, போட்டி போன்றவற்றில் திறமை செயற்பாடு போன்றவற்றை மதிப்பீடு செய்து அளிக்கப்படும், தர அளவுக்கான குறியீடு; mark in an examination.

*[மதிப்பு+எண்]*

**மதிப்பெண் சான்றிதழ்** *madippeṉ-cāṉṟidaḻ,* பெ. (n.) தேர்வில் பெற்ற மதிப்பெண் குறிக்கப்பட்ட சான்றிதழ்; mark certificate.

*[மதிப்பு+எண்+சான்றிதழ்]*

**மதிப்பெண் பட்டியல்** *madippeṉ-paṭṭiyal,* பெ. (n.) மதிப்பெண்ணைக் குறிப்பிடும் பட்டியல்; mark list.

*[மதிப்பு+எண்+பட்டியல்]*

**மதிலொட்டி** *madiloṭṭi,* பெ. (n.) மதிலோரம் ஒருவர் மற்றொருவர் மேலேறிப் உட்கார்ந்தும் விளையாடும் ஆட்டம்; a pyramic play.

*[மதில்+ஒட்டி]*

**மதுராந்தகம்** *madurāndagam,* பெ. (n.) செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Chengalpattu.

*[மதுராந்தகன்–மதுராந்தகம்]*

மதுரையைக் கைப்பற்றிய பராந்தகனுக்கு மதுராந்தகன் என்ற பட்டப் பெயர் உண்டு. இவனுடைய பெயரால் இவ்வூர் அழைக்கப்பட்டது.

**மதூர்** *madūr,* பெ. (n.) காஞ்சிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[ஒருகா. மருதூர்–மேதூர்–மதூர்]*

**மந்த முழவு** *manda-mulavu,* பெ. (n.) முழவு வகையினுள் ஒன்று; a musical instrument.

*[மந்தம்+முழவு]*

**மந்தாங்கிப் பலகை** *mandāngi-p-palagai,* பெ. (n.) நிலைகளின் மேல் வைக்கும் பலகை; upper door frame.

*[மனை+தாங்கி+பலகை]*



**மந்திக்குஞ்சு** *mandi-k-kuñju,* பெ. (n.) மந்தி உட்காரும் நிலையில் கால்களுக்கிடையே தலையைத் தாழ்த்திய நிலையில் உட்கார்ந்து ஆடும் விளையாட்டு; a monkeys play.

*[மந்தி+குந்து]*

**மந்திரக்கட்டு** *mandira-k-kattu,* பெ. (n.) மந்திரத்தால் உறுப்புகள் செயலாற்றாமல் செய்தல்; making one disabled by black magic.

*[மந்திரம்+கட்டு]*

**மந்திரக்கன்னிமார்** *mandira-k-kannimār,* பெ. (n.) மந்திரம் செய்யும் கன்னிமார்கள்; virgins capable of doing black magic.

*[மந்திரம்+கன்னிமார்]*

**மந்திரப்பாட்டு** *mandira-p-pāttu,* பெ. (n.) இருவேறு வில்லுப் பாட்டுக் குழுவினரை ஒரே நேரத்தில் பாடச் செய்யும் போட்டிப் பாட்டு; retarting competetive folk song.

*[மந்திரம்+பாட்டு]*

**மந்திர விளையாட்டு** *mandira-vilaiyāttu,* பெ. (n.) மோடி விளையாட்டு; a play of magic.

*[மந்திரம்+விளையாட்டு]*

**மந்தைப்பணம்** *mandai-p-panam,* பெ. (n.) கால்நடை மேய்ச்சலுக்குக் கொடுக்கும் வரி; tax collected for cattle grazing. "அதிகாரிக்கு குடுக்கும் முதல் மந்தைப்பணம் வாசற்பணம்"....

*[மந்தை+பணம்]*

**மப்பூட்டாந்தழை** *mappūttān-talai,* பெ. (n.) உடம்பில் பட்டால் அரிப்பு ஏற்படுத்தும் பூடு; a plant that makes irritation. (கொ.வ.வ. சொ.120).

*[மப்பு+ஊட்டாம்+தழை]*

**மப்பேடு** *mappēdu,* பெ. (n.) திருவள்ளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in *Tiruvallūr* Taluk.

*[மா+பேடு]*

**மம்மட்டி வெட்டு நையாண்டி** *mammatti-vettu naiyāndi,* பெ. (n.) கரகாட்ட நாதசுரக் கலைஞர், நாதசுரத்தை விண்ணை மண்ணை நோக்கியவாறு மேலும் கீழுமாகத் தூக்கி வாசிக்கும் நையாண்டி மேளம்; folk music naiyāndi.

*[மண்வெட்டி–மம்மட்டி (கொ.வ.) + வெட்டு+ நையாண்டி]*

மண்வெட்டிக் கொண்டு ஓங்கியோங்கி வெட்டு வதையும், தூக்குவதையும் ஒத்து இருக்கும் காரணத்தால் பெற்ற பெயர்.

**மம்மானி** *mammāni,* பெ. (n.) அளவுக்கு அதிகம்; excessively (கொ.வ.வ.சொ.121).

*[மா+மானம்– மம்மானம் – மம்மானி]*

**மயமதம்** *mayamadam,* பெ. (n.) சிற்பக் கலையில் கையாளப்படும் ஓர் ஒழுங்கு முறை; a method followed in sculpture.

*[மயன்+மதம்]*

**மயானக் கொள்ளை** *mayāna-k-koḷḷai* பெ. (n.) நாட்டுப்புறத் திருவிழாக்களில் ஒன்று; a festival of village deity.

*[மயானம்+கொள்ளை]*

**மயிந்தரபாடி** *mayindarapāḍi* பெ. (n.) அரக்கோணம் வட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Arakkonam taluk.

*[மயேந்திரன் (மகேந்திரன்)+பாடி]*

**மயிர்க்கயிறு** *mayir-k-kayiṟu,* பெ. (n.) முடியால் செய்யப்படும் கயிறு; a rope made of hair. (கொ.வ.வ.சொ.121).

*[மயிர்+கயிறு]*

**மயிர்க்குஞ்சிப்பு** *mayir-k-kuñjippu,* பெ. (n.) தூரிகைக்குரிய ஓர் உறுப்பு; a part of brush.

*[மயிர்+குஞ்சிப்பு]*

**மயிர்க்கோதி** *mayirkkōdi* பெ. (n.) கூந்தலில் விழும் முடிச்சுகளைக் கோதி எடுக்கப் பெண்கள் பயன்படுத்தும் சிறிய கம்பி; knot removing pin. (கொ.வ.வ.சொ.121).



**மறுவ. சிறுக்கு வாங்கி**

*[மயிர்+கோதி]*

**மயிர்வாங்கு—தல்** *mayirvāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தலைமுடி மழித்தல்; to shave the head.

**மறுவ. முடி எடுத்தல்**

*[மயிர்+வாங்கு]*

**மயில்புட்டி** *mayil-puṭṭi* பெ. (n.) குறவர் பின்னும் கூடை வகைகளுள் ஒன்று; a type of basket plaited by the Kuravas.

*[மயில்+புட்டி]*

**மயில்மீன்** *mayil-mīṉ* பெ. (n.) இந்தியக் கடலோரத்தில் இருக்கும் மீன் வகை; Indian sail fish.

*[மயில்+மீன்]*

**மர அகல்** *mara-agal* பெ. (n.) கோயில்களில் பெரிய திரிகொண்டு எரிய வைக்க உதவும் மரத்தாலான விளக்கு; a temple lamp made of wood.

*[மரம்+அகல்]*

**மர ஆணி** *mara-āṇi,* பெ. (n.) கதவு, சட்டம் போன்றவை கோர்வையுடன் கழன்று வராமலிருக்க இரும்பு ஆணிக்குப் மாற்றாகப் பயன்படுத்தப்படும் மூங்கில், தேக்கு மரங்களாலான ஆணி போன்ற மரத்துண்டு; wooden nail.

*[மரம்+ஆணி]*

**மர உருளை** *mara-uruḷai* பெ. (n.) நெல் குத்த உதவும் மரத்தால் ஆன உருளை; a morter made of wood.



**மறுவ. மர உரல்**

*[மர+உருளை]*

**மரக்கடையாணி** *mara-k-kaḍaiyāṇi,* பெ. (n.) தேரின் அச்சில் போடும் கடையாணி; temple car axle pin.

*[மரம்+கடை+ஆணி]*

**மரக்கரண்டி** *mara-k-karandi,* பெ. (n.) கோயில் திருவிழாக்களில் எண்ணெய் ஊற்றப் பயன்படும் கரண்டி; wooden laddle.

*[மரம்+கரண்டி]*

**மரக்கால்** *mara-k-kāl,* பெ. (n.) கைத்தறி நெசவில் நூலைச் சுற்ற உதவும் கருவி; an implement in handloom weaving.

மறுவ. புட்டி, பெருட்டம்

*[மரம்+கால்]*



**மரக்குதிர்** *mara-k-kudir,* பெ. (n.) மரத்தால் செய்யப்பட்ட குதிர்; a wooden granary.

*[மரம்+குதிர்]*

**மரக்குரங்கு**[1] *mara-k-kurangu,* பெ. (n.) காக்காக் குஞ்சு விளையாட்டு; name of a play.

*[மரம்+குரங்கு]*

**மரக்குரங்கு**[2] *mara-k-kurangu,* பெ. (n.) சிறுவர்கள் மரத்தின் மீது ஏறித் தொட்டு விளையாடும் விளையாட்டு; a children's play. (கொ.வ.வ.சொ.121).

*[மரம்+குரங்கு]*

**மரக்கொண்டி** *mara-k-kondi,* பெ. (n.) கதவுகளின் உட்புறம் சுவரின் ஒட்டையில் சொருகும் குச்சி; a wooden piece.

*[மரம்+கொண்டி]*

**மரங்கொத்தி** *marankotti,* பெ. (n.) தொட வருபவர் தொடாமல் தப்பிக்கப் பிறிதொரு பொருளினைத் தொடும் விளையாட்டுக்கூறு; a trick in children's play marankotti.

*[மரம்+கொத்தி]*

**மரச்சல்லடை** *mara-c-calladai,* பெ. (n.) நெல் போன்ற தவச வகைகளில் மண், கல் பிரித் தெடுக்கப் பயன்படும் சல்லடை; a winnow made of wood.

*[மரம்+சல்லடை]*



**மரத்தட்டு** *mara-t-tattu,* பெ. (n.) பயறு வகைகளை வேக வைத்தவுடன் கொட்டி ஆற வைப்பதற்கு உதவும் தட்டு; a plate made of wood.

*[மரம்+தட்டு]*

**மரத்தலையன்** *mara-t-talaiyan,* பெ. (n.) காடை வகையுள் ஒன்று; a kind of bird.

**மரத்தாரா** *mara-t-tārā,* பெ. (n.) பறவை வகையுள் ஒன்று; whistling leal.

*[மரம்+தாரா]*

**மரப்பண்ணை** *mara-p-pannai,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[மரம்+பண்ணை]*

**மரப்பாசிசீப்பு** *marappāši-sippu,* பெ. (n.) ஒரு வகை மீன்; a kind of fish.

*[மரம்+பாசி+சீப்பு]*

**மரப்பாரை** *marappārai,* பெ. (n.) திருச்செங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengodu Taluk.

*[மரல்+பாறை(பாரை)]*

**மரப்பூட்டு** *mara-p-pūṭṭu,* பெ. (n.) கதவுகளில் உள்புறம் உள்ள பூட்டு; inner lock.

*[மரம்+பூட்டு]*

**மரபுரிமையர்** *maraburimaiyar,* பெ. (n.) கால் வழியினர், கொடிவடியினர்; heir, lineage.

*[மரபு+உரிமையர்]*

**மரமடக்கி** *maramaḍakki,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[ஒருகா. மரை+மடக்கி]*

**மரமேறி** *maramēri,* பெ. (n.) தென்னை, பனை மரங்களில் ஏறி கள் இறக்கும் தொழிலாளர்; toddy tappers. (கொ.வ.வ.சொ.121).

*[மரம்+ஏறி]*

**மரவனேரி** *maravaṉēri,* பெ. (n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[மறவன்+ஏரி]*

**மரிக்கை** *marikkai,* பெ. (n.) குட்டி போடாத வெள்ளாடு; a young goat.

*[மறி–மறிக்கை–மரிக்கை. மோத்தை = கடா]*

**மரிச்சிலம்பு** *mariccilambu,* பெ. (n.) பழனி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Palani Taluk.

*[ஒருகா. மாரி+சிலம்பு]*

**மருகல்** *marukal,* பெ. (n.) திருநள்ளாற்றுக்குத் தென்மேற்கே 35 கல் தொலைவில் உள்ள ஒரு ஊர்; a village from 35 k.m. in Thirunallar.

**மருகோவில்** *marukōvil,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[மருது+கோவில்>மருகோவில்]*

**மருத்துவமனை** *marruttuvamaṉai,* பெ. (n.) மருத்துவம் செய்யும் இடம்; hospital.

**மறுவ. மருத்துவச் சாலை**

*[மருத்துவம்+மனை]*

**மருதாடு** *marudāḍu,* பெ. (n.) கடலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Cuddalore Taluk.

*[மருதம்+நாடு]*

**மருதாந்தை** *marudāndai,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[மருதன்+அந்தை]*

**மருதூர்** *marudūr,* பெ. (n.) திருநள்ளாற்றுக்கு வடக்கே 24 கல் தொலைவில் உள்ள ஒரு ஊர்; a village in 24 k.m. from north Tirunallar.

*[மருது(மரம்)+ஊர்]*

இக்காலத்தில் இவ்வூர் மருத்தூர் என்னும் பெயருடன் அழைக்கப்படுகிறது.

**மருதேரி** *marudēri,* பெ. (n.) செங்கற்பட்டு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chenglepet Taluk.

*[மருது+ஏரி]*

**மருவபூமி** *maruvabūmi,* பெ. (n.) இராசத் தானத்தின் பழைய பெயர்; old name of Rajastan. (lit. arid land)

*[மரு(மணல்)–மருவம்+பூமி]*

குவலயமாலா நூலாசிரியர் (கி.பி.778) உத்தி யோதனசூரி மருவநாட்டார் அப்பா துப்பா எனுஞ் சொற்களைப் பேசுவதாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

**மருள்** *maruḷ,* பெ. (n.) ஒரு வகையான திறப்பண்; a secondery note.

*[மரு–மருள்]*

**மல்லங்குளி** *mallaṅkuḷi,* பெ. (n.) கோபிச் செட்டிப்பாளையம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Gopichettipalayam Taluk.

*[மல்லன்+குழி]*

**மல்லஞ்சி** *mallañji,* பெ. (n.) கம்பளத்தார் சேவை யாட்டத்தில் துணை ஆட்டக்காரர்கள் பாவாடை மேல் அணியும் ஆடை வகை; a dress worn by folk dancers.

*[ஒருகா. மெல்+அஞ்சி – மெல்லஞ்சி – மல்லஞ்சி]*

**மல்லன்** *mallan*, பெ. (n.) தெய்வங்களில் ஒன்று; a village deity.

*[மல்-மல்லன்]*

**மல்லாண்டை** *mallāṇḍai*, பெ. (n.) கரூர் மாவட்ட மக்களின் வழிபாட்டு முறை; a ceremony of in Karur district.

*[மல்+ஆண்டை]*

**மல்லாரி** *mallāri*, பெ. (n.) "காளி புறப்பாடு" நேரத்தில் இசைக்கப்படும் இசைக்கருவி; a musical instrument.

*[மல்+ஆரி]*

**மல்லிகுந்தம்** *mallikundam*, பெ. (n.) ஓமலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Omalur Taluk.

*[மல்லி+குன்றம்-மல்லிகுன்றம்-மல்லி-குந்தம்]*

**மல்லியகரை** *malliyagarai*, பெ. (n.) ஆத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Attur Taluk.

*[மல்லிகை+கரை]*

**மல்லியம்** *malliyam*, பெ. (n.) மயிலாடுதுறை யிலிருந்து 12 கல் தொலைவில் உள்ள ஒரு ஊர்; a village in 12 k.m. from Mayiladuturai.

*[மல்லி-மல்லியம்]*

**மல்லு** *mallu*, பெ. (n.) சிறுநீர்; urine. (கொ.வ.வ.சொ.122).

*[மோள்-மொள்ளு-மல்லு]*

**மலகண்டை**[1] *malakaṇḍai*, பெ. (n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurantakam Taluk.

*[மலை+(கண்டி) கண்டை-மலைகண்டை-மலகண்டை]*

**மலகண்டை**[2] *malakaṇḍai*, பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Thanjavur District.

*[மலை+(கண்டி)கண்டை]*

**மலகரி** *malagari*, பெ. (n.) குறிஞ்சியின் பண் வகையினுள் ஒன்று; a musical note.

*[மலை-மலகரி]*

**மலங்கம்பு** *malaṅkambu*, பெ. (n.) மலையில் விளையும் கம்பு; a millet. (கொ.வ.வ.சொ.122).

*[மலை+கம்பு]*

**மலடாக்கம்** *malaḍākkam*, பெ. (n.) குழந்தைப் பேற்றைத் தவிர்க்கச் செய்யும் வழிமுறை; sterilization.

*[மலடு+ஆக்கம்]*

**மலயன்விளை** *malayaṉviḷai*, பெ. (n.) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[மலையன்+விளை]*

**மலரி** *malari*, பெ. (n.) திருவாடானை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[மல்லாளி- மல்லாரி – மலரி]*

**மலரிடுகை** *malariḍugai*, பெ. (n.) ஒரு வகை யான ஆடலியக்கம்; a dance posture.

*[மலர்+இடுகை]*

**மலை** *malai*, பெ. (n.) தாய விளையாட்டில் வெட்டுதல் நிகழாதவாறு பாதுகாப்புத் தருவது குறித்த சொல்; a term in *tāya viḷaiyāṭṭu* to mean 'check'.

*[மல்-மலை]*

**மலைதாங்கி** *malaitāṅgi*, பெ. (n.) சேலம் மாவட் டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Salem.

*[மலை+தாங்கல்(ஏரி)-தாங்கி]*

**மலையரையன்** *malai-y-araiyaṉ*, பெ. (n.) காணிக்காரன் எனும் பழங்குடிகளின் பெயர்; a name of *kani-k-kāran*, sub-group.

*[மலை+அரையன்]*

**மலையன் சடையன்** *malayaṉsaḍayaṉ*, பெ. (n.) கல்வெட்டில் இடம் பெற்றவன் பெயர்; a name mentioned in inscription.

*[மலையன்+சடையன்]*

செய்யாற்றில் வாழ்ந்தவன். 'அனுக்காவூர் கிழவன் மலையன் சடையன்' என்று அழைக்கப் பட்டவன்.

**மழகொங்கு** *ma<u>l</u>akoṅgu*, பெ. (n.) கொங்கு நாட்டின் ஒரு பிரிவு; a division of Kongu country.

*[மழவர்+கொங்கு]*

**மழலைச்சொல்** *ma<u>l</u>alai-c-col*, பெ. (n.) குழந்தைகளின் திருத்தமுறாத இனிய பேச்சு; prattle, baby's, babbles.

*[மழலை+சொல்]*

*[முள் > மள் > மள்ளன்= இளைஞன், வீரன், மள்> மழ= இளமை, குழவி. மழ > மழலை (மு.தா.48)]*

**மழலையர் பள்ளி** *ma<u>l</u>alaiyar-paḷḷi*, பெ. (n.) இளஞ்சிறார் பயிலும் பள்ளி; nursery school.

*[மழலையர்+பள்ளி]*

**மழலையாடு** *ma<u>l</u>alai-y-āḍu*, பெ. (n.) கொஞ்சு; lisp, prattle. 'வாய் குவிந்து மழலையாடு' (சு.வி.பக்.73).

*[மழலை+ஆடு]*

**மழவராயனேந்தல்** *ma<u>l</u>avarāyanendal*, பெ. (n.) சிவகங்கை மாவட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Sivagangai district.

*[மழவன்+அரையன்+ஏந்தல்]*

இவ்வூர் மழவராயன் என்னும் சிற்றரசன் பெயரால் ஏற்பட்டது.

**மழைக்கடவுள்** *ma<u>l</u>ai-k-kaḍavuḷ*, பெ. (n.) திருமால்; Tirumāl.

*[மழை+கடவுள்]*

**மழுங்கனுகர்** *ma<u>l</u>uṅgaṉugar*, பெ. (n.) மானமில்லாத வர்கள்; people who have no self respect. (கொ.வ.வ.சொ.122).

*[மழுங்கல்+அனுகர்]*

**மழவங்கரணை** *ma<u>l</u>avaṅkaraṇai*, பெ. (n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wandiwash Taluk.

*[மழவன்+காரணை]*

**மழைக்கஞ்சி** *ma<u>l</u>aikañji*, பெ. (n.) மழை வேண்டிப் பெண்கள் கூடி வைக்கும் கஞ்சிப் படையல்; a women's ceremony for rain by offering gruel. (கொ.வ.வ.சொ.122).

*[மழை+கஞ்சி]*

**மழைக்காவியம்** *ma<u>l</u>ai-k-kāviyam*, பெ. (n.) பழம்பெரும் நாட்டுப்புறக் கலை; a folklore.

*[மழை+காவியம்]*

**மழைக்கோடன் பாடல்** *ma<u>l</u>ai-k-kōḍaṉ-pāḍal*, பெ. (n.) காணிப் பழங்குடியினரின் பாடல் வகை; a song of the Kāni tribes.

*[மழை+கோடல்+பாடல்]*

**மழைநெல்** *ma<u>l</u>ai-nel*, பெ. (n.) குன்றும் மலையும் சார்ந்த பகுதிகளில் மழையை மட்டும் நம்பி விளைவிக்கப்படும் மூன்று மாத புன்செய் நெல் வகை; dry land paddy.

க. மழநெல்லு

*[மழை+நெல்]*

**மழையின் மக்கள்** *ma<u>l</u>aiyiṉ-makkaḷ*, பெ. (n.) மள்ளரின மக்கள்; a name of Mallars.

*[மழை+இன்+மக்கள்]*

**மவிலகம்** *mavilagam*, பெ. (n.) கல்குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk.

*[மயில் (மவில்)+அகம்]*

**மவுத்தாங்கரை** *mauvttāṅkarai*, பெ. (n.) இசுலாம் மதத்தில் இறந்தவர்களை அடக்கம் செய்யும் இடம்; a burial ground of Mohammadan people. (கொ.வ.வ.சொ.122).

*[மாவுத்தன்+கரை–மாவுத்தன்கரை–மவுத்தங் கரை]*

**மற்போர்** *ma<u>r</u>-pōr*, பெ. (n.) மல்லாடல் வகைகளுலொன்று; a type of wrestling.

*[மல்+போர்]*

**மற்போர்க்கை** *ma<u>r</u>-pōr-k-kai*, பெ. (n.) ஒரு வகையான இரட்டைக்கை; a dance pose. (35:201).

*[மல்+போர்+கை]*

**மறம் அடக்கி** *maram-aḍakki,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Tanjavur District.

*[மறம்+அடக்கி]*

கொடுமை விளைவித்த ஒரு கூட்டத்தாரின் கொட்டத்தை ஒடுக்கிய மற்றொரு வீரனை 'மறம் அடக்கி' என்று பாராட்டியிருக்கலாம்.

**மறிஞ்சிப்பாரை** *mariñji-p-pārai,* பெ. (n.) குதிரை போன்ற ஒரு வகை மீன்; horse mackesal.

**மறியல்** *mariyal,* பெ. (n.) சிறைச்சாலை; jail; prison. (யாழ்ப்.).

*[மறி–மறியல்]*

**மறுப்பின்மைச் சான்றிதழ்** *maruppiṉmai-c-cāṉridāḻ,* பெ. (n.) தடையில்லாச் சான்றிதழ்; no objection certificate.

*[மறுப்பு+இன்மை+சான்றிதழ்]*

**மறுவாழ்வு** *maruvāḻvu,* பெ. (n.) இயல்பான வாழ்க்கையை இழந்தோர்க்குத் திரும்ப அமைத்துத்தரப்படும் வாழ்க்கை; rehabilit ation; resettlement. வெள்ளப்பெருக்கால் வீடிழந்தவர்களுக்கு மறுவாழ்வு அளிக்க அரசு நடவடிக்கை எடுத்தது. (உ.வ.).

*[மறு+வாழ்வு]*

**மறைப்பு** *maraippu,* பெ. (n.) மாடுகள் பிறர் கண்ணில் படாமல் இருக்க கட்டும் தடுப்பு; a temporary fence. (கொ.வ.வ.சொ.122).

*[மறை–மறைப்பு]*

**மறைவலை** *marai-valai,* பெ. (n.) மீன்களை மறைத்துப் பிடிக்கின்ற வலை; a net used to catch fish stealthily.

**மறுவ. மறுவலை**

*[மறை+வலை]*

**மறைமதி** *marai-madi,* பெ. (n.) காருவா (அமா வாசை); new moon.

*[மறை+மதி]*

**மறுசரடு** *maru-šāraḍu,* பெ. (n.) தாலி கட்டிய மறு நாள் பிள்ளையார் கோயிலில் பெண் களுக்கு இரண்டாவது சரடாகத் தாலி கட்டுதல்; a re-knot of *tali* on the second day of marriage. (கொ.வ.வ.சொ.122).

*[மறு+சரடு]*

**மறுமுழுச்சி** *marumuḻucci,* பெ. (n.) மண மக்களுக்கு, மாப்பிள்ளை வீட்டில் தரும் விருந்து; feast given to the couple at bridegroom's house.

*[மறு+முழுத்தம்–மறுமுழுத்தம்–மறுமுழுத்தி–மறுமுழுச்சி (கொ.வ.]*

**மன்**[1] *maṉ,* பெ. (n.) 1. தலைவன்; chief. மன்னுயிர் நீத்த வேலின் (பு.வெ.4.23). 2. கணவன்; husband. "மன்னொடுங் கூடி.... வானகம் பெற்றனள்" (சிலப். 25:50).

*[முல்–முன்–மன்]*

**மன்**[2] *maṉ,* இடை (int). உறுதிப் பொருள் தரும் இடைச்சொல்; an expletive.

*[முன் > மன் (வே.க.4:34)]*

**மன்பதையாட்சி** *maṉbadai-y-āṭci,* பெ. (n.) கும்பலாட்சி, கும்பலாதிக்கம்; melocracy ochlocracy.

*[மன்பதை+ஆட்சி]*

**மன்றாட்டுப்பட்டி** *maṉraṭṭu-p-paṭṭi,* பெ. (n.) ஆடு, மாடு கூட்டம்; herd of cattles. (தெ.சா.8:6:எ:74). "இவ்வெரிக்கு எரிப்பட்டி மன்றாட்டுப்பட்டியுமாக ஐந்நூறு குழி...".

*[மன்றாடு+பட்டி]*

**மன்னன் சோழன்** *maṉaṉ cōḻaṉ,* பெ. (n.) புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள ஒரு ஊர்; a village in Pudukottai (dist.).

*[மன்னன்+சோழன்]*

**மன்னணை** *maṉṉaṇai,* பெ. (n.) பாதுகாத்தல், ஆதரவு; support.

**க. மன்னனெ; தெ. மன்னிஞ்கட**

*[மன்+அணை–மன்னணை (மன்னுதல்–நிலைபெறுத்தல்]*

**மன்னியர்** *mannịyar,* பெ. (n.) மதிக்கத்தக்க பெரியோர்; honourable persons. "பல மன்னியர் மண்டலிகர்" (உத்தரரா. திருவோலக். 11).

க. மானியர்

*[மன்–மன்னியர்]*

**மன்னைக்கிளவி** *mannai-k-kiḷavi,* பெ. (n.) சினச்சொல்; angry words.

*[மன்னை+கிளவி]*

**மனகதி** *manakadi,* பெ. (n.) திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vriddhachalam Taluk.

*[ஒருகா. மணம்+கதிர்]*

**மனத்தறிவு** *manattarivu,* பெ. (n.) அன்பு; love, affection. "மயிர்முனையிற் பாதி மனத்தறிவுண்டேல் அயிர்ப்புண்டங் காதி நிலை" (ஔவைக்குறள். 158).

*[மனம்+அத்து+அறிவு]*

**மனத்தாள்** *manattāḷ,* பெ. (n.) ஓமலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Omalur Taluk.

*[மனவு(உடும்பு)+தாள்]*

**மனத்திருக்கை** *mana-t-tirukkai,* பெ. (n.) கூரிய பற்களைக் கொண்ட திருக்கை மீன் வகை; pale edged sting ray.

*[மனவு+திருக்கை]*

**மனநலக் காப்பகம்** *mananala-k-kāppagam,* பெ. (n.) மனநோய் மருத்துவமனை; mental health hospital

*[மனம்+நலம்+காப்பகம்]*

**மனநலம்** *mana-nalam,* பெ. (n.) மனநன்மை; goodness of mind. "மனநலம் மன்னுயிர்க் காக்கம்". (குறள்:457).

*[மனம்+நலம்]*

**மனநிறைவு** *mananiraivu,* பெ. (n.) மனத்தளவில் கொள்ளும் பொந்திகை; mental satisfaction.

*[மனம்+நிறைவு]*

**மனநிறைவளி–த்தல்** *mananiraiv-aḷi-,* 4 செ.கு. வி. (v.t.) மனத்திற்குப் பொந்திகை அளித்தல்; to get mental satisfaction.

*[மனநிறைவு+அளி–]*

**மனநோயாளி** *mana-nōyāḷi,* பெ. (n.) மனநலங் குன்றியவன், உணர்வு, எண்ணம் ஆகியவற்றின் சமநிலை குன்றியவன்; insane man.

*[மனம்+நோயாளி]*

**மனப்பக்குவம்** *mana-p-pakkuvam,* பெ. (n.) மனத்தளவில் பெறும் முதிர்நிலை; mental advancement.

*[மனம்+பக்குவம்]*

**மனமருட்சி** *mana-maruṭci,* பெ. (n.) மனத்தில் கற்பனை செய்து மருளும் நிலை; hallucination.

*[மனம்+மருட்சி]*

**மனமை** *manamai,* பெ. (n.) செங்கற்பட்டு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chenglepet Taluk.

*[மனவு–மனமை]*

**மனவழுத்தம்** *mana-v-aḻuttam,* பெ. (n.) மிகைப்படியான வேலைச்சுமை, நெருக்குதல் போன்றவற்றால் மனத்தில் ஏற்படும் சோர்வு; mental stress. "மக்களிடையே மனவழுத்தங் களும் அச்சமும் மேலோங்கி நிற்கின்றன".

மறுவ. மனச்சோர்வு

*[மனம்+அழுத்தம்]*

**மனவுளைச்சல்** *mana-v-uḷaiccal,* பெ. (n.) மனக்குழப்பம்; tension.

*[மனம்+உளைச்சல்]*

**மனிதத் தடை தாண்டி ஓடல்** *manida-t-tadaitāndiōdal,* பெ. (n.) உட்கார்ந்தும், கால்களை நீட்டியும் இருப்பவர்களைத் தாண்டி ஓடுதல்; human hurdle relay.

*[மனிதன்+தடை+தாண்டி+ஓடல்]*

**மனை** *manai,* பெ. (n.) உடம்பு; body. "நாட்ட மிரண்டும் நடுமுக்கில் வைத்திடில்... மனைக்கு மழிவில்லை". (திருமந்.).

*[மன்–மனை]*

**மனைத்தெய்வம்** *manai-t-teyvam,* பெ. (n.) மனையுறைத் தெய்வங்கள்; house hold gods.

மறுவ. இல்லுறை தெய்வம்

*[மனை+தெய்வம்]*

**மனைப்பலகை** *manai-p-palagai,* பெ. (n.) தறியின்கீழ் வடும்புத் தண்டுடன் பொருத்தும் பலகை; wooden plank in handloom.

*[மனை+பலகை]*

**மனைவிற்பனைமுகமை** *manaivirpanai mugamai,* பெ. (n.) மனைகள் விற்கும் இடம்; real estate.

*[மனை+விற்பனை+முகமை]*

**மாக்கடுங்கோன்** *mākkaḍuṅkōṉ,* பெ. (n.) இறைப்பற்று மிகுந்த மன்னன்; pious king, king who indulges in spirituality. (பா.செ.ப.) "களைகட்ட மற்றிரண்டோண் மாக்கடுங் கோன் மான பேர்த்தளிய கோன்...".

*[மா+கடுங்கோன்]*

**மாக்கல்** *mā-k-kal,* பெ. (n.) சிற்பம் செய்யப் பயன்படுகின்ற ஒரு வகைக் கல்; a steatite stone variety.

*[மாவு+கல்]*

**மாக்கான்**[1] *mākkāṉ,* பெ. (n.) பெருந்தவளை; a big frog.



மறுவ. மொக்கான்

*[மா–மாக்கு–மாக்கான்]*

**மாக்கான்**[2] *mākkāṉ,* பெ. (n.) பேதை; fool. (கொ.வ.வ.சொ.122).

*[மாக்கள்–மாக்கன்]*

**மாகர்** *māgar,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத் திலுள்ள உள்ள ஓர் ஊர்; a village in Thanjavur District.

*[மா(கறள்)+கர்]*

தற்போது இவ்வூர் மாகரல் என்று மருவியுள்ளது.

**மாகறல்** *māgaṟal,* பெ. (n.) காஞ்சிபுரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[மா+(கறள்)கறல்]*

**மாங்கடை** *māṅkaḍai,* பெ. (n.) அரூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Harur Taluk.

*[மா(மாமரம்)+கடை]*

**மாங்குடி** *māṅguḍi,* பெ. (n.) திருநள்ளாற்றுக்கு வடமேற்கே 32 கல் தொலைவில் கொல்லுமாங் குடி என்னும் பெயருடன் உள்ளது; a village 32 k.m. from Thirunallar.

*[மா(இன்)+குடி]*

**மாங்குப்பை** *māṅkuppai,* பெ. (n.) ஓமலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Omalur Taluk.

*[மா(மாமரம்)+குப்பம்–குப்பை(சிற்றூர்]*

**மாங்குழி** *māṅkuḻi,* பெ. (n.) கல்குளம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk.

*[மா+அம்+குழி]*

**மாசல்** *māšal,* பெ. (n.) மங்கலாகத் தெரியும் பார்வை; dim light vision.

*[மாசு–மாசல்]*

**மாசாகை** *maśāgai*, பெ. (n.) மரத்தின் முதன் மையான கிளை; prime branch of a tree. (தெ.கோ.சா.3:2).

*[மா+சாகை]*

**மாசிக்கிளரி** *māśi-k-kiḻari*, பெ. (n.) முன்னோர் களுக்கும், ஊர்த் தெய்வங் களுக்கும் செய்யும் வழிபாடு; a ceremony of worshipping ancesters and deities.

*[ஒருகா. மா+அரிசி+கிளறி]*

**மாஞ்சுமாஞ்சு** *māñjumāñju*, பெ. (n.) ஓய் வில்லாத உழைப்பின் கடுமை; hard working without rest.

*[ஒருகா. பாய்ந்து–பாய்ந்து–பாஞ்சுபாஞ்சு–மாஞ்சுமாஞ்சு]*

**மாட்டுக்கயிறு** *māṭṭu-k-kayiṟu*, பெ. (n.) மாடு களுக்கு பூட்டும் கயிறு; a rope for cattle.

*[மாடு+கயிறு]*

**மாட்டுத்தாழி** *maṭṭu-t-tāḻi*, பெ. (n.) மாடுகள் தண்ணீர் குடிக்கும் தொட்டி; a tub of water for cattle. (கொ.வ.வ.சொ.123).

*[மாடு+தாழி]*



**மாடக்கல்** *māḍakkal*, பெ. (n.) ஒசூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Hosur Taluk.

*[மாடம்(அடுக்கு)+கல்]*

**மாடக்கோயில்** *māḍakkōyil*, பெ. (n.) கோயில் வகைகளில் ஒன்று; a variety in temple construction.

*[மாடம்+கோயில்]*

**மாடகம்** *māḍagam*, பெ. (n.) யாழின் உறுப்புகளில் ஒன்று; a part of harp.

*[மாடு–மாடகம்]*

**மாடபத்திரம்** *māḍapattiram*, பெ. (n.) மடத் தின் ஆளுவ (நிருவாக)ப் பொறுப்பு; one who maintains the monastery. (தெ.சா.8:26: எ:440). "பல்லவதரையன் எழுத்து இப்படிக்கு மாடபத்திரம் திருமலையுடையான் எழுத்து...".

*[மாடம்+பத்தியம்]*

**மாடி** *māḍi*, பெ. (n.) புலி வேடமிடுபவர் (வேலூர் பகுதிகளில்) கையில் வைத்திருக்கும் கருவி; tiger dancers article.

*[மடு+மாடி]*

**மாடுவிரட்டு** *māḍuviraṭṭu*, பெ. (n.) தீமிதி விழாவில் நடைபெறும் மாடுவிரட்டு; a festival observance.

*[மாடு+விரட்டு]*

**மாணிக்க வாணியன்** *maṇikka vāṇiyaṉ*, பெ. (n.) முதல் இராசேந்திரன் காலத்தில் திரு வோத்தூரில் விளக்கு வைக்க ஏற்பாடு செய்த வணிகன்; name of a merchant.

*[மாணிக்கம்+வாணியன்]*

முதல் இராசேந்திரன் காலத்தில் தஞ்சாவூரைச் சேர்ந்த ஓர் ஊரிலிருந்து திருவோத்தூருக்கு வந்தவன். (இவன் காலம் கி.பி.1012–1044ஆம் ஆண்டு).

**மாணிய ஆடூர்** *māṇiya āḍūr*, பெ. (n.) சிதம் பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[மானியம்+ஆடு+ஊர்]*

**மாத்தம்மா** *māttammā*, பெ. (n.) நாட்டுப்புறக் கதைகளில் சொல்லப்படும் பெண் தெய்வம்; a female deity in folklore.

*[மாத்து+அம்மா]*

**மாத்தி** *mātti*, பெ. (n.) கும்பகோணம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Kumbakonam Taluk.

*[மத்தி–மாத்தி]*

**மாத்து–தல்** *māttu-*, 4 செ.குன்றாவி. (v.t.) அடித்தல்; to beat. அவனை நன்றாக மாத்தினான். (இ.வ.).

*[மாறு–மாற்று–மாத்து]*

**மாதவிலக்கு** *mādavilakku*, பெ. (n.) மகளிர் மாதப்பூப்பு; mensus.

*[மாதம்+விலக்கு]*

**மாதாரிகள்** *mādārigaḷ*, பெ. (n.) கம்பளத்து நாயக்கர்களுக்குச் சேவைப் பலகையைச் செய்து கொடுக்கும் தொழிலாளர்; a division of workers who make drums.

*[மாதர்–மாதாரி]*

**மாதாரி** *mādāri*, பெ. (n.) மாதாரை எனும் பெரும் மத்தளம்; a percussion instrument.

*[மாது–மாதாரி]*

**மாதானம்** *mādāṉam*, பெ. (n.) சீர்காழி வட்டத்தில் சீர்காழி பழையார் வழிச் சாலையில் அமைந்துள்ள ஒரு ஊர்; a village in Sirkazhi on the way to Sirkazhi Pazhayar road.

*[மா+தானம்]*

**மாதிரிமங்கலம்** *mādirimaṅgalam*, பெ. (n.) நன்னிலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Nannilam Taluk.

*[மாதாரி+மங்கலம்]*

**மாதுமாது** *mādumādu*, பெ. (n.) மணலைக் குவித்து பதினான்கு குழிகளில் எதிலாவது சிறு கல்லினை ஒளித்து வைக்கும் விளையாட்டு; a children's game in which they repeat the word 'mādumādu'. (த.நா.வி.).

*[மாதுமாது–(ஒலிக்குறிப்பு)]*

**மாதுளங்கனி** *māduḷaṅkaṉi*, பெ. (n.) இலகுலீசர் சிற்பத்தின் ஒரு சிறப்புக் குறியீடு; a term used in sculpture.

*[மாதுளம்+கனி]*

**மாதேவப்பட்டினம்** *mādēva-p-paṭṭiṉam*, பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Thanjavur district.

*[மா+தேவன்+பட்டினம்]*

இவ்வூரின் முந்தைய பெயர் 'மகாதேவப் பட்டினம்.

**மாந்தச்சங்கிலி** *mānda-c-caṅgili*, பெ. (n.) கருத்தொன்றை வெளிப்படுத்தும் வகையிலோ –எதிர்ப்பைக் காட்டும் வகையிலோ திரண்டு வந்து சாலையோரத்தில் ஒருவரோடொருவர் கை கோர்த்து நிற்றல்; people forming a chain by joining hands to demonstrate their support or protest.

*[மாந்தன்+சங்கிலி]*



**மாந்தநேயம்** *māndanēyam*, பெ. (n.) மாந்தன் மாந்தனை மதித்துச் செலுத்தும் அன்பு; love for one another; humanism.

*[மாந்தன்+நேயம்]*

**மாந்தநேயன்** *māndanēyaṉ*, பெ. (n.) (மனிதாபிமானி) மற்றவரிடம் பரிவு கலந்த அன்பு செலுத்துபவர்; humanitarian.

*[மாந்தன்+நேயன்]*

**மாந்தப்பரிவு** *mānda-p-parivu*, பெ. (n.) ஒருவர் மற்றொருவர் மீது காட்டும் பரிவு கலந்த உணர்வு (மனிதாபிமானம்); humanitarianism.

*[மாந்தன்+பரிவு]*

**மாந்தவளத்துறை** *mānda-vaḷatturai*, பெ. (n.) நடுவணரசின் கல்வித்துறை; human resource department (Education department).

*[மாந்தர்+வளம்+துறை]*

**மாந்தவளம்** *mānda-vaḷam,* பெ. (n.) மாந்தனின் ஆற்றலாகிய வளம்; human resource.

*[மாந்தர்+வளம்]*

**மாந்தொட்டு பச்சை** *māntōṭṭu-paccai,* பெ. (n.) 1. காணிக்கை; offering. 2. நன்கொடை; donation. "புஷ்பராகம் ஒன்று மாந்தொட்டு பச்சை தொண்ணூற் றொண்று" (தெ.சா.7:4: எ.53).

*[மாந்தொட்டு+பச்சை]*

**மாந்தை** *māndai,* பெ. (n.) கொங்கு நாட்டின் தலைநகரமாக விளங்கிய கோவை மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Kovai, head quarters in Kongu nadu.

*[மா+அந்தை]*

இது சேரர்க்கு உரிய தலைநகரமாக விளங்கியது. இமயவர்மன் நெடுஞ்சேரலாதன் மாந்தைப் பட்டினத்தில் பொன் முதலான பெருஞ் செல்வத்தைப் புதைத்து வைத்திருந்தான் என்று மாமூலனார் கூறுகின்றார்.

**மாநாடு** *mānāḍu,* பெ. (n.) வணிகர் கூட்டம்; traders gatherings, trader's meeting. (தெ.கோ.சா.3:2).

*[மா+நாடு]*

**மாப்பிள்ளை பத்தியம்** *mā-p-piḷḷai-pattiyam,* பெ. (n.) ஒரு வகையான நாட்டுப் பாடல்; a variety of a folk song.

*[மாப்பிள்ளை+பத்தியம்]*

**மாப்பு** *māppu,* பெ. (n.) மன்னிப்பு; forgiving, excuse. இந்த ஒரு பிழைக்கு மாப்பு செய்ய வேண்டும். (இ.வ.).

*[மன்னிப்பு – மாப்பு (கொ.வ.)]*

**மாபட்டைவளை** *māpaṭṭai-vaḷai,* பெ. (n.) அணி கலன்; jewels, ornament. "மஞ்சாடியு மிரண்டு மாபட்டைவளை ஆறினால்..." (தெ.சா. 7:2: எ.891).

*[மா+பட்டை+வளை]*

**மாம்பாக்கம்** *mām-bākkam,* பெ. (n.) ஆரணி வட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Arani.

*[மா+பாக்கம் = மாம்பாக்கம்]*

அழகு அல்லது பெரிய என்ற பொருளில் இவ்வூர் அழைக்கப்பட்டிருக்கலாம்.

**மாமன்நீர்** *māmaṉnīr,* பெ. (n.) பருவமடைந்த பெண்ணுக்குப் பத்து நாள் தாய்மாமன் தலைக்குத் தண்ணீர் ஊற்றும் சடங்கு; a ritual done by maternal uncle.

*[மாமன்+நீர்]*

**மாமியார் வீடு** *māmiyārvīḍu,* பெ. (n.) சிறைச்சாலை; jail.

*[மாமி+ஆர்+வீடு]*

**மாமுண்டி** *māmuṇḍi,* பெ. (n.) திருச்செங் கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengodu Taluk.

*[மா+முண்டி]*

**மாயலேரி** *māyalēri,* பெ. (n.) 1. அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk. 2. சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[மாயல்(வறண்டுபோதல்)+ஏரி]*

**மாயாளி** *māyāḷi,* பெ. (n.) சிவகங்கை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[மாயல்+ஆளி]*

**மார்பொட்டி** *mārboṭṭi,* பெ. (n.) அடையாளக் குறியுடைய முத்திரைப் பொறி; badge.

*[மார்பு+ஒட்டி]*

**மாரங்கியூர்** *māraṅgiyūr,* பெ. (n.) திருக் கோவிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[மாரன்+அங்கன்+ஊர்]*

**மாரந்தை** *mārandai,* பெ. (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[மாறன்+அந்தை]*

**மாரனி** *māraṉi*, பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[மரல் – மாரல்–மாரலி–மாரனி]*

**மாராத்தளி** *mārāttaḷi*, பெ. (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[மால்–மாரல்+தளி]*

**மாரிமுத்தாப்பிள்ளை** *mārimuttā-p-piḷḷai*, பெ. (n.) இசைப்பாக்களில் புகழாப் புகழ்ச்சி வழிபாடு (கீர்த்தனைகளில் நிந்தைத் துதி) அமைத்துப் பாடுவதைப் பெருவழக்காகக் கொண்டு வந்த இசைப்பண் மேதை; an exponant in Tamil music.

*[மாரிமுத்து+பிள்ளை]*

**மாரிமூலை** *māri-mūlai*, பெ. (n.) வடகிழக்கு மூலை; north east side.

*[மாரி+மூலை]*

**மாரியான்பாரை** *māriyāṉ-pārai*, பெ. (n.) ஒரு வகை மீன்; horse malkerel.

*[மாரியான்+பாரை]*

**மால்** *māl*, பெ. (n.) நிலக்கடலைப் பயிரில் பூவிட்ட பின் நிலத்தில் இறங்கும் விழுது; side root buds penetrating the earth after the groundnut plant flowered.

*[மா–மால்]*

**மாலக் கயிறு** *māla-k-kaiṟu*, பெ. (n.) உறுதியான நீண்ட கயிறு; strong rope. (வ.வ.தொ.க.36).

*[மால்+அ+கயிறு]*

**மாவத்திருப்பு** *māvattiruppu*, பெ. (n.) கும்பகோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kumbakonam Taluk.

*[மா+அத்தி+இருப்பு]*

**மாவடை**[1] *māvaḍai*, பெ. (n.) அறந்தாங்கி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[மா(விலங்கு)+அடை]*

**மாவடை**[2] *māvaḍai*, பெ. (n.) குதிரை கட்டுமிடம்; horse stable.

*[மா+அடை]*

**மாவுக்கறி** *māvu-k-kaṟi*, பெ. (n.) மாவு போல இருக்கும் இறைச்சி; delicate flesh. (கொ.வ.வ.சொ.123).

*[மாவு+கறி]*

**மாவுச்சட்டி** *māvu-c-caṭṭi*, பெ. (n.) கல்கலந்து செய்யப்பட்ட ஏனம்; a vessel.

*[மாவு+சட்டி]*

**மாவுலாசி** *māvulaśi*, பெ. (n.) ஒரு வகை மீன்; sea fish.

*[மா+உலாசி]*

**மாவேந்தன்** *māvēndaṉ*, பெ. (n.) முத்தமிழ் நாட்டு அல்லது தமிழகத் தலைவன்; emperor.

*[மா+வேந்தன்]*

**மாளிகைமேடு** *maligai-mēḍu*, பெ. (n.) கடலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Cuddalore Taluk.

*[மாளிகை+மேடு]*

**மாற்றமாடு–தல்** *māṟṟam-āḍu*, செ.குன்றா.வி. (v.t.) சொல்லாடுதல், உரையாடுதல்; to speak.

**தெ. மாற்றாடு – மாட்டாடு; க. மாத்தாடு**

*[மாற்றம்+ஆடு]*

மாற்றம்–சொல்; ஆடு என்பது ஒரு துணை வினை.

**மாற்றுச் சான்றிதழ்** *māṟṟu-c-cāṉṟidaḻ*, பெ. (n.) ஒரு கல்வி நிறுவனத்திலிருந்து மற்றோர் கல்வி நிறுவனத்திற்குச் செல்லும்போது முதல் நிறுவனத்தார் கொடுக்கும் சான்றிதழ்; transfer certificate.

*[மாற்று+சான்றிதழ்]*

**மாற்றுத் திறன்** *māṟṟu-t-tiraṉ*, பெ. (n.) உறுப்புக்குறைவு உள்ளவரிடம் காணப்படும் திறமை; talent seen in physicaly handicaped.

*[மாற்று+திறன்]*

**மாற்றுத் திறனாளர்** *mārru-t-tiraṉāḷar,* பெ. (n.) ஊனமுற்றோர்; physically handicaped, disabled persons, physically challenged.

மறுவ. மாற்றுத்திறனாளி

*[மாற்று+திறனாளர்]*

**மாறனேரி** *māṟaṉēri,* பெ. (n.) பாண்டிய நாட்டில் உள்ள ஊர்; a village in Pandiya nadu.

*[மாறன்+ஏரி]*

இவ்வூர் முற்காலத்தில் மாறமங்கலம் என்னும் பெயர் பெற்றிருந்தது. அங்கிருந்த ஏரியின் சிறப்பால் மாறனேரியாயிற்று என்பர்.

**மாறாயம்** *māṟāyam,* பெ. (n.) பெண் பூப் படைந்த செய்தியைத் தாய்மாமனுக்குத் தூதாகச் சென்று சொல்வது; informing maternal uncle about the attainment of puberty. (கொ.வ.வ.சொ.123).

*[மாறு+ஆயம்]*

**மாறோக்கம்** *māṟōkkam,* பெ. (n.) 1. நப்ப சலையாரின் ஊர்; name of the hamlet where the sangam poetess Nappa-salaiyar lived. 2. வெள்ளோக்கத்தார் எனும் உழுவித் துண்ணும் வேளாளர்க்கும் வேறான உழு துண்ணும் குடிமக்கள் வாழும் ஊர்; name of a hamlet where the tillers of the land - agriculturists live.

*[மாறு+(ஒக்கல்)ஒக்கம்]*

**மான்கொம்பு** *māṉkombu,* பெ. (n.) திருப் பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[மான்+(கோம்பை)கொம்பு]*

**மான்மியக்கும்மி** *māṉmiya-k-kummi,* பெ. (n.) கும்மிப்பாடல் வகைகளில் ஒன்று; a type of kummi play.

*[மான்மியம்+கும்மி]*

**மானகிரி** *māṉagiri,* பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[மால்(தொடர்ச்சி)–மால்–மான+கிரி]*

**மானங்குல மானம்** *māṉaṅgula-māṉam,* பெ. (n.) படிமங்களின் உயரத்தினை முடிவு செய்வதில், பின்பற்றப் படும் மரபு; a measuring method in sculpturing.

*[மான்+அங்குலம்+மானம்]*

**மானதி** *māṉadi,* பெ. (n.) திருச்செங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengodu Taluk.

*[மான்+அத்தி]*

**மானாபரணநல்லூர்** *māṉapārana nallūr,* பெ. (n.) அம்பாசமுத்திர வட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Ambasamuthiram (Thirunelveli).

*[மானம்+ஆபரணன்+நல்லூர்]*

**மானாமதி** *māṉāmadi,* பெ. (n.) செங்கற்பட்டு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chenglepet Taluk.

*[மான்+அம்+மத்தி]*

**மிட்னமல்லி** *miṭṉamalli,* பெ. (n.) சைதாப் பேட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Saidapet Taluk.

*[மேட்டு+இன்+மல்லி]*

**மித்திராவயல்** *mittirāvayal,* பெ. (n.) திருவா டானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[முத்தரையர்+வயல்]*

**மிதப்புக்கட்டை** *midappu-k-kaṭṭai,* பெ. (n.) மீன் பிடி தூண்டிற் கயிற்றிலிணைந்த சிறு கட்டைத் துண்டு; a small log connected to fish hook.



**மிதிமனை** *midimaṉai,* பெ. (n.) கைத்தறி நெச வில் புனி விழ உதவும் கருவி; an implement in handloom weaving.



[மிதி+மனை]

**மிதிவிழுதல்** *midiviḻu-,* பெ. (n.) ஒயிலாட் டத்தில், கால்களின் இயக்கம்; movement of steps in oyilāṭṭam.

[மிதி+விழுதல்]

**மிதுக்க வற்றல்** *midu-k-kavaṟṟal,* பெ. (n.) திருநெல்வேலி மாவட்ட திருமண விருந்து களில் பரிமாறப்படும் உணவுப் பண்டம்; a side dish in marriage feast in Thirunelveli district.

[மிதுக்கம்+வற்றல்]

**மிளகுச் சம்பா** *miḷagu-c-cambā,* பெ. (n.) நெல் வகை; a kind of paddy. (வ.வ.வே.க.37).

[மிளகு+சம்பா]

**மின்னல்** *minnal,* பெ. (n.) அரக்கோணம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Arakkonam Taluk.

[ஒருகா. மின்னல் தாக்கிய இடம்]

**மின்னாம்பள்ளி** *minnāmpaḷḷi,* பெ. (n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

[மின்னல்+பள்ளி]

**மின்னாம்பூச்சி** *ma,* பெ. (n.) மின்மினிப்பூச்சி; glow warm.

[மின்னும்+பூச்சி]

**மின்னாமொழி** *minnāmoḻi,* பெ. (n.) அறந் தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

[மின்னம்+மொழி]

**மீசநல்லூர்** *mīśanāllur,* பெ. (n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wandiwash Taluk.

[மீசல்+நல்லூர்]

**மீட்டடைவு** *mīṭṭaḍaiuv,* பெ. (n.) நாட்டிய அடைவு வகை; stepping in dance.

[மீட்டு+அடைவு]

அரைமண்டியில் வலது காலை அதன் இடத்திலேயே தட்டி, வலப்புறமாகத் தோள்களுக்கு இடைப்பட்ட தொலைவு வரை அகற்றித்தட்டி, பின்பு இடது காலை அகற்றித் தட்டி வைத்த வலது காலின் பின்னால் குத்தி வைத்த பின்னர் வலது காலையகற்றி வைத்த இடத்திலேயே தட்டுதலும், இதே போன்று இடக்காலால் செய்தலும் இவ்வடைவு ஆகும்.

**மீட்டாண்ட நாச்சியார்** *mīṭṭāṇḍa-nācciyār,* பெ. (n.) 1257ஆம் ஆண்டு திருவண்ணாமலை கோயிலுக்குப் பாண்டங்கள் வாங்க 110 பொன் வழங்கிய இரண்டாம் கோப்பெருஞ்சிங்கனின் மனைவி; Meettanda nachiyar wife of Koperunsingan (1257) gave 110 gold coins for purchasing articles for the temple.

[மீட்டு+ஆண்ட+நாச்சி+ஆர்]

**மீதிகுடி** *mīdikuḍi,* பெ. (n.) சிதம்பரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

[மீதி+குடி]

**மீயாளுங்கணம்** *mīyāḷuṅkaṇam,* பெ. (n.) மேலதிகாரம் செய்யும் குழு; a committee which has the controlling power. (தெ.கோ.சா.3:2).

[மீ+ஆளும்+கணம்]

**மீராளூர்** *mīrāḷur,* பெ. (n.) சிதம்பரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

[மீரான்+ஊர்]

**மீனவணம்** *mīnavaṇam,* பெ. (n.) நாகப் பட்டினம் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Nagappattinam.

[மீன்+ஆவணம்(தெரு)]

**மீன்சினை** *mīṉsiṉai,* பெ. (n.) மீன் முட்டை; fish roe.

*[மீன்+சினை]*

**மீனக்கை** *mīṉa-k-kai,* பெ. (n.) நாட்டிய நளி நயக்கை; a dance pose.

*[மீனம்+கை]*

**மீனக்கொடுதி** *mīṉa-k-koḍudi,* பெ. (n.) மீன (பங்குனி) மாதத்தில் காட்டை அழிக்கும் முன் தெய்வத்திற்குப் படைக்கும் கொடைவிழா; a function of making offerings to the deity before setting fire to the forest for new cultivation during the month of Panguni (March-April).

*[மீனம்+கொடுதி]*

**மீனச்சல்** *mīṉa-c-cal,* பெ. (n.) விளவங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilavancode Taluk.

*[ஒருகா. நத்தம் – நத்தல் – நச்சல் – அச்சல் மீன்+அச்சல்]*

**மீனம்பர்** *mīṉambar,* பெ. (n.) மீன் வயிற்றி லிருந்து பெறப்படும் அம்பர் எனும் ஒரு வகை மணப்பொருள்; ambergris.

**மறுவ. ஓர்க்கோவை, ஒக்கோவை**

*[மீன்+அம்பர்]*

**மீனாடு** *mīṉāḍu,* பெ. (n.) சிந்துவெளிப் பகுதிக்கு வழங்கிய பழைய பெயர்; Indus valley area known as meennāḍu (fish land). மீனாடு (விபுலானந்தர் – யாழ்நூல்).

*[மீன்+நாடு]*

**மீனாவளல்** *mīṉāvaḷal,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[மீன்+(வளவு)வளவல்–வளல்]*

**மீனெறிவேல்** *mēṉerivēl,* பெ. (n.) நீண்ட ஈட்டி; lance.

*[மீன்+எறி+வேல்]*

**முக்கட்டக்காய்** *mukkaṭṭa-k-kāy,* பெ. (n.) மூன்று விதைளையுடைய நிலக்கடலைக் காய்; a ground nut having three nuts in a shell.

*[மூன்று+கட்டம்+காய்]*



**முக்கரையான மும்முடிச் சோழபுரம்** *mukkaraiyāṉa-mummuḍiccōḻapuram,* பெ. (n.) மன்னார்குடி வட்டத்தில் அமைந் துள்ள ஓர் ஊர்; a village in Mannarkudi Taluk.

**முக்காணி** *mukkāṇi,* பெ. (n.) ஏற்றக்கொம்பில் சாலோடு இணைக்கும் கருவி; a connective device in piccotah pole.

*[மூன்று+(கால்) காலி – காணி]*

**முக்காணி முடிச்சு** *mukkāṇi muḍiccu,* பெ. (n.) முடிச்சு வகை; a kind of knot.

*[முக்காணி+முடிச்சு]*

**முக்காணியூர்** *mukkāṇiyūr,* பெ. (n.) மூவேந் தர்களின் பொதுப்பிறப்பிடமாகக் கருதப்படும் ஊர்; mukkani-y-ūr considered to be the common birth place of Chera, Chola, Pandya dynasties of Tamil royal decendency.

*[மூ(ன்று)+காணி+ஊர்]*

**முக்காத்துட்டு** *mukka-tuṭṭu,* பெ. (n.) பழைய காலத்து மூன்று காசு; three paisa in a rupee of 192 paisa value.

*[முக்கால்+துட்டு]*

நூறு காசுகள் கொண்ட புதிய உருவா அறிமுக மாவதற்கு முன்பு ஆங்கில ஆட்சிக் காலத்து உருவா (12 விடு காசு – 1 அணா, 16 அணா – 1 ரூபாய்) 192 விடுகாசு மதிப்பாதலால் 4 விடுகாசு ஒரு துட்டு எனும் பெயர் பெற்றது. துட்டு என்பது ஒரு அணாவில் மூன்றில் ஒரு பங்கு மதிப்புடையது. முக்கால் துட்டின் மதிப்பு 3 விடுகாசு.

**முக்குடை** *mukkuḍai,* பெ. (n.) சமணத்தின் பிரிவாகிய சாங்கியரின் உருவ வழிபாட்டுத் திருமேனியின் தலைமேல் குடை மேல் குடையாக மூன்று குடைகள் அமைந்திருக்கும் பாங்கு; three umbrellas designed one above another, an Thirthangaras of Tamil - Sankya faith.

*[மூன்று+குடை]*

**முக்குரும்பி** *mukkurumbi,* பெ. (n.) போளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Polur Taluk.

*[மூன்று+குறும்பி]*

**முக்குளிப்பான்** *mukkuḷi-p-pāṉ,* பெ. (n.) வாத்து போல் உடலமைப்புக் கொண்ட பறவை யினம்; a bird.

*[மூழ்கி+குளிப்பான்]*

**முக்கோல் அந்தணர்** *mukkōl andaṇar,* பெ. (n.) முக்கோல், மனை, நீர்க்கடிகை ஆகிய மூன்றும் ஏந்தி தோன்றிய (ஆகம) வழியில் தவம் செய்யும் தமிழ் முனிவன்; ancient Tamil saint of TINAI social order with trudant plank and water in small jar, contrary to Aryan vedic andanan. "உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்... அந்தணீர்" (கலி.).

*[முக்கோல்+அந்தணன்]*

**முக்கோணத்தட்டு** *mu-k-kōṇa-t-taṭṭu,* பெ. (n.) வடிதட்டாக பயன்படுத்தப்படும் ஏன வகை; a triangular plate.

*[மூன்று+கோணம்+தட்டு]*

**முகதலை** *mugatalai,* பெ. (n.) கைமாற்றுக் கடன்; hand loan.

**முகத்தாளி** *mugattāḷi,* பெ. (n.) தலைமைத்திற முடையோன், முதன்மையானவன்; leader, authority.

*[முகத்து+ஆளி]*

**முகப்போலி நடனங்கள்** *muga-p-pōli naḍaṉaṅgaḷ,* பெ. (n.) விலங்குகளைப் போன்று உருவம் புனைந்து ஆடும் ஆட்டங்கள்; a dance of wearing animal faces.

*[முகம்+போலி+நடனம்]*

**முகிழ்த்தகம்** *mugiḻttagam,* பெ. (n.) திருவா டானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[ஒருகா. தடாகம் – தகம் – முகிழ்+தகம்]*

**முகுள் விளக்கு** *muguḷ-viḷakku,* பெ. (n.) சிறிய விளக்கு வகை; a lamp variety.

*[முகிழ்–முகுள்+விளக்கு]*

**முகையூர்** *mugaiyūr,* பெ. (n.) சிதம்பரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[முழை–முகை+ஊர்]*

**முச்சுரப் பிறழ்ச்சிப் பண்** *muccura-p-piraḻccippaṇ,* பெ. (n.) பிறழ்ச்சிப் பண்ணின் ஒரு வகை; a musical note.

*[மு(மூன்று)+சுரம்+பிறழ்ச்சி+பண்]*

**முசரியம்** *musariyam,* பெ. (n.) நன்னிலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Nannilam Taluk.

*[முசிறி–முசரியம்]*

**முசடு** *musaḍu,* பெ. (n.) ஒரு வகை மீன்; brown tripel tail.

*[முசு–முசுல்; முசு–முசடு]*

**முசலாடி** *musalāḍi,* பெ. (n.) ஒரு வகை மீன்; brown tripel tail.

*[முசல்+ஆடி]*

**முசிறி** *musiri,* பெ. (n.) திருச்செங்கோடு வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengodu Taluk.

*[முசிறி–முசிரி (கொ.வ.)]*

**முசுடு** *musuḍu,* பெ. (n.) ஒன்றும் தெரியாத அப்பாவி, கள்ளம் கவடற்றவன்; a dull person. (கொ.வ.வ.சொ.124).

*[முசு+முசுடு]*

**முசுவு** *mušuvu,* பெ. (n.) ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரே மூச்சில் செய்யும் பணி முடுக்கம்; quickness in performance.

*[மூசு–முசு–முசுவு]*

**முட்டக்குத்தி** *muṭṭa-k-kutti,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[முட்டம்+குத்தி]*

**முட்டம்** *muṭṭam,* பெ. (n.) பெரிய வீடு, வளமனை, அரண்மனை; a big house, bangalow, palace. என் முட்டம் புகாதே (இ.வ.).

*[முகடு–முகட்டம்–முட்டம்]*

**முட்டல்** *muṭṭal,* பெ. (n.) ஆத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Attur Taluk.

*[முட்டம்–முட்டல்]*

**முட்டி**[1] *muṭṭi,* பெ. (n.) நாட்டியத்தில் முத்திரை நிலை; a hand pose in dance.

*[முட்டு–முட்டி]*

**முட்டி**[2] *muṭṭi,* பெ. (n.) பெரிய மரக்கட்டை; a log of wood. (கொ.வ.வ.சொ.124).

*[முடு–முட்டு–முட்டி]*

**முட்டியம்** *muṭṭiyam,* பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichi Taluk.

*[முட்டம்–முட்டியம்]*

**முட்டு–தல்** *muṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கலப்பை பொருத்துதல்; to fix the plough. 2. தொடுதல்; to touch.

*[முள்–முடு–முட்டு]*

**முட்டுக்கோல்** *muṭṭu-k-kōl,* பெ. (n.) வண்டியின் பின்பக்கச் சுமையை (பாரத்தை)த் தாங்க கீழ்ப் பகுதியில் வைத்திருக்கும் கட்டை; a drop in cart. (கொ.வ.வ.சொ.124).

*[முட்டு+கோல்]*



**முட்டுவழி** *muṭṭuvaḷi,* பெ. (n.) வேளாண் தொழிலுக்குச் செலவிடப்படும் தொகை; agriculture expenses. (கொ.வ.வ.சொ.124).

*[மூட்டு(செலவுகளைப் பகுத்துப் பொருத்தும்)+வழி]*

**முடச்சூர்** *muḍaccūr,* பெ. (n.) கோயமுத்தூர் மாவட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Coimbatore.

*[முடச்சு+ஊர்]*

இவ்வூரை வீரராசேந்திர சோழன் ஆண்டு வந்தான் எனக் கல்வெட்டு கூறுகிறது.

**முடப்புளி** *muḍappuḷi,* பெ. (n.) திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vriddhachalam Taluk.

*[முடம்(வளைவு)+புளி]*

**முடவேலி** *muḍavēli,* பெ. (n.) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramakkudi Taluk.

*[முடம்+வேலி]*

**முடிகண்டம்** *muḍikaṇḍam,* பெ. (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[முடி+(கொண்டான்)கண்டம்]*

**முடித்தலை** *mudi-t-talai,* பெ. (n.) கொங்கு நாட்டில் உள்ள ஒரு ஊர்; a village in Kongu nadu

*[முடி+தலை]*

இவ்வூர் தற்போது 'கொடுமுடி' என்று அழைக்கப்படுகிறது.

**முடித்தானை** *muḍittāṉai,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[முடி+தானை]*

**முடிறு** *muḍiṟu,* பெ. (n.) ஒரு வகை மீன்; gizzard shad.

*[முடி-முடிறு]*

**முடிவு** *muḍivu,* பெ. (n.) ஆளத்தியில் பாடப்படும் பகுப்பு முறை; a song variation.

*[முடி-முடிவு]*

**முடுக்கூரணி** *muḍukkūraṇi,* பெ. (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[முடுக்கு+ஊருணி]*

**முடுகியல் நடை** *muḍugiyal-naḍai,* பெ. (n.) தொங்கலைப் பாடுதற்கு உரிய நடை; a metre in prosody.

*[முடுக்கு+இயல்+நடை]*

**முடுதுரை** *muḍuturai,* பெ. (n.) 1. சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk. 2. அவினாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Avanashi Taluk.

*[முடு(முதலை)+(துறை)துரை]*

**முடையூர்** *muḍaiyūr,* பெ. (n.) செங்கற்பட்டு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chenglepet Taluk.

*[முடை(பாய்முடைதல், கூடைமுடைதல்)+ஊர்]*

**முண்டக்கண்** *muṇḍa-k-kaṇ,* பெ. (n.) கூட்டமாக இருக்கும் ஒரு வகை மீன்; seven banded cardinal fish.

*[முண்டு-முண்ட+கண்]*

**முண்டக்கண்கத்தளை** *muṇḍa-k-kaṇka ttalai,* பெ. (n.) ஒரு வகை மீன்; black banded jew fish.

*[முண்டக்கண்+கத்தளை]*



**முண்டச்சேடு** *muṇḍaccēḍu,* பெ. (n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[முண்டல்+சேடு]*

**முண்டம்** *muṇḍam,* பெ. (n.) சிற்பியர் வடிவமைக்கும் மார்பணி; an ornament in sculpture.

*[முண்டு-அம்]*

**முண்டன்சுறா** *muṇḍaṉ-cūṟā,* பெ. (n.) சுறா மீன் வகையுள் ஒன்று; gangetic shark.

*[முண்டன்+சுறா]*

**முணுக்கன்** *muṇu-k-kaṉ,* பெ. (n.) அமைதியாக இருப்பவன்; a calm person. (கொ.வ.வ. சொ.125).

*[முணு-முணுக்கன்]*

**முத்தரச நல்லூர்** *muttaraša-nallūr,* பெ. (n.) திருச்சி மாவட்டத்திலுள்ள ஒரு ஊர்; a village in Tiruchi.

*[மூன்று > மூ+தரையர்+நல்லூர்]*

முத்தரையர் என்னும் பெயர் வாய்ந்த பண்டைக் குலம் ஒன்று பழந்தமிழ் நூல்களிலே பேசப்படுகின்றது. அவர்கள் சிறந்த படைவீரராக விளங்கினர்.

**முத்தரசபுரம்** *muttarašapuram*, பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள ஒரு ஊர்; a village in Thanjavur.

*[முத்தரையன்–முத்தரசன்+புரம்]*

சத்துரு பயங்கர முத்தரையன், பெரும் பிருகு முத்தரையன் முதலியோரின் வீரச் செயல்களை வரலாறு குறிக்கின்றது.

**முத்தரசன்** *muttarašan*, பெ. (n.) இராம நாதபுர மாவட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Ramanathapuram.

*[முத்தரையன்–முத்தரசன்]*

**முத்தாப்பு செய்–தல்** *muttā-p-pucēy-*, 1 செ.குன்றாவி. (v.t.) சிறப்பு செய்தல்; to honour.

*[முத்தாய்ப்பு+செய்தல்]*

**முத்திரை** *muttirai*, பெ. (n.) பெருவங்கிய (நாகசுர)த்தின் உறுப்புகளில் ஒன்று; a part of nadasvaram.

*[முத்து–முத்திரை]*

**முத்துவரிசை** *muttuvarisai*, பெ. (n.) 2,4 வடி களின் வழி செல்லும் பாவு வரிசை; a handloom feature.

*[முத்து+வரிசை]*

**முத்துக்கெண்டை** *muttu-k-kendai*, பெ. (n.) கெண்டை மீன் வகையுள் ஒன்று; long ray.

*[முத்து+கெண்டை]*

**முத்துவளம்** *muttuvalam*, பெ. (n.) கடலில் காணலாகும் முத்துக்களின் அடர் தொகுதி; pearl as seen in sea.

*[முத்து+வளம்]*

**முதல்** *mudal*, பெ. (n.) பண் ஒரு பாடலொடு பொருத்தப்படுங்கால் பெறும் பெயர்; a term to denote tune setting in a song.

*[முது–முதல்]*

**முதல் ஒட்டு ஆளத்தி** *mudalottuālatti*, பெ. (n.) ஆளத்தி வகையினுள் ஒன்று; a musical term.

*[முதல்+ஒட்டு+ஆளத்தி]*

**முதல் நடை** *mudal-nadai*, பெ. (n.) தாளக் காலத்தின் நடைகளில் ஒன்று; a time measure.

*[முதல்+நடை]*

**முதலிவயல்** *mudali-vayal*, பெ. (n.) திருவா டானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[முதலி+வயல்]*

**முதனை** *mudanai*, பெ. (n.) விருத்தாசலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vriddhachalam Taluk.

*[முதன்–முதனை]*

**முதுகன்றிருமல்** *mudukanirumal*, பெ. (n.) ஒரு வகை நுண் உயிரி; louse (or) husk.

*[முதுகன்+திருமல்]*

**முதுகு** *mudugu*, பெ. (n.) கொம்பு விளையாட்டில் இடம் பெறும் கழியின் தலைப்புப் பகுதி; top of pole.

*[முது+முதுகு]*

**முதுகுக்கு முதுகு** *mudu-k-ku-mudugu*, பெ. (n.) இணையை விட்டு விட்டு வேறு ஒருவனைப் பிடித்து முதுகுக்கு முதுகு தொடும் விளை யாட்டு; back to back tag.

*[முதுகு+கு+முதுகு]*

**முதுவளர்குடி** *muduvalarkudi*, பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[முது+வளர்+குடி]*

**முதுவன்திடல்** *muduvantidal*, பெ. (n.) சிவ கங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[முதுவன்+திடல்]*

**முந்தாநாள்** *mundā-nāl*, பெ. (n.) நேற்றைக்கு முன் நாள்; day before yesterday.

*[முந்தை+நாள்– முந்தைநாள் – முந்தையாம் நாள் – முந்தாநாள்]*

**முந்தி**[1] *mundi*, பெ. (n.) முந்தானை; free part of the saree.

*[முன்–முந்து–முந்தி]*

**முந்திப்பலகை** *mundi-p-palagai*, பெ. (n.) பட்டுச் சேலையில் முந்தானைபோடப் பயன் படுத்தும் அரை அடி அகலம் 6 அடி நீளம் கொண்ட தேக்குப் பலகை; a wooden plank used in silk saree weaving.

*[முந்தி+பலகை]*

**முப்பதுவெட்டி** *muppadu-veṭṭi*, பெ. (n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wallajah Taluk.

*[ஒருகா. முப்பதுபட்டி–முப்பதுவட்டி–முப்பது+வெட்டி]*

**முப்புரி** *mu-p-puri*, பெ. (n.) திண்டிவனம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[மூன்று+புரி]*

**மும்முடிச்சோழகன்** *mu-m-muḍi-c-cōḻagaṉ*, பெ. (n.) கடலூர் மாவட்டத்திலுள்ள ஒரு ஊர்; a village in South Arcot.

*[மும்முடி+சோழன்]*

இவ்வூர் இராசராசனின் விருது பெயரால் ஏற்பட்ட ஊராகும்.

**மும்முனி** *mummuṉi*, பெ. (n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wandiwash Taluk.

*[மு(மூன்று)+முனி]*

**முரடன் சுறா** *muraḍaṉ-šurā*, பெ. (n.) சுறா மீன் வகையுள் ஒன்று; gangetic shark.

*[முரடன்+சுறா]*

**முரட்டுமஞ்சி** *muraṭṭu-mañji*, பெ. (n.) யாழின் ஒலி நயத்தில் பகையாகக் கருதப்படுவது; anti - feature in harp.

*[முரடு+மஞ்சி]*

**முராமணி** *murāmaṇi*, பெ. (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[முரல்+மணி]*

**முருக்கம்** *murukkam*, பெ. (n.) திண்டிவனம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[முருக்கு+அம்]*

**முருக்கேரி** *murukkēri*, பெ. (n.) 1. வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk. 2. திண்டிவனம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[முருக்கன்+ஏரி]*

**முருகாப்பாடி** *murugāppāḍi*, பெ. (n.) போளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Polur Taluk.

*[முருகன்+பாடி]*

**முருகினிவயல்** *muruginivayal*, பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[முருகு+அணி+வயல்]*

**முருங்கை** *muruṅgai*, பெ. (n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurantakam Taluk.

*[முருங்கு–முருங்கை]*

**முருதகன்முடி** *murudagaṉmuḍi*, பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[முருதகன்+முடி]*

**முல்லனம்** *mullaṉam*, பெ. (n.) வேலூர் மாவட்டத்தில் வேலூர் கோட்டைக்கு அருகில் உள்ள ஓர் ஊர்; a village near fort in Vellore.

*[முள்+வனம்]*

**முல்லைத் தீம்பாணி** *mullai-t-tīmbāṇi*, பெ. (n.) இன்றைய மோகன இராகத்தின் பண்டைய பெயர்; ancient Tamil name of 'mōgana rāga' in music.

*[முல்லை+தீம்+பாணி]*

**முழிங்கள் திரப்பட்டு** *mulingal- tirappattu,* பெ. (n.) திருவள்ளூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Tiruvalur.

*[முழிங்கள்+திரம்+பற்று]*

**முழுக்கைத்தட்டு** *mulu-k-kai-t-tattu,* பெ. (n.) கும்மியாட்டத்தில் கைகளைத் தட்டும் முறை; clapping in kummi dance.

*[முழு+கை+தட்டு]*

**முழுவி** *muluvi,* பெ. (n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[முழுவல்–முழுவி]*

**முழையூர்** *mulaiyūr,* பெ. (n.) காரைக்கால் வட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Karaikkal.

*[முழை(குகை)+ஊர்]*

இது குறும்பர் நாட்டு ஊர்களில் ஒன்றாகும். இதனைத் தலைமையிடமாகக் கொண்ட நாடு 'முழையூர்நாடு' என்னும் பெயருடன் திகழ்கின்றது.

**முழையூர் நாட்டுக்கோன்** *mulaiyūrnāttu-k-kōn,* பெ. (n.) திருநள்ளாற்றுச் சிவன் கோயிலில் "சோலை இடர் தீர்த்தான் முழையூர் நாட்டுக் கோன்" என்று குறிக்கப்பட்டவன்; a person mentioned in temple inscription.

*[முழையூர்+நாட்டு+கோன்]*

**முள்ளக்காரா** *mulla-k-kārā,* பெ. (n.) ஒரு வகைச்சிறு கடல் மீன்; a kind of sea fish small in size.

*[முள்ளு+காரா]*

**முள்ளஞ்சாயல்** *mullañcāyal,* பெ. (n.) அலையில் மிதக்கும் தென்னை ஓலை நிழல் பகுதி; shadow caused by coconut tree branches laid on the surface of the sea enabling the fisherman to catch vavval variety of fish.

*[முள்ளம்+சாயல்(நிழல்)]*

**முள்ளரம்** *mullaram,* பெ. (n.) இரும்பிலுள்ள மேடு, பள்ளங்களைத் தேய்த்துச் சரி செய்ய உதவும் இரண்டு பக்கங்களிலும் முள் அமைப்பில் இருக்கும் அர வகை; spiked file on both side.

*[முள்+அரம்]*

**முள்ளன்றம்** *mullanram,* பெ. (n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arakonam Taluk.

*[ஒருகா. முள்+மன்றம்]*

**முள்ளார்மீன்** *mullārmin,* பெ. (n.) ஒரு வகைச் சிறு கடல் மீன்; a kind of sea fish.

*[முள்+ஆர்+மீன்]*

**முள்ளாவலை** *mullāvalai,* பெ. (n.) கடலடித் தரையில் உள்ள மீன்களைப் பிடிப்பதற்காகக் கனமான எடைக்கல் அல்லது சுடு மண் உருளை கட்டப்பட்ட வலை; a type of fishing net.

*[முள்ளுதல் – (முகந்து அள்ளுதல்) முள்– முள்ளான்+வலை]*

**முள்ளி** *mulli,* பெ. (n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurantakam Taluk.

*[முள்–முள்ளி]*

**முள்ளிக்குடி** *mulli-k-kudi,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[முள்–முள்ளி+குடி]*

**முள்ளிப்பாளையம்** *mulli-p-pālaiyam,* பெ. (n.) வேலூர்க்கு அருகில் உள்ள ஒரு ஊர்; a village near the Vellore.

*[முள்ளி+பாளையம்]*

அடர்ந்த முள்ளிச் செடிகள் எங்கும் நிறைந்த பகுதியில் உண்டான ஊர். "முள்ளிப்பாளையம்" காரணப் பெயர்.

**முள்ளுக்காரை** *mullu-k-kārai,* பெ. (n.) காரை மீன் வகையுள் ஒன்று; silver bellies.

*[முள்ளு+காரை]*

**முள்ளுக்குத்தி** *mullu-k-kutti,* பெ. (n.) நெய்யப்பட்ட சேலையை அகலவாக்கில் தொய்வின்றி இழுத்துப் பிடிக்கப் பயன்படுத்தப்படும்

முள் சட்டம்; a frame to hold tightly in handloom.

[முள்-முள்ளு+குத்தி]

**முள்ளுபிளாச்சி** *mullupilācci,* பெ. (n.) முள்ளம்பன்றி மீன் வகை; porcupine fish.

[முள்ளு+பிளாச்சி]

**முள்ளுமுனை** *mullumunai,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

[முள்ளு+முனை]

**முள்ளுவாடி** *mulluvādi,* பெ. (n.) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk.

[முள்-முள்ளு+வாடி]

**முள்ளூறி** *mullūri,* பெ. (n.) ஒரு வகை மீன்; marked fik fish.

[முள்+ஊறி]

**முளை** *mulai,* பெ. (n.) மாடுகளைக் கட்ட நிலத்தில் ஊன்றும் தடித்த மரக்குச்சி; a short pole fixed to tie the cattle in one place.

மறுவ. முளைக்குச்சி

[முள்-முளை]

**முளை ஒதுங்கல்** *mulaiodungal,* பெ. (n.) விதை நெல்லை ஐந்து நாள் காய வைத்து எடுத்து வைத்தல்; preserving the choice paddy for seeding purpose.

[முளை (முளை நெல்)+ ஒதுங்கல்]

**முளைக்குச்சி** *mulai-k-kucci,* பெ. (n.) கால் நடைகளைக் கயிற்றில் கட்டுவதற்காக நிலத்தில் நடப்படும் சிறிய மரக்கம்பு; a short pole fixed to tie the cattle in one place.

[முளை+குச்சி]

**முளைநீர்** *mulai-nīr,* பெ. (n.) விதை நெல் முளைத்தவுடன் பாய்ச்சும் நீர்; watering the paddy field as soon as the seed sprouts.

மறுவ. எடுப்பு நீர், கங்களவு

**முற்றதிகாரி** *murradikāri,* பெ. (n.) விருப்பமாக ஆட்சி செய்பவன்; ruler of autocracy.

[முற்று+அதிகாரி]

**முறிவாடு** *murivādu,* பெ. (n.) நஞ்சை (விடத்தை) முறிக்கும் மருந்து; anti poison medicine. (கொ.வ.வ.சொ.126).

[முறி+(பாடு)வாடு]

**முறுக்கு** *murukku,* பெ. (n.) சிற்பியர் வடி வமைக்கும் ஒரு கையணி; an ornament in sculpture.

[முறு-முறுக்கு]

**முறுக்குத்தட்டம்** *murukku-t-tattam,* பெ. (n.) முறுக்கு பிழியும் கருவி; a device to make a snack *murukku.*

[முறுக்கு+தட்டம்]



**முறுக்குப்பட்டு** *murukku-p-pattu,* பெ. (n.) இரண்டு இழைகள் சேர்த்து முறுக்கிய இழையாலான பட்டு; double thread silk.

[முறுக்கு+பட்டு]

**முறுக்கேறிய மஞ்சி** *murukkēriya-mañji,* பெ. (n.) யாழுக்குரிய நரம்பினை மீட்டுவதில் செய்யத் தகாதது; the don't of playing harp.

[முறுக்கு+ஏறிய+மஞ்சி]

**முறை** *murai,* பெ. (n.) ஆளத்தி பாடப்படும் முறைகளில் ஒன்று; a method of singing āḷatti.

[முறு-முறை]

**முறைநீர்** *murainīr,* பெ. (n.) வளரும் நெற் பயிருக்கு நாள் முறை வைத்து பாய்ச்சும் நீர்;

watering the paddy field on fixed time duration.

*[முறை+நீர்]*

**முறைப்பாடு** *murai-p-pāḍu,* பெ. (n.) செய் வினைச் செய்தலைக் குறிக்கும் நாட்டுப்புறச் சொல்; a term denoting causing mythical evil.

*[முறை+பாடு]*

**முன்கட்டி** *mun-katti,* பெ. (n.) முறத்தில் முன் புறம் உள்ள இரண்டு மூலைகளைக் கட்டுகை; finishing two ends in winnow making.

*[முன்+கட்டி]*

**முன்குச்சி** *munkucci,* பெ. (n.) முறத்தின் முன்பக்கம் குச்சி வைத்துக் கட்டுவது; fire part fixing stick in the fore front of the winnow.

*[முன்+குச்சி]*

**முன்கைத்தொடரி** *munkai-t-todari,* பெ. (n.) கைச்சங்கிலி; hands cuff.

*[முன்+கை+தொடரி]*

**முன்தண்டு** *muntandu,* பெ. (n.) வடும்புத் தண்டில் இருந்து நூல்களை முன்தண்டுக்குக் கொண்டு வந்து இணைக்கும் மரம்; ; a device in handloom.

*[முன்+தண்டு]*

**முன்னேறும் சிலைகள்** *mun-n-ērumśilaigaḷ,* பெ. (n.) தொடுபவர் ஒன்று முதல் பத்து வரை எண்ணுவதற்குள் சிலையாக நிற்கும் விளையாட்டு; a children's game.

*[முன்னேறும்+சிலை+கள்]*

**முனியந்தல்** *muniyandal,* பெ. (n.) திரு வண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvannamalai Taluk.

*[முனி+ஏந்தல்(ஏரி)]*

**முனிவாழை** *munivāḻai,* பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichi Taluk.

*[முன்னி+வாழை]*

**முனிவேடம்** *muni-vēḍam,* பெ. (n.) பூத நடனம்; a bhuta dance.

*[முனி+வேடம்]*

**முனையதரையனான கண்டிய தேவன்** *munaiyataraiyanāna kandiyatēvan,* பெ. (n.) வீரபாண்டியன் 10வது ஆட்சி ஆண்டில் சந்தி ஏற்படுத்தி இதற்காகச் செலவுக்குத் தவசி பெரும் பாக்கத்தில் வரி நீக்கி நிலங்களைத் தானமாக வழங்கிய குறுநில மன்னன்; a chieftain.

*[முனையதரையன்+ஆன+கண்டியன்+தேவன்]*

**மூக்கணாங்கயிறு** *mūkkanāṅkayiru,* பெ. (n.) மாட்டு மூக்கில் குத்திக் கட்டப்படும் கயிறு; a rope tied through the nose of the cattle.

*[மூக்கு+அணம்+கயிறு]*



**மூக்குத்தள்ளு** *mūkku-t-taḷḷu,* பெ. (n.) கோலிக்குண்டு விளையாட்டில் தோற்றவர் குண்டினைத் தள்ளும் வகை; a children's game.

*[மூக்கு+தள்ளு]*

**மூக்குடி** *mūkkudi,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[மூத்த+குடி–மூக்குடி]*

**மூக்குமட்டை** *mūkku-maṭṭai,* பெ. (n.) பனை மரத்தின் நுனி மட்டை; tip of palmyra leaf-stalk.

*[மூக்கு+மட்டை]*

**மூகளூர்** *mūgaḷūr,* பெ. (n.) ஒசூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Hosur Taluk.

*[மூன்று+கல்+ஊர்–முக்கல்லூர்–மூகலூர்–மூகளூர் (கொ.வ.)]*

**மூங்கில் கலவா** *mūṅgil-kalavā,* பெ. (n.) ஒரு வகை மீன்; yellow rock cod.

*[மூங்கில்+கலவாய்]*



**மூங்கில் கூடை** *mūṅgil-kūḍai,* பெ. (n.) மூங்கிலால் பின்னப்பட்ட கூடை; a bamboo basket.

*[மூங்கில்+கூடை]*

**மூஞ்சூர்பட்டு** *mūñjurpaṭṭu,* பெ. (n.) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk.

*[மூஞ்சூர்+(பற்று)பட்டு]*

**மூட்டுக்குட்டி** *mūṭṭu-k-kuṭṭi,* பெ. (n.) பெண் ஆட்டுக்குட்டி; young of she-goat. "மூடும் நாகும் யாடல பெறா" (தொல்.மரபி.).

*[மூடு+குட்டி]*

**மூட்டி** *mūṭṭi,* பெ. (n.) ஆண்கள் உடுத்தும் சாரம்; lungi.

**மறுவ. வரியன்**

*[மூட்டு–மூட்டி]*

**மூடுகுழி** *mūḍu-kuḻi,* பெ. (n.) பல்லாங்குழியில் தோற்று நிரப்பப்படாத வெறுங்குழி; pit not filled in an indoor game. (தெ.ஆ.வ.).

*[மூடு+குழி]*

**மூடூர்** *mūḍūr,* பெ. (n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wandiwash Taluk.

*[முடுவல்–மூடு+ஊர்]*

**மூணாங்குழி** *mūṇāṅguḻi,* பெ. (n.) இறப்புச் சடங்கின்போது, பால் தெளிக்கும் இடம்: a place to conduct the third day death rite.

**த.வ. மூன்றாம்குழி**

*[மூன்றாம்+குழி–மூன்றாங்குழி–மூணாங்குழி (கொ.வ.)]*

**மூணாம்சேத்தி** *muṇamsētti,* பெ. (n.) மன்னார்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mannargudi Taluk.

*[மூன்றாம்+செய்–செய்த்தி–சேத்தி]*

**மூணுகட்டை** *mūṇukaṭṭai,* பெ. (n.) ஒன்று முதல் ஆறு வரையிலான எண்கள் எழுதப்பெற்ற அட்டையும், மூன்று கட்டைகளும் பயன்படுத்தி ஆடப்படும் சூது விளையாட்டு; a dice play.

*[மூன்று+கட்டை]*

**மூத்தாருண்ணி** *mūttāruṇṇi,* பெ. (n.) கல்குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk.

*[மூத்த+ஊருணி]*

**மூத்தை** *mūttai,* பெ. (n.) முதியவன்; old man. மூத்தையால் நடக்க முடியவில்லை (மீனவ.).

*[மூத்தல்–மூத்தை]*

**மூர்தினிவயல்** *mūrdiṇivayal,* பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[மூலை+தண்ணீர்+வயல்]*

**மூலக்காடு** *mūla-k-kāḍu,* பெ. (n.) கள்ளக் குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichi Taluk.

*[மூலை+காடு]*

**மூலக்குச்சி** *mūla-k-kucci,* பெ. (n.) வடும்புத் தண்டையும் முன் தண்டையும் இழுத்துக் கட்டும் குச்சிகள்; an handloom device.

*[மூலை+குச்சி]*

**மூலக்குறிச்சி** *mula-k-kuṟicci,* பெ. (n.) மதுரை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurai Taluk.

*[மூலை+குறிச்சி]*

**மூலம்பேடு அந்தணன்** *mūlampēḍu andaṇaṉ,* பெ. (n.) உப்பு வணிகராயிருந்து கல்வி, ஒகம் ஆகியவற்றில் தேர்ச்சி பெற்று முக்கோல் அந்தணராகிய சான்றோர்; the name found in a burial urn, refers to a agamic Tamil saint though originally he was a salt merchant. Anthanan in TINAI social organisation was a status name of non-Aryan Tamil society.

*[மூலம்பேடு+அந்தணன்]*

**மூலைமடக்கி** *mūlai-maḍakki,* பெ. (n.) முறத்தில் மூலையை மடக்கிப் பின்னுவது; folder knit of corners.

*[மூலை+மடக்கி]*

**மூலவயல்** *mūlaivayal,* பெ. (n.) **1.** திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk. **2.** அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[மூலை+வயல்]*

**மூலனூர்** *mūlaṉūr,* பெ. (n.) தாராபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dharapuram Taluk.

*[மூலன்+ஊர்]*

**மூலைக்கோடு** *mūlai-k-kōḍu,* பெ. (n.) கட்ட விளையாட்டில் நான்கு மூலைகளை இணைக்கும் கோடு; line connecting four corners.

*[மூலை+கோடு].*

**மூவர்கண்மாய்** *mūvarkaṇmāy,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[மூவர்+கண்மாய்]*

**மூவேந்தர் உடன்படிக்கை** *mūvēndar uḍaṉpaḍikkai,* பெ. (n.) மூவேந்தர் கூட்டணி பார்க்க; see *mūvēndarkūṭṭaṇi.*

*[மூன்று+வேந்தர்+உடன்படிக்கை]*

**மூவேந்தர் கூட்டணி** *mūvēndar-kūṭṭaṇi,* பெ. (n.) வடநாட்டுப் படையெடுப்பை முறியடிக்கத் தமிழ் மூவேந்தர்களும் ஒன்றுகூடி தமக்குள் செய்துகொண்ட உடன்படிக்கை; federation of the three Tamil kings made an accepted agreement in view of safeguarding against the invasion or attack of north Indian armies and plunderers. (காரவேலன் கல்வெட்டு).

*[மூ(மூன்று)+வேந்தர்+கூட்டணி]*

**மூன்றன் அலகு** *mūṉraṉ-alagu,* பெ. (n.) ஒரு தட்டும் இரண்டு எண்ணிக்கையும் கொண்ட தாளக்குறியீடு; a time measure of steps.

*[மூன்று+அன்+அலகு 'அன்'–சாரியை]*

**மூன்றாக மறைதல்** *mūṉraga maraidal,* பெ. (n.) விரட்டுபவன் ஓடுகின்றவனைத் துரத்தியும், ஓடுபவன் தப்பிக்க ஓர் இணையரின் (சோடியின்) பின்னால் மறைந்து நின்றும் விளையாடல்; a children's play.

*[மூன்று+ஆக+மறைதல்]*

**மூன்றாங்கல்** *mūṉrāṅkal,* பெ. (n.) தட்டாங்கல் ஆட்டத்தின் வகை; a children's play.

*[மூன்று+ஆம்+கல்]*

**மூன்றுகளை** *mūṉrukaḷai,* பெ. (n.) ஒரெண்ணிக்கைக்குள் பன்னிரு குறில்கள் அடைந்து ஒலிக்கும் நேரம்; a metre in prosody.

*[மூன்று+களை]*

**மூன்று கால் ஓட்டம்** *mūṉrukāl-ōṭṭam,* பெ. (n.) ஓர் அணி இணைகளில் ஒரு பக்கமுள்ள கால்களை ஒரு துண்டுக் கயிற்றால் கட்டிக் கொண்டு ஒடுதல்; three legged relay).

*[மூன்று+கால்+ஓட்டம்]*



**மெட்டடைவு** *mettadaivu,* பெ. (n.) அரை மண்டியில் காலின் மெட்டி அணிகின்ற பகுதியை நிலத்தினின்று எடுக்காமல் குதி காலை மட்டும் உயர்த்தித் தட்டுவது; a step in dance.

*[மெட்டு+அடைவு]*

**மெட்டராத்தி** *mettarātti,* பெ. (n.) உடுமலைப் பேட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in udumalpet Taluk.

*[மேட்டு+அரத்தி]*

**மெய் இழி-தல்** *meyili-,* செ.கு.வி. (v.i.) கருக்கலைதல்; to be abort. அந்த அம்மை யார்க்கு மெய் இழிந்தது. (உ.வ.)

**மறுவ. உடம்பு இறங்குதல்**

*[மெய்+இழி]*

**மெய்ந்நிலை** *mey-n-nilai,* பெ. (n.) பரதநாட்டி யத்தில் பயன்படுத்தப்படும் ஒரு முத்திரை நிலை; a pose in dance.

*[மெய்+நிலை]*

**மெலிவு** *melivu,* பெ. (n.) ஆளத்தி பாடுவதற் கேற்ற பகுப்பு; a melody stage.

*[மெல்–மெலிவு]*

**மெலைமுறி** *mēlaimuri,* பெ. (n.) பாண்டிய நாட்டுச் சிற்றூர்; a village in Pandya territory. "வல்லனாடு மெலைமுறி திருச்சடை முடி என்கிற கிராமம்..." (தெ.சா.7:4:எ.489).

*[மேலை–மெலை+முறி]*

**மென்னிப்பிடிச்சுழி** *menni-p-pidiccuḷi,* பெ. (n.) மாட்டின் கழுத்தின் கீழ்ப்பக்கத்தில் இருக்கும் தீமை பயக்கும் சுழி; a bad mark on cow.

*[மென்னி+பிடி+சுழி]*

**மெனிசி** *menisi,* பெ. (n.) அரூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Harur Taluk.

*[மிளகு–மிளகி–மெனிசி]*

**மேக்களூர்** *mēkkaḷūr,* பெ. (n.) திருவண்ணா மலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvannamalai Taluk.

**தெ. மேக்கலு**

*[மேழகம்–(செம்மறி ஆடு) மேக்கள்+ஊர்]*

**மேகம்** *mēgam,* பெ. (n.) தோற் பாவைக் கூத்தில் பயன்படுத்தப்படும் திரைச்சீலை; a screen in puppet show.

*[மேகு–மேகம்]*

**மேகாத்து** *mēkāttu,* பெ. (n.) மேற்கு திசை யிலிருந்து வீசும் காற்று; westerly wind.

*[மேல்+காற்று]*

**மேச்சல்காடு** *mēccal-kāḍu,* பெ. (n.) ஆடு, மாடு, மேயும் இடம்; grazing ground.

*[மேய்ச்சல்+காடு > மேச்சக்காடு. கொ.வ.]*

**மேட்டாங்காடு** *mētta-ṅ-kāḍu,* பெ. (n.) புன்செய் நிலம், வானவாரி உழவு நிலம்; dry land.

*[மேடு+ஆம்+காடு]*

**மேடைத்தறி** *mēḍai-t-tari,* பெ. (n.) தரை யிலிருந்து 11/2 அடி உயரத்தில் அமைக்கப்பட்ட நெய்யும் வசதியுடைய தறி வகை; handloom on a raised stage.

*[மேடை+தறி]*

**மேம்போக்கு** *mēmpōkku,* பெ. (n.) எதிலும் இடர்ப்படாமல் மேலோட்டமாகச் செய்தல்; soft pedalling nature.

*[மேல்+போக்கு]*

**மேல் கொங்கு** *mēlkōngu,* பெ. (n.) கொங்கு நாட்டின் மேற்பகுதி; western part of Kongu country.

**மறுவ. மீகொங்கு**

*[மேல்+கொங்கு]*

**மேல் கோப்பு** *mēlkōppu,* பெ. (n.) வீட்டின் மேல் உள்ள பகுதிகள்; upper part of wall in a house.

*[மேல்+கோப்பு]*

**மேல்தறி** *mēttari,* பெ. (n.) நிலத்தில் குழி இல்லாமல் அமைக்கப்பட்டிருக்கும் தறி; handloom set above the ground level.

*[மேல்+தறி]*

**மேல்நர்மா** *mēlnarma,* பெ. (n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arakonam Taluk.

*[ஒருகா. மேல்+நன்மா–மேல்நன்மா–மேல் நர்மா (கொ.வ.)]*

**மேல்நிலையாக்கம்** *mēlnilaiyākkam,* பெ. (n.) ஒன்றை மேம்படுத்துதல்; upgradation, further development.

*[மேன்+நிலை+ஆக்கம்]*

**மேல் பளுவு** *mēlpaluvu,* பெ. (n.) ஏணியின் மேல் பகுதியில் மொத்தமான பளுவைப் போட்டு ஏணிக் குச்சிகளை இணைப்பது; connecting the steps in a ladder putting weight above.

*[மேல்+பளுவு]*

**மேலபூடி** *mēlapūḍi,* பெ. (n.) திருத்தணி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruthani Taluk.

*[மேலை+பூண்டி(ஏரி)]*

**மேலழகினானூர்** *mēlāḻaginānūr,* பெ. (n.) நெல்லை மாவட்டத்தில் தென்காசி வட்டத்தில் அமைந்துள்ள ஓர் ஊர்; a village in Thenkasi (Taluk) Nellai (dt.).

*[மேல்+அழகினான்+ஊர்]*

**மேலம்பி** *mēlambi,* பெ. (n.) காஞ்சிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[மேல்+அம்பி]*

**மேலைத்தாங்கல்** *mēlaittāṅgal,* பெ. (n.) வேலூர் மாவட்டத்தில் நெடுங்குணம் அருகில் உள்ள ஓர் ஊர்; a village in Vellore near the Nedumkunam.

*[மேலை+தாங்கல்(ஏரி)]*

'சுக்கிய வருடம்' எனத் தொடங்கும் பிற்காலக் கல்வெட்டில் இவ்வூர் இடம் பெற்றுள்ளது.

**மேவண்டு** *mēvaṇḍu,* பெ. (n.) வண்டின் ஒரு வகை; a kind of beetle.

*[மை–மே+வண்டு]*

**மேவாணி** *mēvāṇi,* பெ. (n.) கோபிச்செட்டி பாளையம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Gopichettipalayam Taluk.

*[மேல்+வாணி]*

**மேளச்சட்டி** *mēḷa-c-caṭṭi,* பெ. (n.) மேள இசைக்குப் பயன்படும் சட்டி; a pot used for music performance.

*[மேளம்+சட்டி]*

**மேற்கட்டு கட்டுதல்** *mēṟ-kaṭṭu-kaṭṭudal,* பெ. (n.) நாட்டுப்புறங்களில், வீடு கட்டும் நுட்பங்களில் ஒன்று; a device of house construction in village.

*[மேல்+கட்டு+கட்டுதல்]*

**மேற்கண்டை** *mēṟkaṇḍai,* பெ. (n.) செங்கற்பட்டு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chinglepet Taluk.

*[மேல்+கண்டி–கண்டை–(கண்டி–நீர்நிலை)]*

**மேற்கணக்கு** *mēṟkaṇakku,* பெ. (n.) ஐம்பது முதலா ஐந்நூறு ஈறாக ஐவகைப்பாவும் பொருள் தெரிமரபின் தொகுக்கப்படுவது; anthology of ancient poems.

*[மேல்+கணக்கு]*

**மேற்செலவு** *mēṟ-celavu,* பெ. (n.) சில்லறைச் செலவுகள்; extra expense.

மறுவ. **கைச்செலவு**

*[மேல்+செலவு > மேச்செலவு]*

**மேற்பரப்பு** *mēṟparappu,* பெ. (n.) ஓவியம் வரைவதற்கேற்ப சுவரைப் பதப்படுத்துதல்; softening the surface of the wall for drawing decorations.

*[மேல்+பரப்பு]*

**மேற்றலை** *mēṟṟalai,* பெ. (n.) பனைமரத்தின் உச்சி; top of palmyra.

*[மேல்+தலை]*

**மேனலூர்** *mēṉalūr,* பெ. (n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arkonam Taluk.

*[மேல்+நல்லூர்–மேல்நல்லூர்–மேனலூர் (கொ.வ.)]*

**மேனிலாப்படியான வீரராசேந்திரபுரம்** *mēnilāppadiyānā-virarāsēndirapuram,* பெ. (n.) திருவாரூர் மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in Thiruvarur.

*[மேல்+நிலை+பாடி+ஆன+வீரராசேந்திரபுரம்]*

**மைதகம்** *maidagam,* பெ. (n.) விளவங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilavancode Taluk.

*[ஒருகா. மை+(தடாகம்) தகம் – மைதகம் (கரிய நீர்நிலை)]*

**மையக்குறுக்கு** *maya-k-kurukku,* பெ. (n.) காலத(சன்னலின்)ரின் நடுவில் (மையத்தில்) இருப்பது; middle rib in window.

*[மையம்+குறுக்கு]*



**மையூர்கிழான்** *maiyūrkilan,* பெ. (n.) இளஞ் சேரல் இரும்பொறையின் அமைச்சராக இருந்த கற்றுத்துறை போகிய பெருமகனார்; a learned minister in the Royal assembly of the Cera king Ilancēral Irumporai.

*[மையூர்+கிழான். மை–எருமை. மையூர்–மைசூர்]*

இவர் அந்வஞ்செள்ளையின் தந்தையும் பெருஞ் சேரல் இரும் பொறையின் மாமனாரும் இளஞ்சேரல் இரும்பொறையின் தாய்வழிப் பாட்டனாரும் ஆவார்.

**மைலார்வாடா** *mailārwāda,* பெ. (n.) திருத் தணி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruthani Taluk.

*[மயில்+ஆல்+வாடி–மயிலார்வாடி–மைலார் வாடா (கொ.வ.)]*

**மைலி** *maili,* பெ. (n.) அருப்புக்கோட்டை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[மயில்–மைலி]*

**மைலை** *mailai,* பெ. (n.) செங்கற்பட்டு வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Chinglepet Taluk.

*[மயில்–மைலை]*

**மைவயல்** *maivayal,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[மொய்–மை+வயல்]*

**மொக்குரி** *mokkuri,* பெ. (n.) தண்ணீரில் மூழ்கி எழுதல்; diving deep and coming up in water.

*[முக்குளி–மொக்குரி (கொ.வ.).]*

**மொக்கையடி** *mokkaiyadi,* பெ. (n.) உள் அடி; a fluid hit.

*[மொக்கை+அடி]*

**மொகுட்டோடு** *moguttōdu,* பெ. (n.) வீட்டின் மேலே முகட்டுப் பகுதியில் போடும் ஓடு; roof tile.

*[முகட்டு+ஓடு > மொகுட்டோடு (கொ.வ.)]*



**மொகுடு** *mogudu,* பெ. (n.) வீட்டின் மேலே உள்ள கூம்பு வடிவ பகுதி; conical shape of the inner roof. (கொ.வ.வ.சொ.129).

*[முகடு > மொகுடு (கொ.வ.)]*

**மொட்டச்சி** *mottaccai,* பெ. (n.) ஒரு வகை மீன்; silver sides.

*[மொட்டை–மொட்டச்சி]*

**மொட்டப்பாறை** *mōtta-p-pārai,* பெ. (n.) மொர மொரப்பான சிறிய பாறை; a rough rock surface.

*[மொட்டை+பாறை]*

**மொட்டனூக்கு** *mottanūkku,* பெ. (n.) பெரிய குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Periyakulam Taluk.

*[மொட்டன்+நூக்கு]*

**மொட்டாக்கோலா** *mottā-k-kōla,* பெ. (n.) கோலா மீன் வகை; half beak.

*[மொட்டை+கோலா]*

**மொட்டிக்கோலா** *mottikkōla,* பெ. (n.) கெண்டை மீன் வகையுள் ஒன்று; silver sides.

*[முட்டி–மொட்டி+கோலா]*

**மொட்டை** *mottai,* பெ. (n.) பல்லாங்குழியில் தோற்றவர் பெயர்; a term to denote the loser in a game.

*[மொழு–மொடு–மொட்டை]*

**மொடவண்டி** *modavandi,* பெ. (n.) ஈரோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Erode Taluk.

*[முட+ஆண்டி–முடவாண்டி–மொடவண்டி (கொ.வ.)]*

**மொடா** *modā,* பெ. (n.) தவசம் (தானியம்) போட்டு வைக்கவும் நீர் ஊற்றி வைக்க உதவும் மட்பாண்டம்; earthen pot.

**மறுவ. மிடா**

*[மிடா–மொடா]*

**மொடை** *modai,* பெ. (n.) 1. தட்டுப்பாடு; scarcity 2. ஒட்டாரம் (பிடிவாதம்); adamant.

*1. [முடை–மொடை (கொ.வ)] 2. [மொடு–மொடை]*

**மொதகெண்டை** *modakendai,* பெ. (n.) கெண்டை மீன் வகையுள் ஒன்று; rainbow sardine.

*[முதை+கெண்டை]*

**மொதை** *modai,* பெ. (n.) பாளை நெல்லும் வைக்கோலும் கலந்த கலவை; left out grains of paddy and paddy stalk particles.

*[மீதம்–மொது+மொதை]*

**மொந்தகலயம்** *mondakalayam,* பெ. (n.) நீர் பருகுவதற்குப் பயன்படும் செம்பு போன்ற மண் கலயம்; small earthern pot used for drinking water.

*[மொந்தை+கலயம்]*

**மொந்தை** *mondai,* பெ. (n.) தோலிலான பண்டைய ஒருமுகப்பறை; a percussion music instrument.

*[மொள்–மொந்தை]*

**மொந்தையன் திருவிழா** *mondaiyan-tiruvilā,* பெ. (n.) திருஆலவாய் நல்லூரில் (மதுரை) ஆடி மாதத்தில் நடைபெறும் விழா; a festival celebrated during August at Madurai.

*[மொந்தையன்+திருவிழா]*

**மொய்பட்டி** *moypatti,* பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichi Taluk.

*[மை–மொய்+பட்டி(கொ.வ.) மை–குறும்பை ஆடு]*

**மொரங்கம்** *morangam,* பெ. (n.) திருச்செங் கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengodu Taluk.

*[முருங்கை – முருங்கம் – மொரங்கம் (கொ.வ.)]*

**மொரசன்** *morasan,* பெ. (n.) முரடன்; a rogue.

*[முரடன்–மொரசன்(கொ.வ.)]*

**மொரான்** *morān,* பெ. (n.) கெண்டை மீன் வகையுள் ஒன்று; ox-eyed herring.

*[மூரன்–மொரான்]*

**மொழங்கு** *molangu,* பெ. (n.) தவச (தானிய)க் கட்டையில் இருக்கும் சிறு துகள்கள்; small particles in corn.

*[முரம்பு–முரங்கு–மொளங்கு–மொழங்கு (கொ.வ.)]*

**மொழுகு–தல்** *molugu-,* 5 செ.குன்றாவி. (v.t.) முறம் கட்டிய பின் மெழுகுதல்; to smear with cow dung.

*[மெழுகு–மொழுகுதல்(கொ.வ.)]*

**மொளசி** *moḷasi*, பெ. (n.) திருச்செங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengode Taluk.

*[முளவு(முயல்)–முளசி–மொளசி]*

**மொளப்பாரி** *moḷa-p-pāri*, பெ. (n.) திருவிழாக் களில் முளைப்பாலிகை வளர்க்கும் சட்டி; a pot.

*[முளை+பாலிகை) பாலி–பாரி]*

**மொளப்பாலிகை** *moḷa-p-pāligai*, பெ. (n.) திருவிழாக்களில் எடுத்துச் செல்லும் முளைப் பாலிகை; plate of sprouted greens during festival days.

*[முளைப்பாலிகை > மொளப்பாலிகை (பே.வ.)]*

**மொளி** *moḷi*, பெ. (n.) கால் தாண்டி ஆட்டத்தில் காலின் மூட்டுப் பகுதியைப் பிடித்து குனிந் திடுதல்; bowing down in children's play.

*[முழி–முளி–மொளி]*

**மொன்னானி** *monnāni*, பெ. (n.) திருவா டானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[ஒருகா. பொன்னானி–மொன்னானி]*

**மொன்னியோலை** *monni-y-ōlai*, பெ. (n.) விரியாத பனையோலை; unspread palm leaf.

*[மொன்னி+ஓலை]*

**மோக்குக் கயிறு** *mōkku-k-kayiru*, பெ. (n.) பாவு உருளை சுற்றும் கயிறு; device in handloom.

*[மோக்கு+கயிறு]*

**மோகூர்** *mōgūr*, பெ. (n.) மதுரை மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Madurai district.

*[மூதூர்–மோகூர்]*

**மோட்டை** *mōṭṭai*, பெ. (n.) வரப்பில் உள்ள துளை; a small hole found in ridge of a field.

*[மோடு–மோட்டை]*

**மோசட்டை** *mōsaṭṭai*, பெ. (n.) விருத்தாசலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vriddhachalam Taluk.

*[ஒருகா. மோசு+பட்டி–மோசுபட்டி–மோசட்டி–மோசட்டை (கொ.வ.) மோசு: தோல்தொழில்]*

**மோசி** *mōsi*, பெ. (n.) 1. தோல் உரித்தல்; peeling skin. 2. முடிகளைதல்; shaving the head.

*[மூசு–மோசு–மோசி]*

**மோசு–தல்**[1] *mōsu-*, 5 செ.குன்றாவி. (v.t.) தலையில் சுமத்தல்; to carry on head.

**தெ. மோசு**

*[முய்–மொய்–மோசு]*

**மோசு–தல்**[2] *mōsu-*, 5 செ.குன்றாவி. (v.t.) களைதல், நீக்குதல்; to remove.

*[மூசு–மொசு]*

**மோசுகுடி** *mōsukuḍi*, பெ. (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[மோசு+குடி–மோசுகுடி. மோசு–தோல்தொழில்]*

**மோட்டு வளை** *mōṭṭuvaḷai*, பெ. (n.) எலி வலை; rat holes at the roof of thatched houses.

*[முகடு–முகட்டு+மோட்டு+வளை]*

**மோடி விளையாட்டு** *mōḍi-viḷaiyāṭṭu*, பெ. (n.) மதுரை வட்டார விழாக்காலத்து விளையாட்டு களில் ஒன்று; a regional festival play in Madurai area.

*[மோடி+விளையாட்டு]*

மதுரை வட்டாரத்தில் தேவாங்குச் செட்டியார், கோயில் பூசாரிகள் பங்கு பெறும் விளையாட்டு.

**மோதுகுட்டை** *mōdukuṭṭai*, பெ. (n.) திருப் பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[ஒருகா. முது–மோது+குட்டை]*

**மோரியர்** *mōriyar*, பெ. (n.) கி.மு.372 முதல் கி.மு. 175 வரை மகதத்தை ஆண்ட அரச மரபினர்; Mouria king who ruled Magada from 372 to 176 B.B. வம்ப மோரியர்.

*[மவுரியர் – மோரியர்]*

**மோரு விளையாட்டு** *mōru-viḷaiyāṭṭu*, பெ. (n.) சிறுமியர் நடித்தாடும் விளையாட்டு; a dramatic play of young girls.

*[மோர்–மோரு+விளையாட்டு]*

**மோழி** *mōḻi*, பெ. (n.) அழுக்குத் துணிகளின் மூட்டை; a bundle of dirty clothes.

*[மூழை–மோழி]*

**மோளக்குச்சி** *mōḷa-k-kucci*, பெ. (n.) தாளம் எழுப்ப உதவும் கோல். stick used for drumming.

*[மேளம்–மோளம்+குச்சி]*

# ய

**யந்திரி** *yandiri,* பெ. (n.) தோலாற் செய்யப்பட்ட இசைக்கருவி; musical instrument made of leather. (1:132).

*[இய–இயந்திரி–யந்திரி]*

**யாப்பு** *yāppu,* பெ. (n.) யாழின் ஓர் உறுப்பு; component of an stringed instrument called lute. (13:83).

*[யா–யாப்பு]*

**யாமளேந்திரர்** *yāmalēndirar,* பெ. (n.) இந்திரகாளியம் நூலின் ஆசிரியர்; author of Indrakāliyam.

**யாமை** *yāmai,* பெ. (n.) பிங்கல நிகண்டு கூறுகின்ற நெய்தலின் பண் வகை; melody type belongs to maritime (Pingala nigandu).

*[யா–யாமை]*

**யாழ** *yāla,* பெ.(n.) இடை, அசை நிலை; an expletive.

*[எல்–எலுவன்–ஏல–ஏழ–யாழ]*

**மறுவ. தரிக கீறுதல்**

**யாழ்ப்பதம்** *yāl-p-padam,* பெ. (n.) நெய்தலுக்குரிய பதினாறு பண்களில் ஒன்று; one of 16 melody type of maritime music.

*[யாழ்+பதம்]*

**யாழ்முரி** *yālmuri,* பெ. (n.) சம்பந்தர் பாடிய பண் வகை; melody sung by a conconized siva saint Sambandar.

*[யாழ்+முரி]*

**யாழ** *yāla,* இடை. (inter.) அசை நிலை; an expletive.

*[எல்–எலுவன–ஏல–ஏழ–யாழ]*

**யாளி வளைவு** *yālivalavu,* பெ. (n.) மண்டப வாயிற்படிகளின் அருகில் அமைக்கப்படும் யாளி உருவம்; a mythical animal carved in front of the threshold of a mandapam.



*[யாளி+வளைவு]*

**யானைத்தவிசு** *yānai-t-tavišu,* பெ.(n.) யானை மீது அமைக்கப்படும் இருக்கை (சௌடோல்); howdah.

*[யானை+தவிசு]*

**மறுவ. அம்பாரி**

**யானை நூல்** *yānainūl,* பெ.(n.) அறுபத்து நான்கு கலையுள் யானையிலக்கணம் அறியுங் கலை (கசபரீட்சை); science relating to the points of the elephant, one of arupattu-nālu-kalai.

*[யானை+நூல்]*

**யானைப்பசி** *yānai-p-pasi,* பெ.(n.) அளவிறந்த பசி; extreme hunger, hyerorexia.

**மறுவ. பெரும்பசி**

*[யானை+பசி]*

**யானைப்பெருஞ்செல்வம்** *yanai-p-peruñ celvam,* பெ.(n.) பெருஞ்செல்வம் (கசேந்திரை சுவரியம்); great affluence, opulence.

*[யானை+பெரும்+செல்வம்]*

**யோக வடிவம்** *yōgavadivam,* பெ. (n.) இறை சிற்பத்தின் வடிவ நிலைகளில் ஒன்று; sculpture form of god.

*[ஓகம்–யோகம்+வடிவம்]*

# வ

**வக்கற்றவன்** *vakkarravan,* பெ. (n.) பிழைக்கும் வாய்ப்பு இழந்தவன்; useless fellow.

*[வகை–வக்கு+அற்றவன்]*

**வக்கா[1]** *vakka,* பெ. (n.) புல்லாங்குழலின் ஓசையில் குரலெடுத்து அகவும் பறவை வகை; a kind of bird which produces the notes equal to that of a flute.

*[வங்கு–வங்கா–வக்கா]*

**வக்கா[2]** *vakkā,* பெ. (n.) ஒரு வகை ஒணான்; a kind of Chameleon.

*[வகை–வக்கு+அற்றவன்]*

**வக்கிரித்திட்டம்** *vakkirit-tiṭṭam,* பெ. (n.) ஆளத்தியினைப் பதினாறு வகையாகப் பிரித்துப் பாடும் முறை; a method of dividing as 16 kinds while improvising introduction to a melody.

*[வக்கரி+திட்டம்]*

**வகு–தல்** *vagu-,* செ.கு.வி. (v.i.) பிளந்து போதல், உடைந்துபோதல்; to get split, divide, to break. அது இரண்டாக வகுந்து போய்விட்டதும்" (உ.வ.).

*[பிள்–விள்–விகு–வகு]*

**வங்கடவலை** *vaṅgaḍa-valai,* பெ. (n.) மீன் பிடிவலை வகைகளுளொன்று; a kind of fishing net.

**வங்கி** *vaṅgi,* பெ. (n.) சிறிய கத்தி; small knife.



**வங்கால் ஆடு** *vaṅgālāḍū,* பெ. (n.) கால்கள் வெள்ளை நிறத்திலமைந்த ஆடு; a goat with legs in white colour.

*[வெண்கால்–வங்கால்+ஆடு (கொ.வ.)]*

**வசி** *vaśi,* பெ. (n.) தட்டு; plate.

*[வைத்தி–வத்தி–வச்சி–வசி]*

**வசித்துவம்** *vasittuvam,* பெ. (n.) ஒன்பான் சித்திகளின் சிறப்பக்காட்சி வடிவினில் ஒன்று; a type of sculpture.

*[வதி–வசி–வசித்துவ]*

**வஞ்சி** *vañji,* பெ. (n.) மருத நிலத்தின் திறப்பண் வகை; melody type belonging to agricultural tract.

*[வள்+சி–வஞ்சி]*

**வட்ட குத்தாட்டு திரும்பல் அடவு** *vaṭṭakut taṭṭu tirumbal aḍavu,* பெ. (n.) ஒயில் கும்மியாட்ட வல்லுநர்கள் கையாளும் அடவு முறை; a stepping method in kummi dance.

*[வட்டம்+குத்தாட்டு+திரும்பல்+அடவு]*

**வட்டச் சடங்குகள்** *vaṭṭaiccadaṅgugal,* பெ. (n.) பிறப்பு, திருமணம், இறப்புத் தொடர்பான சடங்குகள்; rites performed during birth marriage *and death.*

*[வட்டம்+சடங்கு]*

**வட்டப்பாலை** *vaṭṭappālai,* பெ. (n.) முழுமையான வட்டத்தில் பன்னிரண்டு கோணஞ் செய்து, அதில் ஏழு கோணத்தைக் கொண்டு உறழ்படுவது; a musical method.

*[வட்டம்+பாலை]*

**வட்டம்** *vaṭṭam,* பெ. (n.) ஏழிசையின் பகுப்புகளில் ஈறாக வைத்து எண்ணத்தக்கது; the last in the seven notes of the diatonic scale. (t20).

*[வள்–வட்டு–வட்டம்]*

**வட்ட வாசிகை** *vattavāšigai*, பெ. (n.) சிவனின் திருவுருவில் இடம் பெறும் ஒரு வகையான சிற்ப வேலைப்பாடு; a kind of ornament carved in siva's sculpture.

*[வட்டம்+வாசிகை]*

**வட்டவாய்த் தொண்டகம்** *vattavay-t-tondagam*, பெ. (n.) தொண்டகத்தின் ஒரு வகை; a kind of tondagam.

*[வட்டம்+வாய்+தொண்டகம்]*

**வட்டார வழக்கு** *vattāravalagu*, பெ. (n.) தாய் மொழியிலிருந்து கிளைக்கும் சேய்மொழி தனி மொழியாக உருவாவதற்கு முன்பு வட்டாரக் கிளை மொழியாக அரும்பும் நிலையில் எய்தும் சொற்றிரிபு பொருள் திரிபுகள் கொண்ட பேச்சுமொழித் திரிபுகள்; rural dialect usages.

*[வட்டாரம்+வழக்கு]*

**வட்டிகைச் செய்தி** *vattigai-c-ceydi*, பெ. (n.) ஓவியத்தைக் குறிக்குஞ் சொல்; a word that denotes art.

*[வட்டிகை+செய்தி]*

**வட்டை** *vattai*, பெ. (n.) 1. வண்டிச் சக்கரத்தின் சுற்றுவட்ட மரச்சட்டப் பிணைப்புகளில் உள்ள துண்டுப் பிணைப்பு; outer wooden arc in a cart wheel. 2. எந்திர இயங்கிகளின் சக்கரத்தில் தேய்வை (ரப்பர்) வெளி உருட்டு; tyre of the wheel.

*[வள்–வட்டு–வட்டை]*



**வடக்கத்திப்பாணி** *vadakkattippāni*, பெ. (n.) தெருக்கூத்தின் ஒரு வகை; a northern style of dance performed in street drama.

*[வடக்கு+அத்து+இ+பாணி]*

**வடக்கத்திமுடிச்சு** *vadakkatti-mudiccu*, பெ. (n.) முடிச்சு வகை; a kind of knot.

**வடக்காலூர்** *vadakkālūr*, பெ. (n.) வடக்குத் திசையில் உள்ள ஊர்; a town or village on the northern side. அவன் வடக்காலூரி லிருந்து வந்தான் (வடார்க்.வ.).

*[வடக்கு+ஆல்+ஊர் – வடக்காலூர்.)*

'ஆல்' மூன்றன் உருபு ஏழின் *உருபுப் பொருளில் வந்த உருபு மயக்கம்.*

**வடகளவழி** *vadakalavali*, பெ. (n.) பாண்டியர் நாடு; Pandiyar territory "பராந்தக ஸ்ரீ வீரநாரணைகளால் வடகளவழி நாட்டின் கட்டிசைச் சுடர் மங்கலம் (பா.செ.ப.).

*[வடக்கு+களம்+வழி]*

**வடசொல்** *vadašol*, பெ. (n.) 1. சமற்கிருதச் சொல்; Sanskrit word. 2. வடநாட்டில் வழங்கிய பாகத (பிராகிருத) பாலிமொழிச் சொல்; Prakrit and Pali words of north India.

*[வடக்கு+சொல்–வடசொல்]*

**வடதமிழ்** *vadatamil*, பெ. (n.) பாலி தவிர்த்த பல்வகைப் பிராகிருதங்கள் பாகதம் என்னும் பெயரில் வடநாட்டில் பேசப்பட்ட திரிபுற்ற தமிழ்; colloquial Tamil spoken in north India in the name of different Prakrit languages. வடதமிழ்.

*[வடக்கு+தமிழ்]*

துருக்கரின் கலப்புற்ற அபப்பிரஞ்சம், வடபுல வணிகரின் பைசாசி, அடிமைத்தொழிலாளரின் சூரசேனி. இழிந்தோரின் மாகதி, பொதுமக்கள் பேச்சுமொழியான பிராகிருதம் ஆகிய ஐந்தும் வடதமிழ் எனப்பட்டன.

**வடிகாது** *vadikādu*, பெ. (n.) துளை பெரிதாக் கப்பட்ட கீழ்க்காது; round holed earlobe.

**மறுவ: துளைக்காது, தொள்ளைக்காது**

*[வடி+காது]*

காது வளர்த்து தண்டட்டி அணிந்து கொள்வது தமிழரின் தொன்முது வழக்கம். புத்தர், மகாவீரர் மட்டுமன்றி எகுபதியரும் துளைக்காது கொண்ட வராக இருந்தனர்.



**வடி–த்தல்** *vaḍi-,* செ.கு.வி. (v.i.) இரும்புக் கருவிகளைக் கூர்படுத்துதல்; to make the weapons sharp by filing. கத்தியை வடித்துக்கொடு (இ.வ.).

*[வள்–வளி–வடி]*

**வடிதட்டு** *vaḍitaṭṭu,* பெ. (n.) கஞ்சி வடிக்கப் பயன்படும் தட்டு; perforated plate use to strain the gruel from the cooked rice.

**மறுவ: சிப்புல்தட்டு**

*[வடி+தட்டு]*

**வடிமாறு** *vaḍi-māṟu,* பெ. (n.) பிரம்பு வகையால் பின்னப்பட்ட வடிதட்டு; plaited ratten screen, used as a strainer in cooking rice.

*[வடி+மாறு]*

**வடிவமாதிரிகள்** *vaḍivamādirikaḷ,* பெ. (n.) கை வினைஞன் செய்யப்புகும் கலைப் பொருள் களுக்கான நோக்குரு (முன் மாதிரி); sample of a handicraft by an artisan.

**மறுவ. வடிவ நோக்குரு**

*[வடிவம்+மாதிரி]*

**வடுகர்** *vaḍugar, பெ.*(n.) கலிங்கர்; the people of *kaliṅga* (Orissa).

*[உடியர்–வடியர்–வடுவர்–வடுகர்.]*

வடுகர் என்போர் கலிங்கர்.வடுகர் என்னும் சொல் தெலுங்கரைக் குறிப்பதாக இதுவரை கருதப் பட்டு வந்தது. தெலுங்கு அறிஞர்களும் சங்க இலக் கியங்களில் வடுகர் பெயர் இடம்பெற்றிருப்பதால் தெலுங்கு மிகவும் தொன்மையான மொழி எனவும் தவறாகப் பேசத் தொடங்கிவிட்டனர். ஆனால் இச் சொல் கலிங்க நாட்டாரைக் குறித்த சொல் என்பது கண்டறியப்பட்டுள்ளது. கலிங்கத்துப் பரணியில் செயங்கொண்டார்.

*"மழலைத்தரு மொழியில் சில வடுகும் சில தமிழும் குழறித்தரு கருநாடியர் குறுகிக் கடைதிறமின் எனப் பாடியுள்ளார். இதில் வடுகு என்பது நாள டைவில் தெலுங்கைக் குறித்த சொல்லாக ஆளப்பட் டுள்ளது. கலிங்கப் போர் நடந்த குலோத்துங்க சோழன் காலத்தில் தெலுங்கு கன்னடம் ஒரியா ஆகிய மூன்று மொழிகளும் பேச்சு மொழிகளாக வளர்ந் திருந்தன. இருப்பினும் தெலுங்கர் எக்காலத்திலும் தம்மை வடுகர் என அடையாளப்படுத்திக் கொள்ள வில்லை.*

*ஈராயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய கடைக்கழக இலக்கியக் காலத்தில் தெலுங்கு போன்ற மொழிகள் தோன்றவில்லை. ஆந்திர சாதவாகன மன்னரின் பேச்சு மொழி பிராகிருத மாக இருந்தது. ஒரிசா எனப்படும் கலிங்கரின் பாலியும் பேசப்பட்ட நிலப்பகுதிகளே "மொழி பெயர்த்தேயம்" எனப் பண்டைத் தமிழிலக்கியங்களில் குறிக்கப்பட்டன. ஆந்திர கருநாடகப் பகுதிகள் அக்காலத்தில் கொடுந் தமிழ் நாடுகளாக இருந்தன.*

*ஒரிசா எனும் கலிங்கத்திலிருந்து ஆந்திரத்தில் குடியேறிய வடுகர் கல்லுடைக்கும் தொழிலினர். இவர்கள் பேசும் தெலுங்கு நீட்டி முழுக்கும் அடித் தொண்டைப் பேரொலி கொண்டதாக இருப்பதை இன்றும் காணலாம். இவர்களின் முன்னோர் பேசிய கலிங்கத்துப் பாலி மொழியும் இத்தகையதே. அதனால் இவர்கள் "கல்லா நீள்மொழி கதநாய் வடுகர் எனப்பட்டனர்." வ –ப.* (ba)ஆவது பாலி மொழியி இயல்பு. வான் எனும் தமிழ்ச் சொல்லைப் பாவி (bavi) எனத் திரித்துப் பேசியவர்களும் இவர்களே.

புல்லி என்னும் குறுநில மன்னன் ஆட்சி புரிந்த வேங்கடமலைக்கு வடக்கேயிருந்த ஆந்திரப் பகுதியில் கோதாவரி வரை தமிழ் பேசப்பட்டது.

மேற்கு கோதாவரிப் பகுதியிலும் கலிங்கப்பகுதியிலும பிராகிருத பாலி மொழிகள் பேசப்பட்டன. வேங்கட மலை வெகுதொலைவில் மொழி பெயர் தேயங்கள் இருந்தன என்னும் குறிப்பை அகநானூற்றில் மாமூலனார் வெளிப்படுத்தியிருக்கிறார். வேங்கட மலைக்கு அப்பால் பல்லான் கோவலர், ஆடுமாடு களை மேய்ப்பவராகவும், நல்லவர்களாகவும் இருந் திருக்கின்றனர்.

"....................................மாதிரம் வெம்ப
வருவழி வம்பலர் பேணிக் கோவலர்
மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி
செவியடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்
புல்லி நன்னாட்டு உம்பர்ச் செல்லருஞ்
கரம் இறந்து ஏகினும் நீடலர்" (அகம்.311)

என்னும் வரிகளில் மாமூலனார் குறிப்பிடுகிறார். மூங்கில் குழாய்களில் கொணர்ந்த கூழை வழிப் போக்கர்க்குத் தந்து களைப்பைப் போக்கிய செய்தியும் கூறப்படுகிறது.

புல்லியின் வேங்கடக் குன்றத்துக்கு வெகு தொலைவுக்கு அப்பால் கலிங்க நாட்டுக்குச் செல்லும் போது வழிப்பறிக் கள்வராகிய வடுகர் இருந்தனர்.

"................................புல்லி குன்றத்து
நடையருங் கானம் விலங்கி நோன்சிலைத்
தொடையமை பகழித் துவன்று நிலை வடுகர்
பிழியார் மகிழர் கலிசிறந் தார்க்கும்
மொழி பெயர் தேஎம் இறந்தனர் ஆயினும்"
(அகம்.295)

என மாமூலனார் குறிப்பிட்டுள்ளார்.

கங்கை வரை பண்டங்களை ஏற்றிச் செல்லும் சாத்து வணிகர் கூட்டத்தோடு, அல்லது படைத் துணை மறவரோடு வடதிசை நோக்கிச் சென்ற தலைவனைக் குறித்துத் தலைவி வருந்தும் பாலைப் பாடல்களில் மிக நீண்ட தொலைவு பறக்கும் கழுகு போல் நெடுந்தொலைவு கடந்த செய்தி கூறப்படு கிறது. பல மலைகளைக் கடந்த பின்னரே வேற்று மொழி பேசும் நிலப்பகுதி இருந்தது எனவும் மொழி பெயர் தேயங்களாகிய அப்பகுதிகள் இருந்தன எனவும் மொழி பெயர் தேயங்களாகிய அப்பகுதிகள் மூவேந்தர் ஆட்சிக்கு உட்பட்டிருந்தன என்றும் கூறப்பட்டுள்ளது.

"கண்உமிழ் கழுகின் கானம் நீந்தி
..................
தமிழ் கெழு மூவர் காக்கும்
மொழிபெயர் தேஎத்த பன்மலை இறந்தே"
(அகம்.31)

வடபுலத்திலும் மூவேந்தரின் அரசிளங் குமரர்கள் ஆட்சி புரிந்ததைப் பாரத இராமாயணங் களும் குறிப்பிடுகின்றன. கி.மு. ஏழாம் நூற்றாண்டு வரை வடநாட்டில் தமிழ் மன்னர்களின் ஆட்சி நில வியதை உதயணன் பெருங்கதையாலும் அறியலாம்.

வடபுலத்தில் கி.மு. நான்காம் நூற்றாண்டு அளவில் ஆட்சி புரிந்த மோரியர் தென்னாட்டின் மீது படையெடுத்தனர். அப்போது கலிங்க நாட்டிலிருந்த விற்போர் மறவர்களாகிய வடுகரைத் துணைக்கு அழைத்து வந்தனர் என்பதை மாமூலனார்

"முரண்மிகு வடுகர் முன்னுற மோரியர்
தென்திசை மாதிரம் முன்னிய வரவிற்கு"
(புறம்.281)

'எனத் தெளிவுறப் பாடியுள்ளார். மோரியர் பாடலிபுத்திரத்தில் இருந்து புறப்பட்டு கலிங்கத்தில் வடுகர் துணை பெற்றனர். ஆந்திரத்து சாதவாகனர் எப்பொழுதும் தமிழர்க்கு நண்பர்களாகவும் உறவினர் களாகவும் இருந்தனர். எக்காலத்திலும் சாதவாக னர்கள் தமிழரைப் பகைத்ததில்லை. எனவே வடுகர் என்னும் சொல் ஆந்திரரைக் குறிக்கவில்லை. வடுகரைக் 'கல்லா நீள் மொழிக் கதநாய் வடுகர்' எனக் குறிப்பிட்டுள்ளனர். இவர்கள் ஆறலைக் கள்வ ராக விந்திய மலைச்சாரல் பகுதிகளில் வாழ்ந்த வர்கள். வடுகர்களைக் குறித்து தாயங்கண்ணனார், சேந்தங் கொற்றனார், இளம் கௌசிகனார் ஆகிய புலவர்களும் பாடியுள்ளனர்.

தெலுங்கர் தம்மை ஆந்திரர் எனக் குறிப்ப தன்றி வடுகர் என எக்காலத்திலும் கூறியதில்லை. தெலுங்கு அகராதிகளிலும் வடுகர் என்னும் சொல் தெலுங்கரைக் குறிக்கவில்லை. கலிங்க நாட்டைத் தமிழில் "ஓட்டரநாடு" என்பர்.

கலிங்கர் தம் மொழியை "ஒடியா" மொழி என்கிறார்கள். இச்சொல் ஆந்திர நாட்டில் வட்டெ (vadde) என வழங்கும். கிணறு வெட்டுதல், கல்லுடைத்துக் கட்டடம் கட்டுதல் ஆகிய பணிகளுக்கு இவர்கள் ஆந்திர நிலத்தில் குடியேற்றப்பட்டனர். இவர்கள் மொழியும் தெலுங்காக மாறியது.

கலிங்கத்துக் கல்லுடைக்கும் தொழிலாளர் சிறந்த வில்லாளிகளாக இருந்த ஆறலைக் கள்வரின் வழி வந்தவர்கள் என்பதால் வடிகாடு என்னும் சொல் நாளடைவில் மிகுந்த துணிச்சல் உள்ள போர் மறவனைக் குறித்த சொல்லாயிற்று.

வடிகாடு என்னும் சொல் 'வடுகுடு' எனத் தெலுங்கில் திரிபுற்றது. வடிகண்டு – வலிமை சான்ற இளைஞன், வடுக்கு – முறுக்கு, வடிகலத்தன்மை

வட்டெகாடு = ஒரியா மொழி பேசுபவன். வட்டெமு –ஒரியா மொழி.

கன்னடத்திலும் வட்டெ (vadde) எனும் சொல் கல்லுடைக்கும் தொழிலாளியைக் குறித்தது.

கலிங்கத்து மொழியில் ஒடியா என்றே இம்மக்கள் அறியப்பட்டனர்.

தமிழில் ஒட்டர் என இக்காலத்தில் வழங்கினும் பழங்காலத்தில் கலிங்கர் 'உடியர்' என்றே அறியப் பட்டனர். அதனால் கடைக் கழகக் காலத்தில் இவர் களுக்கு உடியர் –வடியர்–வடுவர்–வடுகர்– எனத் தமிழ்ப் பெயரிட்டனர்.

உடை–உடி எனும்சொற்கள் உடைத் தலையும், தாக்குதலையும் குறிக்கும். உளிதல் என்னும் சொல்லும் வெட்டுதலைக் குறிக்கும், உளி–உடி–வடி எனத் திரியும். வடித்தல் – கல்லைச் செதுக்கி வடிவ மைத்தல் எனப் பொருள்தரும்.

கடிப்பு என்பது ஒரு காதணி. இது கடுக்கன் எனத் திரிந்ததைப் போன்று வடிகன் – வடுகன் எனத் திரிபுற்றது.

வடக்கிலிருந்து வந்தவன் வடுகன் என்பதும் பொருந்தாது. வடக்கு – வடுக்கு எனத் திரியாது. குடக்கு–குடுக்கு எனத் திரியவில்லை. சொற்களின் ஒலிப்புத் திரிபுகள் குறிப்பிட்ட ஒழுங்கைப் பின்பற்று கின்றன. ஒரு சொல் எப்படியெல்லாம் திரியும் எப்படி யெல்லாம் திரியாது என்னும் சொற்பிறப்பு நெறி முறைகளை ஊன்றிக் கவனித்தால் சொல்திரிபு களும் பொருள் திரிபுகளும் திசைமாறிப் போகாமல் உண்மை யான பொருளை உணர்த்தும்.

மெல் – மெழு – மெழுகு என மென்மைப் பொருளில் திரிந்தது போன்று வல்–வழு –வழுதி எனும் சொல் வன்மை வாய்ந்த பாண்டிய மன்னர்க்குப் பெயராயிற்று. வல்–வழு–வடு என்னும் சொல் போர்மறவனுக்கும் இளைஞனுக்கும் பெயராகி வடமொழியில் வட (vata) என்றும் ஒரியாவின் மூலமொழியாகிய பாலியில் உடி–வடி என்றும் திரிந்தது.

**வடுகு** *vaḍugu,* பெ. (n.) மருத நிலத்தின் திறப் பண்; melody type belonging to agricultural tract.

*[வடு–வடுகு]*

**வண்டிச்சத்தம்** *vaṇḍi-c-cattam,* பெ. (n.) வண்டிக் கூலி; wage for the load to be carried by cart.

*[வண்டி+(சாத்தம்)சத்தம்]*

சாத்து வாணிகர் பெறும் கட்டணம்.

**வண்டிப் பந்தயம்** *vaṇḍi-p-pandayam,* பெ. (n.) ஒன்பான் இரா (நவராத்திரி பூசை யெடுப்பு) நாளில் வீரவுணர்வின் அடிப்படையாக நிகழும் விளையாட்டு; cart race.

*[வண்டி+பந்தயம்]*

**வண்ணக்கம்மர்** *vaṇṇakkammar,* பெ. (n.) வண்ண ஓவியங்களைத் தீட்டுபவர்; one who does painting work.

*[வண்ணம்+கம்மர்]*

**வண்ணக் கோடாங்கி ஆட்டம்** *vaṇṇak kōḍāṅgiāṭṭam,* பெ. (n.) இருவர் அல்லது மூவர் வழிபாட்டுப் பாடல்களைப் பாடி ஆடு கின்ற ஆட்டம்; dance performed by two or three while singing hymns.

*[வண்ணம்+கோடாங்கி+ஆட்டம்]*

**வண்ணத்தியல்** *vaṇṇattiyal,* பெ. (n.) எண் வகைச் சந்தங்களைக் கூறுகின்ற நூல்; a treatise which says the eight kinds of rhythemic movement of verse.

*[வண்ணம்+அத்து+இயல்]*

**வணர்** *vaṇar,* பெ. (n.) யாழின் ஓர் உறுப்பு; a componant of a lute.

*[வள்–வண்–வணர்]*

**வத்தினி** *vattiṇi,* பெ. (n.) சிற்ப முத்திரைகளுள் ஒன்று; hand pose of a sculpture.

*[வத்து–வத்தினி]*

**வதிகால்** *vadikāl,* பெ. (n.) சேற்று நீரோடை; stream running on clay bed.

*[வதி(சேறு)+கால்]*

**வதிவாய்க்கால்கள்** *vadivāikkālkaḷ,* பெ. (n.) நிலங்களுக்கு நீர் செல்லும் கால்வாய்கள்; head channel which takes water to field.

*[வதி+வாய்+கால்]*

**வந்தேறி** *vandēṟi,* பெ. (n.) அயலிடத்திலிருந்து வந்து குடியேறியவன்; immigrant.

*[வந்து+ஏறி]*

**வம்புறு மரபு** *vamburumarabu,* பெ. (n.) பாலைப்பண்ணின் இடமுறைத் திரிபு; a melody type.

*[வம்புறு+மரபு]*

**வயவு-தல்** *vayavu-,* செ.குன்றாவி. (v.t.) விரும்புதல், ஆசைப்படுதல்; to like, to desire, to aspire.

க. பயசு

*[வய-வயவு]* வயா - வேட்கை, ஆசை.

**வயவுறி** *vauavuṟi,* பெ. (n.) கருவுற்றவள், கருவத்தி; pregnant woman. வயவுறு மகளிர் வேட்டுணின் அல்லது பகைவர் நண்ணார் நின் அரு மண்ணினையே. (புறம்.).

க. பசுறி

*[வயவு(விருப்பம்)-வயவுறி]*

கருவுற்ற காலத்தில் விரும்பும் உணவு வகைகளை உண்ண ஆசைப்படுபவள்.

**வயித்தியக்கும்மி** *vayittiyakkummi,* பெ. (n.) மருத்துவ முறைகளைப் பகர்கின்ற கும்மிப் பாடல்; a dance performed by clapping hands and describing medical treatment.

*[வயித்தியம்+கும்மி]*

**வயிர்** *vayir,* பெ. (n.) ஒரு வகையான இசைக் கருவி; a kind of musical instrument.

படட. புகிரி

*[வை-வய்-வயிர்]*

**வயிரியர்** *vayiriyar,* பெ. (n.) ஊதுகொம்பு ஊதுபவர்; trumpeters.

*[வயிர்(ஊதுகொம்பு)+இயர்]*

**வயிறுகளை** *vayiṟukaḷai,* பெ. (n.) குடல் துப்புரவுக்காக நாட்டு மருத்துவர் தரும் வயிற்றுப் போக்கு இளகியம் (பேதி மருந்து); a Tamil medicinal fluid substance 'ilagiyum' given by native Siddha doctors for cleansing the bowels.

*[வயிறு+களை]* எழுவாய்த் தொடராதலின் குற்றுகரம் இரட்டாதாயிற்று.

**வர்ணம்** *varṇam,* பெ. (n.) பரதநாட்டியத்தில், உச்சகட்டமாகவும், முடிவாகவும் அமைவது; musical notes in a tune which ends the Bharatha natyam and also take it to the high level.

*[வண்ணம்-வர்ணம்]*

**வரப்போ-தல்** *varappō-,* செ.கு.வி. (v.i.) போய் வருதல்; to come back, a term used in Srilanka with a literal meaning of saying good bye.

*[வா+போ]*

போய் வருகிறேன் என்பதை வரப்போகிறேன் என்பது ஈழநாட்டுத் தமிழ் வழக்கு.

**வரம்பிலி** *varambili,* பெ. (n.) கடவுள்; god as immeasurable.

*[வரம்பு+இலி]*

**வரதஅத்தம்** *varada attam,* பெ. (n.) இறை வடிவ சிற்பங்களில் அமைக்கப்பெறும் ஒரு வகையான கைப்பாங்கு; hand sculptured in god's idol.

*[வரத+அத்தம்]*

**வரதகரம்** *varadakaram,* பெ. (n.) இறைவன் கை இலக்கணங்களில் ஒன்று; formula followed while sculpturing hand in god's idol.

*[வரதன்+கரம்]*

**வரவழைப்புப் பாட்டு** *varavaḷaippu-p-pāṭṭu,* பெ. (n.) தெய்வங்களை வரவழைத்து, அருள் பெறுவதற்காகப் பாடப்படுகின்ற பாடல்; a song sung for inviting deities.

மறுவ. வர்ணிப்புப்பாடல்

*[வர+அழைப்பு+பாட்டு]*

**வராடி** *varāḍi,* பெ. (n.) அராகங்களில் ஒன்று; a musical note.

*[வராளி–வராடி]*

**வரி** *vari,* பெ. (n.) ஓர் இசை நூல்; a treatise on music.

*[வள்–வர்–வரி]*

**வரிசை** *variśai,* பெ. (n.) 1. மணந்துகொள்ள இடந் தரும் உறவு முறை; relationship in families to allow youngsters to marry. அத்தை மகள் இவனுக்கு வரிசை ஆகிறாள் (உ.வ.). 2. மணப்பெண்ணுக்கு அளிக்கப்படும் சீர் வரிசை; gifts offered to the bride in marriage.

*[வரித்தல்–மணத்தல். வரைவு = திருமணம். வரி–வரிசை]*

**வரிச்சோறு** *vari-c-cōṟu,* பெ. (n.) மாடசாமி கோவில் கொடைவிழாவில் அளிக்கப் பெறும் சோறு; rice meal given during Madasamy charity festival.

*[வரி+சோறு]*

**வரித்தணிக்கை** *varittaṇikkai,* பெ. (n.) வருவாய்த்துறையினர் வட்டந்தோறும் நடத்தும் வரித்தணிக்கைக் கூட்டம் (சமாபந்தி); Jama Bandi.

*[வரி+தணிக்கை]*

**வருத்தாடு** *varuttāḍu,* பெ. (n.) வெளியூர் ஆடு; goats from other places. (கொ.வ.).

*[வரத்து(விற்பனைக்கு வந்த)+ஆடு–வரத்தாடு –வருத்தாடு (கொ.வ.)]*

**வருத்தித்தல்** *varuttuttal,* பெ. (n.) துகிரி கையால் படிப்படியாக வண்ணஞ்சேர்க்கும் முறை; adding colour little by little by brush.

*[வருத்து–வருத்தித்தல்]*

**வரை** *varai,* பெ. (n.) விதை; seed.

**வருவு–தல்** *varuv-,* செ.குன்றாவி (v.t.) தச்சர் பலகையில் குறியிடுவதற்குக் கீறுதல்; to scribe on wooden plank by carpenter.

**வரையறை** *varaiyaṟai,* பெ. (n.) ஆளத்தி பாடப்படும் முறை; way to improvise while introducing melody.

*[வரை+அறை]*

**வல்லத்துப் பட்டாரிகை** *vallattup-paṭṭārigai,* பெ. (n.) கெளரியம்மனுக்கு வழங்கும் வேறு பெயர்; a alternant for Amman's name.

*[வல்லம்+அத்து+பட்டாரிகை]*

**வலம்பாடிகள்** *valambāḍigaḷ,* பெ. (n.) வில்லுப் பாட்டு பாடும் ஒரு குழுவினர்; group of singers who sing with a accompaniment of a vil.

*[வலம்(வலப்பக்கம்)+பாடிகள்]*

**வலம்பு** *valambu,* பெ. (n.) செக்கின் உறுப்பு களில் ஒன்று; a part of oil - press.

*[வல–வலம்பு]*

**வலமுறை** *valamuṟai,* பெ. (n.) வட்டப்பாலையில் ஏழு பாலைகள் பிறக்கின்ற முறைகளில் ஒரு வகை; a type *of diatonic notes.*

*[வலம்+முறை]*

**வலவு** *valavu,* பெ. (n.) கைத்தறி நெசவில் பாவு தோய்வதற்குப் பயன்படுத்தப்படும் வழவழப் பான மூங்கிற்கழி; an implement in handloom weaving.

*[வல்–வல–வலவு]*

**வலிய கூரக்கு** *valiyakūrakku,* பெ. (n.) மன்னான் இனத்தலைவரின் வீடு; house of Mannān chieftain.

*[வலிய+கூரை]*

**வலிவு** *valivu,* பெ. (n.) **வரைமுறை பார்க்க;** see varaimuṟai.

*[வலி–வலிவு]*

**வலிவு மண்டிலம்** *valivumaṇḍilam,* பெ. (n.) மண்டில வகைகளில் ஒன்று; one of mandilam variety.

*[வலிவு+மண்டிலம்]*

**வழக்கறுப்பு** *valakkaruppu,* பெ. (n.) மண விலக்கு (விவாகரத்து) என்பதற்கு மாற்றாக, பச்சைமலை மலையாளிகள் பயன்படுத்தும் சொல்; a word used by Paccaimalai Malaiyāli, which meansdivorce.

**மறுவ. மணமுறிவு**

*[வழக்கு+அறுப்பு]*

**வழக்காற்றுப்பாடல்** *valakkārruppāḍal,* பெ. (n.) ஒப்பாரி, தாலாட்டு எனும் வாய்மொழி இலக்கியங்களைச் சுட்டும் பெயர்; an oral literature which denotes a song of lamentation of a deceased person and a lullaby sung by a women who rock the craddles.

*[வழக்கு+ஆறு+பாடல்]*

**வழக்கிற-த்தல்** *valakkira-,* செ.கு.வி. (v.i.) நாட்டார் வழக்காறுகள் வழக்கத்தில் இருந்து படிப்படியாக மறைதல்; nāṭṭār usage of customs not extant.

*[வழக்கு+இறத்தல்]*

**வழிசுட்டுதல்** *valicuṭṭudal,* தொ.பெ. (vbl.n.) பள்ளரின் இறப்புச் சடங்கு; funeral rites of pallar caste.

*[வழி+சுட்டுதல்]*

**வழிநடைச்சிந்து** *valinaḍaiccindu,* பெ. (n.) சிந்து இசையின் ஒரு பிரிவு; a division in sindu melody.

*[வழி+நடை+சிந்து]*

**வழிமரபு** *valimarabu,* பெ. (n.) கால்வழி (பரம்பரை); dynasty.

*[வழி+மரபு]*

**வழியுரிமை** *valiyurimai,* பெ. (n.) பிறங்கடை, வாரிசு; next successor.

*[வழி+உரிமை]*

**வழிவிடுதல்** *valividu,* பெ. (n.) 1. பள்ளர் இன இறப்புச் சடங்குகளில் ஒன்று; a funeral rites of Pallar caste. 2. **வழிசுட்டுதல் பார்க்க;** see *valicuttutal.*

*[வழி+விடுதல்]*

**வள்ளல்கள்** *vallalgal,* பெ. (n.) பழந்தமிழ்க் கொடையாளிகள்; benevalent doners among ancient Tamil.

*[வள்ளல்+கள். 'கள்' பலர் பாலீறு]*

பழந்தமிழகத்தில் முதலெழு வள்ளல்கள், இடையெழு வள்ளல்கள், கடையெழு வள்ளல்கள் இருந்ததாகக் கூறப்படுகிறது.

**1. முதல் ஏழு வள்ளல்கள்:** 1. செம்பியன் 2. காரி (சகாரி) 3. விராடன் 4. கடலன் (சகரன்) 5. துந்து மாறன் (துந்துமாரி) 6. நள்ளன் (நளன்) 7. மீனன்.

**2. இடையெழு வள்ளல்கள்:** 1. அக்குரன் 2. அந்தன் (சந்தன்) 3. சேந்தன் 4. இளங்குமரன் (சிசுபாலன்) 5. சந்திரன். 6. கன்னள் (கர்ணன்) 7. மருப்பொசித்த மாறன் (தரூதிவக்கின்).

**3. கடையெழு வள்ளல்கள்:** 1. பாரி 2. ஓரி 3. நள்ளி 4. மலையன் (காரி) 5. ஆய் 6. எழினி 7. பேகன்.

**வள்ளுவர்** *valluvar,* பெ. (n.) பிறப்புச் சடங்கினை நடத்தும் நாட்டுப்புறப் பெரியவர்; a village head who conducts birth ceremony. 2. கணியம் கூறுபவரில் ஒரு பிரிவினர்; as astrologer.

*[வள்+வள்ளுவர்]*

**வள்ளைப்பாட்டு** *vallaippāṭṭu,* பெ. (n.) பெண்டிர் பாடும் பாடல் வகை; song sung by women.

*[வள்ளை+பாட்டு]*

**வளஞ்சியத்தார்** *valanjiyattār,* பெ. (n.) ஈழத்து வணிகர்; merchants of Srilanka.

*[வளஞ்சியம்–வளஞ்சியத்தார்]*

அஞ்சுவண்ணத்தார்– முகமதிய வணிகர். நான்கு வருணப்பிரிவில் அடங்காதவர்.

**வளமை** *valamai,* பெ. (n.) நாட்டுப்புற வழக்காறுகளில் பிள்ளைப் பேற்றினைக் குறிக்குஞ் சொல்; a word which denotes child birth in country side.

*[வளம்–வளமை]*

**வளர்த்தல்** *vaḷarttal,* தொ.பெ. (vbl.n.) துகிலிகையால் படிப்படியாக வண்ணஞ் சேர்க்கும் முறை; adding hue little by little by brush.

*[வளர்–வளர்த்தல்]*

**வளிநோய்** *vaḷi-nōy,* பெ. (n.) வளிக்கோளாறினால் உண்டாகும் நோய்; defects arising from gastric disorder.

*[வளி+நோய்]*

**வளைமடி–த்தல்** *vaḷaimaḍi-,* செ.குன்றாவி. (v.t.) நெற்குவியல் மேலும் சரியாமல் பக்கத்திலும் சுற்றிலும் முறுக்கியசைக்கும் வைக்கோல் வளையம் வைத்தல்; to place twisted hay stack arround paddy heap.

*[வளை+மடி]*

**வளைமுகம்** *vaḷaimugam,* பெ. (n.) புல்லாங்குழலின் தொடக்கத்தில் உள்ள முனை; starting point of a flute.

*[வளை+முகம்]*

**வளையல் சிந்து** *vaḷaiyalšindu,* பெ. (n.) கரகத்தின் துணைநிலை ஆட்டமான காவடியாட்டத்திற்கு இசைக்கப்பெறும் இசை; melody played to assist when a dance with decorated pole of wood with 'Karagam' art is performed.

*[வளையல்+சிந்து]*

**வறுவூசி** *vaṟuūsi,* பெ. (n.) சட்டங்களின் ஓரங்களை அளவாக பள்ளமிட அளவுபடுத்தி கோடிடும் ஊசி; a needle to make scrach the frame levely.

*[வறுவு–ஊசி]*

**வன்கணவர்** *vaṉkaṇavar,* பெ. (n.) கன்னெஞ்சர்; hard hearted person. "தாமுடைமை வைத்திழக்கும் வன் கணவர்" (குறள். 228).

**வன்கொடுமை** *vankodumai,* பெ. (n.) மிகக் கடுமையான வன்முறை, பயங்கரவாதம்; violence.

**வன்முறை** *vanmurai,* பெ. (n.) வல்லந்தமான கொடுமை, தீவிரவாதம்; terrorism.

**வன்னி** *vaṉṉi,* பெ. (n.) கரகாட்டத்தை முதலில் ஆடிய இனத்தினர்; a class of people who first performed in folk dance karakaṭṭam.

*[வல்–வன்–வன்னி]*

**வனப்பூ** *vana-p-pū,* பெ. (n.) காளான்; mushroom.

க. அனபெ, ஆத். wanabe

**வனப்பேச்சி** *vaṉappēcci,* பெ. (n.) நாட்டுப்புறங்களில், நீர்நிலைகளைக் காக்கும் சிறு தெய்வம்; a deity which guards water sources.

*[வனம்+(பேய்ச்சி)பேச்சி]*

**வாக்குமாலை** *vākkumalai,* பெ. (n.) தெருக்கூத்தில் பங்கு பெறும் ஆடவர் அணிகின்ற ஓர் அணிகலன்; ornament worn by male while performing street dance.

*[வாக்கு+மாலை]*

**வாகுமாலை** *vāgumālai,* பெ. (n.) சிற்பங்களில், இரு தோள்களிலிருந்து மார்பு வரை இடம் பெறும் ஓர் ஆரம்; garland like chain carved in the sculpture.

*[வாகு+மாலை]*

**வாகுவலயம்** *vāguvalayam,* பெ. (n.) **வாகுமாலை பார்க்க;** see *vāgumālai.*

*[வாகு+(வளையம்)வலயம்]*

**வாங்களை வெட்டு–தல்** *vāṅkaḷaiveṭṭu,* செ.குன்றாவி. (v.t.) வயல் வரப்பில் வளர்ந்து வயலிலும் பரவத் தொடங்கும் புல் பூண்டு கொடிகளை வெட்டி நீக்குதல்; to remove the vegetation growth on the ridge of the paddy field.

*[வாவும்(தாவிப்படரும்)–வாம்+களை+வெட்டு]*

**வாங்கறுவாள்** *vāṅgaṟuvāḷ,* பெ. (n.) நீளமான கழியில் கட்டப்பட்டிருக்கும் அறுவாள்; a

scimitar, a big cutting knife with long wooden pole.



**வாங்கா** vāṅgā, பெ. (n.) துளையுள்ள இசைக் கருவி; a perforated musical instrument.

*[வங்கு–வாங்கா]*

**வாட்டி** *vāṭṭi,* பெ. (n.) சிறு பெண் குழந்தை; a small baby.

**வாடிவாசல்** *vāḍivāšal,* பெ. (n.) சல்லிக்கட்டு காளைகள் இருக்குமிடம்; place where bull - bailing take place.

*[வாடி+வாசல்]*

**வாங்கியா** *vāṅgiyā,* பெ. (n.) கடலில் ஆளை உள்ளிழுக்கும் பெரிய பள்ளம்; a deep mire in the sea bed.

*[வாங்கு(உள்வாங்குதல்)–வாங்கியாரம்]*

**வாடிவீடு** *vāḍivīḍu,* பெ. (n.) ஓய்வு இல்லம்; rest house (யாழ்ப்.).

*[பாடி–வாடி+வீடு]*

**வாடூன்** *vāḍūṉ,* பெ. (n.) உலர்த்தப்பட்ட புலால் துண்டுகள், உப்புக்கண்டம்; dry flesh.

**க. பாரு ஆத். வர்ரூ**

**வாடை** *vāḍai,* பெ. (n.) வேட்டுவர் குடியிருப்பு; hamlet of hunters.

*[வேட்டுவர்–வேடுவர்–வேடு–வாடு–வாடை]*

ஒ.நோ: நத்தம்– பார்ப்பனர் அல்லாதார் ஊர். பேட்டை –சந்தை ஊர். பறந்தலை– பாலை நிலம்.

**வாண்டகன்று** *vāṇḍakaṉṟu,* பெ. (n.) குட்டி போடாத செம்மறி ஆடு; a barren sheep.

*[வறண்ட–வாண்ட+கன்று]*

**வாணவராயன்** *vāṇavarāyaṉ,* பெ. (n.) கொங்கு வேளாளரைச் சுட்டும் சிறப்பு பெயர்; specific name that denotes Kongu Vēlālar.

*[வாணன்+அரையன்]*

**வாதம்** *vādam,* பெ. (n.) யாழ் கூறும் ஒரு வகை குற்றம்; a kind of defect in the lute.

*[வாது–வாதம்]*

**வாய்க்குருவி** *vāy-k-kuruvi,* பெ. (n.) சீழ்க்கை; whistle.

*[வாய்+குருவி]*

**வாய்க்கூடு** *vāi-k-kudu,* பெ. (n.) தவசப் பயிர் களை மேயாமல் இருக்க மாடுகளுக்குப்போடும் கூடு; a small basket worn on cattle's mouth.



**வாய்ச்சி** *vāycci,* பெ. (n.) மரத்தைச் செதுக்க உதவும் கருவி; an implement of the carpenter.

*[வாய்–வாச்சி–வாசி –வாய்ச்சி(கொ.வ.)]*



**வாய்ச்செய்கையொலி** *vāycceygai-y-oli,* பெ. (n.) ஒன்றைக் கூற வேண்டி வாயினாற் செய்யும் சைகைகளுடன் கூடிய ஒலி; gesticulatory sound.

*[வாய்ச்செய்கை+ஒலி]*

**வாய்பிள–த்தல்** *vāypila-,* செ.கு.வி. (v.i.) இறத்தல்; to die. அவன் வாய் பிளந்தான். (இ.வ.).

*[வாய்+பிள]*

**வாய்மைக்குடி** *vāymai-k-kuḍi,* பெ. (n.) உயர்குடி பார்க்க; see uyarkudi. "நகையீகை யின்சொ லிகழாமை நான்கும் வகையென்ப வாய்மைக் குடிக்கு" (குறள். 953).

**மறுவ: உயர்குடி, உயர்குலம், மேற்குடி**

*[வாய்மை+குடி]*

**வாய்மொழி வாய்பாட்டுக் கோட்பாடு** *vāymoḻi vāypāṭṭukkōṭpāḍu,* பெ. (n.) நாட்டுப்புறவியலை ஆய்வு செய்வதற்கான அடிப் படைக் கோட்பாடு; the methodology to explore folklore.

*[வாய்மொழி+வாய்பாடு+கோட்பாடு]*

**வாயல்முறுவல்** *vāyalmuṟuval,* பெ. (n.) பொய்யான புன்னகை; illusionary smile. வாயல் முறுவற்கு உள்ளகம் வருந்த (சிலம்பு.).

*[வாய்+அல்+முறுவல்]*

**வாயாறுகை** *vāyāṟugai,* பெ. (n.) நாவறட்சி, நீர்வேட்கை; thirst.

**க. பாயாரிகே**

**வாரணன்** *vāraṇaṉ,* பெ. (n.) தமிழரின் கடல் தெய்வம்; God of ocean of the Tamils.

**மறுவ: உப்பளவண்ணன், சிங்–உழல்வன்**

*[வாரணம்–வாரணன்]*

முத்துக்குடை ஊர்வலத்தில் இரு கையுடைய வராக சந்தனமரச் சிற்ப தெய்வமாகிய நெய்தல் நில வாரணன் நாளடைவில் திருமாலாகவும், பௌத்தரால் உழல்வனாகவும் மாற்றப்பட்டுள்ளான் என்பர் (மயூரசந்தேசம்.பக்.151).

**வார்தல்** *vārtal,* பெ. (n.) இசைக்கரணத்தில் ஒன்று; a performance in music.

*[வார்–வார்தல்]*

**வார நடை** *vāranaḍai,* பெ. (n.) ஒரு வகையான தாளக்கால நடை; a time measure.

*[வாரம்+நடை]*

**வாரநிலம்** *vāranilam,* பெ. (n.) பாடலைப் பாடும் முறை; a method of singing.

*[வாரம்+நிலம்]*

**வாரம்[1]** *vāram,* பெ. (n.) தெய்வப் பாடலைக் குறிக்குஞ்சொல்; word denoting hymn.

*[வார்–வாரம்]*

**வாரம்[2]** *varam,* பெ. (n.) ஆயாதி மரபுப் பிரிவுகளில் ஒன்று; one among Ayāti tradition.

*[வார்–வாரம்]*

**வாரம்[3]** *vāram,* பெ. (n.) ஏழுநாள் கொண்ட கால அளவு; a week of seven days.

*[வரை–வாரை–வாரம்]*

**வாரம்[4]** *vāram,* பெ. (n.) நிலவுரிமையாளரும் நிலம் உழுதவரும் விளைச்சலில் பங்கு பெறும் அளவு; share of produce in the land to be divided between the tiller and the land owner.

*[வரு–வாரு–வாரம்]*

ஒவ்வொருவருக்கும் வரும் விளைச்சல் பங்கு. மேட்டு நிலமாயின் 2:3 எனவும் நன்செய் நிலமாயின் 1:1 எனவும் சில ஊர்களில் பிரித்துக் கொள்ளும் ஒப்பந்தம்.

**வாரித்துறை** *vārittuṟai,* பெ. (n.) கடல் அல்லது கப்பல் தொடர்பான துறை; maritime.

*[வாரி+துறை]*

**வாரியல்** *vāriyal,* பெ. (n.) துடைப்பம்; broom stick.

**வாலமஞ்சாடி** *vālamañjāḍi,* பெ. (n.) வரி; tax. வால்மஞ்சாடி கண்மாலை நாவின்" (தெ.சா.12:1 எ.221).

**வாவுடுகள்** *vāvuḍugaḷ,* பெ. (n.) தமிழகத்தில் பாவைக் கூத்து கலைக்கு உரியவராகக்

கூறப்படுகின்ற ஒரு பிரிவினர்; a team of people who dance the "dance of Lakshmi" traditionally in Tamilnāḍu.

[வரவிடு–வாவு+கள்]

**வாழ்வுரிமை** *vāḷ-v-urimai,* பெ. (n.) வாழ்வதற் கான அடிப்படை மாந்தவுரிமை; fundamental right to live.

[வாழ்வு+உரிமை]

**வாழியாதன்** *vāḻiyādaṉ,* பெ. (n.) குறிப்பிட்ட பகுதியை ஆட்சிபுரியும் அதிகாரம் பெற்ற ஆதன்; Adan the chieftain who got power to rule a certain area. செல்வக்கடுங்கோ வாழியாதன் (பதிற்.).

ம. வாழி

[வாழி+ஆதன்]

**வாள்வடக்கிரு–த்தல்** *vāḷvaḍak-kiru,* செ.கு.வி. (v.i.) புறப்புண் நாணிய போர்மறவர் வாளை நட்டு வடக்கு நோக்கி உண்ணா நோன்பிருந்து உயிர்விடல்; to fast unto death by a wounded soldier on the back continuing setting the sword upside down on earth, out of shame facing north, since he was not successful in saving the mother earth of the south.

[வாள்+வடக்கு+இருத்தல்]

**வாளா வலை** *vāḷāvalai,* பெ. (n.) பல வகையில் கடலில் வளைத்துப் போட்டு மீன்பிடிக்க உதவும் வலை; a kind of fishing net.

[வளை–வாளா+வலை]

**வான்மீகியார்** *vānmīkiyar,* பெ. (n.) கடைக் கழகப் புலவர்; poet of sangam age.

[வான்மீகி+ஆர்]

**வான்மீன்** *vāṉ-mīṉ,* பெ. (n.) விண்மீன்; stars.

[வான்+மீன்]

**விசிவு** *visivu,* பெ. (n.) விளைந்த கதிர் நெல் போன்றவற்றை அறுவடைக்குப் பின் ஓராள் சுமக்கும் அளவுக்கு ஒருமார் அளவு கயிற்றால் இறுகக்கட்டும் சுமைக்கட்டு; a head load of reaped crop. களத்தில் பத்து விசிவு கட்டி வைத்தோம்.

க. பிசவு

[விசை–விசி–விசிவு]



**விசிறி அடவு** *viširi aḍavu,* பெ. (n.) கும்மியில் இடம் பெறும் ஓர் அடவு; ; a stepping method in Kummi play.

[விசிறி+அடவு]

**விசுப்பலகை** *višuppalagai,* பெ. (n.) கூத் தரங்கில், தேராகக் கருதப்படும் பலகை; wooden log considered as car in dancing theatre.

[விசி–விசு+பலகை]

**விட்ட குதிரையார்** *viṭṭakudiraiyār,* பெ. (n.) கடைக்கழகப் புலவரின் புனை பெயர்; coined name of sangam poet.

**விட்டவெளி** *viṭṭa-veḷi,* பெ. (n.) மேய்ச்சலுக் கென்று ஒதுக்கப்பட்ட காலம்; leaving land to grass for cows.

[வெட்ட+வெளி–வெட்ட–விட்ட (பே.வ.)]

**விடுப்பு** *viḍuppu,* பெ. (n.) முழவால் இசைக் கப்படும் ஒரு திறன்; a method of playing music.

[விடு–விடுப்பு]

**விடுகாசு** *viḍukāsu,* பெ. (n.) ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் தம்பிடி எனும் மதிப்புள்ள சிறுகாசு; a lowest value coin in a rupee during the English period in India.

மறுவ: தம்பிடி

[விடு+காசு]

4 விடுகாசு–1 துட்டு, 3 துட்டு– 1 அணா,

12 விடுகாசு – 1 அணா, 16 அணா – 1 ரூபாய்,

192–விடுகாசு–1 ரூபாய்.

**விடையாற்றி** *vidaiyāṟṟi,* பெ. (n.) பச்சைக்காளி, பவளக்காளி அம்மன்கள் அருள் வழங்கிய பின் ஓய்வெடுத்தல்; respite of Paccaikkāḷi Pavaḷakkāli Amman's blessings to the devotees.

*[விடை+ஆற்றி]*

**விடையூழியம்** *viḍai-y-ūḻiyam,* பெ. (n.) கிறித்துவ மதத்தில் ஒரு சிறப்புப் பணியின் பொருட்டு அமைக்கப்படும் குழு; mission.

*[விடை+ஊழியம்]*

**விடையூழியர்** *viḍai-y-ūḻiyar,* பெ. (n.) ஒரு சிறப்புப் பணியை ஆற்றும் முகத்தான் அப் பணியில் ஈடுபடுபவர்; missionary.

*[விடையூழியம்+அர்]*

**விண்ணந்தாயன்** *viṉṉandāyaṉ,* பெ. (n.) கடைக்கழகப் புலவரின் பெயர்; name of a sangam poet.

*[விண்+அம்+தாயன்]*

**விண்ணிழி விமானம்** *viṉṉiḻivimāṉam,* பெ. (n.) திருவீழிமிழலையில் அமைக்கப்பட்ட விமானச் சிற்பம்; sculpture seen on temple at Tiruviḻi miḻalai.

*[விண்+இழி+விமானம்]*

**விந்தியவாசி துர்க்கை** *vindiyavāci-turkkai,* பெ. (n.) காளி (துர்க்கை) சிற்பத்தின் பிறிதோர் வடிவம்; another sculpture form of Durga.

*[விந்தியம்+வாசி+துர்க்கை]*

**விபஞ்சி** *vibañji,* பெ. (n.) குறிஞ்சிக்குரிய பண்ணாகப் பிங்கல நிகண்டு கூறுவது; melody type written pingalla nigandu peculiar to hilly tract.

**விமலம்** *vimalam,* பெ. (n.) 1. ஒரு சிற்ப முத்திரை; a sculpture pose. 2. சிற்பத்தில் இடம் பெறும் முத்திரைகளுள் ஒன்று; a sculptural hand-pose.

**வியந்தை** *viyandai,* பெ. (n.) ஒரு வகையான நெய்தற் பண்; a kind of melody type peculiar to maritime.

*[வியம்–வியந்தை]*

**வியலூர்** *viyalur,* பெ. (n.) சேரநாட்டின் வட பகுதி; northern part of Kerala.

**மறுவ: வயநாடு**

*[வயல்+ஊர்]*

**வியாசர் கடகம்** *viyāsar kaḍagam,* பெ. (n.) இசைத் தொடர்பான அரிய நூல்; a rare treatise pertain to music.

*[வியாசர்+கடகம்]*

**வியாள உருவம்** *viyāḷauruvam,* பெ. (n.) ஓவியங்களின் வளர்ச்சி நிலையைச் சுட்டுகின்ற உருவம்; shows the chronical stages of an art.

*[வியாளம்+உருவம்]*

**வியாளம்**[1] *viyaḷam,* பெ. (n.) ஓவியத்தில் அதிகளவில் இடம் பெறும் உருவ அமைப்பு; galore of structural figure drawn in art.

**வியாளம்**[2] *viyāḷam,* பெ. (n.) சிற்பத்தில் அதிக எண்ணிக்கையில் இடம் பெறுகின்ற உருவம்; sculptural structure which take place abundantly in sculpture.

**விரலேறு** *viralēṟu,* பெ. (n.) தோலினாற் செய்யப்பட்ட பழங்கால இசைக்கருவி; an ancient musical instrument made of leather.

*[விரல்+ஏறு]*

**விரலேறு பாகம்** *viralēṟubāgam,* பெ. (n.) பழம் பெரும் இசைக்கருவி; an ancient musical instrument.

*[விரல்+ஏறு+பாகம்]*

**விராசி** *virāśi,* பெ. (n.) சேவற் போரில், போர் நீண்ட நேரம் நீடிக்கும்போது, அதனை முடிவுக்

குக் கொண்டுவர கையாளும் சொல்; a word used to end the long hasting cock fight.

*[விறகு–விரவு–விராசி]*

**விராட் விசுவப் பிரம்மன்** *virāṭvišuvap pramman,* பெ. (n.) தேவசிற்பியான விசுவ கர்மாவின் வேறு பெயர்; name of visuvakarma considered as celestial sculpter.

**விரிப்பு** *virippu,* பெ. (n.) ஆலாபணம் என்பதற்கு இணையான வேறு பெயர்; a word used instead of "a-lapana" which means improvising a introduction to a melody which helps the singer himself to get into its swing.

**மறுவ. ஆளத்தி**

*[விரி–விரிப்பு]*

**விரிகொம்பு** *viri-kombu,* பெ. (n.) மாட்டுக் கொம்பு வகை; a kind of horn.

**வில்லடி** *villaḍi,* பெ. (n.) வில்லுப்பாட்டின் மற்றொரு பெயர்; another name for a folk performance sung with prose interludes to the accompaniment of a huge bow and other instruments.

*[வில்+அடி]*

**வில்லடிச்சான்பாட்டு** *villaḍiccāṉpāṭṭu,* பெ. (n.) **வில்லடி பார்க்க**; see villaḍi.

**விலங்காண்டி** *vilaṅgāṇḍi,* பெ. (n.) வன்செயல் ஈடுபாடுடையவன்; savagery.

*[விலங்கு+ஆண்டி]*

**வில்லடிப்பாட்டு** *villaḍi-p-pāṭṭu,* பெ. (n.)
1. வில்லுப்பாட்டுக்கும் வழங்கும் வேறு பெயர்; another name for a folk performance.
2. **வில்லடி பார்க்க**; see villaḍi.

*[வில்லடி+பாட்டு]*

**வில்வண்டி** *vilvaṇḍi,* பெ. (n.) குதிரை பூட்டிய வண்டி; cart pulled by horse.

*[வில்+வண்டி]*



**விலாசம் மெட்டு** *vilasammēṭṭu,* பெ. (n.) தெருக்கூத்தில் இடம் பெறும் ஒரு வகையான மெட்டு; a melody type take part in street dance.

*[விலாசம்+மெட்டு]*

**விலாடன்** *viḷāḍaṉ,* பெ. (n.) குற்றவாளியிடம் கைப்பற்றிய நிலம்; land embezzed from the culprit. "நீலபாடி எல்லை இன்னும் விலாடன் குற்றெத்தத் தெல்லை" (பா.செ.ப.).

**விலைமாதர் கும்மி** *vilaimādar kummi,* பெ. (n.) பரத்தையர் வாழ்வியல் தொடர்பான கும்மி; a dance performed by clapping hands which says the life of whores.

*[விலை+மாதர்+கும்மி]*

**விழித்திரு–த்தல்** *viḻittiru-,* செ.குன்றாவி. (v.t.) (புறநாட்டம் மற்றும் உறக்கமின்றி) அகநாட்ட முற்றிருத்தல்; to be insomnia caused by love affair. "வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு" (திருமந்.564).

*[விழித்து+இரு]*

**விழிப்புணர்வு** *viḻippuṇarvu,* பெ. (n.) ஒன்றைப் பற்றி தெளிவாக அறிந்துகொள்கிற அல்லது

உணர்ந்து கொள்கிற நிலை; awareness. சுற்றுச்சூழலைக் காப்பதற்கு மக்களிடம் விழிப்புணர்வு தேவை (உ.வ.).

*[விழிப்பு+உணர்வு]*

**விளம்ப நையாண்டி இசை** *vilampa nyandi išai,* பெ. (n.) கரகாட்டத்தில், இடம் பெறும் பல்வகை விளையாட்டுக்களுக்கேற்ப, அமைதியான தாள நடையில் இசைக்கப் பெறும் இசை வகை; a melody type played in a calm wars according to the rhythm in an arobatic folk dance called "karakam".

*[விளம்பல்+நையாண்டி+இசை]*

**விளரிப்பாலை** *vilarippālai,* பெ. (n.) இறைவனின் அருள் பெற இராவணன் பாடிய பண்; a melody type sung by the king Ravana to get god's grace.

*[விளரி+பாலை]*

**விளியொலி** *vili-y-oli,* பெ. (n.) பிறரை விளிக்கும் ஒலி; vocative sound.

*[விளி+ஒலி]*

**விளை** *vilai,* பெ. (n.) ஊர்ப்பெயரீறு; place name suffix. "அவன் பிறந்த ஊர் திசையன் விளை (நெல்.வ.).

*[மிளை–விளை (காவற்காடு, முட்காட்டு அரண்]*

மலையாள மொழிச் சார்பால் மிளை எனும் சொல் விளை எனத்திரிந்தது. **ஒ.நோ.** மீண்டும்–வீண்டும், மிளைப்பகுதி பழைய கோட்டை சார்ந்த காடாகும்.

**விளையாட்டு எழால்** *vilaiyāttu elāl,* பெ. (n.) எழு வகை இசை எழால்களைப் பலவாறு கலந்தும் உறழ்ந்தும் அமைப்பது; make a music by combining and changing the seven heptatonic.

*[விளையாட்டு+எழால்]*

**விற்பனவு** *virpanavu,* பெ. (n.) விற்பனை; sales (யாழ்ப்.).

*[விற்பனை–விற்பனவு]*

**வினைகெடு–தல்** *vinaikedu,* செ.கு.வி. (v.i.) செய்யும் கடமையில் தவறுதல், செய்யும் பணியை இடையில் விட்டு விட்டு வேறு பணி செய்தல்; to divert to other works failing in regular duty.

*[வினை+கெடு]*

மெனக்கெடுதல் என்பது விலக்கத் தகுந்த கடுங்கொச்சை சொல்.

**வினைவலர்** *vinaivalar,* பெ. (n.) வயற்களத் தொழிலாளி, தோட்டத் தொழிலாளி முதலான அடித்தள மக்களைக் குறிக்கும் பெயர்; a name which denotes the base people, who works in fields and garden. (64:101).

**வீக்கன்**[1] *vikkan,* பெ. (n.) குறவர் நடனத்தில் இடம் பெறும் ஓர் இசைக்கருவி; a musical instrument played in "Kurava" dance. (9:55).

*[வீக்கு–வீக்கன்]*

**வீக்கன்**[2] *vikkan,* பெ. (n.) கேரள இசைக்கருவி; musical instrument of Kerala.

*[வீக்கு+அன்]*

**வீச்சுமணி வலை** *viccumani valai,* பெ. (n.) வேகமாக வீசிப்பிடிக்க உதவும் வலை.

*[வீசு–வீச்சு+வலை]*

**வீச்சு மத்தளிகை** *viccumattāligai,* பெ. (n.) ஆடல் இயக்கங்களில் ஒன்று; one among many dancing movement.

**வீசுகோல்** *visu-kōl,* பெ. (n.) வில்லிசைக் கருவியை மீட்டப் பயன்படும் கோல்;

*[வீசு+கோல்]*

**வீடு கட்டுதல்** *vidukattutal,* பெ. (n.) சிலம்பாட்டத்தின் காலடி வைப்பு முறைகளில் ஒன்று; a way of holding the foot, while brandshing, quarter staff. (14:152).

*[வீடு+கட்டு]*

**வீடு சேர்-த்தல்** *viḍuśer-,* செ.குன்றாவி. (v.t.) பழந்தமிழர் வழக்கப்படி மணமக்களை வீட்டினுள் விடும் தலைநாள் கூட்டம்; to let married couples inside for first night, a ceremony of ancient Tamils.

*[வீடு+சேர்]*

**வீணன்** *vīṇaṉ,* பெ. (n.) இருளர் இனத்தில் வாலிபரைச் சுட்டும் சொல்; word which indicates a youth in Erular caste. (63:59).

**வீணி** *vīṇi,* பெ. (n.) இருளர் இனத்தில் இளம் பெண்களைக் குறிக்கும் சொல்; word which denote a young woman in Erular caste.

**வீதிச்சடங்கு** *vīdiccaḍaṅgu,* பெ. (n.) இறந்தவர்க்கு வீதியில் நடத்தும் பிணச்சடங்கு; death rites performed in the street.

*[வீதி+சடங்கு]*

இருளர் சொல்லாட்சி.

**வீரத்திருவிழா** *vīrattiruviḻā,* பெ. (n.) பெரம்பலூர் மாவட்ட தேவேந்திர குலவேளாள இனத்தவர் நடத்தும் முயல் வேட்டை; a rabbit hunt, conducted by Devantrakula Velālar caste in Perambalur.

**வீரபத்திரசாமியாட்டம்** *vīrapattirasāmiyāṭṭam,* பெ. (n.) வீரபத்ர சாமியைத் தாங்கும் பலகையைக் குறும்பரின ஆண்கள் தூக்கியவாறு ஆடும் ஆட்டம்; a dance by Kurumbar caste male, by carrying wooden log that carries Virapatra swamy.

**வீரபத்திரசாமி வாள் ஆட்டம்** *vīrapattira sāmy vāḷāṭṭam,* பெ. (n.) நாட்டுப்புற ஆட்டங்களில் ஒன்று; a rural dance.

**வீரம்** *vīram,* பெ. (n.) ஒன்பான் நஞ்சு செய்யப் பயன்படுகின்ற மூலப்பொருட்களில் ஒன்று; primary element used in preparing nine kinds of poison.

**வீரமுரசம்** *vīra-murašam,* பெ. (n.) மயிர்க்கண் முரசம்; a kind of drum.

*[வீர+முரசம்]*

**வீராளிப்பட்டு** *vīrāli-p-paṭṭu,* பெ. (n.) குறுநில மன்னர் உடுக்கும் பட்டுத்துணி வகை; a silk cloth specially used for the chieftains of Tamilnadu. வீராளிப்பட்டும் வயிர மோதிரமும் (உ.வ.).

*[வீராளி+பட்டு]*

**வீழ்ந்தாடல்** *vīḻndāḍal,* பெ. (n.) மரக்காலாடலுக்குரிய வேறு பெயராக அடியார்க்கு நல்லார் கூறுவது; another name told by Adiyarkku nallar for a dance on stilts.

**வெகு** *vegu,* பெ.எ. (adj.) மிகுதியான; excessive.

*[மிகு–விகு–வெகு]*

**வெகுமானம்** *vegumāṉam,* பெ. (n.) நன்மதிப்புக் கருதி தரப்படும் பரிசு; a gift or prize given as a recognition of talent or good well.

*[மிகு–விகு–வெகு+மானம்]*

**வெச்சாப்பு** *veccāppu,* பெ. (n.) இளஞ்சூடு; warmness.

**வெஞ்சனம்** *veñjanam,* பெ. (n.) வஞ்சிர மீனின் பக்கத்து சொதுவல்; a part of vanjiram fish.

**வெட்டுப்பட்ட வாதைகள்** *veṭṭuppaṭṭa vādaigal,* பெ. (n.) வில்லுப்பாட்டில், இறப்புப் பற்றிய கதையாடல்களுக்கு உரியவர்; lyrist who writes the songs of the deceased in villuppattu comprise a bow along with other instrument.

**வெட்டெழுத்து** *veṭṭeluttu,* பெ. (n.) கல்வெட்டு எழுத்து; inscription.

*[வெட்டு+எழுத்து]*

**வெண்குறைப்பாட்டு** *vendurai-p-pāttu,* பெ. (n.) கூத்து வகைகளுக்கு உரிய பாட்டு; a song composed for dance varieties.

*[வெண்குறை+பாட்டு]*

**வெம்பரப்பு** *vemparappu,* பெ. (n.) புறம்போக்கு நிலம், தரிசு; barren land.

ஏணைக்கோணை—முரண்பாடு

**வெல்விளி** *velvili,* பெ. (n.) அறை கூவுதல், நெடுமொழி கூறல்; throwing challenge.

**ம. வெல்லு விளி**

*[வெல்+விளி]*

உறுதியாக வெல்வேன் என விளித்துச் சூளுரைத்தல்.

**வெள்காடு** *veḷkāḍu,* பெ. (n.) 1. இடுகாடு; burial ground. 2. சுடுகாடு; cremation ground.

**க. பெள்காடு; தெ. வல்லகாடு**

**மறுவ. ஈமக்காடு**

*[வெள்+காடு]*

வெள்—வெறுமை, பயன்பாடின்மை. இடுகாடு வேறெந்த நல்ல பயன்பாட்டுக்கும் உதவாத நிலமாதலின் வெள்காடு (பயனற்றது) எனப் பெயர் பெற்றது.

**வெள்ளாப்பு** *veḷḷāppu,* பெ. (n.) வெண்ணுரையுடன் கூடிய அலைவாய்க்கரையொட்டி வரும் கடலலை; sea wave with white foam touching sea-shore.

**வெள்ளாயன்** *vellāyan,* பெ. (n.) ஆட்டிடையன்; goat keeper.

**வெள்ளாவலை** *veḷḷāvalai,* பெ. (n.) வெள்ளத்தின் ஓட்டத்திற்குரிய திசையறிந்து இழுக்கும் வலை; a fishing net.

*[வெள்ளம் – வெள்ளா+வலை]*

**வெள்ளிடைமன்றம்** *veḷḷiḍaimanṟam,* பெ. பூம்புகாரில் இருந்த பகுதி; a place in Pumpugar.

*[வெள்ளிடை+மன்றம்]*

**வெள்ளிய நூல்** *veḷḷiyanūl,* பெ. (n.) ஓவியம் வரைவதற்குரிய கருவி; a device use to draft paintings.

**வெள்ளோக்கத்தார்** *veḷḷōkkattār,* பெ. (n.) உழுவித்துண்ணும் வேளாளர்; a sect of Vellala farmers who manages the farm without tilling or working on farm or land.

**வெளிக்கிடு** *veḷikkiḍu-,* செ.கு.வி. (v.i.) புறப்படுதல், வெளியில் செல்லுதல்; to go out, start. (யாழ்ப்.).

*[வெளி+கு+இடு]*

ஏழன் பொருளில் நான்கன் உருபு வந்த உருபு மயக்கம்.

**வெளிக்கொட்டு** *veḷikkoṭṭu,* பெ. (n.) வட்ட ஆட்டத்தில் இடம் பெறும் கொட்டு வகை; a kind of beat, while playing dice.

*[வெளி+கொட்டு]*

**வெளிச்சப்பாடு** *veḷicca-p-pāḍu,* பெ. (n.) மருளாடுவோர் தெய்வமேறிய பின் சொல்லும் வாக்கு; utterings of a village temple priest after being occupied by the spirit or deity.

**மறுவ. அருள்வாக்கு**

*[வெளிச்சம்+பாடு. வெளிச்சப்பாடு—வெளிப் படுத்தல்]*

**வெளிப்பிடம்** *veḷippiḍam,* பெ. (n.) வலை வீசுவதற்கு உதவும் வகையில் கல், பாறை போன்றவையில்லாத அடிக்கடல் பகுதி; plain sea bed without stones or rocks.

*[வெளி—வெளிப்பு+இடம்]*

**வெளிவட்ட நகர்தல் அடவு** *veḷivaṭṭa nakardalaḍavu,* பெ. (n.) கும்மியில் இடம் பெறும் ஓர் அடவு; physical movement while clapping hands and dance.

**வேக வடிவம்** *vēkavaḍivam,* பெ. (n.) இறையின் சிற்ப வடிவ நிலை; sculptural form of god.

**வேசரம்** *vēšaram,* பெ. (n.) கோயில் விமான அமைப்பின் ஒரு கூறு; a component of a temple turret.

**வேட்கோவர்** *vēṭkōvar,* பெ. (n.) மட்பாண்டங் களைச் செய்யும் தொழிலாளி; earthern pot - maker.

*[வேள்+கோவர்]*

**வேட்டைக்கும்மி** *vēṭṭaikkummi,* பெ. (n.) கும்மி வகையினுள் ஒன்று; one among a dance which is performed by clapping hands to time and singing.

*[வேட்டை+கும்மி]*

**வேட்டை நடனம்** *veṭṭainaḍaṉam,* பெ. (n.) நாட்டுப்புற நடனக் கலைகளில் ஒரு வகை; one among rustic dance.

**மறுவ. விலங்குப் போலிகள்**

**வேண்டு-தல்** *vēṇḍu-,* செ.குன்றாவி. (v.t.) வாங்குதல்; to buy, purchase. (யாழ்ப்.).

*[வேண்டு-வேண்டிப்பெறுதல், வாங்குதல்]*

**வேதாள ஆட்டம்** *vēdāḷa āṭṭam,* பெ. (n.) மரத்தாற் செய்யப்பட்ட வேதாளத்தின் கோர முகமூடியை அணிந்து ஆடும் ஆட்டம்; rocking dance of a demon performed by wearing the gruesome mask of a demon.

*[வேதாளம்+ஆட்டம்]*

**வேயாங்பூர்வா** *vēyāṅpūrvā,* பெ. (n.) பொம்ம லாட்ட வகைகளில் ஒன்று; a kind of puppet show.

**வேலன்மார்** *velaṉmār,* பெ. (n.) காணிப் பழங் குடியினரைச் சுட்டும் வேறு பெயர்; a name denote Kāṇi aborign.

**வேள்வி அந்தணம்** *vēḷviandaṇam,* பெ. (n.) உயிர்க்கொலை, வேள்வி செய்து ஆரியவேதம் ஓதும் பார்ப்பனன்; chanting priest of vedic faith with through fires.

**வேளக்களி** *vēḷakkaḷi,* பெ. (n.) கேரளத்தில் ஆடப்படும் நாட்டுப்புற நடனம்; country side dance of Kerala.

**வேளாவளி**[1] *vēḷāvaḷi,* பெ. (n.) பழம்பெரும் பண் களில் ஒன்று; an ancient melody.

**வேளாவளி**[2] *vēḷāvaḷi,* பெ. (n.) நெய்தல் நிலத் திற்குரிய பண்; a melody type peculiar to marytime.

**வேறுகாணல்** *vēṟukāṇal,* தொ.பெ. (vbl.n.) வெற்றி பெறக் காணுதல்; seeing some one coming victorious. கள்ளராற்புலியை வேறு காணிய... உரைத்தனள். (சீவக.741). கள்ளா வா புலியைத் குத்து (பழ.).

*[வேறல்-வேறு(வெற்றி)+காணல்]*

பகைவர்களைத் தமக்குள் மோதச் செய்து தான் தப்பித்துக்கொள்ளும் உத்தியைக் குறித்த சொல் லாட்சி. கள்ளனிடமிருந்தும் புலியிடமிருந்தும் தப்பிக்க வழிப்போக்கன் உரைத்த சூழ்ச்சி மொழி.

**வைந்தனை ஆடல்** *vaindaṉaiāḍal,* பெ. (n.) ஆண்கள் ஆடுகின்ற ஒரு வகையான கோலாட்டம்; a group dance by gents in which generally women move around striking short coloured sticks to the rhythm of a song.

**மறுவ. வளந்தனையாட்டம்**

*[வளைந்து+அணை+ஆடல்]*

**வூதி** *vūdi,* பெ. (n.) நிழற்கூத்தைக் கண்டுபிடித்த தாக கூறப்படும் சீனப் பேரரசன்; a chinese emperor who discovered a play by making the shadow of the doll to fall on the screen - called "shadow play".

# பிற்சேர்க்கை

## அ

**அக்காணி** *akkāṇi*, பெ.(n.) பதநீர்; sweet toddy drawn in a pot lined with lime to prevent fermentation.

*[அக்காரம்+நீர்–அக்காரநீர்–அக்காணீர்–அக்காணி (கொ.வ.)]*

**அகத்தியம்** *agattiyam*, பெ.(n.) மிகத் தேவை (அடிப்படை)யானது (அத்தியாவசியம்); that which is indispensable, essential.

மறுவ. கட்டாயம்

*[அகம்+அகத்து–அகத்தியம்]*

**அகப்பத்து** *agappattu*, பெ.(n.) ஊரையொட்டியுள்ள வயல்; paddy field adjacent to village.

*[அகம்+பற்று–அகப்பற்று–அகப்பத்து (கொ.வ.)]*

**அகலக்கரை** *ahalakkarai*, பெ.(n.) ஆடையின் அகன்ற பகட்டுக்கரை (இ.வ.) (டப்பாக்கரை); thick border of the cloth.

*[அகலம்+கரை]*

**அகனெடுங்கலம்** *aganedunkalam*, பெ.(n.) ஒருவகைப் பெரும் ஏனம் (அண்டா); large vessel, cauldron.

*[அகல்+நெடு> நெடும்+கலம்]*

**அங்கையுள்நெல்லி** *ankaiyulnelli*, பெ.(n.) உள்ளங்கை நெல்லிக் கனி போல் தெளிவானது; (கரதலாமலகம்); a fruit of the myrobalan placed on the palm of the hand, fig; perception at once easy and quite clear.

*[அங்கை+உள்+நெல்லி]*

**அடாவடி பேசு-தல்** *aḍāvaḍipēšu-*, 1 செ.கு.வி. (v.i.) பெரும் பொய் பேசுதல்; to utter a big lie.

*[அடாவடி+பேசுதல்]*

**அடைப்பி** *aḍaippi*, பெ.(n.) 1. எண்ணெய், அரிசி முதலியவை வைத்துக்கொள்ள உதவும் பெரிய அடைப்புச் சிமிழ்(டின்); a large container made of tin. 2. மெல்லிய மாழை முதலிய வற்றால் பலவகை அளவில் செய்யப்படும் மூடிபோட்ட கொள்கலம்; container (made of metal like tin or plastic) tin (of various sizes). 3. சிமிழ்; small box for keeping jewels, scent, etc, casket.

*[அடைப்பு–அடைப்பி]*

**அண்டப்புளுகன்** *aṇḍa-p-puḷugaṉ*, பெ.(n.) பெரும் பொய்யன், கசப்புளுகன்; big liar.

*[அண்டம்+புளுகன்]*

**அணிசெய் ஆடையன்** *aṇišeyāḍaiyaṉ*, பெ.(n.) புனைவான உடை உடுப்பவன் (சிங்காரக்காரன்); fop gaily dressed person.

*[அணி+செய்+ஆடையன்]*

**அணியக்கால்** *aṇiyakkāl*, பெ.(n.) கப்பலின் முன்னணியத்திலிருந்து வெளியே புறப்படும் உத்திரம் (M. Navl.81). (சப்தஜா); bowsprul.

*[அணிய(ம்)+கால்]*

**அணியம்** *aṇiyam*, பெ.(n.) செயலாக்க முனைப்பு; completely prepared for action.

த.வ. செயல்முனைப்பு

*[அணி–அணியம்]*

**அணிவரிசை** *aṇivarišai*, பெ.(n.) பிறர் மணங்கொள்ளும் வகையில் காட்சிப்படுத்தப்பட்ட பொருள்களின் பெருந்தொகுதி; array.

*[அணி+வரிசை]*

**அதிகார ஏவலர்** *adikāraēvalar,* பெ.(n.) வெள்ளிவில்லை அணிந்த தொண்டர்; தலைமை உதவியாளர் (தபேதார்); head peon of a district or divisional office as wearing a silver badge.

[அதிகார+ஏவலர்]

**அதிராகு-தல்** *adirāgu-,* செ.கு.வி. (v.i.) பருவ முற்ற கடாரி இணைசேரக் காளையைத் தேடுதல்; urge for matting aroused in cow. கடாரி அதிராகியுள்ளது (கொங்.வ.).

[அதிர்+ஆதல்]

**அமர்வு அடக்கம்** *amarvuadakkam,* பெ.(n.) இறந்த துறவி முதலியோரை அமரவைத்துப் புதைத்தல் (சமாதியில் வைத்தல்); burrying in a sullug posture, as the remains of an ascetic. 2. கேடு செய்தல்; crushing out utterly.

[அமர்வு+அடக்கம்]

**அமைதிக்கொடி** *amaidikkodi,* பெ.(n.) அமைதியைத் தெரிவிக்குங்கொடி (சமாதானக் கொடி); flag of truce.

[அமைதி+கொடி]

**அயற்காரண அணி** *ayarkārana ani,* பெ.(n.) ஒருவன் முயலும் தொழிலின் பயன் அத் தொழிலாற் கைகூடாது வேறொன்றாற் கை கூடுவதாகக் கூறும் அணி (தண்டி 71) (சமாகிதம்); figure of speech in which an effect is described as proceeding from something other than its natural cause.

[அயல்+காரணம்+அணி]

**அரச இரண்டகம்** *arašairandagam,* பெ.(n.) அரச இரண்டகம் (வின்.); high treason.

[அரச+இரண்டகம்]

**அரசிதழ்** *arašidal,* பெ.(n.) அரசு செய்தித் திரட்டுத்தாள் (கெசட்டு); gazette.

[அரசு+இதழ்]

**அரசுஊழியம்** *arašuūliyam,* பெ.(n.) ஊதிய மின்றி அரசுக்குச் செய்யும் வேலை (சர்க்கா ரூழியம்); work done for government without remuneration.

[அரசு+ஊழியம்]

**அரவவேள்வி** *aravavēlvi,* பெ.(n.) பாம்புகள் சாகும்படிச் செய்யும் வேள்வி (சர்ப்பயாகம்); sacreficial rite for the destruction of serpents.

[அரவம்+வேள்வி]

**அரிஓகநிலை** *ariōganilai,* பெ.(n.) கணைக் கால்கள் பிட்டத்தைத் தொடவும், விரிந்த கை விரல்கள் தொடையில் படவும், வாய் மலர்ந்தும், பார்வை, மூக்கு நுனியை நோக்கியும் இருக்கும் ஓக வகை (கேசரியாசனம்); a yogic posture.

[அரி+ஓக(ம்)+நிலை]

**அரிமாஏறு** *arimāēru,* பெ.(n.) சிங்கக்குட்டி (சிங்க மடங்கல்); young of lion.

[அரிமா+ஏறு]

**அரிமாநோக்கு** *arimānōkku,* பெ.(n.) அரிமாவைப் போல் கழுத்தைத் திருப்பி முன்னும் பின்னும் பார்த்துச் செல்லும் நோக்கு; (சிங்க நோக்கு); looking over the shoulder with neck turned as a lion.

[அரிமா+நோக்கு]

**அரிமுக அரக்கன்** *arimuga arakkan,* பெ.(n.) முருகக் கடவுளால் அழிக்கப்பெற்ற, அரிமா முகங் கொண்ட ஓர் அரசன்; lion faced Asura slain by Lord Murugan.

[அரி+முக+அரக்கன்]

**அரிமுக ஓடம்** *arimugaōdam,* பெ.(n.) அரிமா உருவை முகப்பிற் கொண்ட தோணி (சிங்க முக ஓடம்); a boat with lion shaped prow.

[அரி+முக+ஓடம்]



**அருங்கலைச்செல்வி** *aruṅkalai-c-celvi,* பெ.(n.) கலைமகள் (சகலகலாவல்லி); Kalaimakal, as the goddess of all learning.

*[அருமை+கலை+செல்வி]*

**அருங்கலை** *aruṅkalai,* பெ.(n.) 1. காதாட் டுங்கலை; elephants ear, term used to denote the art of moving or waving on ears in imitation of the elephant. 2. பெரு முயற்சியால் ஆக வேண்டிய செயல் (கச கர்ணம்); a task involving stupenduous effort.

*[அருமை+கலை]*

**அருணோக்கம்** *aruṇōkkam,* பெ.(n.) கடைக் கண் பார்வை (கடாட்சவீட்சணம்); side glance.

*[அருள்+நோக்கம்]*

**அருளறம்** *aruḷaṟam,* பெ.(n.) உயிர்களின் பொருட்டுச் செய்யும் அறச்செயல்; meritorious deeds performed in favour of living beings.

*[அருள்+அறம்]*

**அருளுருவன்** *aruḷuruvaṉ,* பெ.(n.) அருளுக்கு நிலைக்களமானவன் (கருணாமூர்த்தி); god as embodiment of kindness.

*[அருள்+உருவன்]*

**அலைக்கொம்பு** *alai-k-kombu,* பெ.(n.) மாட்டுக்கொம்பு வகை; a kind of cow's horn.

*[அலை+கொம்பு]*

**அறுபான்நிறை** *aṟuṉniṟai,* பெ.(n.) அறுபதாம் அகவை நிறைவு; attainment of one's sixtieth birth day.

*[ஆறு+பத்து)பான்+நிறை]*

**அறுவைப்பண்டுவம்** *aṟuvai-p-paṇḍuvam,* பெ.(n.) கத்தி கொண்டறுக்கும் பண்டுவம் (சத்திரக்கருமம்); surgical operation.

*[அறுவை+பண்டுவம்.]*

**அனைத்து ஊடாட்டம்** *aṉaittuūḍāṭṭam,* பெ.(n.) எல்லாவற்றிலும் ஊடுருவியிருக்கை; all pervasiveness, immanen.

*[அனைத்து+ஊடாட்டம்.]*

**அனைத்துக்கரிசுநீக்கச்சடங்கு** *anaittukkarišu nikkaccaḍaṅku,* பெ.(n.) கரிசு நீங்க செய்யும் நடப்புக் காரியம் (சர்வப்பிராயச் சித்தம்). Ceremoney for the expiation of all sins performmed generally at the time of death.

*[அனைத்து+கரிசு+நீக்க+சடங்கு.]*

**அனைத்துரிமைவிற்பனை** *aṉaitturimai viṟpaṉai,* பெ.(n.) எல்லா உரிமைகளையும் விலைக்குக் கொடுத்துவிடுகை (சத்தக் கிரயம்); absolute sale.

*[அனைத்து+உரிமை+விற்பனை.]*

**அனைத்தூடி** *aṉaittūḍi,* பெ.(n.) எங்கும் நிறைந் தவன்; god on omnipresent.

*[அனைத்து+ஊடி]*

**அனைத்து நோய் நீக்கி** *anaittunōynīkki,* பெ.(n.) அனைத்துநோய்களையும் குணப்படுத்த வல்லது; cure all panacea.

*[அனைத்து+நோய்+நீக்கி.]*

**ஆக்குநர்** *ākkuṉar,* பெ.(n.) திரைப்படம், நாடகம், போன்றவற்றை உருவாக்குவதில் ஆளுவ (நிருவாக)ப் பொறுப்புடன் பொருட்செலவையும் ஏற்பவர்(தயாரிப்பாளர்); producer (of a film or layer).

*[ஆக்கு→ஆக்குநர்.]*

**ஆகட்டை** *ākaṭṭai,* பெ.(n.) ஒரு வகை குறுங்கண் பறவை; a bird with small eyes.

*[ஆகு–ஆகட்டை]*

**ஆசான் நுகர்வு** *āšāṉnugarvu,* பெ.(n.)(சமய) ஆசிரியன் நுகரும் பங்குரிமை; endowment enjoyed by spiritual teacher.

*[ஆசான்+நுகர்வு.]*

**ஆட்டுத்தொட்டி** *āṭṭuttoṭṭi,* பெ.(n.) கால்நடை களை புலாலுக்காக அறுக்கும் இடம் (சூளை); slaughter house.

*[ஆடு+தொட்டி]*

# ஆ

**ஆடிக்கூடு** *ādikkūḍu, பெ.*(n.)(காற்றினால் சுடர் அணையாமல் இருக்க)மண்ணெண்ணெய் விளக்கில் பொருத்தும் கண்ணாடிக் கூடு (சிம்னி); chimney.

*[ஆடி + கூடு]*



**ஆண்டுவரிக்கணிப்பு** *āṇduvari-k-kaṉippu, பெ.*(n.) அரசுக்குச் செலுத்த வேண்டிய வரிப் பணத்தைத் தண்டும் ஆண்டிறுதி வருவாய் கணிப்பு;annual settlement of revenue.

*[ஆண்டு+வரி+கணிப்பு]*

**ஆப்புக்கட்டை** *āppuk-kaṭṭai, பெ.*(n.) நீள்சதுர வடிவிலிருக்கும் சிறு மரத்துண்டு (டப்புப் பலகை); piece of wood, quadrant in shape, which is used in the log.

*[ஆப்பு+கட்டை]*

**ஆமையிருக்கை** *āmaiirukkai, பெ.*(n.)(சமய) ஆமை வடிவமைந்த ஒக இருக்கை; a raised wooden board shaped like a tortoise used as a seat while meditating.

*[ஆமை+இருக்கை]*

**ஆமையோட்டுப்பொடி** *āmaiyōṭṭuppoḍi, பெ.*(n.) ஆமையோட்டுச் சாம்பல் (கி.வ.); calcinated medicinal powder of tortoise shell.

*[ஆமை+ஓட்டு+பொடி]*

**ஆயிரக்காலி** *āyira-k-kāli, பெ.*(n.)நூறு கால் களையுடைய ஓர் உயிரினம்;any creature or insect with 100 legs.2.பூரான்; cantepede.

*[ஆயிரம்+காலி]*



**ஆயிரம்குவளை** *āyiramkuvaḷai, பெ.*(n.)ஆயிரங் கோடி (சுக்கிர.நீதி.106); thousand crores.

*[ஆயிரம்+குவளை]*

**ஆயிரம்பிறைநாளணி** *āyiramiṟai nāḷaṇi, பெ.*(n.)எண்பது அகவைக்கு மேற்பட வாழ்ந்து ஆயிரம் பிறைகண்டவர்க்குச் செய்யுஞ் சடங்கு; ceremony performed when a man is past 80 year and has seen 1000 crescent moon.

*[ஆயிரம்+பிறை+நாளணி]*

**ஆயிரம்பெயர்** *ayirampeyar, பெ.*(n.)கடவுளின் ஓராயிரம் திருப்பெயர்கூறும் நூல் (சகசர நாமம்);sacred book containing thousand names of a deity.

*[ஆயிரம்+பெயர்]*

**ஆய்வுக்குழாய்** *āyavu-k-kuḷāy, பெ.*(n.)மருந்தை ஆய்வு செய்ய பயன்படுத்தும் ஒரு பக்கம் மூடப்பட்ட குழாய் (சோதனைக்குழாய்); a test tube for testing medicines or some chemicals.

*[ஆய்வு+குழாய்]*

**ஆரியம்** *āriyam, பெ.*(n.) கேழ்வரகு; ragi millet.

*[அரு(சிறியது)–ஆரு–ஆரியம்]*

**ஆவணவேலை** *āvanavēlai,பெ.*(n.) ஆவணமெழுதும் வேலை; profession of writing documents.

*[ஆவணம்+வேலை]*

**ஆள்மயக்கி** *āḷmayakki,பெ.*(n.)உலகத்தையே மயங்க வைக்கும் சித்தர்களிடம் இருக்கும் ஒரு வகை மருந்துக்குளிகை;a magic pill to seduce people possessed by siddhas.

*[ஆள் +மயக்கி]*

**ஆள்நிலம்** *āḷnilam,பெ.*(n.)அடிக்கடி ஒருவர் கையிலிருந்து மற்றொருவர் கைக்கு மாறி துய்த்தாளப்படும் ஊர் நிலங்கள்; tenure in which village or lands of a community are held individually under periodical distribution.

*[ஆள்+நிலம்]*

**ஆறணியன்** *āraṇiyan, பெ.*(n.) கங்கையை முடிமேலணிந்த சிவன்; Sivan, who holds the Ganges on his head.

*[ஆறு+அணியன்]*

**ஆறாம்கேடு** *ārāmkēḍu,பெ.*(n.)குழந்தை பிறந்த ஆறாம் நாளிலேனும், ஆறாம் மாதத்திலேனும், ஆறாம் ஆண்டலேனும் குழந்தை அல்லது தாயை வருத்துவதாகக் கூறப்படும் ஒரு தீக்கோள்;an evil planet supposed to cause distress an infant or its monther on the 6th day, 6th month or 6th year of its birth.

*[ஆறாம்+கேடு]*

**ஆறுநிலை** *ārunilai, பெ.*(n.)உடலில் உண்டாகும் இருத்தல்,தோன்றுதல், உருத்திரித்தல், வளர் தல், சுருங்குதல், அழிதல்; six stages of the physical body.

*[ஆறு+நிலை]*

**ஆறெழுத்து மந்திரம்** *āreḻuttu mandiram, பெ.*(n.) குமரக் கடவுளுக்குரிய ஆறெழுத்து களாகிய (சடக்கரம்) மந்திரம்(இலக்.அக.);the mantra of six letters sacred to god kumaran.

*[ஆறு+எழுத்துமந்திரம்]*

# இ

**இசைப்பெட்டி** *iśai-p-peṭṭi,பெ.*(n.)காற்றை உட்செலுத்தி மேற்புறக் கட்டைகளை விரலால் அழுத்தி இசைக்கும்பெட்டி வடிவிலுள்ள இசைக்கருவி (ஆர்மோனியம்); harmonium.

**மறுவ.பாட்டுப் பெட்டி.**

*[இசை(ஒலி, ஓசை)+பெட்டி]*

**இஞ்சி இளகியம்** *iñji iḷagiyam,பெ.*(n.)இஞ்சி சேர்த்த இளகியவகை; electuary with ginger as its chief ingredient.

*[இஞ்சி+இளகியம்]*

**இட்டேறு-தல்** *iṭṭēṟu-,* செ.கு.வி. (v.i.) 1. உற்ற நேரத்தில் வருதல்; to come in time. 2. ஒரு வகையாக நிறைவேற்றுதல்; to give perfection to a work.

*[இட்டு+ஏறு-,]*

**இடிகுழல்இரும்புந்து** *iḍikūḻal irumbundu, பெ.*(n.) சக்கரங்களின் மேல் சுற்றி வரும் இரும்புப் பட்டை பொருத்தப்பட்டதும் நீண்ட குழாயை உடையதுமான படைத்துறை வண்டி; tanks.



*[இடி+குழல்–இரும்புந்து]*

**இடும்பு** *idūmbu,பெ.*(n.) எண்குணக்கேடு; எட்டு வகை தீய குணங்களுள் ஒன்று இறுமாப்பு; pride.

*[இடு–இடும்பு]*

**இடைமறி–த்தல்** *idaimari,* செ.குன்றாவி. (v.t.) குறுக்கிட்டுத் தடுத்தல், இடம் விட்டு இடம் செல்லும் ஒருவரை அல்லது ஒன்றை அல்லது ஒரு செய்தியை தடுத்து நிறுத்துதல்; to intercept.

*[இடை+மறி–,]*

**இடைமறிப்பு** *idaimarippu,* பெ.(n.) இடம் விட்டு இடம் செல்லும் ஒருவரை அல்லது ஒன்றை அல்லது தகவல் போன்றவற்றைத் தடுத்து நிறுத்துகை; interception. கடத்தல்காரர் களுக்கிடையே நடந்த தொலைபேசி உரை யாடலைக் காவல்துறையினர் இடைமறிப்பு செய்து அவர்களைக் கைது செய்துவிட்டனர்.

*[இடை+மறிப்பு. மறி > மறிப்பு]*

**இடையம்புளி** *idayampuli,* பெ.(n.) இடையர் வைத்த குழம்பு; curry broth prepared by cowherd.

*[இடையம்+புளி]*

**இதளியம்** *idaliyam,பெ.*(n.)பாதரசம்; mercury.

*[இதள்– இதளியம்]*

**இயல்பூக்கம்** *iyalbūkkam,* பெ.(n.) ஒருவர் அல்லது ஒரு விலங்கு சிந்திக்காமல் அல்லது பயிற்சி பெறாமல் குறிப்பிட்ட முறையில் நடந்துகொள்ளத் தூண்டும் இயற்கையான உந்துணர்வு; instinct.

*[இயல்பு+ஊக்கம். ஊக்கு > ஊக்கம்]*

**இயல்வளி** *iayalvali,*பெ.(n.) (கற்பு காலத்தே தலைவியைப் பிரிந்து கல்வி, பணி நிமித்தம் பிரிந்து செல்லும் தலைவன் மனம் தளருமாறு வீசும்) கடுமையான வாடைக்காற்று;north chill wind blowing strongly, to divert hero's mind, who separates her for job reason.

*[இயல்+வளி]*

**இயற்கணிதம்** *iyarkanidam,* பெ.(n.) குறிக் கணக்கியல்; algebra.

*[இயல்+கணிதம்]*

**இயற்கை முத்து** *iyarkaimuttu,*பெ.(n.) கடலில் கிடைக்கும் ஒரு வகை இயற்கை அணிகலப் பொருள்;genuine pearl.

*[இயற்கை+முத்து]*

**இயற்கைவளம்** *iyarkaivalam,*பெ.(n.) ஒரு குறிப் பிட்ட சூழலில் இயல்பாக இடம் பெற்றிருக்கும் வளம்; natural resources.

*[இயற்கை+வளம்]*

**இயற்பியல்** *iyar-p-piyal,*பெ.(n.) ஒலி,ஒளி, வெப்பம், மின்சாரம், காற்றழுத்தம் போன்ற இயற்கையாற்றல்களின் இயல்புகளைக் குறித்த அறிவியல்; physics.

*[இயற்பு+இயல்]*

**இரட்டைக் குழந்தை** *irattai-k-ulandai,*பெ.(n) ஒரு மகப்பேற்றில் பிறந்த இரு குழந்தைகள்; twins.

*[இரட்டை+குழந்தை]*

**இரண்டகன்** *irandagan,*பெ.(n.)நம்பிக்கைக் கேடன்;betrayer, treacherous person.

*[இரண்டு+அகம்→அகன்]*

**இராச நிகண்டு** *irāšanigandu,* பெ.(n.) வட மொழியில் எழுதப்பட்டதொரு நிகண்டு நூல்

(அபிதான சூடாமணி);a lexiography written in sanskrit language.

**இருவாய்சால்** *iruvāy-cāl,* பெ.(n.) தவசம் கொட்டி வைப்பதற்காக இரு பக்கமும் வாயுள்ளதாக நீளுருளை வடிவில் செய்யப்பட்ட மட்பாண்ட குவிதாழி; a barrel like storage earthen ware to store food grain.

*[இரு+வாய்+சால் (பெரியதாழி)]*

**இருவெதிர்** *iruvēdir,*பெ.(n.)பெரு மூங்கில் (30 ஆண்டுக்கொரு முறை பூக்கும்) முந்தூழ் (நற்றிணை 116);large bamboo.

*[இரு+வெதிர்]*

**இலக்கணப்பால்** *ilakkaṇappāl,*பெ.(n.) இலக்கணத்தில் காட்டும் பால்பிரிவு; grammatical gender.

*[இலக்கணம்+பால்]*

தமிழில் ஐம்பால் (ஆண்பால், பெண்பால், பலர் பால்,ஒன்றன்பால்,பலவின்பால்) இருக்கின்றன. இதில் பால் (ஆண்,பெண், அஃறிணை), எண் (ஒருமை, பன்மை) ஆகிய இரண்டும் இணைந்துள்ளன.

*[இலக்கணம் + பால்]*

**இலக்கணப்போலி** *ilakkan-p-pōli,*பெ.(n.)தனிச் சொல்லின் எழுத்துகளும் ஒரு கூட்டுச் சொல்லின் உறுப்புகள் அல்லது உறுப்புச் சொற்களும் முன் பின்னாக முறைமாறி வருவது; metathesis.

*[இலக்கணம் +போலி]*

**எ.டு.** தனிச்சொல் :அலரி–அரளி; கொப்புளம் – பொக்குளம், சதை–தசை,ஞிமிறு–மிஞிறு, சிவிறி–சிவிறி.

**கூட்டுச் சொல்:** இல்வாய்–வாயில்; இல்முன் முன்றில், கதுவாலி–கவுதாரி;தானைமுன்–முன்றானை.

**இலக்கியப்பேருரை** *ilakkiya-p-pērurai,* பெ.(n.) இலக்கியம் தொடர்பாக ஆற்றும் நீண்ட உரை; literary discourse.

*[இலக்கியம்+பேருரை]*

**இலக்கியவழக்கு** *ilakkiyavaḻakku,*பெ.(n) இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள மொழி வழக்கு; literary dialect.

**மறுவ.புலனெறிவழக்கம்.**

*[இலக்கிய(ம்)+வழக்கு]*

**இழைத்தல் மொழி** *iḻaittalmoḻi,*பெ.(n.) செயற்கை மொழி; artificial language.

*[இழைத்தல் +மொழி]*

**இவர்–தல்** *ivar-,* செ.கு.வி.(v.t.)ஊர்திகளில் ஏறிச் செல்லுதல்; to rider drive.

*[உவ–இவ–இவர்]*

**இவரி** *ivari,*பெ.(n.)வண்டி முதலியவற்றில் செல் லுகை (சவாரி);ride , drive.

*[இவர்–இவரி]*

**இழுவை** *izhuvai,* பெ.(n.)நிலைப்பேழை, மிசை(மேசை)யிலுள்ள இழுப்பறை; drawer..

*[இழு–இழுவை]*

**இழையப்பம்** *iḻaiyappam,*பெ.(n.)சிற்றுண்டிவகை (இடியப்பம்); steamed rice-cake.

*[இழை+அப்பம்]*

**இளங்கமுகு** *iḷaṅkamugu,*பெ.(n.)முற்றாத பாக்கு; tender areca.

**க.** எளெகறங்கு.

*[இளம்+கமுகு]*

**இளங்குழந்தை** *iḷaṅkuḻandai,*பெ.(n.) பச்சிளங் குழந்தை;tender infant.

**க.** எளெகூசு.

*[இளம்+குழந்தை]*

**இளந்தளிர்** *iḷantaḷir,*பெ.(n.) இளமையான தளிர்; tender young foliage.

**க.** எளெதளிர்.

*[இளம்+தளிர்]*

**இளந்தென்னை** *iḷantennai,*பெ.(n.) இளைய தென்னை மரம்; young coconut tree.

க. எளெதெங்கு.

[இளம்+தென்னை]

**இளந்தோல்** *ilantōl*,பெ.(n.)மென்மையான தோல்; tender, soft skin or hide.

க. எளெதொகல்.

[இளம்+தோல்]

**இளமேனி** *iḷa-mēṉi*,பெ.(n.) இளைய பருவத்தார்;the body of a young man.2.குழந்தை ஈன்ற பெண்ணின் உடம்பு;the delicate body of a woman immediately after child birth. 3. குழந்தை உடம்பு;a child's body.

மறுவ.பச்சையுடம்பு.

[இளம்+மேனி]

**இளமைத் தனம்** *iḷamaittaṉam*, பெ.(n.)இளமை; youth,tenderness.

க. எளெதன.

[இளமை+தனம்]

**இறங்கு துறை** *iṟaṅguturai*,பெ.(n.) துறைமுகத்தில் கப்பல் சரக்கு இறக்குமிடம்;jetty.

[இறங்கு+துறை]

**இறங்குபூரான்சுழி** *iṟaṅgupūrāṉcuḻi*,பெ.(n.) மாட்டின் மயிர்ச்சுழி, முதுகின் நடுவில் இருக்கும் சுழி; a small round pit at the back side of the bullock.

[இறங்கு+பூரான்+சுழி]

**இறப்பிலி** *iṟappili*,பெ.(n.)இறப்பில்லாதவன், இறைவன்; God.

[இறப்பு+இலி]

**இறாஞ்சு வலை** *iṟāñjuvalai*,பெ.(n.);நீர் நிலைகளில் வேகமாக இழுத்தற்குரிய வலை; a fishing net.

[இறாஞ்சுதல்-இழுத்தல். இறாஞ்சு+வலை]

**இறாமணி வலை** *iṟāmaṇivalai*,பெ.(n.) கீழே மணிகள் கட்டப்பட்டு இறாமீன் பிடிப்பதற்காக அமைக்கப்பட்ட வலை; tie up balls at the bottom of fishing net used to catch shrimps.

[இறால்+மணி+வலை]

**இறுதிச்சடங்கு** *iṟudi-c-caḍaṅgu*,பெ.(n.) இறந்தவர்க்கு இறுதியாகச் செய்யும் சடங்கு; funeral rites.

மறுவ.இறுதிக்கடன்

[இறுதி+சடங்கு]

**இறைப்பு கட்டு-தல்** *iṟaippukattu-*, செ.குன்றாவி.(v.t.)கிணற்றிலிருந்து வயலுக்கு நீர் இறைத்தல்; to irrigate.

[இறைப்பு+கட்டு-,]

**இறையருள்** *iṟaiyaruḷ*,பெ.(n.)இறைவன் மாந்தனிடம் காட்டும் பேரன்பு; God's grace. நேற்று நடந்த நேர்ச்சியில் இறையருளால் இவர் உயிர் தப்பினார்.(உ.வ.)

[இறை+அருள்]

**இறையறிவு** *iṟai-y-aṟivu*,பெ.(n.)இறைவனைப் பற்றிய அறிவு;knowledge of the Supreme Being.

[இறை+அறிவு]

**இறையூர்** *iṟaiyūr*,பெ.(n.)விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; name of a village in vilupuram.

[இறை+ஊர்]

**இன்கூழ்** *iṉ-kūḻ*,பெ.(n.)இனிப்பு வகைகளுளொன்று (அல்வா.);a kind sweet.

[இன்+கூழ்]

**இன்மிதவை** *iṉmiḍavai*,பெ.(n.)இனிப்பு பணியார வகை (இ.வ.);a kind of confectionary.

[இன்+மிதவை]

**இனக்கலவரம்** *iṉakkalavaram*,பெ.(n.) இனம் அல்லது குழு அடிப்படையில் தோன்றும் பெருங் கலகம்; riot based on caste or class disputes.

[இனம்+கலவரம்]

**இனச்சிதைவு** *ina-c-cidaivu,* பெ.(n.) ஒரு குழுவினரின் சீர்குலைவு; disintegration among a clan or community.

[இனம்+சிதைவு]

**இனச்சொல்** *ina-c-col,* பெ.(n.) ஒரே மூலத்தி னின்று தோன்றியதும் இனமொழிகளில் காணப்படுவதுமான சொல்; cognate word.

[இனம்+சொல்]

**இனமொழி** *inamoli,* பெ.(n.) ஒரே குடும்பத்தைச் சார்ந்த மொழி; cognate language.

[இனம்(ம்)+மொழி]

# ஈ

**ஈக்குச்சி** *ikkucci,* பெ.(n.) துடைப்பங்குச்சி; rib of a palm leaf.

[ஈர்–பிளத்தல், கிழித்தல். ஈர்+குச்சி–ஈக்குச்சி]

**ஈகியர்** *igiyar,* பெ.(n.) **ஈகி பார்க்க;** see *igi.*

[ஈர்–பிளத்தல், கிழித்தல். ஈர்+குச்சி–ஈக்குச்சி]

**ஈகி** *igi,* பெ.(n.) 1. கொடையாளி; liberal donor. 2. பிறர் பொருட்டு தன்னலம் துறப்போன்; one who sacrifices his self interest.

[ஈ→ஈதல் ஈ→ஈகை ஈகை→ஈகி]

**ஈச்சம்பழம்** *iccampalam,* பெ.(n.) காட்டீந்தின் பழம்; date palm. "காய்த்த பலாவின் கனி யுண்ண மாட்டாமல் ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே" (திருமந். 244)

[ஈச்சம்+பழம்]

**ஈச்சை** *iccai,* பெ.(n.) கழிவுப் பொருள்களிலும் தின் பண்டங்களிலும் மொய்க்கும்; பறக்கும் பூச்சி யான ஈ; house fly.

[ஈ–ஈச்சை]

**ஈச்சைக்கீரை** *iccai-k-kirai,* பெ.(n.) மென்மையான காரமும் நறுமணமும் கொண்ட உண்ணத்தக்க மருத்துவ குணங்கொண்ட புதினாக் கீரை; a kind of mint.

[ஈயெச்ச→ ஈச்ச+கீரை]

இதை உணவில் கலந்து உண்கையில் ஈயெச்ச மிட்ட உணவாக இருந்தாலும் அதன் நச்சைப் போக்க வல்லது.

**ஈட்டுலக்கை** *ittu-ulakkai,* பெ.(n.) ஒரே நேரத்தில் இரண்டு உலக்கை கொண்டு இரண்டுபேர் மாற்றி மாற்றி குத்துதல்; pounding grains with two pestles by two persons.

[ஈடு→ ஈட்டு+உலக்கை]

**ஈடுகாய்** *idu-kāy,* பெ.(n.) கோயிலில் உடைக்கப் பெறும் சிதறு தேங்காய்; a coconut breaking in temples.

[ஈடு+காய்]

**ஈமு** *imu,* பெ.(n.) கழுகின் ஒரு இனம்; a variety of egle.



**ஈரங்கி** *ērrangi,* பெ.(n.) காதணி; ear ornament.

**ஈரட்டு விற்பனை** *irattu virpanai,* பெ.(n.) விற்பனை (அ) திருப்புதல்; sales or return.

*[ஈர்–ஈரட்டு+விற்பனை]*

**ஈரல் ஊதை** *iralūdai,* பெ.(n.) மண்ணீரலைப் பற்றிய ஊதை நோய்; a disease of the spleen.

*[ஈரல்+ஊதை]*

**ஈரிதழ்ச் சிப்பி** *irittal-c-cippi,* பெ.(n.) ஓராண்டு ஆணாகவும் ஓராண்டு பெண்ணாகவும் இருக்கும் கடல் வாழ் உயிரினம்; sea living things i.e. male becomes female for one year and the same female becomes male for one year as husband and wife.

*[ஈரிதழ்+சிப்பி]*

**ஈனியற்படுக்கை** *iniyarpadukkai,* பெ.(n.) மனைவி பிள்ளை பெற்றவுடன் கணவனும் அவளைப்போல் நோவுற்றதாக நடித்துப் படுத்துக் கொண்டு தனக்கு மகப்பேற்று மருத்துவம் பார்க்கச் சொல்வது; couvade.

*[ஈன்+இயல்+படுக்கை]*

"குறத்தி பிள்ளை பெற குறவன் காயந் தின்றானாம்" என்னும் பழமொழி ஈனியற் படுக்கை வினை குமரி நாட்டில் இருந்ததைக் குறிப்பாக உணர்த்துகின்றது.(த.வ.1.30).

# உ

**உடுத்தை** *uduttai,* பெ.(n.) அணில்; squirral.

*[உடு–உடுத்தை]*

**உடுதல்** *ududal,* பெ.(n.) 1. இல்லாத ஒன்றை இருப்பது போல் கூறுதல்; to fabricate what is not real or nature. 2. அறைகூவல் விடுதல்; to challenge.

*[உடு–உடுதல்]*

**உயிர்ப்புணரொலி** *uyirppunaroli,* பெ.(n.) இரண்டு உயிர் ஒலிகளை ஒருங்கிணைத்து ஒரே உயிர் ஒலியாகப் பலுக்கும் ஈருயிர் ஒலி; diphthong.

*[உயிர்+புணர்+ஒலி]*

**உரி–தல்** *uri-,* செ.கு.வி.(v.i.) 1. எரிதல்; be-burning. 2. வெப்பமுறுதல்; heat. 3. நோவு உண்டாதல்; ache-pain.

**உருட்டு** *uruttu,* பெ.(n.) கால் விரலில் அணியும் வெள்ளி மோதிரம்; a silver ring worn on long finger of the leg. "கலியாணத்தில் மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் உருட்டு அணிவித்தார்கள் (கொங்.வ.).

மறுவ. மிஞ்சு

*[உருள்–உருட்டு]*

ஆண்களுக்கு தட்டை வடிவிலும் பெண்களுக்கு முறுக்கிய வடிவிலும் உருட்டு அணிவிப்பது வழக்கம்.

**உருப்பாங்கட்டி** *uruppān-katti,* பெ.(n.) மண்புழுக்கள் உருவாக்கும் மண்கட்டி; the clod where the earthworm originates.

*[உருப்பு+ஆம்+கட்டி]*

**உள்நாட்டுக் கலகம்** *ulnāttu-k-kalagam,* பெ.(n.) ஒரே நாட்டில் வாழும் மக்கள் குழுக்களிடையே நிகழும் போர்; civil war.

*[உள்+நாட்டு+கலம்]*

# ஊ

**ஊணானெறும்பு** *ūṉāṉerumbu,* பெ.(n.) உருவில் பெரிய ஆனால் கடிக்காத கருப்பு நிறமுள்ள எறும்பு; a kind of black which do not bite.

*[ஊணாணான்+எறும்பு]*

**ஊத்தாம்பானை** *ūttāmpāṉai,* பெ.(n.) வளைக்குள் புகையைச் செலுத்தி எலியைப் பிடிக்க ஏதுவாக வடிவமைக்கப்பட்ட பானை; a pot used to trap rat by inserting smoke inside its hole.

*[ஊத்தாம்+பானை]*

# ஏ

**ஏறுவால்** *ēru-vāl,* பெ.(n.) குட்டையான வாலுடைய மாடு; short tailed cow.

*[ஏறு+வால்]*

# ஐ

**ஐந்திரம்** *aindiram,* பெ.(n.) மூன்றாம் தமிழ்க் கழகத் தொடக்கத்தில் ஐந்திரனாரால் இயற்றப்பட்ட தமிழ் இலக்கிய நூல்; ancient Tamil grammar prior to Tolkapiyar written by Aindiranar during 3rd Tamil Academic age.

அகநானூறு புறநானூறு போன்ற கடைக்கழக இலக்கியங்கள் கிடைத்ததன் பயனாக 2000 ஆண்டுகளுக்கு முந்தைய தமிழைக் கண்டோம். தொல்காப்பிய இலக்கணம் கிடைத்ததன் பயனாக 3000 ஆண்டுகளுக்கு முந்தைய தமிழைக் கண்டோம். சிந்துவெளி எழுத்துச் சான்றுகளை முழுமையாக நான் படித்தறிந்ததன் விளைவாக 5000 ஆண்டுகளுக்கு முந்தைய தமிழ் கண்டறியப் பட்டுள்ளது.

கி.மு.6000 கால அளவில் இரண்டாம் தமிழ்க் கழகம் நிறுவிய பாண்டியன் வெண்தேர்ச்செழியன் காலத்தில் பழைய உருவெழுத்திலிருந்து உருவாக்கப் பட்ட அசையெழுத்துகளே சிந்துவெளி நாகரிகக் காலத்து எழுத்துகளாயின. இக்காலத்தில் தோன்றிய பெருநாரை, பெருங்குருகு என்னும் தமிழிலக்கண நூல்கள் கிடைக்கவில்லை. இக்காலத்தில் தமிழில் உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் கலந்த அசை யெழுத்து உருவாகிவிட்டது. எனவே, சிந்துவெளி நாகரிகக் காலத்து எழுத்துகளை இடைக்கழகத் தமிழ் எழுத்து என்று சொல்ல வேண்டும்.

கடைக்கழகம் கி.மு.1850 அளவில் தோன்றியதாக இறையனார் களவியல் கூறுகிறது. மூன்றாம் தமிழ்ச்சங்கம் எனும் கடைக்கழகம் நிறுவிய பாண்டியன் முட்டத்துத் திருமாறன் காலத்தில் கி.மு. 1850இல் ஐந்திரனார் இயற்றிய ஐந்திரம் அரங்கேறியது எனக் கொள்வதில் தவறில்லை. கற்றறிந்த புலவர் குழுவினரால் **பிராமி** எழுத்து கண்டுபிடிக்கப் பட்டிருக்க வேண்டும் எனப் பூலர் எனும் அறிஞர் கூறியிருக்கிறார்.

ஐந்திரனார் சிந்துவெளி எழுத்துகளின் எண்ணிக்கையைக் குறைத்து 12 உயிரும் 18 மெய்யும் கொண்ட முப்பது அடிப்படை எழுத்துகளாக்கி **முதலெழுத்து** எனப்பெயரிட்டார். இதனைப் பிற்காலத்தில் வடமொழியாளர் **பிராமி** எழுத்து எனப் பெயர் மாற்றிக் கொண்டனர். பிராமி என்பதற்கு முதலில் இருந்த எழுத்து என்று பொருள். இந்த உண்மையை அறியாதோர் அசோகன் பிராமியிலிருந்து தமிழ் எழுத்து தோன்றியதாகத் தவறான கருத்தை வெளியிட்டு வருகின்றனர்.

ஐந்திரனார் வடிவமைத்த தமிழ் எழுத்தே பிராமி எனும் பெயரில் இந்திய மொழிகள் அனைத்திலும் பொது எழுத்தாயிற்று. வடதமிழ் என்னும் பிராகிருத மொழி ஐந்திரனார் வகுத்த 30 எழுத்துகளை மட்டும் பயன்படுத்தியது. சமற்கிருத எழுத்தொலிப்புகளைச் சேர்த்துக் கொள்ளவில்லை.

ஆனால் பாலிமொழி சமற்கிருத மொழிக்கே உரிய 11 எழுத்துகளைச் சேர்த்துக்கொண்டு 41 எழுத்துகளாக்கிக் கொண்டது. பாணினி மேலும் 10 எழுத்துகளைச் சேர்த்து சமற்கிருதத்துக்கு 51 எழுத்துகளாக்கிக் கொண்ட காலத்திலும் பிராமி எனும் தமிழ் எழுத்து வடிவங்களே இந்திய மொழிகள்

அனைத்துக்கும் பொது எழுத்து வடிவங்களாக இருந்தன.

ஐந்திரனார் ஐந்திர இலக்கண நூலில் வகுத்த பிராமி என்னும் முதலெழுத்து கி.மு.1850 முதல் கி.பி.250 வரை புழக்கத்தில் இருந்தது. மூவேந்தர் ஆட்சி வீழ்ந்த பின் தமிழ் எழுத்துகளின் வரிவடி வங்கள் மாறிவிட்டன.

புத்தர் தமிழ் கற்றவர் என்றும், ஐந்திரம் தமிழிலக்கண நூல் என்றும் சீனமொழி பெயர்ப்பு நூலாகிய இலலிதவிசுத்தாரம் (புத்தரின் வாழ்க்கை வரலாறு) கூறுகிறது.

வடஇந்தியாவில் பேசப்பட்ட தமிழ் கி.மு.1500 அளவில் பிராகிருதமாகத் திரிந்தது. இதனை வடதமிழ் என்றனர். இதே கால அளவில் வாழ்ந்தவ ராகிய சமணசமயத்தின் முதல் தீர்த்தங்கரர் தன் மகளிர் இருவருக்கும் பிராமி எழுத்து கற்பித்ததாகக் கூறப்படுகிறது. சிந்துவெளி எழுத்துக்கு அடுத்த தாகத் தோன்றிய பிராமி எழுத்து கி.மு.1500க்கு முற்பட்டது என்பது உறுதியாகிறது. சிந்துவெளி நாகரிகம் கி.மு.1900 அளவில் மறைந்தது. அதன் பிறகு பிராமி எழுத்து உருவாக்கப்பட்டிருக்க வேண்டும். சிந்துவெளி எழுத்துகளை 12 உயிரெழுத் துகளாகவும், 18 மெய்யெழுத்துகளாகவும் சுருக்கி முதலெழுத்து முப்பது என மூன்றாம் தமிழ்க் கழகப் புலவர்கள் வரையறுத்திருக்க வேண்டும் என்னும் கருத்து வலுப்பெற்று வருகிறது.

தொல்காப்பியர் என்ப, என்மனார் எனக் குறிப் பிடுவதால் தமிழ் எழுத்துகளை முப்பதாக வரையறுத்த காலம் தொல்காப்பியருக்கு முந்தையது. மூன்றாம் தமிழ்க்கழகம் நிறுவிய பாண்டியன் முட்டத்து திருமாறன் வேண்டுகோளுக்கு ஏற்ப மூன்றாம் தமிழ்க் கழகத்தில் ஐந்திர இலக்கணத்தை ஐந்திரனார் அரங்கேற்றியிருக்க வேண்டும்.

இது நாளடைவில் வட இந்தியாவில் தோன்றிய பிராகிருதம், பாலி, திபேத்தியம் ஆகிய மொழிகளுக்கு மூல இலக்கணமாக விளங்கியது. பிராகிருத **காதந்திரம்** ஐந்திரம் தழுவிய நூல் எனக் கூறப்படுகிறது. பாலிமொழியின் இலக்கண நூலாகிய **கச்சாயணமும்** ஐந்திரம் தழுவியது எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. திபேத்திய மொழியின் இலக்கண நூலாகிய **சன்–சு–பா.** எனும் இலக்கணம் ஐந்திரம் தழுவியது. காலத்தால் மிகவும் பிற்பட்டதாகிய கேசிராசனின் பழங்கன்னட இலக்கண நூலாகிய **சப்தமணி தருப்பணம்** ஐந்திரத்தின் வழிவந்த பிராகிருத மொழியிலக்கணமாகிய காதாந்திர நூலைப் பின்பற்றியதாகக் கூறப்பட்டுள்ளது.

திரு.இரா.கு.பாலசுப்பிரமணியம் மஞ்சரி (நவம்பர் 2008) மாத இதழில் ஐந்திரம் எனும் தலைப்பில் எழுதிய விரிவான கட்டுரையில் ஐந்திர இலக்கணத்தின் தாக்கம் தமிழ், கன்னடம், பாலி, பிராகிருதம், திபேத்தியம் மட்டுமன்றி சிங்களம், பர்மா, சயாம், கம்போடியா ஆகிய தென்கிழக்கிய நாடு களிலும் ஊடாடியுள்ளது எனக் குறிப்பிட்டிருக்கிறார். சமற்கிருதத்தில் ஐந்திரம் என்னும் இலக்கண நூல் இருந்ததே இல்லை. பாணினி தனக்கு முந்தைய இலக்கண நூல்களாகக் குறித்தவற்றுள் ஐந்திரம் என்னும் பெயர்கொண்ட சமற்கிருத நூல் எதுவும் இல்லை.

கி.பி.1608ஆம் ஆண்டில் லாமாதாரானாதர், **"ஐந்திர இலக்கணம் மிகவும் தொன்மையானது. அது தமிழ்நாட்டில் வழங்கியது. அது ஆரியரு டையது அன்று"** எனக் குறிப்பிட்டுள்ளார். கலாப இலக்கணம் எழுதிய சப்தவருமனும் ஐந்திரம் தமிழி லக்கண நூல் எனக் கூறியுள்ளார். நாளந்தா பல் கலைக்கழகத்தில் பயின்ற சீனப் பயணியாகிய **ஓஎய்லி எனத்சோங்** என்பவர் ஐந்திர இலக்கண நூலைத் தென்னாட்டவர் ஒருவர் 2000 நூற்பாக் களில் சுருக்கியதாகவும் அதுவே வடநாட்டிலும் கற்பிக்கப்படுகிறது எனவும் குறிப்பிட்டுள்ளார்.

சொற்கள் அனைத்தும் இடுகுறிப்பெயர்கள் என்பது ஆரியக் கோட்பாடு. தமிழில் இடுகுறிப்பெயர் என்பதே இல்லை. எல்லாச் சொற்களும் காரணப் பெயர்களே என்பது கண்டுபிடித்த இடைக்கழகத் தமிழ் (தென்பிராமி) எழுத்தைப் பிராமி என்று சொல் லாமல் தமிழ் எழுத்து என்றே சொல்ல வேண்டும் என்று இந்தியத் தொல்லெழுத்து துணைத் தலைமை ஆய்வாளர் பி.ஆர்.சீனிவாசன் தெரிவித்துள்ளார். ஒரு புதிய எழுத்து முறை உருவாவதற்கு உரிய நெடுங்கால இலக்கியப் பின்னணி தமிழுக்கு மட்டும் அமைந்திருக் கிறது. வேறெந்த வடநாட்டு மொழிக்கும் இந்த நெடிய பின்னணி இல்லை.

ஐந்திரனாரால் இயற்றப்பட்ட ஐந்திரம் எனும் இடைக்கழகத் தமிழிலக்கண நூல் தொல்காப்பியத் துக்கு 1000 ஆண்டுகள் முந்தையது என்பதைப் பின் வரும் காரணங்களாலும் கண்டறியலாம்.

**ஐந்திரம் காலக்கணிப்பு:**

ஐந்திரம் என்பது தொல்காப்பியத்துக்கு முன்பு நிலவிய தமிழிலக்கண நூல். தொல்காப்பியர்

அதனை நிறைவாகக் கற்றவர் என்பதால் "ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்" என அக்காலத்தில் பெரிதும் பாராட்டப்பட்டார்.

இந்தியா முழுவதிலும் தமிழ் ஒன்றே பேச்சு மொழியாகவும், இலக்கிய மொழியாகவும் வேரூன்றி யிருந்த காலத்தில் தோன்றிய ஐந்திரத் தமிழிலக்கணம் நாளடைவில் (வடதமிழ்) பிராகிருதமாகவும், கிழக் கிந்திய தமிழ் பாலிமொழியாகவும், இமய மலையடி வாரத்துத்துத் தமிழ் திபெத்திய மொழியாகவும், விந்திய மலைக்குத் தெற்கிலிருந்த தமிழ் பஞ்சதிர விடமாகவும் (ஐந்து தமிழினமொழிகள்) வட்டாரக் கிளைமொழிப் பிரிவுகளாக அரும்பத் தொடங்கிய காலம் வரை ஐந்திர இலக்கணத்தின் தாக்கம் இந்திய மொழிகளில் வேரோடியிருந்தது.

ஐந்திரம் என்னும் தமிழ்ச் சொல்லுக்குப் பனை மரம் என்னும் பொருள் அக்காலத்தில் இருந்தது. ஐந்தரன் என்பதைப் பனையன் எனப்பொருள் கொண்டனர். இச்சொல்லை வலிந்தும் நலிந்தும் இந்திரன் என்னும் வடசொல்லோடும் அதனோடு தொடர்புற்ற விண்ணுலகப் பெருந்தலைவன் என்னும் பொருளில் சமண பௌத்த நூல்களும் எடுத்தாளத் தொடங்கின. விண்ணவர் விழுநூல் என அவர்களால் கூறப்பட்ட சமயநூல்கள் இலக்கண நூல்கள் அல்ல.

**ஐந்திரன்:**

ஐந்திரன் இயற்றிய தமிழிலக்கணம் ஐந்திரம் எனப்பட்டது. ஆரியரின் வரவுக்குப் பின்னரே அகத் தியரைத் தமிழிலக்கணம் செய்த தமிழ் முனிவராகக் கருதும் தொன்மக்கதை தோன்றியது.

தொல்காப்பியரும் பாலிபிராகிருத இலக்கண வல்லுநரும் தமக்கு முதல்நூல் ஐந்திரம் என்றே குறிப் பிடுகின்றனர்.

அகத்தியர் பெயரை இந்தியத் தொன்மொழி களில் இலக்கணம் எழுதிய புலமையாளராகத் தமிழ் நாட்டிலன்றி வேறெவரும் குறிப்பிடவில்லை. ஆத லால் அகத்தியர் தமிழிலக்கணம் இயற்றினார் என்பதைப் புராணங்கள் என்னும் தொன்மக் கதை களில் மட்டும் காண முடிகிறது.

அகத்தியரின் நூற்பாக்களாகக் காட்டப்படுவன வற்றின் மொழிநடை மிகமிகக் காலத்தால் பிற்பட்ட வனவாக இருத்தலால் அகத்தியர் வரலாறு கட்டுக் கதை என்பது உறுதிப்படுகிறது.

ஐந்திரம் 25,000 நூற்பாக்களைக் கொண்ட பெரு நூலாக இருந்தது என்றும் அதனைக் கற்பது மிகவும் கடுமையானது என்றும் கூறப்படுகிறது. இராமாயணத்தில் அனுமன் ஐந்திரம் கற்றவன் என்று வால்மீகி குறிப்பிட்டுள்ளார். சாரிபுத்தரும் ஐந்திரம் கற்றவர். இதிலிருந்தே இதன் தொன்மை புலப் படுகிறது.

தொல்காப்பியர் ஐந்திரத்தை முழுமையாகப் பின்பற்றியவர். "எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே" என்பதைத் தொல்காப்பியர், ஐந்திரனாரிட மிருந்து எடுத்தாண்டிருக்க வேண்டும். ஏனெனில், இக்கருத்து ஐந்திரத்தில் இருப்பதாக அதன்வழி வந்த பிராகிருத இலக்கண நூலாகிய காதந்திரம் கூறுகிறது. காதந்திரத்தில் "அர்த்த பதம் இதி ஐந்தராணாம்" (சொல் என்பது பொருள் உள்ளது – அதாவது பொருட்காரணம் கொண்டது – இவ்வாறு ஐந்திரம் கூறுகிறது).

மேற்கண்ட ஐந்திர நூற்பாவின் கருத்து தொல்காப்பியத்திலும் வடதமிழாகிய பிராகிருதத்திலும் இடம் பெற்றிருப்பது ஒன்றே ஐந்திரம் தமிழிலக்கணம் என்பதையும் அது இந்திய மொழிகள் அனைத் துக்கும் தாயாகவும் தலைமை கொண்டதாகவும் விளங்கியது என்பதையும் காட்டுகிறது.

வடமொழி நூல்களான தைத்திரியம், சாந் தோக்கிய உபநிடதங்கள், பிராதி சாக்கியம் போன்ற வற்றிலும் ஐந்திரநூலின் பெயர் எடுத்தாளப்பட் டுள்ளது. பாணினியத்துக்கு முதன்மை கொடுத்த காலத்தில் ஐந்திரம் மறைந்தது எனக் கூறப்படுகிறது. எனவே, இடைக்கழகம் நிறுவப்பட்ட கி.மு.1850 ஆண்டே ஐந்திர இலக்கணம் அரங்கேறிய ஆண் டாகச் சொல்லலாம்.

**ஐந்திரம் அரங்கேறிய ஆண்டு கி.மு.1850:**

தமிழில் ஐந்திர இலக்கணம் எழுதப்பட்ட காலம் கி.மு.19ஆம் நூற்றாண்டு என்பதற்கான சான்றுகள் பல கிடைத்துள்ளன. கி.மு.19ஆம் நூற்றாண்டில் சிந்துவெளி நாகரிகம் இயற்கைச் சீற்றங்களால் அழிந்தது. அதன் பின்னர் கொற்கைப் பாண்டிய னுக்கு அடங்கிய சிற்றரசர்களாகவே வடபுலத்துத் தமிழ் வேந்தர்கள் ஆட்சி புரிந்தனர் என்று நற்குடி வேளாளர் வரலாறு (1920) எனும் செய்யுள்நூல் கூறு கிறது.

கபாடபுரம் கடல் கொண்ட பிறகு பாண்டியன் முட்டத்துத் திருமாறன் மணலூரில் கி.மு.1850ஆம் ஆண்டு மூன்றாம் தமிழ்க் கழகம் நிறுவினான் எனும் செய்தியை இறையனார் களவியல் வாயிலாக அறிய முடிகிறது.

தமிழ்க்கழகம் கூடும் முதல் நாளில் சிறந்த நூல்கள் அரங்கேற்றப்படுவது வழக்கம். இந்த அடிப்படையில் ஐந்திரனாரின் ஐந்திரம் கி.மு.1850ஆம் ஆண்டு குமரியின் தெற்கே இருந்த மணலூரில் அரங் கேற்றப்பட்டது எனக் கருதலாம்.

இதற்குப் பின்புலச் சான்றாக குச்சர மாநி லத்துத் லோத்தலில் கிடைத்த சிந்துவெளி முத்திரை அமைந்துள்ளது. பிராமி எனப்படும் மூன்றாம் தமிழ்க் கழகத் தமிழ் எழுத்தைச் சிந்துவெளி எழுத்திலிருந்து மாற்றியமைத்தவர் ஐந்திரனார்.

ஐந்திரனார் குறிப்பிட்ட 12 உயிரெழுத்துகளும் 18 மெய்யெழுத்துகளும் சிந்துவெளித் தமிழ் முத்தி ரைகளிலும் காணப்படுகின்றன. லோத்தல் (L.88) முத்திரையில் உள்ள ஐந்து எழுத்துகளில் நான்கு சிந்துவெளி எழுத்துகளாகவும் ஒன்று மட்டும் ஐந்திர னார் உருவாக்கிய பிராமி எனும் கடைக்கழகத் தமிழ் எழுத்தாகவும் உள்ளது. இது சிந்துவெளி நாகரிகம் மறைந்த பின் புதிய எழுத்து உருவாகிய இரு வகைக் கலப்பு எழுத்து முத்திரையாக உள்ளது.

இதே போன்று வேலூர் மாவட்டத்துச் சின்னப் பாலத்திலுள்ள பாறை ஓவியத்தில் காவு ஆத்தி என எழுதப்பட்டுள்ள எழுத்துகளில் ஐந்து எழுத்துகள் சிந்துவெளி எழுத்தாகவும் இறுதியில் உள்ள எழுத்து மட்டும் ஐந்திரனார் உருவாக்கிய தமிழ் (பிராமி) எழுத் தாகவும் உள்ளது.

இத்தகைய கலப்பு எழுத்து முத்திரை ஒன்று கூட அரப்பா, மொகஞ்சதாரோ பகுதிகளில் கிடைக்க வில்லை. இதிலிருந்து சிந்துவெளி நாகரிகம் மறைந்த உடனே தமிழ் (பிராமி) எழுத்து கண்டுபிடிக் கப்பட்டது என்பது உறுதியாகிறது. 'தொ' என்பதை பலுக்கும்(உச்சரிக்கும்)போது மெய்யெழுத்தை முன்னாகவும் உயிரெழுத்தைப் பின்னாகவும் உச்சரிக்க வேண்டும் என்பதை "மெய்யின் வழியது உயிர் தோன்று நிலையே" எனும் நூற்பாவில் தொல்காப்பியர் குறிப் பிட்டுள்ளார்.

எழுதும்போதும் மெய் முன்னாகவும் உயிர் பின்னாவும் தனித்தனியாக எழுதும் அசையெழுத்து இயல்பை இடைக்கழகக் காலத்தில் பெருநாரை இலக்கணம் புலப்படுத்தியது என்பதை லோத்தல் முத்திரையில் இடம்பெற்ற த்ஓ (.......) 'தொ' எழுத்து காட்டுகிறது. ஐந்திரனார் இவற்றை ஒரே எழுத்தாக மாற்றினார். த்இ என எழுதப்படுவதைத் தி (........) என ஐந்திரனார் மாற்றியதைச் சின்னப்பாலம் பாறை ஓவிய எழுத்து காட்டுகிறது. ஆரியர் சிந்துவெளியில் புகுந்த காலத்தில் தமிழர் ஓலைச் சுவடிகள் வைத் திருந்ததை இருக்குவேதம் குறிப்பிடுகிறது.

கி.மு.1800-1600 காலங்களில் படிப்படியாக ஈரானிய ஆரியர் சிந்துவெளியில் குடியேறத் தொடங் கினர். கி.மு.1600-1300 வரை அவர்கள் அங்குள்ள தமிழர்களோடு கலந்து அமைதியாக வாழ்ந்த நாக ரிகச் சான்றுகள் கிடைத்துள்ளன. இக்காலத்திய பானை ஓடுகளை ஆராய்ந்த தொல்பொருளாய்வு வல்லுநர்கள் இக்கருத்தை வெளியிட்டுள்ளனர். இவர்கள், அசுரர் நல்லவர் எனவும் சுரர் தீயவர் எனவும் குறிப்பிட்டுள்ளனர்.

இக்காலத்தில் தமிழ்மொழி முற்றிலும் மாறி விட்டது. கி.மு.1300-கி.மு.1100 கால அளவில் இருக்கு வேத கால ஆரியர் சிந்துவெளிப் பகுதியில் புகுந்தனர் என்பதால் ஐந்திரம் அரங்கேறிய ஆண்டு 1850 என வரையறுப்பதில் ஐயப்பாடு தோன்ற வாய்ப் பில்லை.

இருக்கு வேத ஆரியர் காலத்தில் தமிழிலக்கணம் வட நாட்டில் தோன்றியிருக்க முடியாது.

**மேலும் சில சான்றுகள்:**

சிந்துவெளி நாகரிகக் காலத் தமிழ் எழுத்து களில், மெய்யெழுத்துக்குப் புள்ளியிடும் வழக்கம் இல்லை.

அக்காலத்தில் இசைத்தமிழின் தேவைக்காக அசையெழுத்துகளைப் பெருநாரை இலக்கணம் வகுத்துத் தந்துள்ளது எனும் உண்மை சிந்துவெளி முத்திரை எழுத்துகளாலும் தமிழ்நாட்டுப் பாறை ஓவிய எழுத்துகளாலும் உறுதிப்பட்டுள்ளது.

அசையெழுத்தில் நேரசை நிரையசைகள் உள்ளன. 'த்த' என்பதும் நேரசை; 'த' என்பதும் நேரசை. ஆதலால் இரண்டுக்கும் ஒரே எழுத்து வடிவம் கொள்வது அக்காலத்தில் தவறாகக் கருதப் படவில்லை. ஆனால் ஐந்திரனார் இந்தக் குழப் பத்தைத் தீர்ப்பதற்காக மெய்யெழுத்துக்குப் புள்ளி யிடும் வழக்கத்தைப் புதிதாகப் புகுத்தினார். இது விந்திய மலை வரை பரவியதற்கான சான்று சாத வாகன மன்னர்களின் தமிழ் பிராமி எழுத்திலும் கிடைத்துள்ளது. இதில் வசிட்டி எனும் மன்னன் பெயரில் (கி.மு.100)ட் புள்ளி பெற்றுள்ளது.

'மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்' எனத் தொல்காப்பியரும் ஐந்திரனார் வகுத்துத் தந்த புதிய இலக்கண நெறியை வழிமொழிந்துள்ளார்.

சிந்துவெளி அசையெழுத்தில் உயிர் நெட் டெழுத்து இரண்டு குறில் எழுத்துகளாக அஅ(ஆ),

இஇ(ஈ) என எழுதப்பட்டது. இந்த முறையையும் மாற்றி உயிர் நெடில்கள் ஒரே எழுத்தாக ஆ,ஈ என எழுதும் முறையை ஐந்திரனார் உருவாக்கித் தந்தார்.

ஐகார ஔகாரங்களுக்கு மட்டும் குறில் எழுத்து இல்லாததால் அவற்றின் குறில் வடிவத்தை நெடிலாக்க முடியவில்லை. அந்த இரண்டு எழுத்துகள் ஐந்திரனார்க்கு முந்தைய பெருநாரை இலக்கணப்படி அஇ(ஐ), அஉ(ஔ) என முன்பே எழுதப்பட்ட வடிவில் அப்படியே புதிய தமிழ் (பிராமி) வடிவத்திலும் ஏற்றுக் கொண்டார். இதனை ஏற்றுக்கொண்டு "அகர இகரம் ஐகாரமாகும்" எனவும், "அகர உகரம் ஔகாரமாகும்" எனவும் குறிப்பிட்டார்.

பெருநாரை, ஐந்திரம், தொல்காப்பியம் ஆகிய மூன்றிலும் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து வரும் பொது எழுத்திலக்கணம் இது என்பது கூர்ந்து நோக்குவோர்க்கு வியப்பும் பெருமிதமும் மேலிடச் செய்யும். இதனை விளங்கிக் கொள்ளாத நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள் இந்தத் தொல்காப்பிய நூற்பா ஐகார ஔகாரத்தின் போலியைக் காட்டியது எனப் பிதற்றியுள்ளனர்.

பல்லவர் காலத்தில்தான் இன்றைய ஐ, ஔ எனும் தனி நெடில்கள் தோன்றின.

ஐந்திரனார் உருவாக்கிய கடைக்கழகக் காலத் தொடக்கத்தில் தனியெழுத்துகளாகிய தமிழ் (பிராமி) எழுத்துகள் சிந்துவெளி இடைக்கழகக் காலத்திய அசையெழுத்துகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் சிந்துவெளி நாகரிகம் மறைவுற்ற உடனே அதாவது கடைக்கழகம் நிறுவப்பட்ட கி.மு.1850ஆம் ஆண்டிலேயே ஐந்திரம் தோன்றியிருக்க வேண்டும் எனக் கருத இடம் தருகிறது.

ஏனெனில், சிரீதத்துவ நிதி எனும் வைணவ நூலில் இந்தியாவில் தொன்முது காலத்தில் நிலவியனவாகக் கூறப்பட்ட ஒன்பது இலக்கண நூல்களில் ஐந்திரத்தின் பெயர் முதலாவதாகவும், பிராகிருத இலக்கண நூலாகிய சாகடாயணத்தின் பெயர் இறுதியாகவும் இடம் பெற்றிருப்பதும் கி.மு.1850இல் ஐந்திர இலக்கணம் தோன்றியிருக்கலாம் எனக் கருதத் துணை புரிகிறது.

# ஒ

**ஒட்டுப் பலகை** *oṭṭup-palagai*, *பெ.*(n.)மெலிதான மரப்பாளங்கள் பலவற்றை ஒட்டி உருவாக்கப் படும் பலகை;plywood.

*[ஒட்டு+பலகை]*

**ஒடுக்கான்** *oḍukkāṉ*, *பெ.*(n.)ஓணான்; common lizard.

**மறுவ. ஓடக்கான், ஓணான்**

*[ஒடு-ஒடுக்கான்]*

**ஒப்பேற்று-தல்** *oppēṟṟu-*,செ.குன்றாவி.(v.t.) இக்கட்டான ஒரு சூழ்நிலையில் தன்னிடம் இருப்பதை வைத்துக் கொண்டு சரிக்கட்டுதல்; to do with what is available in difficult circumstances."குறைந்த வருவாயைக் கொண்டு தான் ஒப்பேற்ற வேண்டியிருக்கிறது". (இ.வ.). 2. தேறச் செய்தல்; to salvage. குறைந்த நீரைக் கொண்டு இப்பயிரை ஒப்பேற்ற வேண்டியிருக்கிறது.(உ.வ.).3. நிறைவேற்றுதல்;to fulfill. (யாழ்ப்.)

*[ஒப்பு+ஏற்று-,]*

**ஒப்பேறு-தல்** *oppēṟu*, பெ. (n.) ஒன்றுமே இல்லை அல்லது மிகவும் தாழ்நிலை என்னும் நிலையில் இல்லாமல் தேறுதல்; to be salvaged, to be retrieved.இவன் ஒப்பேறுவான் என்னும் நம்பிக்கை எனக்கு இல்லை.(உ.வ.).

*[ஒப்பு+ ஏறு-,]*

**ஒயிலாட்டம்** *oyilāṭṭam*, பெ.(n.) திருவிழாக்காலத்தில் கையிலுள்ள சிறு துணிகளை அசைத்துக் கொண்டு குனிந்தும் நிமிர்ந்தும் பாடிக் கொண்டு வட்டமாக ஆடும் ஒருவகைக் கூத்து; dancing of persons on a circle to the accompaniment of a song,bending to the ground and waving little towels or hand kerchiefs.



*[ஒயில்+ஆட்டம்]*

**ஓணி** *ōṇi*, பெ. (n.) கால்நடைகள் செல்லும் சிறிய பாதை; a narrow path for the cattle. "மாடு ஓணியில் போகிறது" (கொங்.வ.).

*[ஓரணி–ஓணி]*

# க

**கங்கிளவு** *kaṅgiḷavu*, பெ.(n.) நாற்று நட்ட பிறகு பாயும் முதல் நீர்; first irrigation water after transplantation of seedlings.

**கச்சடா** *kaccaḍā*, பெ. (n.) எண்ணெய்க் கச்சல்; setimend.

**கச்சணம்** *kaccaṇam*, பெ.(n.) நீர்ச்சீலை; man's loin cloth.

*[கட்டு > கச்சு > கச்சணம்]*

**கச்சம்** *kaccam*, பெ.(n.) சலங்கை மணி; string of small metal bell.

**கச்சா** *kaccā*, பெ.(n.) மீனைப் பிடித்து வைக்கப் பயன்படும் நூல் கூடை; fishes storage in cotton thread basket.

*[கச்சு–கச்சா]*

**கச்சிதம்** *kaccidam*, பெ. (n.) நேர்த்தி; excellence.

*[கச்சு–கச்சிதம்]*

**கச்சைத்துணி** *kacca-t-tūṇi*, பெ. (n.) சலவை செய்யாத புது வெண்ணிறத் துணி; unwashed new white cloth.

*[கச்சை+துணி]*

**கட்டக்காலன்** *katta-k-kalan*, பெ. (n.) பன்றி; pig.

*[கட்டை+காலன்]*



**கட்டுமானப் பொறியியல்** *kattumāṉa-p-poṟiyiyal,* பெ.(n.) சாலை, பாலம் முதலிய வற்றை வடிவமைத்தல், உருவாக்குதல், செப்பனிடுதல் ஆகியன பற்றிய அறிவுத்துறை; civil engineering.

*[கட்டுமானம்+பொறியியல்]*

**கட்டுவறைசேலை** *kattuvarai-cēlai,* பெ. (n.) பருத்திச் சேலை; cotton sarees. *"உறிக்கு பட்டு சேலை 100 கட்டுவறை சேலை"* (TDI, v 99)

*[கட்டு+அறை+சேலை]*

**கட்டைத்தலம்** *kattai-t-talam,* பெ. (n.) சுடுகாடு; grave yard.

*[கட்டை+தலம்]*

**கட்டைப்பனை** *kattai-p-paṉai,* பெ. (n.) முதிராத பனை, இளம் பனை; a young palmyra - palm.

*[கட்டை+பனை]*

**கட்டைமுழவு** *kattaimuḻavu,* பெ.(n.) கட்டை மத்தளம்; a musical drum made of a block of wood (J.).

*[கட்டை+முழவு]*

தோல்போர்த்த பறை அல்லது மத்தளம் தோன்றுவதற்கு முன்பு, திண்ணமான மரக்கட்டை முழவை இருபுறமும் கட்டையால் அடித்து ஒலி எழுப்பும் மர இசைக்கருவி. யாழ்ப்பாணத்தில் புழக்கத்தில் இருந்ததாகக் கூறப்படுகிறது.

**கடகம்** *kaḍagam,* பெ. (n.) பனை நாரில் செய்யப் பட்ட பெட்டி; a box made up of palmyra fibre.

*[குடம்–குடகம்–கடகம்]*

**கடஞ்சாணி** *kaḍañcāṇi,* பெ. (n.) பாசனக் கால் வாயில் கடைசியில் உள்ள நிலப்பகுதி, கடை மடை; a last sluice of the land of a tank opp *talaimadai.*

*[கடை+அஞ்சாணி]*

**கடம்பங்குடி** *kaḍambaṅkūḍi,* பெ. (n) பாண்டிய நாட்டுச் சிற்றூர்; a village in Pandya territory *"கள்ளக்குடி எல்லைக்கும் வடக்கு மன்னிய சீர்ம்மேலெல்லை கடம்பங்குடி எல்லை."*

*[கடம்பன் + குடி]*

**கடம்பல்** *kaḍambal,* பெ. (n.) குமிழ்; gudgeon. *"கூம்பல், கடம்பல், குமிழ் எனக் கூறுவர்"* (நி.க.தி. 4:39)

*[கடம்பு+அல்]*

**கடயல்** *kaḍayal,* பெ. (n.) விளவங்கோடு வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Vilavancodu Taluk.

*[கடை–கடையல்–கடயல்]*

**கடலலை** *kaḍalalai,* பெ. (n.) ஒற்றைக்கை முத்தி ரையில் கொடிமூலம் உரைக்கப்படும் முத்திரை; an hand posture.

*[கடல்+அலை]*

**கடலி** *kaḍali,* பெ. (n.) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Senji Taluk.

*[கடல்–கடலி]*

**கடலிடம்** *kaḍal-iḍam,* பெ. (n.) உலகம்; world. *"கஜபதி கடலிடங் காவலன்"* (SII, vii, 863).

*[கடல்+இடம்]*

**கடலைமுத்து** *kaḍalai-muttu,* பெ. (n.) நிலக் கடலை விதை; groundnut.

*[கடலை+முத்து]*



**கடவரை** *kaḍavarai,* பெ. (n.) யானை; elephant. *"கடவரை மேகமுழக்குஞ் சிராமலை கண்ட"* (SII, iv, 167).

*[கடம்+வரை]*

**கடவு** *kaḍavu,* பெ.(n.) 1. பாதை; path. 2. வாயில்; entrance. கடவு பெரிதாக இருக்க வேண்டும். (கொங்.வ.).

*[கட–கடவு]*

**கடற்கரைக்கோயில்** *kaḍarkarai-k-kōil,* பெ.(n.) மாமல்லபுரத்தில் உள்ள பல்லவர் காலத்துக் கற்கோயில் ; sea-shore temple at Mahabalipuram built by Pallava king.

*[கடல்+கரை+கோயில்]*

**கடற்கரை** *kaḍarkarai,* பெ.(n.) கடற்புறம், கடலலைகள் நிலத்தைத் தழுவிச் செல்லும் மணல் நிறைந்த பகுதி ; beach; sea-shore .

**மறுவ. அலைவாய், கடற்புறம்**

*[கடல்+கரை]*

**கடற்கழி** *kaḍarkaḷi,* பெ.(n.) கடலினுள் உட்செல்லும் குறுகிய வழி; firth.

*[கடல்+கழி]*

**கடற் கழுகு** *kaḍarkaḷugu,* பெ.(n.) கடலில் வாழும் ஒரு உயிரி ; erne.

*[கடல்+கழுகு]*

**கடற்கன்னி** *kaḍarkanni,* பெ.(n.) பெண்ணின் முகமும் உடலும் இடையின்கீழ் மீனைப் போலுள்ள உருவம் ; mermaid.

*[கடல்+கன்னி]*



**கடற்காணி** *kaḍar-kāṇi,* பெ. (n.) கடல் பகுதி உரிமை; privilege of sea part. *"எங்கள் கடற்காணியான தேவர் உடையார் திருமறைக்காடுடையார்"* (SII, xvii, 545).

*[கடல்+காணி]*

**கடற்குதிரை** *kaḍarkudirai,* பெ.(n.) குழல் போன்ற அமைப்புடைய மீன் வகை ; pipe fish.

*[கடல்+குதிரை]*

**கடற்பன்றி** *kaḍarpanri,* பெ.(n.) ஒரு வகை பெரிய மீன்; dolphin like fish.

*[கடல்+பன்றி]*



**கடற்றானை** *kaḍarrānai,* பெ. (n.) கடல் போன்ற பெரிய படை; navel force, battle ship. *"வில்வேலிக் கடற்றானையை"* (EI, xvii, 16).

*[கடல்+தானை]*

**கடனீர்** *kaḍanīr,* பெ. (n.) கடலின் நீர்; sea-water. *"கல்லென வொல்லென கடனீர் மாகங் கொண்டெறிவர்"* (ET, xiii, 10).

*[கடல்+நீர்]*

**கடிச்சுரும்பு** *kaḍi-c-curumbu,* பெ. (n.) தேன் வண்டு; honey-bee. *"தேனொடு கடிச் சுரும்பு அரற்றும் தே மலர்க்கான்"* **(சீவ. 7 : 293).**

*[கடி+சுரும்பு]*

**கடுவா** *kaḍuvā,* பெ. (n.) புலி; tiger.

*[கடு+வாய்]*

**கடுவாயர்** *kaḍuvāyar,* பெ. (n.) அருகர்; சமணர்; Jains. "கடு வாயர் தமை நீக்கி என்னை ஆட்கொள் கண்ணுதலோன்" (நாவு. 6:71:7).

*[கடு+வாய்+அர்]*

**கடுவு** *kaḍuvu,* பெ. (n.) பாம்பு; snake. *"படிநர் சொல் எனக் கடுவு நஞ்சு இறைப்ப"* (கல்.17:16)

*[கடு–கடுவு]*

**கடூர்** *kaḍūr,* பெ. (n.) திண்டிவனம் வட்டத்தி லுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[கடு+ஊர்]*

**கடைப்பாடு** *kaḍai-p-pāḍu,* பெ. (n.) நிலங்கள்; lands. *"இரண்டு கடைப்பாட்டாலும் கொல் லையும் குளமும் விளைநிலமும் உள்பட வந்த நிலம்"* (SII, viii, 716).

*[கடை+பாடு]*

**கடைப்பியோலை** *kaḍai-p-pi-yōlai,* பெ. (n.) அர சனின் இறுதி ஆணை கொண்ட ஓலை; palm leaf containing the ultimate order of the king. *"இது கடைப்பி ஓலை காற் கண்டெழுதிக் கொடுத்தேன்"* (AVWM 1, P 67-69).

*[கடைப்பு+ஓலை]*

**கடைஅட்டிகை** *kaḍai-aṭṭigai,* பெ. (n.) ஒருவகை நகை; a kind of jewel. *"திருவாபரணங்கள் பெயர் விபறம் உபுதாரம் 1க்கு முகப்பு 5 சிறு அட்டிகை 4 கடை அட்டிகை"* (TDI, iii, 61).

*[கடை+அட்டிகை]*

**கடைஈடு** *kaḍai-īḍu,* பெ. (n.) இறுதி உத்தரவு; final order. *"மண்டல முதலிகள் நுளம்பா தராயர் கடை ஈடுபடி கூறு செய்கிற அணுக்க விழுப்பரையர்"* (IPS, 126)

*[கடை+ஈடு]*

**கடாஅ** *kaḍā-ā,* பெ.எ. (adj.) ஐயுறாத; doubtless. " *கடாஅ உருவொடு கண் அஞ்சாது" (குறள்.59:9)*

*[கடாவு (வினவு)–கடா]*

**கடாரம் கொண்டான்** *kaḍāramkoṇḍān,* பெ.(n.) திருவாரூர் மாவட்டத்தில் திருவா ரூர்க்கு அருகில் உள்ள ஓர் ஊர்; name of the village near Thiruvarur.

*[கடாரம்+கொண்டான்]*

இராசேந்திர சோழனின் வெற்றிப் பெயர்.

**கடிசை** *kaḍisai,* பெ.(n.) பணம் செலவு செய்யாத இவறன்(கருமி); miser. "அவன் ஒரு கடிசை" (மீனவ.).

*[கடு–கடுசை–கடிசை]*

**கடிதல்** *kaḍidal,* பெ.(n.) ஓட்டுதல் ; driving. "தினை கிளி கடிதலின் பகலும் ஒல்லும்" (குறு:217:1).

*[கடி–கடிதல்]*

**கடிய நெடுவேட்டுவன்** *kaḍiyaneḍu vēṭṭuvan,* பெ.(n.) கடியம் தலைநகரிலிருந்து கோடை மலையை ஆண்டு வந்த கொடை யாளனாகிய சிற்றரசன் ; a bonevalent chieftain who ruled the mountain region of the Kōdaimalai from his capital Kaḍiyam.

*[கடிய+நெடு+வேட்டுவன்]*

**கடுங்களை** *kaḍu-ṅ-kaḷai,* பெ.(n.) வயல்களில் பறிக்கப்படும் களை; weed. "கடைசியர்கள் கடுங்களையில் பிழைத்து" (பெரிய: 872).

*[கடும்+களை]*

**கடுசு** *kaḍusū,* பெ.(n.) உயரம் ; height.

*[கடு–கடுசு]*

**கடுதா எறும்பு** *kaḍuda-eṟumbu,* பெ.(n.) மரப் பொந்துகளில் இருப்பதும் கடித்தால் தடித்து வலியைக் கொடுக்கக் கூடியதுமான கருப்புநிற பெரிய எறும்பு; black colour big size ant living in trees. painful swelling if it bites.

*[கடுத்தம்+எறும்பு]*

கடிபட்டவர் தன் சிறுநீரில் மண்ணைக் குழைத்து கடிப்பட்ட இடத்தில் தடவினால் வலி குறையும் என்பர்.

**கடும்பு** *kaḍumbu,* பெ.(n.) ஈற்றாவின் ஈன்றணி மைப்பாற்கட்டி ; beestings.

**மறுவ. சீம்பால், திரட்டுப்பால்**

*[கடு-கடும்பு]*

**கடுவாய்க்கரைப்புத்தூர்** *kaḍuvāikkaraiputūr,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; name of the village in Thanjavur.

*[கருவாய்+கரை+புத்தூர்]*

தற்போது ஆண்டங்கோயில் என அழைக்கப் படுகிறது.

**கடுவினை** *kaḍuvinai,* பெ.(n.) மிகக் கடுமை யான அருஞ்செயல்(சாகசம்); a rare deed.

*[கடு+வினை]*

**கடைக்கந்தாயம்** *kadi-k-kandāyam,* பெ.(n.) செயல்கள் முடியப் போகும் நேரம் ; final stage of completion.

*[கடை+கந்தாயம்]*

**கடைமடக்கு** *kadaimadakku,* பெ.(n.) ஈற்றடி சொல் அல்லது தொடர் அடுத்த அடியிலும் தொடர்வது; repetition of word or phrase in prosody.

*[கடை+மடக்கு]*

**கண்சோடு** *kaṇ-šōḍu,* பெ. (n.) ஒரு வகை அணி கலன் ". a kind of ornament. (IPS,126)

*[கண்+சோடு]*

**கண்டக் கறை** *kaṇḍa-k-kaṟai,* பெ.(n.) மிடற் றில் உள்ளவிடம்; poison in neck. "கண் நுதலும் கண்டக் கறையும் கரந்தருளி" (சை.சா:5:1).

*[கண்டம்+கறை]*

**கண்டம்** *kaṇḍam,* பெ.(n.) ஆவினங்களில் முன் னங்கால் பகுதியில் காணப்படும் சதைத் திரட்சி ; a protruded portion on the foreleg of Cow.

*[கண்டு-கண்டம்]*

**கண்டராச்சிபுரம்** *kaṇḍarāccipuram,* பெ.(n.) தென்னார்க்காடுத் திருக்கோவிலூர் வட்டத் தில் அமைந்துள்ள ஓர் ஊர் ; name of the village in Thirukovilur.

*[கண்டராதித்தன்+புரம்]*

**கண்டாங்கி** *kaṇḍāṅgi,* பெ.(n.) நெசவில் பயன் படும் பெரிய தார்க்குச்சி ; a tool in loom.

*[கண்டு-கண்டாங்கி]*

**கண்டியூர்** *kaṇḍiyūr,* பெ.(n.) தஞ்சையிலிருந்து திருவையாறு செல்லும் வழியில் 10 கல் தொலை வில் உள்ள ஓர் ஊர் ; name of the village 10k.m. from Thanjavur to Thiruvaiyaru road.

*[கண்டி (குளம்)-கண்டியூர்]*

**கண்டிரம்** *kandiram,* பெ.(n.) கோவை மாவட் டத்தில் உள்ள ஓர் ஊர் ; name of a village from Coimbatore.

*[கண்டி (நீர்நிலை) – கண்டிரம்]*

'கண்டீரக்கோ' இவ்வூரினர் எனக் கருதப் படுகிறது.

**கண்டன் வீர கேசரி** *kaṇḍanvīrakēsari,* பெ.(n.) முதலாம் இராசராசன் காலத்தில் கி.பி.1006 ஆம் ஆண்டு திருவோத்தூரில் வாழ்ந்தவன்; name of a person who lived during the period of the chola king Rajaraja-I.

*[கண்டன்+வீரன்+கேசரி]*

**கண்ணகனார்** *kaṇṇaganār,* பெ.(n.) கடைக் கழகக் காலத்திய புலவர்; a Tamil poet of sangam period.

*[கண்ணகன்+ஆர்]*

**கண்ணகனூர்** *kaṇṇaganūr,* பெ.(n.) கருவூ ருக்கு அருகில் உள்ள கண்ணகனாரின் ஊர் ; a village or town near Karuvur, where the sangam poet Kannagan lived.

*[கண்ணகன்+ஊர்]*

**கண்ண மங்கலம்** *kaṇṇamaṅgaḷam,* பெ.(n.) வட ஆர்க்காடு மாவட்டம் ஆரணிஅருகில் உள்ள ஓர் ஊர் ; name of the village in North Arcot near Arani.

*[கண்ணன்+மங்கலம்]*

**கண்ணாடி இலை** *kaṇṇāḍi-yilai,* பெ.(n.) வாழை மரத்தில் குலை தள்ளுவதற்கு முன் இறுதியாக வரும் சிறு இலை ; small leaf appearing before flowering plantain tree.

*[கண்ணாடி+இலை]*

**கண்ணுள் வினை** *kaṇṇuḷviṇai,* பெ.(n.) ஓவியம்; drawing and painting.

*[கண்+உள்+வினை]*

**கணவன் துறை** *kaṇavanturai,* பெ.(n.) செங் கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஊர் ; name of the village in Chengalpattu.

*[ஒருகா. கானவன்+துறை]*

**கணிசம்** *kaṇisam,* பெ.(n.) நேரம், வேளை; proper time. நல்ல கணிசம் காணில் மீன்பிடிக்கப் போகலாம் (மீனவ.)

*[கணி–கணியம்–கணிசம்]*

**கணியம்பாடி** *kaṇiyampāḍi,* பெ.(n.) வட ஆர்க் காடு மாவட்டம் வேலூருக்கு அருகில் உள்ள ஓர் ஊர் ; name of the village in North Arcot near Vellore.

*[கணியன்+பாடி]*

**கணி** *kaṇi,* பெ.(n.) வலை; net.

**க<u>ன்.</u> கெணி**

*[கண்ணு–கணி]*

**கணை முறித்தான்** *kaṇaimurittāṉ,* பெ.(n.) மதுரை மாவட்டத்தில் உள்ள ஊர் ; name of the village in Madurai.

*[கணை+முறித்தான்]*

ஒரு வீரன் மாற்றார் விடுத்த அம்புகளைத் தன் நெடுங்கரத்தால் பிடித்து முறித்த செயல் கண்டு வியந்த படைத் தலைவன் அவ்வீரனுக்குக் கணை முறித்தான் என்ற பட்டம் அளித்ததாகக் கூறுவர்.

**கத்தகாம்பு** *kattakāmbu,* பெ.(n.) அதிக துவர்ப் புடையதும் நசுக்கினால் மாவாகப் போகக் கூடியதுமான வயிற்றுக் கடுப்பு நீக்கவல்ல நாட்டு மருந்து வகையான காம்பு வகை; a stick used as medicine for stomach pain.

*[கற்றை+காம்பு]*

**கத்தரிவெயில்** *kattariveyil,* பெ.(n.) முது வேனிற்காலத்தின் மிகுந்த வெப்பமான காலம்; hottest days; dog days.

*[கத்தரி+வெயில்]*

**கதக்கு** *kada-k-ku,* பெ.(n.) கிண்டிக் கிளறுதல்; kindling.

*[கலக்கு–கதக்கு]*

**கதண்டு** *kadaṇḍu,* பெ.(n.) கடித்தால் உடலில் தடிப்பையும் எரிச்சலையும் தரக்கூடிய நீர்ப்பூச்சி வகை ; a beetle.

*[க–கதண்டு]*

**கதம்பத்தொடரியம்** *kadamba-t-toḍariyam,* பெ.(n.) கலவைத் தொடரியம் பார்க்க ; see kalavai-t-toḍariyam.

*[கதம்ப(ம்)+தொடரியம்]*

**கதிர்க்குடி** *kadir-k-kuḍi,* பெ.(n.) அரச குலத் தொன்று ; agni race of kings.

*[கதிர்+குடி]*

**கதிரவக்குடி** *katira-va-k-kudi,* பெ.(n.) சூரிய மரபு அரச குலத்துளொன்று ; agni race of kings as descended from agni.

*[கதிரவன்+குடி]*

**கதிராமங்கலம்** *kadirāmangaḷam,* பெ.(n.) திருவிடைமருதூர் வட்டத்தில் உள்ள ஊர் ; name of the village in Thiruvidai Maruthur.

*[கதிரன்+மங்கலம்]*

**கதுப்பிலி** *kaduppili,* பெ.(n.) வறட்டி நெருப்பில் சூடேற்றிய கம்பியால் நோய்த்தடுப்புச் சூடு வைத்தல் ; brandishing with hot iron wire as a method to cure disease.

*[கதுப்பல்–கதுப்புல்–கதுப்பிலி(கொ.வ.)]*

**கதுவு–தல்** *kaduvu-,* செ.குன்றாவி.(v.t.) உண் ணுதல்; to eat.

**<u>க.</u> கெதுக்கு**

*[கது–கதுவு]*

இச்சொல் வடஇந்திய மொழிகளில் கதுவு– காவு–கா எனத் திரிந்தது.

**கதைசொல்லிகள்** *kadaicolligal,* பெ.(n.) சேர நாட்டுத் தொழின் முறையாகக் கதை சொல் வோர்; professional story tellers of the ancient-chera country (Kerala State).

*[கதை+சொல்லி+கள்]*

சிறுவர்க்கும் பெரியோர்க்கும் நகைச்சுவை பொழுது போக்காகவும் அறநெறி நற்பண்பு புகட்டவும் கற்பனையாகக் குறுங்கதைகளும், நெடுங்கதை களும் சொல்வது பண்டைய வழக்கம்.

**கந்தபுரம்** *kandapuram,* பெ.(n.) கொங்கு நாட்டில் உள்ள ஊர் ; name of the village in Kongunadu.

*[கந்தன்+புரம்]*

**கந்தழி வாழ்த்து** *kandalivalttu,* பெ.(n.) அரசன் பகைவர் மதிலை அழித்த திறனை திருமால் வாணனுடைய திறலோடு ஒப்பிட்டு வாழ்த்துதல்; blessing the talent of the king who captured and destroyed the fort of the enemy.

*[கந்து+கழி+வாழ்த்து]*

**கந்து எடு-த்தல்** *kanduedu-,* செ.கு.வி.(v.i.) 1. தொடைகளைத் தட்டி சண்டைக்கு அழைத்தல்; challenge one to come for fight by clapping one's thigh as in difiance. 2. அதிகமாக உண்ணுதல்; being gluttunous.

*[கந்து+எடு]*

**கப்பல் தீர்வை** *kappaltirvai,* பெ.(n.) கப்பலை நங்கூரம் பாய்ச்சி நிறுத்துவதற்காகப் பெறப் படும் வரி; anchorage tax.

*[கப்பல்+தீர்வை]*

**கப்பலம்** *kappalam,* பெ.(n.) வரி; tax.

*[கப்பல்-கப்பலம்]*

**கப்பலின் கொடி** *kappalinkodi,* பெ.(n.) கப்பலின் பலுவைத் தூக்கும் இயந்திரம்; Jalk.

*[கப்பல்+இன்+கொடி]*

**கப்பலேறுதல்** *kappalērutal,* பெ.(n.) கப்பல் பயணம்; travel by ship.

*[கப்பல்+ஏறுதல்]*

**கப்பை** *kappai,* பெ.(n.) தவளை; frog.

<u>தெ. க.</u> கபெ

*[கப்பு-கப்பை]*

**கம்பி எண்ணு-தல்** *kambiennu-,* செ.கு.வி. (v.i.) சிறைப்படுதல் ; to be imprisoned.

*[கம்பி+எண்ணு]*

**கம்பேட்டை** *kampēttai,* பெ.(n.) வேலூர் மாவட் டத்தில் உள்ள ஊர் ; name of the village in Vellore.

*[கம்மம்+பேட்டை]*

**கம்மியர்** *kammiyar,* பெ.(n.) இயந்திர வல்லுநர்; mechanics.

*[கம்மு-கம்மியர்]*

**கரக்கோல்** *kara-k-kōl,* பெ.(n.) பாவுக்கு பசை போடும் போது பாவு நூலின் நுனிப்பகுதிகளை மாட்டி விடுவதற்காகப் பயன்படுத்தும் ஓர் நீளமுள்ள கைக்கோல்; an implement used in handloom weaving.

*[காம்(கை)+கோல்]*

**கரகாட்டம்** *karagāttam,* பெ.(n.) பூங்குட மெடுத்து ஆடும் ஆட்டம் ; a dance with keeping decorated water-pot on head.

*[கரகம்+ஆட்டம்]*



**கரசங்கால்** *karasangāl,* பெ.(n.) செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஊர்; name of the village in Chengalpattu.

*[கரிசை+கால்]*

**கரம்பு** *karambu,* பெ.(n.) வேளாண்மை செய்யப் படாத நிலம்(தரிசு); land lying waste. " தரிசு கிடந்த தரையை ;(ஈடு,2,7,9)

*[கல்>கர்>கர>கரம்பு]*

**கரவீரம்** *karavīram,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஊர்; name of the village in Thanjavur.

தற்போது கரையபுரம் என்று வழங்கப்பட்டு வருகிறது. 'கரம் வீரம்' என்பது பொன்னிறப் பூக்களைத் தருகின்ற ஒரு மரத்தின் பெயர். பொன்னலரி என்றும் அதனைக் குறிப்பதுண்டு.

**கரிக்கண்ணு** *kari-k-kaṇṇu,* பெ.(n.) கண்ணேறு ; evil eye.

*[கரி+கண்ணு]*

**கரிக்குருமான்** *karikkurumān,* பெ.(n.) கரிக்குருவி; a bird of utter black.

*[கரி+குருமான்]*

**கரிக்கை** *karikkai,* பெ.(n.) கருக்கம்புல், அருகம்புல்; Harialli grass.

*[கரு–கருக்கை–கரிக்கை]*

**கரிச்சான்** *kariccāṉ,* பெ.(n.) குருவியின் ஒரு வகை ; a kind of bird.

*[கரி–கரிச்சான்]*



**கரிமணல்** *karimaṇal,* பெ.(n.) செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஊர் ; name of the village in Chengalpattu.

*[கரு–கரி+மணல்]*

**கரியாப்பட்டினம்** *kariyāppaṭṭinam,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஊர் ; name of the village in Thanjavur.

*[கரிகாலன்+பட்டினம்]*

**கருங்கை ஒள்வாட் பெரும் பெயர் வழுதி** *karunkaioḷvāṭperumpeyarvaḻudi,* பெ.(n.) பாண்டிய மன்னன் பெயர் ; name of a Pandya king.

*[கருங்கை(பெரிய கை) + ஒள்வாள் + பெரும் பெயர்+வழுதி]*

**கருஞ்சேடை** *karuncēḍai,* பெ.(n.) காய்ந்த நிலத்தில் நீர் பாய்ச்சி உழுதல்; ploughing the dry land after watering.

*[கருஞ்+சேடை]*

**கருத்துக் கணிப்பு** *karuttu-k-kaṇippu,* பெ.(n.) ஒரு செயல் நடைபெறுவதற்கு முன்பே மக்களிடம் கருத்துக் கேட்டு அதனடிப் படையில் முடிவு கூறுதல்; survey of public opinion.

*[கருத்து+கணிப்பு]*

**கருநந்தடக்கன்** *karunandaḍakkaṉ,* பெ.(n.) ஆய்மரபு அரசருள் ஒருவன் ; a king of āy dynasty.

*[கரு+நந்தன்+அடக்கன்]*

**கருநாகச் சுழி** *karunāgacculi,* பெ.(n.) மாட்டின் கழுத்தின் இருக்கும் சுழி; தீமை பயக்கும் சுழி; curl of the hair in cattle.

*[கரு+நாகம்+சுழி]*

**கருப்பவோட்டம்** *karuppavōṭṭam,* பெ.(n.) சிலை (மார்கழி) மாதத்தில் மேகக்கூட்டங்கள் வானத்தில் சுழன்று கொண்டிருக்கும் நிலை; cloud sky.

*[கருப்பம்+ஓட்டம்]*

**கருப்புக் கோட்டை** *karuppukkōṭṭai,* பெ.(n.) சுசீந்திரத்திற்கு அருகில் உள்ள ஓர் ஊர் ; name of the village in Susinthiram.

*[கரும்+பழு(ஆலமரம்)–கருப்பு+கோட்டை]*

இச்சிற்றூரின் பழம் பெயர் 'கரும்பழு' கரும்பழு= (கருமை+பழு = ஆலமரம்) கரும்பழு= பருத்த ஆல மரங்கள் உள்ள ஊர்.

**கரும்பித்தவன்** *karumbittavan,* பெ.(n.) குடி வெறியில் தொடர்ந்து பேசிக் கொண்டிருப் பவன்; blabbering of a drunkard.

*[கரும்+பித்து+அவன்]*

**கரும்புள்ளிமீன்கொத்தி** *karumpuḷḷimīn kotti,* பெ.(n.) கொக்கு இனத்தை போல் உள்ள பறவை; piod kingfisher.

*[கரும்+புள்ளி+மீன்+கொத்தி]*



**கருமச்சுற்றம்** *karuma-c-cuṟṟam,* பெ.(n.) செயற்குழு; executive committee.

*[கருமம்+சுற்றம்]*

**கருவி** *karuvi,* பெ.(n.) நாகை மாவட்டம் மயிலாடு துறை பூம்புகார் சாலையில் அமைந் துள்ள ஓர் ஊர் ; name of the village in Nagai way to Mayiladuturai, Poompukar road.

*[கரு(மேடு)–கருவி]*

**கருவு** *karuvu,* பெ.(n.) மனத்திற்குள் உள்ள கடும் பகை உணர்வு; internal enmity.

*[கறுவு–கருவு]*

**கரைநெல்** *karai-nel,* பெ.(n.) மலைச் சரிவுகளில் விளையும் நெல் ; paddy, cultivated on hill slopes.

*[கரை+நெல்]*

**கரையாஞ்சாவடி** *karaiyānsāvaḍi,* பெ.(n.) திருவள்ளூர் மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; name of the village in Thiruvallur.

*[கரையன்+சாவடி]*

**கல்செக்கு** *kalcekku,* பெ.(n.) கல்லில் செதுக் கப்பட்ட செக்கு; oil press made of stone.

*[கல்+செக்கு]*

கிருட்டிணகிரி மாவட்டம் வேப்பனபள்ளி பூதிமுட்டில் ஊர்க் கோவிலில் கல்லினால் ஆன செக்கும், தேர்ச்சக்கரமும் உள்ளன.



**கல்புதூர்** *kalpudūr,* பெ.(n.) வேலூர் மாவட் டத்தில் காட்டுப்பாடிக்கு அருகில் உள்ள ஓர் ஊர்; name of the village in Vellore near Katpadi.

*[கல்+ஆல்+புதூர்]*

'கல்புதூர்' என்று மாறிவிட்டது.

**கல்நீர்ப்படுதல்** *kalnīr-p-paḍu-,* செ.கு.வி.(v.i.) வீரச்சாவு எய்திய வீரனுக்காக நடுகல்லுக் காகத் தேர்ந்த கல்லைத் தூய நீரால் நீராட் டுதல்; to select and consecrate the hero stone.

*[கல்+நீர்+படு]*

**கல்லக்காய்** *kal-lāk-kāi,* பெ.(n.) வேர்க்கடலை; ground nut.

*[கடலை–கல்லை+காய்]*

**கல்லுடம்பு** *kalluḍambu,* பெ.(n.) ஆயிரக்கணக் கான ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து பாறைப் படிவமாக மாறியுள்ள விலங்கு, தாவரம் போன்றவை; fossil.

*[கல்+உடம்பு]*

**கலவடை** *kala-v-aḍai,* பெ.(n.) உடைந்த பானை யின் உடையாத உறுதியான வாய்ப்பகுதி; mouth portion of the broken earthen pot.

[கலம்+அடை]

இப் பகுதியைக் கவிழ்த்துப் போட்டு பிற பானைகளுக்குத் தூங்கு மணையாகப் பயன் படுத்துவர்.

**கலவைத் தொடரியம்** *kalavai-t-todariyam,* பெ.(n.) ஒன்றுக்கு மேற்பட்ட தனித் தொடரியம் சேர்ந்து வருவது ; compound sentence.

[கலவை+தொடரியம்]

**கலிநாள்** *kalinā!,* பெ.(n.) கலியாண்டினை ஆண்டாகக் கணக்கிடாமல் நாளாகக் கணக் கிடும் முறை ; counting the kali year by number of days. கலியுகத்து நாள் பதினாறு நூறாயிரத்து நாற்பத்தொன்பதாயிரத்து முப்பத்து நான்கு (16,49,034) (ஆய் மன்னன் கல்வெட்டு–கேரளம்)

[கலி+நாள்]

**கலைப்பொருள்** *kalaiporu!,* பெ.(n.) ஒருவரால் உருவாக்கப்பட்ட அல்லது படைக்கப்பட்ட பொருள்; artefact.

[கலை+பொருள்]

**கவலைக்கால்** *kavalai-k-kāl,* பெ.(n.) கவலை இறைப்பில் கிணற்றுப் புறமாக சாய்ந்தாற் போன்று அமைந்த இரு மரக்கால்கள்; supporting rafters of waterlift device.

[கவலை+கால்]



**கவலைப்பாடி** *kavalai-p-pādi,* பெ.(n.) கவலை யேற்றத்தில் மாடுகள் முன்பின்னாக சென்று வருவதற்கான சாய்சரிவுப் பாதை; slanting path for the cattle in waterlift device.

[கவலை+பாடி]

**கவலை வலை** *kavalai valai,* பெ.(n.) கவலை மீன் பிடிப்பதற்கு என வடிவமைக்கப்பட்ட வலை; a fisherman net.

[கவலை+வலை]

**கவுந்தப்பாடி** *kavundappadi,* பெ.(n.) கொங்கு நாட்டில் உள்ள ஊர். பெருந்துறைக்கு 2 கல் தொலைவில் உள்ளது ; name of the village in Kongu nadu.

[கவுண்டன்+பாடி]

**கவுளி கக்கு** *kavuļi-kakku-,* பெ. (n.) பல்லி விழுந்ததால் விடமாகிப் போன தென்னை, பனை இவற்றின் கள்; toddy which is poisioned by the spliting venom of the lizard.

[கவுளி+கக்கு]

**கவையன் புத்தூர்** *kavaiyan puttūr,* பெ.(n.) கோயம்புத்தூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; name of the village in Coimbatore.

[கா+ஐயன்+புத்தூர்]

**கழகம்** *kaļagam,* பெ.(n.) 1. கற்றோர் கூட்டம்; assembly of learned men கண்ணுதற் பெருங் கழகமோடமர்ந்து (திருவினை.) 2. சூதாடுமிடம்; place of gambling கழகத்துக் காலை புகின் (குறள்.937)

ம. கழகம் (கோயில், கோயில் தொண்டு); து. கல (பறையர் கூடுமிடம்)

[குல் > குழு > கழ > கழகு > கழகம்]

குல் – குல – குலவு , குலவுதல் = கூடுதல்.

குல – குல – கல – கலவி.

கல – கலவை. கலப்பு – கலம்பு – கலம்பம் – கதம்பம்.

கலம்பு – கலம்பகம்

கல – கலங்கு – கலக்கு — கலக்கம்

கல – கலகம், கலாம், கலாபம், கலாபனை.

இருவர் அல்லது இரு கட்சியார் கலந்தே பொருவதால், கலத்தற் கருத்திற் போர்க்கருத்துத் தோன்றிற்று, கைகலத்தல் என்னும் வழக்கையும், பொரு, சமர் என்னும் சொற்களின் வேர்ப் பொருளையும் நோக்குக.

மேற்காட்டிய சொற்றிரிவுப் பட்டியினின்று, கலத்தற்சொற்கு, இருபாற் கூட்டம், கலப்பு, கலக்கம், கலகம் என்னும் நாற்பொருள்கள் தோன்றியுள்ளமை காண்க. நீரும் மண்ணும் போல பல பொருள்கள் அல்லது கருத்துகள் கலப்பதே கலக்கம்.

குல் – குள் – கள். கள்ளுதல் = கூடுதல் , பொருந்துதல், ஒத்தல்.

கள் – களம் = ஏர்க்களமும் போர்க்களமும் போலப் பலர் கூடுமிடம்.

களம் – களன் = அவைக்களம்

களன்–கழனி = ஏர்க்களம் உள்ள வயல்.

களம் – களர் = அவை

களர் – களரி = அவை, கல்வி நாடகம் மல் வில் பயிலும் அரங்கு, வாக்குமன்றம், தொழில் செய்யும் இடம்.

கள்ள = போல.

"கள்ள மதிப்ப வெல்ல வீழ" (தொல்.1235)

குள் – குழு –குழம்பு – குழப்பம்.

குழவி = திரண்ட அரை கல்.

கூடுதற் கருத்தில் திரட்சிக் கருத்துத் தோன்றும்,

"சேரே திரட்சி" (தொல்.846)
என்று தொல்காப்பியம் கூறுதல் காண்க.

குழு – குழூஉ.

குழு – குழாம்.

குழு – குழும்பு.

குழு –குழுமு – குழுவு, குழுமு – குழுமல், குழுமம்,

குழுவு – குழுவல், குழுமுதல் = கூடுதல், குழுவுதல் = கூடுதல், திரளுதல்

குழுமு – கழுமு– கழுமல் = மயக்கம், நிறைவு, மிகுதி.

குழு – கெழு–கெழுமு–கெழுவு.

கெழுமுதல் = பொருந்துதல், கெழுவுதல் = பொருந்துதல், மயங்குதல்.

கெழுவு = நட்பு, 'கெழுவ' ஓர் உவமவுருபு

கெழு – கெழி = நட்பு

குழு – குழை = திரண்ட காதணி.

குழு– (குழகு) – கழகு – கழகம் = ஓலக்கம் (Durbar), புலவரவை, கலை பயிலிடம்,படைக்கலம், மல் பயிலிடம், சூதாடுமிடம்.

குள் – (கூள்) – கூடு.

கழகம் என்னும் சொல், கூடுதல் என்னும் பொருள்கொண்ட குழு என்னும் வேரடியாகப் பிறந்திருத்தலால், பொதுவாகக் கூட்டம் என்றே பொருள்படுவதாகும். அது, முதற்கண், சிறந்த கூட்டமாகிய புலவரவைக்குப் பெயரால் வழங்கிற்று.

"கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ
டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா
மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும்
படுமோ".

என்னும் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணச் செய்யுளில், 'கழகம்' புலவரவையைக் குறித்தது. சங்கம் என்னும் வட சொற்கு நேர் தென்சொல் கழகம் என்பதே.

பழம் பாண்டி நாட்டு முத்தமிழ்க் கழகங்களும் தமக்கு முந்திய தமிழிலக்கியத்தை ஆராய்ந்து வந்ததினால், கற்றோர் பயிலும் இடத்தைக் குறித்த கழகம் என்னும் சொல், நாடைவில் கற்போர் பயிலும் இடத்தையும் குறிக்கத் தலைப்பட்டது. "அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரையென்ப", "அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத்தென்ப", " அவர் சங்கமிருந்து தமிழா ராய்ந்தது உத்தர மதுரையென்ப", என்று இறைய னாரகப் பொருளுரை முறையே முத்தமிழ்க் கழகங் களையும் பற்றிக் கூறுதல் காண்க. இதனால், இளைஞர் கல்வி பயிலுமிடத்தை,

"கந்தனை யனையவர் கலைதெரி கழகம்"
(கம்பரா. நாட்டுப்.48)

என்றார் கம்பர்.

இனி, ஈண்டைக் கழகம் என்னும் சொல், விற்கலை மற்கலை முதலிய போர்த்துறை பயிலும் இடம் எனவும் பொருளுரைப்பர். அதுவே கம்பர் கருத் தாயின் போர்க்கலையையும் கல்வித் துறைகளுள்

ஒன்றாக அடக்கிக்கொள்க. திவாகரம், படைக்கலம், மற்போர் முதலியன பயிலும் இடத்தையும் கழகம் எனக் குறிக்கும்.

ஏர்க்களத்திலும் அவைக்களத்திலும்போல் போர்க்களத்திலும் மக்கள் கூடுவதால், களம் என்னும் சொல் அம் மூன்றிடத்தையும் குறித்ததென முன்னர்க் கண்டோம். சூதாடுதற்கும் மக்கள் கூடுவதாலும், சூதும் ஒருவகைப் போர் என்பதைச் சூது பொருதல் என்னும் வழக்கினாலும், சூது போர்ச் சருக்கம் என்னும் வில்லிபாரதச் சருக்கப் பெயராலும், உத்தி யாலும், அறியலாம். வேத்தவையிலுள்ளா ரெல்லாம் ஒவ்வொரு துறையில் தேர்ச்சி பெற்றிருப்பராதலின், ஓலக்கமும் புலவரவையின் அடங்கும். ஆகவே, புலவரவை, கல்வி பயிலிடம், சூதாடுமிடம் ஆகிய மூவேறு பொருளைக் கழகம் என்னும் சொல் குறிக்கும் என்பது தெளிவாம். "பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்

கழகத்துக் காலை புகின்". (937)

என்னுங் குறளில், சூதாடுமிடத்தையும்,

"கழகத் தியலுங் கவற்றி னிலையும்"

என்னும் புறப்பொருள் வெண்பாமாலைத் தொடரில், சூதாட்டையும், கழகம் என்னும் சொல் குறித்தது.

இங்ஙனங் குறிப்பினும் இது அருகிய வழக்கே, இவற்றை உலக வழக்கிலும், நாட்டாண்மைக் கழகம், செந்தமிழ்க் கழகம், சைவ சித்தாந்தநூற்பதிப்புக் கழகம், மாணவர் கழகம், எனக் கழகம் என்னும் சொல் சூதாடுகளமல்லாத பிற களரிகளையே குறித்தல் காண்க.

குழு என்னும் வேரினின்றே குழாம், குழுமம் முதலிய பல்வேறு தொகுதிப் பெயர்கள் தோன்றியிருப் பினும், அவையாவும் பருப்பொருளிலன்றி நுண் பொருளில் ஒத்தனவல்ல.

குழு = சிறுகூட்டம் (committee).

குழூஉ = மறைபொருட் குறியீடு வழங்கும் தொழிற்குலம் அல்லது வகுப்பு.

குழாம் = குழுவினும் சற்றுப் பெரிய கூட்டம் (party).

கோஷ்டி என்னும் வடசொற்கு நேரான தென்சொல் குழாம்.

பஜனைக் கோஷ்டி என்பதைத் திருப்பாட்டுக் குழாம் எனலாம்.

குழுமல், குழுவல் = குழாத்தினும் பெரிய கூட்டம் (gathering).

குழுமம் = வணிகர் சங்கமும் தொழிலாளிகள் சங்கமும் போன்ற கூட்டம் (guild)

குழும்பு = யானை நிரை, தோழமைக் கூட்டம் (herd, company).

"களிற்றுக் குழும்பின்" (மதுரைக்.24)

கழகம் = சங்கம் (society, association).

ஆகவே, குழு, குழூஉ, குழாம் குழுமம் என்பன முறையே ஒன்றினொன்று பெரிய தொகுதிகளாம். கழகம் என்பது உயர்திணைக்கேயுரியதாய்ப் பெரும் பாலும் கல்விபற்றியதும் நிலையானதும் குழுமத் திற்குச் சமமானதுமான கூட்டத்தையே குறிக்கும். இதனாலேயே, பண்டைத் தமிழ்ச் சங்கத்தைக் கழகம் என்றார் பரஞ்சோதி முனிவர். தலைக்கழகப் புலவர் ஐந்நூற்று நாற்பத்தொன் பதின்மர்; இடைக்கழகப் புலவர் ஐம்பத்தொன்பதின்மர்; கடைக்கழகப் புலவர் நாற்பத்தொன்பதின்மர். ஆகவே, கழகம் என்பது சிறு குழுவைக் குறிப்பதன்று.

இனி சூதாடு கருவிக்குக் கழங்கு, கழங்கம் எனப் பெயரிருப்பதால், கழங்கம் அல்லது கழங்ககம் என்னுஞ் சொல் கழகம் எனத் தொக்குச் சூதாடு மிடத்தைக் குறித்ததோவென ஐயுறவும் இடமுண்டு. ஆயினும், ஆய்ந்து நோக்குவார்க்கு, மேற்காட்டிய வரலாறே உண்மையானதென்பது புலனாம்.

இதுகாறுங் கூறியவற்றால், கழகம் என்பது குழு என்னும் வேரடியாய்ப் பிறந்ததென்றும், கூட்டம் அல்லது கூடுமிடம் என்பதையே அடிப்படைப் பொரு ளாகக் கொண்டதென்றும், முதற்கண் கற்றோ ரவையை அல்லது கற்போர் கூட்டத்தைக் குறித்தே பின்னர்ச் சூதாடுமிடத்தைக் குறித்ததென்றும், சங்கம் என்னும் வடசொற் பொருளில் தொன்று தொட்டு வழங்கிய தூய பழந்தமிழ்ச் சொல்லென்றும், பண்டையிலக்கியம் முற்றும் இறந்துபட்ட இக் காலத்தில் திருக்குறளைக் கொண்டு சொற்பொருள் வரிசையைக் காணமுடியாதென்றும், சொல்லாராய்ச் சியின் துணையினாலேயே அதைத் துணிதல் கூடுமென்றும், தெற்றெனத் தெரிந்துகொள்க.

(பண்.கட்.91)

**கழிவு மீன்** *kaḻivaumīṉ*, பெ.(n.) உதவாத மீன்கள்; trash fish.

*[கழிவு+மீன்]*

**கழிவாலாடி** *kaḻivālāḍi*, பெ.(n.) தாழ்வான நிலப் பகுதி; low lying place.

*[கழி+வாலாடி]*

**கழுவாய் நாள்** *kaluvāynāl,* பெ.(n.) வெள்ளுவா காருவா நாள்களுக்கு ஒன்று விட்ட முதல் நாள், பிரதோசம் எனப்பட்ட கழுவாய் நாள்; a day before full moon and new moon is said to prodōsam in sanskrit and kāluvaynāl in Tamil.

*[கழுவு–கழுவாய்+நாள்]*

**கழாரம்பன்** *kalāramban,* பெ.(n.) தொல்காப் பியரொடு உடன் பயின்ற மாணவர்களாகக் கருதப்படுவோருள் ஒருவன்; name of one of the classmates of Tolkappiyar.

*[கழார்(ஆற்றுக்கழிமுகம்)+அம்பன்–வில்லாளன்)]*

**கழிக்கூடை** *kali-k-kūdai,* பெ.(n.) காட்டுக் கொடிகளால் பின்னி, கோழி கவிழ்க்கவும், கூளம் அள்ளவும் பயன்படுத்தப்படும் பெரிய கூடை; a big multi purpose basket.

*[கழி+கூடை]*

**கழிப்படல்** *kali-p-padal,* பெ.(n.) மூங்கில் சிம்பு அல்லது மெல்லிய காட்டுக் குச்சிகளைக் கொண்டுப் பின்னப்படும் படல் போன்ற தட்டி; a side screen.

*[கழி+படல்]*

**கழுவாய் வழிபாடு** *kaluvai-valipādu,* பெ.(n.) குற்றங்கள் கழிய வழிபடும் நாள் (பிர தோசம்); a day of prayer for expiation from sin.

*[கழுவாய்+வழிபாடு]*

**கழுவுள்** *kaluvul,* பெ.(n.) ஆண்பாற் பெயர்; name of a person. கழுவுள் தலைமடங்க.

*[கழு(வலிமை, காவல்)+உள், கழுவுள்–மறவன், காவலன்]*

**களிக்கோல்** *kali-k-kōl,* பெ.(n.) களி கிண்ட உதவும் கோல்; a stick used to kuindle boiled ragi preparation.

*[களி+கோல்]*

**களிம்புளியான்** *kalimpuliyān,* பெ.(n.) ஒரு வகைக் கற்றாழை; a kind of aloe.

*[களியம்+புளியன்]*

**கற்றறி–தல்** *karrari-,* செ.கு.வி.(v.t.) அறநூல் களையும் அரசியல் நூல்களையும் கற்று வேண்டுவன விலக்குவன அறிதல்; to be educated by extraordinary learning.

*[கற்று+அறி]*

**கற்றுச்சொல்லி** *karru-c-colli,* பெ.(n.) தானாக விளங்கிக் கொள்ளாமல் மற்றவர் சொன்னதை அப்படியே திரும்பச் சொல்பவன்; a dull person who repeats what others said.

**மறுவ. கிளிப்பிள்ளை**

*[கற்று+சொல்லி. கற்றல் என்பது இங்குக் காதால் கேட்டு அறிந்ததை உணர்த்தியது]*

**கன்றுத் தாய்மாடு** *kanru-tāy-mādu,* பெ.(n.) கன்றுக்குப் பால் கொடுத்துக் கொண்டிருக்கும் நிலையில் உள்ள மாடு; milking cow.

*[கன்று+தாய்மாடு]*

ஒ.நோ. பிள்ளைத்தாய்ச்சி.



**கனகதம்** *kanagadam,* பெ.(n.) ஒட்டகம்; camel. கனகதம்....ஒட்டகம்(நிக.பி.8:182)

*[கன+கதம்]*

**கனியனூர்** *kaniyanūr,* பெ.(n.) வேலூர் மாவட் டத்தில் உள்ள ஓர் ஊர்; name of the village in Vellore.

*[கனியன்+ஊர்]*

**காசு** *kasu,* பெ.(n.) ஒரு பணம் என்பதின் 64இல் ஒரு பங்காகிய சிறு நாணயம்; a small coin 1/64th in value of a panam.

*[காய்ச்சு–காசு]*

**காட்சியாள்** *kațci-y-āl*, பெ.(n.) வழக்கு நேர் கேட்கும் போது நேரிற் கண்டவராக நிகழ்ந்தது கூற முன் வருபவர்(சாட்சி); witness.

**மறுவ. சான்றாளர், கரி, நேர்காட்சி, காட்சி.**
*[காண்-காட்சி+ஆள்]*

காட்சி எனும் தமிழ்ச்சொல், வடமொழியில் சாட்சி எனத் திரிந்தது.

**காட்டாட்சி** *kāțțāțci*,பெ.(n.)அறநெறி தவறிச் செய்யும் அரசாட்சி;unjust rule, tyranny.

*[காட்டு+ஆட்சி]*

**காட்டாளி** *kāțțāḷi*, பெ.(n.) கடற்கரை மரம் சோலைகளை அடையாளமாகக் கொண்டு கடலில் மீன்பிடிக்கும் இடங்களைக் கண் டறியும் திறமை வாய்ந்த மீனவன்;fisherman efficient in identifying the fishing areas by calculating the distance by sighting the sea shore vegetation.

*[காடு+ஆளி]*

**காண்புநேரம்** *kānpunēram*, பெ.(n.) காண் பதற்கு நேரம் ஒதுக்குகை; an appointment.

**காண்பேழை** *kānpēḷai*; பெ.(n.) காட்சிப் பொருள் களை வைக்கும் கண்ணாடிக் காட்சிப் பெட்டி; show case.

*[காண்+பேழை]*

**காணிக்கடன்** *kāni-k-kaḍan*,பெ.(n.) நிலவரி; land tax.இறையிலி நீங்கு நிலம் முக்காலாலே இரண்டு மாகாணி அரைக்காணி முந்திரிகை கீழக்காலே நான்குமா அரைக்காணி முந்தி ரிகை கீழ் நான்கு மாவினால் இறை கட்டின காணிக்கடன்.

*[1/5–2000 எனும் கீழ் வாய் இலக்க எண்]*
இறை கட்டின காணிக்கடன் -கல்வெட்டு
*[காணி+கடன்]*

**காதடை-த்தல்** *kādaḍai-*, செ.கு.வி. (v.i.) 1. உரத்த ஒலி, கூச்சல் போன்றவற்றால் கேட்க இயலாதவாறு செய்தல்; to deafen. 2. நெடும் பசியால் காது பஞ்சடைத்துப் போதல்; extreme hunger.

*[காது+அடை-,]*

**காதில்பூசுற்று-தல்** *kādil pū śurru-*, செ.கு.வி. (v.i.) ஏமாற்று வேலை;cheating.

*[காதில்+பூ+சுற்று]*

**காதுவளையம்,** *kāduvaḷaiyam*, பெ.(n.) 1. ஏற்றச் சாலின் காதுவளையம்; a ring in the ladder for pulling water from well. 2. காதணி வளையம்; round ear ring.

*[காது+வளையம்]*



**காப்பரிசி** *kāparisi*, பெ.(n.) கோயிலில் அடிய வர்களுக்கு வழங்கும் இனிப்பு கலந்த பச்சரிசி; raw rice with jaggery offered to the devotees at the temple.

*[காப்பு+அரிசி]*

**காப்புறுதியளி-த்தல்** *kāppurudiyaḷi-*, செ.கு.வி. (v.i.) ஒரு விளைபொருள் அல்லது கண்டுபிடிப்பை பயன்படுத்துவதற்கான தனி உரிமை கொடுத்தல்; to bestow patent right.

*[காப்பு+உறுதி+அளி-த்தல்]*

**காய்க்கொட்டை** *kāy-k-koțțai*,பெ.(n.) காய் நிலை யிலேயே பறித்துக் காய வைக்கப்பட்ட கொட்டை; dried nut almost in a unriped stage.

*[காய்+கொட்டை]*

**கார்குட்டி** *kārkuțți*, பெ.(n.) சிறிய செம்மறிக்கடா; a small he-goat.

*[கார்+குட்டி]*

**காரவேலன் கல்வெட்டு** *kāravēlankalveṭṭu,* பெ.(ந.) தமிழ் மூவேந்தர்கள் உடன்படிக் கையைக் குறிப்பிட்டுக் காட்டும் அத்திகும்பர் கல்வெட்டு; Hattikumba inscription which depicts an agreement among the three Tamil kings.

*[காரவேலன்+கல்வெட்டு]*

தமிழகத்தின் மீது வடநாட்டார் படையெடுப் புகள் நடந்தன. இந்தியாவுக்கு ஒருகாலத்தில் தமி ழகம் என்று பெயரிருந்தது. ஆரியர் புகுந்தபின் வட நாட்டுத் தமிழ் பிராகிருதம் என்னும் வட தமிழாயிற்று. அப்பொழுது விந்தியமலை வரை தமிழ் நாடாக இருந்தது. அதன்பின்னர் வடவேங்கடமாகத் தமிழக எல்லை சுருங்கியது.

வடநாட்டுப் படையெடுப்பாளர்களை ஒன்று சேர்ந்து எதிர்ப்பதற்காக மூவேந்தர்களும் 12 வேளிர் குறுநில மன்னரும் ஒருங்கிணைந்து கூட்டிணைவு உடன்படிக்கை செய்து கொண்டிருந்தனர். இந்த ஒப்பந்தம் நெடுங்காலம் நிலவியதைக் கலிங்க நாட்டு அத்திகும்பா (யானைக்குன்று) வில் காரவேலன் என்னும் மன்னன் பொறித்த கல்வெட்டு கூறுகிறது. கி.மு.இரண்டாம் நூற்றாண்டில் காரவேலனின் 11 ஆம் ஆட்சியாண்டில் இந்த உடன்படிக்கை முறிந்து போயிற்று என அக்கல்வெட்டு கூறுகிறது.

அந்த அத்திகும்பா கல்வெட்டு சனவரி 2004இல் வெளிவந்த IJDL பன்னாட்டுத் திரவிட மொழி யியல் இதழில் வெளியிடப்பட்டுள்ளது. காரவேலன் அவனுடைய 12ஆம் ஆட்சியாண்டில் பாண்டியனின் தலைநகரைக் கொள்ளையடித்துப் பொன்னும் பொருளும் எடுத்துச் சென்றான் என்னும் செய்தி நம்கடைக்கழக இலக்கியங்களில் கூறப்பட வில்லை. பாண்டிய நாட்டில் 160 ஆண்டுகள் கடைக் கழகக் காலத்தில் மன்னராட்சி இல்லாமல் போய்விட்டது என 1920இல் வெளிவந்த நற்குடி வேளாளர் வரலாறு என்னும் செய்யுள் நூல் கூறுகிறது.

அந்த உடன்படிக்கை 1300 ஆண்டுகள் நீடித்தது என்கின்றனர். காரவேலனின் அத்திகும்பா கல் வெட்டை 1928இல் படித்த ஆர்.டி.பானர்சியும் செய சுவாலும் அத்துணை நீண்ட நெடுங்காலம் ஒரு உடன் படிக்கை நீடித்தது என்பதை எவரும் நம்பமுடியாது எனக் கருதினர். எனவே, ஏதோ ஒரு வகையில் படித்து அந்த உடன்படிக்கை பதின்மூன்றும் நூறும் சேர்ந்த 113 ஆண்டுகள் நிலவியதாக உரை விளக்கம் தந்தனர். அதனையே கல்வெட்டாசிரி யர்கள் மேற் கோள்காட்டி வருகின்றனர். காரவேலன் கல்வெட்டின் ஒரு பகுதி:

ஜனபத பாவனம்ச
தெரச வச சதகம்
பிமன்தி தமிரதக சங்காதம்

(அத்திகும்பா கல்வெட்டு வரி 10–11)

என்னும் தொடரில் தமிர தக சங்காதம் பிமன்தி என்பது தமிழ் நாட்டுக் கூட்டணி உடைக்கப்பட்டது எனப் பொருள்படுகிறது. தமிரதக என்பதற்கு தமிர தேச எனவும் பாட வேறுபாடு உள்ளது. வடநாட்டு மக்களின் அமைதியான வாழ்வுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்காக என்னும் பொருளில் ஜனபத பாவனம்ச என்னும் முதல்வரி எழுதப்பட்டுள்ளது. அடுத்த வரியில் தெரச என்பது 13ஐக் குறிக்கும். அடுத்துள்ள வச என்னும் சொல் பெருகிய எனப் பொருள்படும். சதகம் என்னும் சொல் நூறு கொண் டது என்றும் நூற்றாண்டு– (century) என்றும் இருபொருள் தரும். நூறு கொண்டது என்னும் பொருள் இங்குப் பொருந்தவில்லை. நூறு கொண் டது என்று ஒன்றை முடிவு கட்டிய பிறகு அதன்மீது பதின்மூன்றைச் சேர்க்க முடியாது. ஒரு சதகம் என்பதற்கு நூற்றாண்டு என்னும் பொருளே இங்குப் பொருத்தமாக அமைந்துள்ளது.

113 ஆண்டைக் குறிப்பதாக இருந்தால் தெரசசதம் என்று குறிப்பிட்டாலே போதுமானது. நூற்றாண்டு எனப்பொருள்படும் சதகம் என்னும் சொல்லை ஆளவேண்டியதில்லை. 13 நூற்றாண் டுகள் என்பதைக் குறிக்கவே தெரசவச சதகம் என்னும் தொடராட்சி பயன்படுத்தபட்டது.

இந்தக் கல்வெட்டு பிராகிருத மொழியில் எழுதப் பட்டுள்ளது. பிராகிருதம் வடதமிழ் எனப்பட்டது. இதில் வடமொழிக்குரிய எண்முறை பின்பற்றப்பட் டுள்ளதா அல்லது தமிழுக்குரிய எண்முறை பின்பற்றப் பட்டுள்ளதா என்பதைத் தெளிவாக்கிக் கொள்ள வேண்டும்.

**தமிழ் எண்முறை**

எண்களை எழுத்தால் எழுதிக் காட்டுதல் எண் களால் எழுதிக் காட்டுதல் என்னும் முறையை உலக மொழிகள் அனைத்தும் பின்பற்றுகின்றன. தமிழில் எண்ணாக எழுதினாலும் எழுத்தில் எழுதிக் காட்டி னாலும் எண்களின் மதிப்பை இடமிருந்து வலமாகவே

குறிப்பிடுவது வழக்கம். ஆயிரத்து மூன்று 1003 எனத் தமிழில் குறிப்பதைக் காண்க.

**வடமொழி எண்முறை**

வடஇந்திய மொழிகளிலும் சமற்கிருதத்திலும் நூறுவரை எண்ணும் போது வல இடமாகவும் நூற்றுக்கு மேல் இட வலமாகவும் எண்ணின் இட மதிப்புகள் ஆளப்படுகின்றன.

அ. சமற்கிருதம் – சதுர்தசி 14 (நான்கும் பத்தும்) = பதினான்கு

இந்தி –தேரஹ் 13 (மூன்றும் பத்தும்) = பதின்மூன்று

ஆ. சமற்கிருதம் (இத்தீஸ் 31 (ஒன்றும் முப்பதும்) = முப்பத்தொன்று

துவி சகஸ்ர2000 (இரண்டு ஆயிரம்) ஈராயிரம்

இந்தி – தோஹஜார் 2000 (இரண்டு ஆயிரம்) ஈராயிரம்

இ.ஆங்கிலத்தில் 11 முதல் 20 வரை வல இடமாகவும், இருபதுக்கு மேல் இடவலமாகவும் (Twenty one) அமைந்துள்ளன. பொனீசியவணிகர்கள் தமிழ் எண்முறைகளை உலகம் முழுவதும் பரப்பியதன் விளைவு இது எனலாம். சமற்கிருதம் நூற்றுக்கு மேற்பட்ட அனைத்து எண்களையும் தமிழ் முறைப்படி ஆள்கிறது.

ஆரியர் ஈரான் நாட்டு வழியாக வந்ததால் வலமிருந்து இடமாக நூறுவரை எண்களைக் குறிக்கும் வழக்கத்தை உடன் கொண்டு வந்து வட இந்திய மொழிகளில் புகுத்தினர். அவர்கள் இந்தியாவில் வணிகத் தொழிலில் மேம்பட்ட திராவிடர்களோடு கொண்ட ஊடாட்டத்தால் தமிழிலுள்ளது போன்றே இடவலமாக எண்களைக் குறிப்பிடும் வழக்கத்தை மேற்கொண்டனர். இதனால் இன்றளவும் சமற்கிருதத்தில் எண்களைக் குறிப்பிடுவதில் குழப்பம் நிலவுகிறது. இதனைச் சமற்கிருத ஆங்கில அகராதியில் மோனியர் வில்லியம்சு சுட்டிக் காட்டுகிறார்.

dvi satam (த்விசதம்) என்னும் சமற்கிருதச் சொல் 100+2=102 என்றும் 100X2=200 என்றும் இரு வகையாக ஆளப்படுவதை அவர் எடுத்துக் காட்டியுள்ளார். ஆனால் சப்தசதி என்பது 700ஐக் குறிக்கிறது. இது 107ஐ ஏன் குறிக்கவில்லை? இதிலிருந்தே சமற்கிருதம் பேசப்படாத மொழி என்பது உறுதியாகிறது.

இந்நிலையில் காரவேலனின் பிராகிருதக் கல்வெட்டில் எந்தமுறை பின்பற்றப்படடுள்ளது? நூறு ஆயிரம் போன்ற பெரிய எண்களோடு அவற்றினும் குறைந்த எண்களை எழுத்தால் எழுதிக் காட்டும் போது 1009 என்பதை ஒன்பது சேர்ந்த ஆயிரம் அதாவது

"தொண்டு(9) தலையிட்ட ஆயிரம்" எனக் குறிப்பிடுவது கடைக்கழகக் காலத்திலும் வழக்கமாக இருந்திருக்கிறது. கோடியைக் கோடியால் பெருக்குவதாயின் அடுக்கிய கோடி என்பர்.

காரவேலன் கல்வெட்டில் பதின்மூன்று சேர்ந்த நூறு என்று சொல்லாமல் நூற்றாண்டு எனச் சொல்லப்பட்டுள்ளது. அதனால் 13 நூற்றாண்டுகள் (1300 ஆண்டுகள்) எனப் பொருள் கொள்ள இடந்தந்துள்ளது. இது வடதமிழாகிய பிராகிருதத்தில் பின்பற்றப்பட்ட தமிழ் மரபு எண்முறை.

பிராகிருத எண்கள் வல இடமாக எழுதப்பட்ட எண் முறை என்று ஐராவதம் மகாதேவன் (ஆவணம்–சூலை 2004) குறிப்பிட்டிருக்கிறார். அழகன் குளம் பானையோட்டில் 408 என்பது (8+100x4=408) எனக் குறிக்கப்பட்டுள்ளது என்கிறார். இதை நான் 804 எனக் கருதுகிறேன். இது எழுத்தால் எப்படி எழுதப்பட்டது என்பதற்கு அவர் சான்று தரவில்லை. அவர் படித்த முறை (4X100)+8. நான் படித்த முறை (8X100)+4 என்ப தாகும். இந்த வலஇட முறைப்படி காரவேலன் கல்வெட்டைப் படித்துப் பார்த்தாலும் நூற்றாண்டு 13(100X13 = 300) என்றே பொருள்படுகிறது. சதகம் என்பது நூற்றாண்டு என்றே படிக்கமுடியும். இச்சொல் நூறு எனச் சமற்கிருதத்தில் பொருள் படாது. பிராகிருதத்திரும் இவ்வாறே உள்ளது. இதனை ஆர்.டி.பானர்சி செயசுவால் போன்றவர்கள் பதின்மூன்றும் நூறும் 13+100=113 எனப் படித்தது எப்படிப் பொருந்தும்.

நூற்றாண்டு எனப்படும் சதகம் என்னும் சொல்லைக் காரவேலனின் கல்வெட்டு குறிப்பிடுவதால் மூவேந்தர் கூட்டணி ஆரியர்கள் கி.மு.15ஆம் நூற்றாண்டில் பஞ்சாபில் புகுந்தபோது உருவாகியிருக்கிறது என அறியமுடிகிறது. இந்தக் காலவரம்பில் வடமேற்கு இந்தியாவில் ஆரியர் புகுந்தனர் என்றும் அவர்களை அடக்குவதற்கு வடநாட்டிலுள்ள தமிழ் வேந்தர்களுக்குத் தென்னாட்டுப் பாண்டியன் தக்க உதவியளித்து ஆணையிட்டான் என்றும் நன்குடி வேளாளர் வரலாறு (1920) எனும் நூல் குறிப்பிடுகிறது. இருக்கு வேதமும், ஆரியர் யமுனைக் கரை பகுதிக்கு வந்தபோது நார்மாறன், பல்பூதன் எனும் பாண்டியக் கிளை மரபினர் அமைதியாக வாழத்

தொடங்கிய ஆரியர்க்குக் கொடையளித்த செய்தியைக் குறிப்பிடுகிறது.

கி.மு.9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தொல்–காப்பியரும்,

*போந்தை வேம்பே ஆரென வரூஉம்*

*மாபெரும் தானையர்*

என மூவேந்தர்களிடை நிலவிய ஒற்றுமையைக் குறிப்பாகப் புலப்படுத்திக் காட்டியிருக்கிறார். மூவேந்தர் கூட்டணி தொடங்கியதாகக் கருதப்படும் கி.மு.15ஆம் நூற்றாண்டளவில் இந்தியாவின் தலை நகரம் கொற்கையாக இருந்தது. இந்தியாவிலிருந்த 600 குறுநில மன்னர் கொற்கைப் பாண்டியனுக்குத் திறை செலுத்தினர் எனச் சாத்தன் குளம் இராகவன் கோநகர் கொற்கை எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார். கி.மு.1000 ஆண்டளவில் வடநாட்டிலிருந்த விராத்திய பிராமணப் பிரிவினர் (வேளாளப் பார்ப்பனர் – வேள்வி செய்யக்கூடாது எனத் தடைவிதிக்கப்பட்ட கலப்பினப் பார்ப்பனர்) சிலர் கொற்கை மாநகரில் காணப்பட்டனர் எனக் கூறப்படுகிறது.

பாரத இராமாயணங்களில் மூவேந்தர் கூறப்படுகின்றனர். சிந்துவெளி முத்திரைகளிலும் பாண்டியன் பெயரும் சேரமன்னர் பெயர்களும் இடம் பெற்றுள்ளன. லோத்தல் துறைமுகத்தில் கிடைத்த சிந்து வெளி முத்திரையில் பாண்டியன் அண்டன் எனும் சொல் உள்ளது. கபிலர் 49 தலைமுறைகளாகத் துவாரகையை இருங்கோவேள் பாண்டியக் கிளை மரபினர் ஆட்சி புரிந்ததைப் புற நானூற்றில் குறிப்பிடுகிறார்.

கி.மு.7ஆம் நூற்றாண்டு வரை விந்தியத்துக்கு வடக்கில் கோசாம்பியைத் தலைநகராகக் கொண்டு உதயணன் என்னும் தமிழ் மன்னன் ஆட்சி புரிந்திருக்கிறான். கொற்கைப் பாண்டியனுக்கு அனைத்து மன்னரும் கட்டுப்பட்டு அவன் சொற்படி நடந்திருக்கின்றனர்.

காரவேலன் கல்வெட்டின்படி மூவேந்தர் உடன்படிக்கை நீடித்த காலம் 1300 (பதின்மூன்று நூற்றாண்டுகள், என்பதை வலியுறுத்தி Journal of South India Historical view(2003) பக்.96–100) கட்டுரை வெளிவந்தது. கணையாழி (பிப்.2005) இதழில் 'அந்த 1300 ஆண்டுகள்' எனும் தலைப்பில் ம. கந்தசாமி எழுதிய கட்டுரையிலும் இது வலியுறுத்தப்பட்டுள்ளது. இந்தக் காலத்தை கி.மு.1465–கி.மு. 165 என அவர் குறிப்பிட்டுள்ளார்.

மூவேந்தரும் 12 குறுநில மன்னரும் சேர்ந்த இக் கூட்டணியில் அந்துவன் என்னும் சேர இளவரசன் அந்த உடன்படிக்கையை மீறிக் கொங்கு நாட்டுக் கருவூரைக் கவர்ந்து கொண்டான் என்றும் அவனைத் தூண்டிவிட்டுக் கூட்டு உடன்படிக்கையை மீறச் செய்தவன் காரவேலனே என்றும் இவர் குறிப்பிட்டுள்ளார். மூவேந்தரின் ஒற்றுமையால் கலிங்க நாட்டு அமைதிக்குத் தீங்கு நேரும் என அஞ்சியே காரவேலன் தமிழர் ஒற்றுமையைக் குலைத்தான் எனக் கூறப்படுகிறது.

காரவேலன் மதுரையைக் கொள்ளையடித்துச் சென்ற மறு ஆண்டில் கலிங்க நாட்டில் கொண்டாடப் பட்ட சமண தீர்த்தங்கரர்சிலை நாட்டும் விழாவுக்குப் பாண்டியனைச் சிறப்பு விருந்தாளியாக அழைத்திருக்கிறான். இதிலிருந்த பாண்டியர்களின் பங்காளிப் பூசலில் ஒரு பக்கம் சார்ந்து மற்றவனை அழிக்கக் காரவேலன் துணை புரிந்திருக்கிறான் எனத் தெரிகிறது.

கி.மு.இரண்டாம் நூற்றாண்டில் (கி.மு.180–கி.மு.165) மதுரையைக் கொள்ளையடிக்க வந்த காரவேலன் சோழநாட்டைக் கடந்து சென்றிருக்க வேண்டும். சோழரைத் தாக்கிய செய்தி எதுவும் அத்திகும்பா கல்வெட்டில் இல்லை. சோழநாட்டில் கி.மு.200 அளவில் சென்னியர் மரபு முடிவுற்றது. அதன்பின்னர் கி.மு.160 அளவில் கிள்ளி மரபு ஆட்சிக்கு வந்துள்ளது. இந்த இடைவெளிக் காலத்தில் காரவேலன் தென்னாடு நோக்கி வந்திருக்க வேண்டும்.

சேரநாட்டில் புறப்புண் நாணி வடக்கிருந்த பெருஞ்சேரலாதனுக்குப் பிறகு வலிமை வாய்ந்த சேர மன்னர் காணப்படவில்லை. பாண்டிய நாட்டில் கடலன் வழுதிக்குப் பின்னர் (கி.மு.200 – கி.மு.180) முடியரசு ஒடுங்கியது. அவனுக்குப் பின் வந்த மருங்கை வழுதி (கி.மு.180–கி.மு.160) என்பவனே பங்காளிப் பூசலில் துணைபுரிய கலிங்க நாட்டுக் காரவேலனை வரவழைத்த பாண்டியனாக இருத்தல் வேண்டும். கடைக் கழக மூவேந்தர்களின் ஆட்சிக் காலங்கள் கடைக்கழக நூல்களின் காலமும் கருத்தும் (2006) என்னும் நூலிலிருந்து மேற்கோள் காட்டப்பட்டுள்ளன.

தமிழ் வேந்தர்கள் காலமெல்லாம் தமக்குள் போரிட்டுக் கொண்டிருந்தார்கள் என்னும் கருத்துக்கு எதிராக ஒற்றுமையாக இருந்தார்கள் என்பது வரலாற்றுச் சிறப்புடையதாகும். ஆரியப் படைகளை

ஒன்று கூடி எதிர்க்க ஓரணியில் திரண்டனர் என்பதும் அந்த உடன்படிக்கை 1300 ஆண்டுகள் நீடித்தது என்பதும் நம்பக் கூடியது என்பதும் மேலும் சில சான்றுகளால் உறுதிப்படும். பாண்டியனை

வடதிசை கங்கை இமயமும் கொண்டு
தென்திசை யாண்ட தென்னவன்

என்று சிலம்பு பாடுகிறது.

இமயம் வரை தமிழர் வட எல்லை விரிந்திருந்தது என்பதை உறுதிப்படுத்துவதற்குத் தம் உரிமையை நிலை நாட்டவும் மூவேந்தரும் அடிக்கடி இமயத்தில் தம் இலக்கினை பொறிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். பாண்டியன் இமயத்தில்கயல் மீன் இலக்கினை பொறித்தபோது ஏனைய சேர சோழர்க் குரிய வில்லும் புலியும் சேர்த்தே பொறித்திருக்கிறான்.

கயலெழுதிய இமய நெற்றியில்
அயலெழுதிய புலியும் வில்லும்

எனும் செய்யுள் வரிகளே இதற்குத் தக்க சான்றாகும்.

யானைக் கட்சேய் மாந்தரன் சேரல் இரும் பொறையின் முன்னோனுக்கு இந்தியாவிலிருந்த அனைத்து மன்னரும் அடிபணிந்து வழிமொழிந்து ஒழுகினர்.

தென்குமரி வடபெருங்கால்
குணகுட கடலா எல்லை
குன்றுமலை காடு நாடு
ஒன்றுபட்டு வழிமொழிய
கொடிது கடிந்து, கோல் திருத்தி
படுவது உண்டு பகல் ஆற்றி
இனிதுருண்ட சுடர்நேமி
முழுதாண்டோர் வழிகாவல! (புறம் 17:1–8)

எனக் குறுங்கோழியூர் கிழார் பாடியுள்ளார்.

பதிற்றுப்பத்தில் நின்னாட்சி இமயத்துக்கு அப்பாலும் பரவவேண்டும் எனப் புலவர் தன் விருப்பத்தை வெளிப்படுத்தியிருக்கிறார்.

பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதி பல துறைமுகங்களைக் கொண்டிருந்ததால் இவனைப் பல்சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்றனர். இவன் இமயத்தை வட எல்லையாகக் கொண்டவன் என்பதை

வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனஅது உருகெழு குமரியின் தெற்கும்
(புறம்–6)

எனக் காரிக்கிழார் பாடியுள்ளார்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்,
வடபுல இமயத்து வாங்குவில் பொறித்த
எழுவுறழ் திணிதோள் இயல்தேர்க் குட்டுவன்
எனப் பாராட்டப்பட்டான்.
(சிறுபாண்.48–49)

தமிழ்வேந்தர்களின் இமயப் படையெடுப்பு என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொண்ட மு. இராகவையங்கார், சிக்கிம் மாநிலத்திலிருந்து திபேத்துக்குச் செல்லும் வழியிலுள்ள சூம்பிப் பள்ளத்தாக்கை ஒட்டிய சோழமலைத் தொடர், சோழன் கணவாய் (chola pass) என அழைக்கப்படும் பகுதிகளே கரிகாற் சோழனும் தமிழ் மன்னரும் கைப்பற்றி இமயத்தில் இலச்சினை பொறிக்கச் சென்ற வழி எனக் கூறியுள்ளார். சோழன் கணவாய் Reader's Digest உலகப் படத்தில் (பக்.77) காட்டப்பட்டுள்ளது.

மேற்கண்ட சான்றுகள் ஆரியர் அலறத்தாக்கிய மூவேந்தர்களின் தொடர்ந்த வடநாட்டுப் படையெடுப்புகளைப் புலப்படுத்துகின்றன. ஆரிய திராவிடர் போராட்டம் என்பது சிந்துவெளி நாகரிகம் முடிந்து இருநூற்றாண்டுகளுக்குப் பின்னர் கி.மு.1600 முதலே தொடங்கிவிட்டது. அதில் தென்னாட்டு மன்னர் கி.மு.1500 முதல் மிகுதியாகப் பங்கேற்க வேண்டிய சூழல் ஏற்பட்டிருக்கிறது. தேவாசுரப் போராட்டங்கள் எனப் புராணங்கள் இவற்றைக் குறிப்பிடுகின்றன. ஆதிச்சநல்லூர் பானை ஓட்டு எழுத்து கி.மு.1500 எனக் கணிக்கப்பட்டுள்ளது.

இந்த வரலாற்றுப் பின்னணியைப் புரிந்து கொள்ள காளிதாசனின் குலமுன்னோனாகிய இரகு வடநாட்டிலிருந்த ஒரு பாண்டியனை அடக்கித் திறை செலுத்தச் செய்தான் எனக் கூறப்பட்டுள்ளது. எனவே 1300 ஆண்டு மூவேந்தர் உடன்படிக்கை என்பது நம்பத்தக்கதாகவே உள்ளது.

<u>கருவி நூல்கள்</u>


1. *JDL(Jul. 2004) திருவனந்தபுரம்*
2. *Shashi Kant 1971; The Hathigumpa inscription of Kharavela and Bhabru Edict of Asoka, New Delhi*
3. *Journal of South India, Historical view 2003.*
4. *ம. கந்தசாமி. அந்த 1300 ஆண்டுகள், கணையாழி, பிப்பிரவரி 2005.*
5. *ஐ. மகாதேவன் – அழகன்குளம் பானைஓட்டில் எண்கள் – ஆவணம், சூலை – 2004.*
6. *சாத்தன்குளம் அ. இராகவன்.1971. கோநகர் கொற்கை.*
7. *ஆறுமுக நயினார் பிள்ளை.1920. நன்குடிவேளாளர் வரலாறு, மதுரை*

8. காளிதாசன், இரகுவம்சம்.

9. Banerji, R.D. 1930, History of Orissa.

10. இரா. மதிவாணண் (2006) கடைக்கழக நூல்களின் காலமும் கருத்தும், திலகம் பதிப்பகம், 17 இபி1கே.கே. பொன்னுரங்கம் சாலை, ஓம் சக்திநகர் வளசர வாக்கம், சென்னை–87.

**காராம்பசு** *kārāmpasu*, பெ.(n.) மடியும் காம்பும் கருநிறம் கொண்ட மாடு;cow of black coloured udder.

மறுவ. காரா, காரான். காராவு.

*[கரு–கார்+ஆம்+பசு]*

காராவின் பால் சீரியது. மிதித்தபுல்லை மேயாததும் கழுத்து அலை நீரைத்தொடும் ஆழம் வரை இறங்கித் தூய நீர் பருகுவதும் இதன் இயல்பு. இதன் வயிற்றில் ஆன்மணத்தி (கோரோசனை) உருவாகும்.

**காரி** *kāri*, பெ.(n.) உப்பங்கழி;back water. 2.காயல்;an arm of the sea.3.அழகு;beauty.

<u>ம.</u> <u>க.</u>காரி, <u>தெ.</u> கய்யி. <u>மரா.</u> கார, காட.

*[கார் – காரி (கருமை நிறம்) கடல் நீர்நிலை]*

**காரை வீடு** *kārai vīdu*, பெ.(n.) சுண்ணாம்புச் சாந்தினைக் கொண்டு பூசப்பட்ட சுவர் கொண்ட வீடு; mortar plastered house.

*[காரை+வீடு]*

**கால்கட்டுபோடு–தல்** *kālkattupōḍu-*, செ.குன்றாவி.(v.t.) 1. திருமணம் செய்தல்;to arrange marriage.அவனுக்கு ஒரு கால் கட்டு போடவேண்டும்.2.காலில் கட்டுபோடுதல்; to tie a bandage on leg.

*[கால்+கட்டு+போடு]*

**கால்வெளி** *kālveḷi*, பெ.(n.) அறிவு (ஞானம்)ப் பெருவெளி; universal zone of eternal enlightment. "மூலத்தில் தோன்றி முடிவில் இருநான்காகிக் கால்வெளியில் பன்னிரண் டாம் காண்". (ஔவைக்குறள்.41)

*[கால்+வெளி]*

**காலமுறை ஊதியம்** *kālamuṟai ūdiyam*, பெ.(n.) ஏரண முறைச் சம்பளம், நிலைப்புச் சம்பளம்; time scale of pay, permanant salary.

மறுவ. ஏறுபடிச்சம்பளம்.

*[காலம்+முறை+ஊதியம்]*

**காலாடி** *kālāḍi*, பெ.(n.) போக்கிரி, அடங்கா தவன்;a rogue.

*[கால்+ஆடி= காலாடி – கண்டபடி திரிபவன்]*

**காலுந் தலையும் அறி–தல்** *kālum talaiyumaṟi-*, செ. குன்றாவி.(v.t.)அனைத்தையும் அறியும் பாங்கு; method of knowing every thing.

*[காலும்+தலை+அறி]*

**காவற்கூடம்** *kāvaṟkūḍam*, பெ.(n) காத்து நிற்கும் அறை; watch house.

*[காவல்+ கூடம்]*

**காவிடு–தல்** *kāviḍu-*, செ.குன்றாவி. (v.t.) விலங்குகளைச் சிறு தெய்வங்களுக்குப் பலியிடுதல்;to kill the animals for demi-gods, for divine purpose.

மறுவ. ஊட்டு தருதல்.

*[காவு (உணவு) +இடு]*

**காழ்** *kāḻ*, பெ.(n.) பணம் என்பதின் எட்டில் ஒரு பங்கு மதிப்புடைய பழங்காலக்காசு; an ancient coin 1/8th value of panam otherwise known as cinnam. (கல்வெ.).

*[காய்–காழ்]*

**கிட்டுபடி** *kiṭṭupaḍi*, பெ.(n.)ஆதாயம் (லாபம்); profit.

<u>தெ.</u> கிட்டுபடி.

மறுவ ஆதாயம், ஆகு.

*[கிட்டு+படி–கிட்டுபடி. முதலீட்டுக்குமேல் அதிகமாகக் கிட்டிய(கிடைத்த) தொகையான ஆதாயம் (லாபம்)]*

இச்சொல்லே நாளடைவில் கட்டுபடி எனத் திரிந்து விட்டது.

**கிடைவரை** *kiḍai-varai*, பெ.(n.) உலகப் படத்தில் நிலநடுக்கோட்டின்இருபாலுமுள்ள வரை கற்பனைக் கோடு;latitude.

*[கிடை+வரை]*

**கிண்ணாக்கு** *kiṇṇākku*,பெ.(n.) வண்ணக் குழிப்புப் பாட்டில் (சந்தப்பாட்டு) உரையசை போன்று இன்னோசைக்காகச் சேர்க்கப்படும் குறிப்புச் சொல்;an empty morph added at the end of a stanza in songs of folklore. "பாடும் குயிலுக்கு – போடு கிண்ணாக்கு – பவள மணி மாலைகளாம் – போடு கிண்ணாக்கு."

*[கிண் – கிண்ணாக்கு (ஒலிக் குறிப்பு]*

**கிணைப் பறை** *kiṇai-p-paṟai*, பெ.(n.) ஒருவகைத் தோற் கருவி (உறுமி); a kind of drum.

*[கிணை+பறை]*

பண்டைய நாளில் நெல்வயலில் உழும் போதும் அறுவடை செய்யும் போதும் கிணைப் பறை கொட்டப் பட்டது.



**கிள்ளி** *kiḷḷi*, பெ.(n.) சோழரின் குடிப்பெயர்; name of a clan among royal chola king dynasty.

*[கிள்–முளைத்தல், தோன்றுதல் +இ – கிள்ளி (தோன்றல், பெரியோன்.)]*

**கிள்ளி நடு–தல்** *kiḷḷinaḍu-*, செ. குன்றாவி.(v.t.) நாற்றை அளவு பார்த்துச் சிறுகப்பிரித்து நடுதல்;to transplant with a calculation.

*[கிள்ளி+நடு]*

**கிளிக்கால்** *kiḷi-k-kāl*, பெ.(n.) கிளிகால் போல் செதுக்கிய பீடத்தின் கால்; a mould resembling a parrot leg engraving.

*[கிளி+கால்]*

**கிளிப்பிள்ளைப்பாடம்** *kiḷippiḷḷai-p-pāḍam*, பெ.(n.) கிளிப்பிள்ளை போல சொன்னதையே சொல்லுவது; ready made speech out of compultion.

*[கிளி+பிள்ளை+பாடம்]*

**கிளியாந்தட்டு** *kiḷiyāntaṭṭu*, பெ.(n.) சிறுவர் விளையாட்டு;a children's game.

*[கிள்ளி–கிளி+அம்+தட்டு]*

**கீச்சான்** *kiccāṉ*,பெ.(n.)அடைப்புக் குரலில் பேசுபவன்; one speaks in shrill voice.

*[கீச்சு–கீச்சான்]*

**கீர்சுப்பல்** *kircuppal*,பெ.(n.)கைத்தறிநெசவில் பயன்படுததும் சிறு கம்பி;a small string used in handloom weaving.

*[கீள்–கீர்+சுப்பல் (சுப்பல்+காந்த சிறு குச்சி)]*

**கீரக்காய்** *keerakkāy*- பெ.(n.) வெள்ளரிக்காய்; cucumber.

*[கீர்–கீர+காய்]*

**கீரந்தை** *kirandai*,பெ.(n.) ஒரு புலவர் பெயர்;name of a Tamil poet.

**து. கீர் (பழமையான).**

*[கீழ்–கீர்(பழமை,தொன்மை)–கீரன்+அந்தை (ஐயன்)கீரந்தை]*

**குக்குலம்** *kukkulam*, பெ.(n.) சிறு இனப் பிரிவு;tribe.

*[குறு+குலம்]*

**குக்கை** *kukkai*, பெ.(n.) மாடு விளைநிலத்தில் மேயாமலிருக்க வாய்க்குப்போடும் முச்சாணி; a rope - cover fixed on the mouth of the cow to prevent it from grasing in the fields of crop.

**மறுவ. வாய்க்கூடு**

*[குக்கி–குக்கை]*

**குச்சிக்கால்** *kucci-k-kāl*, பெ.(n.) தூலத்தின் மீது கூரையைத்தாங்குவதற்காக செங்குத் தாகப் பொருத்தப்பட்ட மரக்கால்; a supporting pole fixed on the wooden beam under the roof of thatched or tuked house.

மறுவ. குத்துக்கால்

*[குத்து–குச்சு–குச்சி+கால்]*

**குஞ்சம்** *kuñjam*,பெ.(n.)கைத்தறி நெசவில் பயன்படுத்தும் சிலுப்பையில் ஏழில் ஒரு பகுதி;one seventh of ciluppai, as used in handloom weaving.

*[குள்–குஞ்சு–குஞ்சம்]*

**குட்டுவன்** *kuṭṭuvaṉ*, பெ.(n.) சேர மன்னரின் குடிப்பெயர்; name of the clan among the kings of chera dynasty.

[கட்டு–குட்டம் (திரள், அவை)–குட்டு+அன்–குட்டுவன்]

**குடங்கை** *kuṇḍangai*,பெ.(n.) ஒரு கையளவு; handful of measure.

*[குடம்+குடங்கை (வளைந்த கை)]*

**குடம்பு** *kuḍambu-*, பெ.(n.) உடம்பு;body.

மறுவ. குடம்பை

*[குடம்– குடம்பு]*

குடம், குடம்பு கூட்டின் பெயர்கள். உடல் கூடு போற் கருதப்பட்டது.

**குடவாளி** *kuḍavāḷi*, பெ.(n.) நீர் இறைக்க உதவும் மட்குடம்; a pot used to draw water from the well.

*[குடம்+வாளி]*

கடவாளி என்பது கொச்சை வழக்கு.

**குடாப்பு** *kuḍāppu*, பெ.(n.)1.மிகக்குறுகலான பகுதி; narrow place. 2.மா,வாழை போன்ற வற்றின் காய்களைப் பழுக்க வைக்கும் இடம்;a place enrising fruit. 3. ஆட்டுக் குட்டிகளை அடைத்து வைக்கும் பனை நாரினால் செய்த சிறு குடில்;a semiglobal weed on litar basket used to shelter the lambs.

*[குடை–குடாப்பு]*

**குடி–த்தல்** *kuḍi-*, செ.குன்றாவி.(v.t.) உண்ணு தல்;to eat. சோறு குடித்தாயா. (கொங்.வ.)

சிந்தி. குந்தன்.

*[குள்–குடு–குடி]*

குடித்தல்–கஞ்சி குடித்தல். நீரில் அல்லது மோரில் கரைத்துக் குடிக்கும் உணவு கஞ்சி வடிவில் இருத்தலின் குடித்தல் உண்ணுதல் பொருள் பெற்றது.

**குடிமைப்பணி** *kuḍimai-p-paṇi*, பெ.(n.) படைத்துறை நீங்கலாக அரசுப் பணியாளர்; civil service.

*[குடிமை+பணி]*

**குடிப்பொருள்** *kuḍi-p-poruḷ*, பெ.(n.) 1. ஒரு குடும்பத்தின் அல்லது கொடிவழியின் வரலாற்றுத் தொடர்பான பெருமை; honesty and dignity belonging to ancestry of clam or royal family. "குடிப்பொருள் அன்று நும் செய்கை" (புறம். 45). 2. நாட்டு நலன், பொது நலன்; public interest welfare of the society. "குடி செய்வல்" (குறள்).

*[குடி+பொருள்]*

**குடியேறிகள்** *kuḍi-y-ēṟigaḷ*,பெ.(n.) பிழைப் பிற்காக ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டில் குடியேறியவர்கள்;emigrant. தமிழர் குடியேறி களல்லர்; இந்தத் தமிழ் மண்ணின் மைந்தர்கள்.

*[குடி+ஏறி+கள்]*

**குடிவாணர்** *kuḍivāṇar*, பெ.(n.)குடிமக்கள்; citizen.

மறுவ. குடிமக்கள்.

*[குடி+வா(வாழ்கா்)வாணர்]*

**குடுக்கு–தல்** *kuḍukku-*,செ.குன்றாவி.(v.t.) 1.வலையிட்டுப் பிடித்தல்;to catch, throwing net.2.சுருக்குக் கயிறிட்டுப் பிடித்தல்; to catch by noose.3.குழியில் வீழ்த்திப் பிடித்தல்;to by making to fall in a pit. 4.குகை வாயிலை அடைத்துப் பிடித்தல்; to catch by closing the cave entrance.

*[குடங்கு–குடுங்கு–குடுக்கு–தல்–குடுக்கு (வலை)]*

**குடும்புகட்டு–தல்** *kudumbu-kaṭṭu-*, செ.குவி. (v.t.) தனிக் குச்சியாக இருக்கும் மரமுந்திரி போன்ற மரக் கன்றுகள் கிளைத்துத் தழைத்து அடர்த்தியாதல்; to grow thick as boughs.

*[குடு–குடும்பு+கட்டு]*

**குடுமான்** *kuḍumān*, பெ.(n.) தவசம் கொட்டி வைக்கும் சிறிய மட்பாண்டம்;small size storage earthen pot.

*[குடுவை–குடுமான்]*

**குண்டக்குமண்டக்கு** *kundakku mandakku*, பெ.(n.) தப்பு,தவறு,something wrong.எலே குண்டக்க மண்டக்க பேசாதே.(இ.வ.)

**மறுவ. ஏறுமாறு, எக்கு தப்பு, தாறுமாறு.**

*[குண்டு–குழி,பள்ளம், இடைஞ்சல்.குண்டக்கு மண்டக்கு –எதுகை மரபிணைச்சொல்]*

**குணக்குரல்** *kunakkural*,பெ.(n)கொன்னக்கோல் என்னும் தாளக்கட்டுக் குரலிசை, பண்ணின் அளவுகளைஅடிப்படையாகவைத்து பல் வகை யான அலகுகளை சித்தரித்து முழக்குவது; musical time measure through voice.

*[கணி–குணி–குணக்கு+குரல்]*

**குணத்தீவு** *kunattivu*, பெ.(n.) கீழ்த்திசைத் தீவு;an eastern island.

*[குணம் (கிழக்கு) + தீவு]*

**குத்தி** *kutti-*, பெ.(n.) தொண்டை;throat.

**மறுவ.குத்திகை.**

**க. குத்திகெ.**

*[குள்–குழி–குழித்தி–குத்தி]*

**குத்திரி** *kuttiri-*, பெ.(n.) சிறிய கட்டுமரம்;small size catamaran.(மீனவ.).

*[குள்–குட்டை–குத்து–குத்திரி]*

**குத்திருட்டு** *kuttiruttu*,பெ.(n.) அடர் இருட்டு;dense darkness.

**மறுவ. கும்மிருட்டு.**

*[குழுமு–கும்மு–குத்து+இருட்டு]*

**குத்துளி** *kuttuli*, பெ.(n.) களைவெட்டி, களை கொத்து; small hoe for weeding out grass.

*[குத்து+உளி]*

**குதிரை** *kudirai*, பெ.(n.) கைத்தறி நெசவில் பாவினைத் தாங்கிப்பிடிக்க உதவும் மூங்கில் கழி;a device in handloom weaving.

*[குதிர்– குதிரை (குதிர் போன்றது)]*

**குந்து**[1] *kundu*, பெ.(n.) கதவை அரிகாலுடன் இணைக்கும் இரும்புக்கருவி; iron accessary connecting door and the frame.

*[குள்–குந்து]*

**குந்து**[2] *kundu*, பெ.(n.) மாட்டுக்கு வரும் காய்ச்சல்; fever affecting cow.

*[குள்–குந்து]*

**குப்பம்** *kuppam*, பெ.(n.) முப்பது முடி நாற்றுக் கட்டு;paddy sapling of 30 number.

*[குப்பு– குப்பம்]*

**குப்பி** *kuppi*, பெ.(n.) எருதுகளின் கொம்பில் அணிவிக்கும் அணிகலன்; a metal flash worn cow's horn during the days of Pongal.

**மறுவ. கொம்பளிசு**

**கும்பிடுசேவை** *kumbidusēvai*,பெ.(n.)கோயிலில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்குதல்; to workship god by falling down flat on the ground.

*[கும்பிடு+சேவை]*



**குமை நாற்றம்** *kumai-nārram*, பெ.(n.) நீர் குறைவினால் சரியாக வேகாமலிருந்து தீய்ந்து போகும் பொங்கல் பானையிலிருந்து வீசும் புகை நாற்றம்; over boiled smell.

*[குமை+நாற்றம்]*

**குரல் கொடு–த்தல்** *kural-kodu-*, செ.கு.வி.(v.t)
1. மறு மொழி தரும் முறையில் குரல் எழுப்புதல்;

கூப்பிடுதல்; respond to a call; call. 2. எதிர்த்து கருத்துத் தெரிவித்தல்; raise one's voice (one's protest).3.(திரைப் படத்தில்) சொந்த குரலில் பேசவியலாத நடிகர்களுக்குப் பிறர் தம்குரல் தந்து பேசுதல்; (in films) dupe in (voice).

*[குரல்+கொடு]*

**குருவி பாய்-தல்** *kuruvipāy-*,செ.கு.வி.(v.t.) பனைமரத்தின் பாளைக்கு ஏற்படும் நோய்;a fungus disease in *palmyra.*

*[குருவி+பாய்]*

**குவளாளபுரம்** *kuvaḷāḷapuram,*பெ.(n.) பண்டைக் கொங்கு நாட்டைச் சேர்ந்த ஓர் ஊர்; a village of ancient *koṅgu* country.

*[குவளால(ம்)+புரம்]*

**குவளை** *kuvaḷai,* பெ.(n.) கோடி எனும் பேரெண்ணைக் குறித்த பழந்தமிழ்ச்சொல்; ancient Tamil word which meant the number one crore. "ஆயிரம் குவளை" (சுக்கிரநீதி.106) "நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்" (பரிபா.2:13).

(குவளை - மலரின் பெயர் கோடி எனும் எண்ணுக்கு ஆயிற்று. குவளை என்பது பூவிதழின் அடுக்குக் கருதியதாதலின் இதனை பண்பாகு பெயர் எனலாம்).

**குழந்தைச்செல்வம்** *kuḷandai-c-celvam,* பெ.(n.)இறைவனால் கொடுக்கப்பட்டதாகக் கருதப்படும் மழலைச் செல்வங்களாகிய குழந்தைகள்; offspring, children.

*[குழந்தை+செல்வம்]*

**குழந்தைப்பேறு** *kuḷandai-p-pēṟu,* பெ.(n.)பிள்ளை பெறும்பெரும்பேறு; fortune of begetting child.

*[குழந்தை+பேறு]*

**குழிவலை** *kuḻivalai,*பெ.(n.)கச்சல் எனும் குறுக்குக் கட்டைகளால் இணைக்கப்பட்டு நடு நடுவே குழிகள் அமைத்துக் கட்டப்பட்ட வலை; dipnet connected by splinters.

மறுவ.கச்சா வலை.

*[குழி+வலை.]*

கழிச்சல்–கச்சல்(கட்டை). குறுக்குக் கட்டையிடப்பட்டதால் கச்சா வலை என்றும் கூறுவர்.

**குழவி வளர்ப்பொலி** *kuḻavivaḷarppoli,* பெ.(n.) குழந்தை வளர்ப்பில் இயல்பாக ஒலிக்கும் ஒலி; nursery sound.

*[குழவி+வளர்ப்பு+ஒலி.]*

**குளக்கோடன்** *kuḷa-k-kōḍan,* பெ.(n.) ஈழத்துத் திருக்கோணமலையில்கோயில் கட்டியவனாகவும் ஈழம் தனித்தீவாகப் பிரிவதற்கு முன்பு வாழ்ந்தவனாகவும் கூறப்படும் தமிழ் மன்னன்; A Tamil king considered to have built a temple at Thirukonamalai in Srilanka and lived before the deluge which separated Srilanka from Tamilnadu. "முன்னே குளக்கோடன் மூட்டு திருப் பணியை" (கல்வெட்டு வெண்பா).

*[குளம்+கோடன்]*

இவன் காலம் கலியாண்டு 512 (கி.மு.2590) எனக் குடந்தை ந. சேதுராமன் குறிப்பிடுகின்றார். (1994).

**குளுத்தி** *kuḷutti,* பெ.(n.) வளர்ப்பு விலங்குகள் நீர் பருகுவதற்காக மண்ணால் செய்யப்பட்ட வாய்விரிந்த வட்டத்தாழி; round earthen pot - made for the cattle to drink water.

மறுவ. குழித்தி

*[குழி–குழித்தி–குளுத்தி]*

**குற்றப் பத்திரிகை** *kuṟṟa-p-pattirikai,* பெ.(n.) புலனாய்வு முடிந்தவுடன்முறை(நீதி)மன்ற உசாவல் தொடங்குவதற்காக காவல் நிலைய அதிகாரியால் அனுப்பி வைக்கப்பெறும் குற்றம் பற்றிய தகவல்களடங்கிய அறிக்கை; charge sheet; police report.

*[குற்றம்+ பத்திரிகை]*

**குறட்டைப்பழம்** *kuraṭṭai-p-paḻam,* பெ.(n.) வேலிகளில் படரும் கொடியில் பழுக்கும் சிவந்த

நிற உண்ண முடியாத பழ வகை; unedible creeper fruit.

*[குறட்டை+பழம்]*

**குறிச்சி** *kuricci,* பெ.(n.) சிறு குடியிருப்பு; a hamlet.

க. குறிகெ (சிற்றூர்) குறசி –சிறுமரக்காடு.

*[குறு–குறிச்சி]*

**குறிப்பொலி** *kuri-poli,* பெ.(n.) வழக்கப்படி சில கருத்துகளைப் பிறர்க்குத் தெரிவிக்கும் வகையில் அமைந்த குறிப்பு ஒலி; symbolic sound.

*[குறிப்பு+ஒலி]*

**குறிமொந்தை** *kurimondai,* பெ.(n.) நெற்குவியல் மீது அடையாளம் இடப் பயன் படுத்தும் சாணிப் பால் நிறைந்த துளை மொந்தை.(தஞ்.வ.); symbol marking earthen pot.

*[குறி+மொந்தை]*

**குறியெழுத்து** *kuri-y-eluttu,* பெ.(n.) ஓம்$^3$ பார்க்க; see *ōm.* "கூடகமான குறியெ முத்தைத் தமிழ்றியில் வீடக மாகும் விரைந்து" (ஔவைக் குறள்.136)

*[குறி+எழுத்து]*

**குறுக்க விளக்கம்** *kurukka vilakkam,* பெ.(n.) ஒரு செயல் அல்லது தொடரின் குறுக்க வடிவம், சுருக்கக் குறியீடு;abbreviation.

*[குறுக்கு(ம்) +விளக்கம்]*

**குறும்பொறை** *kurumporai,* பெ.(n.) முல்லை நிலத் தலைவன்; a chieftain of hilly forest area.குறும் பொறை நாடன்.

*[குறும்+பொறை (கற்குன்று)]*

**கூட்டாளி** *kūttāli,* பெ.(n.) செயலில் ஒருவருக்குத் துணையாக ஈடுபடுபவர்; associate; companion. 2. கூட்டுத்தொழிலை நடத்து பவருள் ஒருவர்; partner.

*[கூட்டு+( ஆள்)→ஆளி]*

**கூட்டுத் தொடரியம்** *kūttuttodariyam,* பெ.(n.) ஒன்றுக்கு மேற்பட்ட தொடரியம் (வாக்கியம்) கொண்ட கூட்டுத் தொடர்;compound sentence.

*[கூட்டு + தொடரியம்]*

**கூவோ** *kūvō,* பெ.(n.) தன்னைப் பின் தொடர அல்லது மாடு மேய்ப்போர் மாலையில் மாட்டுப் பட்டிக்குத் திரும்புவதற்காக மாடுகளைத் திரும்புமாறு செய்வதற்கு எழுப்பும் நீள் ஒலி; a long sound with the world *kūvō* to alert the cattle to return from grazing in the evening or instruct the cattle to follow him.

*[கூ–கூவோ(ஒலிக்குறிப்பு)]*

**கூனிவலை** *kūnivalai,* பெ.(n.)மிகச் சிறிய மீன் களைப் பிடிக்க உதவும் வலை;fish net catching small tiny fish.

*[கூனி(மிகச்சிறிய மீன்)+வலை]*

**கெச்சங் கெட்டு** *keccankettu,* வி.எ.(adv.) மானமில்லாமல், சூடு சொரணை கெட்டுப் போய்; bereft of dignity and honour.

*[கெச்சம்+கெட்டு]*

**கெச்சம்** *keccam,* பெ.(n.)1. சலங்கை;tiny bells attached to or used as ornaments.
2. வெட்கம்;shyness.

*[குகல்–கெச்சு–கெச்சம்]*

**கெட்டிக் காப்பு** *kettikkāppu,* பெ.(n.) பெண்கள் கால்களில் அணியும் அணிகலன் வகை.anklet.

*[கட்டி+கெட்டி+காப்பு]*



**கெடாக்காரன்** *kedākkāran,* பெ.(n.) எமன்; god of death.

*[கடாக்காரன்→கெடாக்காரன்.பே.வ.]*

**கெடாவடி** *kedāvadi,* பெ.(n.) பிணையடித்தலில் மாடுகள் சுற்றிவரும் வைக்கோல் பரப்பு; hey stock on the threshing floor.

**மறுவ.பிணையடிப்புப் பகுதி.**

*[கடா+அடி→கெடா+அடி=கெடாவடி (பே.வ.)]*

**கெடுகட்டுவரிசை** *kedukattuvarisai,* பெ.(n.) பரிசம் வைத்தல், திருமண உறுதி செய்தல்; fixing the marriage by offering gifts.

*[கெடு+கட்டு+வரிசை]*

கசவர் பழங்குடிகளின் சொல்லாட்சி.

**கெடுத்தகேடு** *keduttakēdu,* பெ.(n.) ஒரு முறை இழப்பு ஏற்பட்டும் மீண்டும் முயலுமாறு ஒருவரை அறிவுறுத்துகை;to induce a person to continue without minding the lost.

*[கெடுத்த+கேடு]*

**கெடும்பு** *kedumbu,* பெ.(n.) சாலி நெல்லின் அரிசி;a variety of rice.

*[கெழு–கெடு–கெடும்பு]*

**கெண்டிக்கல்** *kendikkal,* பெ.(n.) சில்லுச் செங்கல், உடைந்த செங்கல்;broken brick.

*[கண்டி–கெண்டி+கல்]*

**கெண்டைக்கால்** *kendai-k-kāl,* பெ.(n.) முழங்காலுக்கும் பாதத்துக்கும் இடையிலி லுள்ள பகுதி; the portion between knee and foot.

*[கெண்டை+கால்]*

**கெந்துதல்** *kendutal,* தொ.பெ.(vbl.n.) கிட்டிப்புள் விளையாட்டு வகை;a type of game.

*[காந்து–கெந்து]*

**கெப்பம்** *kēppam,* பெ.(n.) நிறைவு, முழுமை; come to an end, completion.

**தெ. தெப்பக.**

*[தளும்பு–தம்பு–தெம்பு–தெப்பம்–கெப்பம்]*

**கெப்புறு** *keppuru,* பெ.(n.) குறும்பு, துடுக்குத் தனம்; mischief. உனக்குக் கெப்புறு அதிகம்.(மீனவ.)

*[கைப்பு+ஊறு–கைப்புறு–கெப்புறு (கை ஊறுதல்)]*

ஏதேனும் குறும்பு செய்வதற்காகக் கை தினவெடுக்கிறது என்பது குறிப்புமொழி.

**கெம்புதல்** *kempudal,* தொ.பெ.(vbl.n.) குதித்தல்; jumping.

*[கிளர்–கிம்பு–கெம்பு]*

**கெர்ப்பம்** *kerppam,* பெ.(n.) மரங்களில் நடுவில் காணப்படும் கடினமான சதைப்பகுதி, வைரம்; hard core in a bar.

*[கருப்பம்–கெர்ப்பம்]*

**கெரட்டிப்பு** *kerattippu-,* பெ.(n.) கோள் மறைப்புக் (கிரகணம்) காலங்களில் கருவுற்ற பெண்கள் பூவைக் கிள்ளுவதால் பிறக்கும் குழந்தைகள் உறுப்புக் குறைபாடாகப் பிறக்கும் என்னும் நம்பிக்கை; during eclipse period the pregnant ladies will be affected and give birth of physically handicapped child a belief.

*[கிரக+அடிப்பு]*

**கெரட்டிக்கு–தல்** *kerattikku-,* செ.குன்றாவி. (v.t.) கோள் மறைப்புக் (கிரகணம்) காலங்களில் கருவுற்ற பெண்கள் பூவைக் கிள்ளுவதால் பிறக்கும் குழந்தைகள் உறுப்புக் குறைபாடாகப் பிறக்கும் என நம்புதல்; to believe that during eclipse period the pregnant ladies will be affected and give birth of physically handicapped child.

*[குறை–குறட்டி–கெரட்டிக்கு]*

**கெராளிகொள்ளு–தல்** *kerālikollu-,* செ.கு.வி.(v.i.) மிரண்டோடுதல்; suddenly running with fear.

*[கிறங்கு–கிறளி–கெராளி+கொள்]*

**கெறாவுதல்** *kerāvu-*,தொ.பெ.(vbl.n.) புலம்புதல்; crying.

*[கிறாறு–கிறாவு–கெறாவு (கொ.வ.)]*

**கேட்பார் பேச்சு** *kētpārpēccu*, பெ.(n.)தீய எண்ணத்துடன் சொல்பவரின் பேச்சைக் கேட்கும் தன்மை; listening to enemy's speech.

*[கேள்–கேட்பார்+பேச்சு]*

**கேடுபாடாக** *kēḍupāḍāka*,*வி.எ.*(adv.);உயிர் பிழைக்கும் உறுதிப்பாடு இன்மை;a patient's serious condition.

**மறுவ. கடு நலிவு.**

*[கேடு+பாடு+ஆக]*

**கேழ்வரகு ஓடாப்பு** *keḷvaragu oḍāppu*, *பெ.* (n.); நன்கு அரைக்கப்படாத கேழ்வரகு மாவு; half grinded ragi cereal flour.

*[கேழ்வரகு+உடைப்பு]*

**கேழ்வரகு சுண்ணாம்பு** *kēḷvaragu šuṇṇāmbu*, *பெ.* (n.); கேழ்வரகு மணி நீங்கிய பின் கதிரின் சிறு துண்டுகள்;empty ear of ragi corn.

*[கேழ்வரகு + சுண்ணாம்பு]*

**கேழ்வரகுபுல்** *kēlvaragupul*, *பெ.* (n.) கேழ்வரகு போன்று விளையும் புல்வகை;a kind of grass.

*[கேழ்வரகு +புல்]*

**கேழ்வி** *kēḷvi*,*பெ.*(n.) வசைவு, திட்டு, abusing words, rebuke, scold.

*[கேள்வி–கேழ்வி (கொ.வ.)]*

**கைக் கட்டை** *kai-k-aṭṭai*,*பெ.*(n.)பணப்புழக்கம் முற்றிலும் இல்லாத நிலை; stage of no money for transaction.

*[கை+கட்டை]*

**கைக் கதிர்** *kaikkagdir*,*பெ.*(n.) கம்பு, கேழ்வரகு, சோளம் போன்றவற்றை அறுவடை செய்தவர் களுக்குக் கொடுக்கும் கூலிக் கதிர்; payment by ear of cereal to the harvester.

*[கை+கதிர்]*

**கைக் கொண்டை** *kaikkoṇḍai*,*பெ.*(n.)கை நிறைய கொடுத்தல்; handful of something.

*[கை+கொண்டை]*

**கைச் சொளகு** *kai-c-colagu*,சிறிய முறம்;small winnowing basket.

*[கை+சுளகு]*

**கைத்தாம்புலம்** *kaittāmbulam*,*பெ.*(n.) பெண் ஊறுதிக்காக இருவீட்டாரும் வெற்றிலை பாக்கு மாற்றிக் கொள்ளுதல்;agreement for marriage approved by exchange of betel.

*[கை+தாம்புலம்]*

**கைப் பரப்பு** *kai-p-parappu*,*பெ.*(n.)வேளாண் தொழிலில் ஒரு ஆள் வேலை செய்யும் நிலப் பரப்பு;a distance within the reach of two hands of a reaper.

*[கை+பரப்பு]*

**கைநீளல்** *kainīḷal*,*பெ.*(n.)கையால் அடித்தல்;beat with hand.2.கையூட்டு பெறுதல்; receiving bribe.

*[கை+நீளல்]*

**கைப் பாடை** *kaipppāḍai*,*பெ.*(n.)அழகுபடுத்தாத பாடை;non decorated bier.

*[கை+பாடை]*

**கைப்பு** *kaippu*,*பெ.*(n.)ஈயமில்லா ஏனத்தில் வைக்கப்பட்ட உணவின் சுவை; taste of food kept in a lead uncoated vessel.

*[கரிப்பு→கைப்பு]*

**கைப்புரட்டு** *kaippuraṭṭu*,*பெ.*(n.)கையெழுத்துப் போடத் தெரியாதவர்;illiterate person.

**மறுவ. கை நாட்டு**

*[கை+புரட்டு]*

**கைப்பொங்கல்** *kaippongal*, வி.எ. (adv.) தனக்கான உணவைத் தானே சமைத்துக் கொள்ளல்; cook food for one self.

*[கை+பொங்கல்]*

**கைதவம்** *kaitavam, பெ.*(n.)ஓரிடத்தில் வளரும் பொருள் மற்றொரு இடத்துக்குப் பொருந்திய பெயரைப் புனைந்து வருவது;unusual name.

*[கை+(தவல்)தவம்]*

**கைபதைக்க** *kaipadaikka, வி.எ.*(adv.)வேளாண் பணிகளை விரைவாகச் செய்தல்; do the agricultural work speedily.

*[கை+பதைக்க]*

**கை மேய்ச்சல்** *kaimēyccal, பெ.* (n.) ஆடு மாடுகளைக் கையில் பிடித்துக் கொண்டு மேய விடுதல்; grazing the cattles by holding the ropes in the hand.

*[கை+மேய்ச்சல்]*

**கையெடு–த்தல்** *kai-y-edu-,* செ.கு.வி.(v.i.)கை கூப்பி வணங்குதல்; to show obeyance by folding palms together. அவரைக் கண்டதும் கையெடுக்கத் தோன்றும்.

**மறுவ. வணங்குதல்**

*[கை+எடு]*

**கையெழுத்து மறைகிற நேரம்** *kaiyeḻuttu-maṟaigiranēram, பெ.*(n.)மாலைப்பொழுது; evening time.

*[கை+எழுத்து+மறைகிற+நேரம்]*

**கையேடு** *kaiyēḍu, பெ.*(n.) ஒன்றைச் செய்யும் அல்லது இயக்கும் முறை குறித்து விளக்கும் நூல், செய் முறைக் குறிப்பு நூல்; manual. தேர்தல் கையேட்டில் உள்ளபடி தேர்தல் பணியாற்ற வேண்டும்.

*[கை+ஏடு]*

**கைலாசம்காட்டுதல்** *kailāšamkāṭṭudal, தொ.பெ.* (vbl.n.) தற்பெருமை பேசித் திரிதல்; blow one's own trumpet, self boasting.

*[கைலாயம்+காட்டுதல்]*

**கைவணக்கம்** *kaivaṇakkam, பெ.* (n.) தொடர்ந்து ஒரு பொருளைப் பயன்படுத்துவதால் ஏற்படும் கைபக்குவம்;skillfullness of hand movement.

**மறுவ. கைப்பழக்கம்**

*[கை+வணக்கம்]*

**கொக்கரிக் கொம்பு** *kokari-k-kombu, பெ.* (n.) ஒன்று நேராகவும் மற்றொன்று வளைந்தும் இருக்கும் மாட்டுக் கொம்பு வகை; horn variety of cow.

*[கொக்கரை–கொம்பு]*

**கொக்கல்** *kokkal, பெ.*(n.) இருமல்;cough.

*[கக்கு–கொக்கு–கொக்கல்]*

**கொக்காரம்** *kokkāram, பெ.*(n.) ஓர் இசைக் கருவி; a musical instrument.

*[கொங்கு–கொக்கு–கொக்காரம்]*

காணிக்காரர் இசைக்கருவி.

**கொக்கான்** *kokkāṉ, பெ.*(n.) நாற்று நடவில் இருவர் நடும் அளவு; work of two persons in transplantation.

*[கொக்கு–கொக்கான்]*

**கொக்கான் அடி–த்தல்** *kokkānaḍi, செ.கு.வி.*(v.i.) நடவு நடுபவர்களுக்கு நடவேண்டி பகுதியைக் கால் தப்படியால் நடந்து அளவுகாட்டுதல்;to show the measurement of area to be transplanted in the paddy field.

*[கொக்கான்+ அடி]*

**கொக்கிப்பல்** *kokkipal, பெ.*(n.)மாடுகளுக்கு வளைந்து முளைத்திருக்கும் பற்கள்;bent growth of teeth in cows.

*[கொக்கி+பல்]*

**கொங்கடுக்கு** *koṅkaḍukku, பெ.*(n.) மாட்டு வண்டியில் பாரம் ஏற்றும் முறை;a method of loading the cart.

*[கொங்கு+அடுக்கு]*

**கொங்காணி** *koṅgāṇi, பெ.*(n.) சுவரில் சட்டையை மாட்டுவதற்குப் பொருத்தியிருக்கும் கொக்கி; coat hanger.

*[கொங்கு–ஆணி]*

**கொங்காணி விழு–தல்** *koṅgāṇi-viḻudal, தொ.பெ.*(vbl.n.) கிழிசல் துணியைத் தைப்பதால் ஏற்படும் சுருக்கம்;shrink seen in stitching of torn cloths.

*[கொங்கு+அணி+விழு]*

**கொங்கு புழுதி** *koṅgupuḻudi, பெ.*(n.)நன்றாக உழுத புன்செய் நில மண்;soil in the land made fertile without any lumps by ploughing.

*[கொங்கு+புழுதி]*

**கொங்கு** *koṅgu, பெ.*(n.) புடவையின் தலைப்பு; fore part of the saree.

**க.கொங்கு.**

*[குங்கு–கொங்கு]*

**கொங்கை அடி–த்தல்** *koṅgāiadi-, செ.குன்றாவி.* (v.t.) கம்பங்கதிரின் உமியைத் துடைப்பத்தால் தள்ளி எடுத்தல்; to remove the husk with broom stick.

*[கொங்கை+அடித்தல்]*

**கொசவேலை** *košavēlai, பெ.*(n.) பயனற்ற வேலை; useless work.

*[கயம்–கசம்(குப்பை)–கொச+வேலை]*

**கொசுறுதல்** *košuṟu-, செ.குன்றாவி.*(v.t.) மிச்ச மின்றி இலை தழைகளை அரிவாளால் அரிந்து எடுத்தல்; to cut off the leaves.

*[கொய்+உறு–கொயுறு–கொசுறு]*

**கொட்டடி** *koṭṭaḍi, பெ.*(n.)கும்மி;kummi, play of ladies.(மீனவ.)

*[கொட்டு+அடி]*

**கொட்டம்** *koṭṭam, பெ.*(n.)மாட்டுத்தொழுவம்;cow pen.

*[கொட்டகை–கொட்டம்]*

**கொட்டநுங்கு** *koṭṭanuṅgu, பெ.*(n.)கல் நுங்கு; hard nut palmyra fruit.

*[கொட்டை+நுங்கு]*

**கொட்டலாட்டம்** *koṭṭalā;ṭam, பெ.*(n.)அடிதடி; சண்டை;fight.

**தெ. கொட்டலாட்ட.** **க. கட்டலாட்ட.**

*[கொட்டல்+ஆட்டம்]*

**கொட்ட வாழை** *koṭṭavāḻai, பெ.*(n.)கல்வாழை வகை; a type of kalvalai plant.

*[கொட்டை+வாழை]*

**கொட்டாஞ்சி** *koṭṭāñji, பெ.*(n.)கொட்டாங்காச்சி (சிரட்டை)ப் போன்று கால் முட்டியில் இருக்கும் அசையக்கூடிய சில்லு எலும்பு; joint bone.

*[கொட்டங்கச்சி–கொட்டாஞ்சி]*

**கொட்டாப்புளி** *koṭṭāppuḷi, பெ.*(n.)உளியை அடிக்கும் மரச்சுத்தியல்;wooden hammer.

*[கொட்டு+ஆப்பு+உளி]*



**கொட்டாப்புளிக்குருவி** *koṭṭā-p-puḷi kuruvi, பெ.*(n.) கறையான் புற்றுகளைக் கொத்தி யுடைத்து அதில் உள்ள கறையான்களைக் கொத்தித்தின்னும் பறவை வகை;a kind of bird which pecks the ant- hill and eats the termite in nature.(கட.வ.).

*[கொட்டாப்புளி+குருவி]*

**கொட்டாப் பெட்டி** *koṭṭā-p-peṭṭi, பெ.*(n.)பனை நாரினால் முடையப்பட்ட (பெட்டி) கூடை:a small basket.

*[கொட்டாப்பு+பெட்டி]*



**கொட்டைத்தண்டு** *kottai-t-tandu,* பெ.(n.) ஆமணக்குச்செடி; castor plant. பட்டிக் காட்டுத் தம்பிரானுக்குக் கொட்டைத் தண்டு கருட கம்பம்.

**மறுவ. ஆமணக்கு**

*[கொட்டை+தண்டு]*

**கொட்டைமுடிச்சு** *kottai-mudiccu,* பெ.(n.) முடிச்சு வகை; a kind of knot.

*[கொட்டை+முடிச்சு]*

**கொடி ஆடு** *kodi-ādu,* பெ.(n.) மானைப் போல் உயரமாகவும் வெள்ளை கருப்பு நிறத்திலும் இருக்கும் ஆட்டு வகை; a kind of goat.

*[கொடி+ஆடு]*

**கொடி இண்டு** *kodi-yindu,* பெ.(n.) மரங்களின் மீது படர்ந்து ஏறக்கூடிய முட் கொடி வகை; a thorny shrub.

**மறுவ. இண்டங் கொடி.**

*[கொடி+இரண்டு]*

**கொடிக்கிழங்கு** *kotti-k-kilañgu,* பெ.(n.) ஏரிக் கரைகளில் காணப்படும். உண்ணக்கூடிய கிழங்கு; a kind of edible root.

*[கொடி+கிழங்கு]*

**கொடிமூக்கு** *kōdi-mūkku,* பெ.(n.) மூக்கின் நுனி; tip of the nose. "சோதி நயனங் கொடி மூக்கி லேயுறச் சீர்திகடச் சிங்கா தனமணக்கச் செய்யுமே" (திருமந்.540).

*[கொடி+மூக்கு]*

**கொடிக்காய்** *kodi-k-kāy,* பெ.(n.) நிலக் கடலையில் ஒரு வகை; a kind of ground-nut.

*[கொடி+காய்]*

**கொடித்தட்டு** *kodi-t-tattu,* பெ.(n.) சாணி, மண், எரு போன்றபவற்றை அள்ளுவதற்கு முரட்டுக் காட்டுக் கொடிகளால் பின்னப்பட்ட குழிவுள்ள தட்டு; flat type of basket made of rough creeper used to take dung and soil.

*[கொடி+தட்டு]*

**கொடிவேலி** *kodi-vēli,* பெ.(n.) செங்கொடி வேலி; a plant.

*[கொடி+வேலி]*

**கொடிவேலிப்பொடி** *kodi-vēli-p-podi,* பெ.(n.) கொடி வேலியுடன் மற்ற சரக்குகளுஞ் சேர்ந்த ஒரு வகைச் சூரணம்; a medicinal compound in which the lead wort forms in chief ingredient.

*[கொடி+வேலி+பொடி]*

**கொடியுளுந்து** *kodi-y-ulundu,* பெ.(n.) கொடியாகப் படர்ந்து கூடுதலாகப் பயன் கொடுக்கும் உளுந்து வகை; a creeper kind of black gram yielding more.

*[கொடி+உளுந்து]*

**கொடுக்காய்ப்புளி** *kodu-k-kāy-p-puli,* பெ.(n.) வித்தினைச் சரியாக வெண்பருப்புப் படலம் மூடாததும் அவரை போன்ற வித்திடைப் பள்ளம் கொண்டதும் வளைந்து கோணல் மாணலாகக் காணப்படுவதுமாகிய சீமைப் புளியங்காய்; a kind of tamarind tree.

*[கொடுக்கை+காய்ப்புளி]*

**கொடுக்கி** *kodukki,* பெ.(n.) 1. பொருளை உயரத்தில் இருந்து இழுக்க உதவும் கருவி; hooked knife attached to the bamboo. 2. கொடுமைக்காரி; shrew.

*[கொடு–கொடுக்க]*

**கொடுஞ்சாவு** *koduñcāvu,* பெ.(n.) நேர்ச்சி முதலியவற்றால் ஏற்படும் இறப்பு; untimely or unnatural death.

*[கொடு(மை)+சாவு]*

**கொடுகோல்** *kodunkōl,* பெ.(n.) பயிர் அறுவடைக்குரிய வளைந்த கருக்கரிவாள்; sickle used for harvesting.

**<u>க.</u> கொடுகோல், கடுகோல்.**

*[கொடு(வளைவு)+கோல்]*

**கொடுதி** *kodudi,* பெ.(n.) வழிபடும் தெய்வத்திற்குத் தரும் காணிக்கைப் பொருள், காணிக்கைத் தரும் விழா; a ceremony of making offerings to the village deity.

மறுவ.கொடை, பருவம், நன்மை.

*[கொடு–கொடுதி]*

**கொடும்பன்** *kodumban,* பெ.(n.) கொடுமை செய்யும் இயல்பினன் (அழிம்பன்); villain wicked person.

**கொடுமகப்பேறு** *kodu-maga-p-pēṟu,* *பெ.*(n.)இயற்கை நிலைக்கு மாறுபட்ட மகப்பேறு;labour differing from its natural state by its difficulty, duration or danger involved, preternatural labour.

*[கொடு+மகவு+பேறு]*

**கொடுவலை** *koḍuvalai,பெ.*(n.)பிடித்துக் கொண்டு வந்த மீன்களைப் பாதுகாத்து வைக்கும் வலை; a type of net used to keep the catched fishes in the net.

*[கொடு+வலை]*

**கொடுவா வலை** *kōḍuvā valai,பெ.*(n.)கொடு வாய் மீன்கள் பிடிப்பதற்காக அமைக்கப்பட்ட வலை;a special net to catch koduva fish.

*[கொடுவாய்– கொடுவா+வலை]*

**கொடைக்கல்** *koḍaikkal,பெ.*(n.)ஒருவன் செய்த அறச்செயல்பொறிக்கப்பட்ட கல்வெட்டு(இ.வ.); memorial slab inscribed with the charitable deeds of a person.

*[கொடை+கல்]*

**கொடையுள்ளம்** *kodaiuḷḷam,பெ.*(n.)அறம்புரியும் எண்ணம்; charitable or virtuous disposition.

*[கொடை+உள்ளம்]*

**கொண்டகோடி** *koṇḍakōḍi,பெ.*(n.)கோடி எனும் எண்ணை ஒன்றாகக் கொண்டு மிகப் பேரெண் களை எண்ணும் பழங்கால எண்ணு முறை; ancient Tamil mathematical method of counting multidigital numbers by taking one crore as a beginning number one.

*[கொண்ட+கோடி]*

**கொண்டம்** *konḍam,பெ.*(n.)கால்வாயின் குறுக்குத் தடுப்பு;middle check in the channel.

*[கெழள்–கொண்டம்]*

**கொண்டன்மார்** *koṇḍaṉmār,பெ.*(n.) எதிராளி களுடன் கைகோர்த்துச் செயல்படும் நம் பிக்கைக் கேடர்; a traitors.

*[கொண்டான்+மார்]*

இரு இடத்திலும் நம்பிக்கை கொண்டவர் போல் நடிப்பவர்.

**கொண்டி** *koṇḍi,பெ.*(n.)சிறைச்சாலை;prison, jail.அவனை கொண்டியில் அடைத்துவிட் டார்கள்.(இ.வ.)

*[கொள்+கொண்டி]*

**கொண்டித்தாழ்ப்பாள்** *koṇḍit-taḷppāl,பெ.*(n.) கதவுப் பலகையின் துளையில் சட்டத்திலுள்ள வளையம் நுழையுமாறு அமைக்கப்பட்டு அதில் கொக்கி போன்ற தாழ்ப்பாள் நுழையுமாறு அமைந்த கொக்கித் தாழ்ப்பாள்; hooked lever fixed on the door to shut by hook pattern.

*[கொண்டி+தாழ்ப்பாள்]*

**கொண்டி மகளிர்** *kondi-magalir,பெ.*(n.)பகை நாட்டில் சிறைப்பிடித்து வரப்பட்ட மகளிர்; captured women of defeated country.

*[ கொள்–கொண்டி–மகளிர்]*

**கொண்டிமுளை** *koṇḍi-muḷai,பெ.*(n.)கதவு நிலைகளில் தொடர் வளையத்தால் மாட்டுமாறு பொருத்தப் பட்டிருக்கும் வளை அமைப்பு; iron chain fixed between door and frame to lock. கொண்டி முளையை இழுத்து மாட்டி பூட்டுபோடு.(இ.வ.)

*[கொண்டி+முளை]*

**கொண்டுவலை** *koṇḍuvalai,பெ.*(n.)இருபுறமும் கைப்பிடியுள்ள மீன்பிடி வலை; double hold net.

*[கொண்டு+வலை. பிடித்த மீனொடு வலையை இழுத்து வருவதற்கானபிடியுள்ள வலை.]*

**கொண்டைக்கோடரி** *koṇḍai-k-kōḍari,* *பெ.*(n.)அடிப்பகுதி கனத்திருக்கும் விறகு பிளக்குங் கோடரி; a heavy axe.

*[கொண்டை+கோடரி]*



**கொண்டைக்காரி** *koṇḍai-k-kāri,* *பெ.*(n.) பணக் காரி; a wealthy woman. அவள் பெரிய கொண்டைக்காரி (மீனவ.).

**மறுவ. தொப்பைக்காரி**

*[கொண்டை+காரி]*

**கொணட்டை** *konaṭṭai,* *பெ.*(n.)குறும்பு; வம்பு; mischief.

*[கொணக்கு–கொணட்டை.]*

**கொத்தான்** *kottāṉ,* *பெ.*(n.)நண்டு போல் மணலைத் துளைக்கும் வண்டு; a type of beetle like crab.

*[கொத்து+ஆன்.]*

**கொத்துக்கட்டை** *kottu-k-kaṭṭai,* *பெ.* (n.)மேலே வைத்து நறுக்கப் பயன்படுத்தும் மரக்கட்டை; a wooden piece used to chap anything on it.

*[கொத்து+கட்டை.]*

**கொத்து** *kottu,* *பெ.*(n.) நெசவு நெய்த புதிய துணி; new cloths of handloom. கொத்து வெளுக்கத் தந்திருக்கிறார்கள்.(இ.வ.)

*[கொல்–(புதுமை)–கொத்து–புதியது]*

**கொத்துவான்** *kottuvāṉ,* *பெ.*(n.) களைவெட்டி; களைக்கொத்து(கொங்.வ.); hoe.

*[கொத்து+வ்+ஆன்+கொத்துவான்]*

**கொதவளை** *kodavaḷai,* *பெ.*(n.)குரல்வளை; throat.

*[குரல்வளை→கொதவளை(கொ.வ.)]*

**கொந்தாளம்** *kondāāḷam,* *பெ.*(n.)கடினமான மண்ணை வெட்டவுதவும் வேளாண் கருவி; a implement used to cut the hardened earth.

*[கொந்து+கொத்தாளம்]*

**கொந்துகோல்** *kondukōl,* *பெ.*(n.)அங்குசம்; elephant'sgoad. “கொந்துகோலும் வேதினமும்” (செ.செல்.56–2)]

*[கொந்து+கோல்]*

**கொப்பணி** *koppaṇi,* *பெ.*(n.)மகளிர் மேல் காதில் அணியும் சிறிய அணிகலன்; a small ornament worn on the upper ear by women.

*[கொப்பு+அணி]*

**கொப்பு** *koppu,* *பெ.*(n.) மரக்கிளை(நெ.வ); a branch of a tree. 2. மகளிர் காதணி; ear ornament.

*[குப்பு–கொப்பு]*

**கொப்பூழ்க்கொடியுறவு** *kōpūḻ-k-koḍi-y-uṟavu,* *பெ.*(n.) தாய், தந்தை, மகன், மகள் போன்ற கொடி வழி வுறவு முறை ; dynastical relationship.

*[தொப்புள் –கொப்புள்+கொடி+ உறவு]*

**கொம்பு நாற்று** *kombunāṟṟu,* *பெ.*(n.) ஊற வைத்த விதைநெல்லை இரண்டாம் நாள் அல்லது மூன்றாம் நாள் நாற்றுவிடுதல்;laying seed paddy in the field for sprouting on the second or third day of soaking it in water.

*[கொம்பு+நாற்று]*

விதை நெல்லை இரண்டாம் நாள் நாற்று விடுவதை இரண்டாம் கொம்பு எனவும் மூன்றாம் நாள் நாற்று விடுவதை மூன்றாம் கொம்பு எனவும் கூறுவர்.

**கொமடு** *komadu,பெ.*(n.)கன்னம்; cheek.

*[குவடு–குமடு–கொமடு(கொ.வ.)]*

**கொய்ப்பு** *koyppu,பெ.*(n.)காய் கனிகளின் முதிர் பருவம்; ripening stage.

*[கொய்+கொய்ப்பு]*

**கொருக்கல்** *korukkal,பெ.*(n.) நொறுக்குத்தீனி; snacks.

தெ. கொருக்கு.

*[கொறுக்கு–கொருக்கல்]*

**கொழப்பை** *kolappai,பெ.*(n.)1. ஊது குழல்; wind blow pipe. 2 . உள்ளீடு அற்ற குழல்;hallow pipe.

*[குள்–குழப்பை–கொழப்பை (கொ.வ.)]*



**கொள்ளிக் கொம்பு** *kolli-k-kombu,பெ.*(n.) மாட்டுக் கொம்பு வகை; a variety of bull's horn.

*[கொள்ளி+கொம்பு]*

**கொளிறு** *koliru,பெ.*(n.) கலவையை அள்ளிப் போடவும் பூசவும் கொத்து வேலைக்காரர்கள் பயன்படுத்தும் பட்டையான கரண்டி; a flat spade to take morter.

*[கொள்–கொளிறு]*

**கொளை** *kolai,பெ.*(n.)அழுக்கு; dirty.

கன். கொளே.

[குல்→குள்→ குளை→ கொளை]

**கொற்கை** *korkai,* பெ.(n.) பாண்டியர்களின் கடற்றுறைத் தலைநகரம்; capital city and seaport of the pandiya kingdom.

றுவ.கொல்லூர், கொன்னூர், கொத்தூதர்.

*[மகால்–புதிய. கொல்+கை–கொற்கை(புதூர்]*

கி.பி. 1100–1200 அளவில் அதிகமான கடல் சீற்றங்களால் மணல் மேடிட்டு கொற்கை துறை முகமும், நகரும் மறைந்தன. பிறகு **காயல்** துறைமுக மாயிற்று.

**கொன்னக்கோழி** *konna-k-koli,பெ.*(n.)நோய் கண்ட பயிரின் கோழை; a foam like formation on crop.

*[குன்னல்–கொன்னல்+(கோழை) கோழி]*

**கோக்கு மாக்கு** *kōkkumākku,பெ.*(n.)தவறான செயல்; something wrong. அதில் ஏதோ கோக்கு மாக்கு நடந்திருக்கிறது.(நெல்.வ.)

மறுவ.தப்பு தவறு. தப்பு தண்டா.

*[குடக்கு மடக்கு – கோக்கு மாக்கு (குடக்கு– கோணல் மடக்கு– கோணல்)]*

**கோங்கு இலவு** *kōngu-ilavu,பெ.*(n.)நேராகவும் உயரமாகவும் வளரும் ஒரு வகைச் செடி; a type of plant growing straight and tall.

*[கோங்கு–+இலவு]*

**கோசர்** *kōsar,பெ.*(n.)1.கடைக்கழகக் காலத்தில் வாழ்ந்த குறுநில மன்னர் மரபினர்; Chieftains of sangam period. வாய்மொழிக் கோசர் போல வன்கண் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே. 2. மலை வாழ் மக்கள் மரபினர்; a group of hill tribes.

*[கோ–கோயர்– கோசர்]*

கோசர் வாழ்ந்த நிலம் கோசலம் எனவும் கூறுவர்.

**கோட்டுஅடி–த்தல்** *kōttuadi-,பெ.*(n.) கதிரில் உள்ள நெல்லை அடித்துப் பிரித்தல்; threshing of paddy.

*[கோட்டு+அடி]*

**கோட்டுவாய்** *kōttuvāy,பெ.*(n.)உறங்கும் போது எச்சில் வழிந்து காய்ந்த வெண்கோட்டுக்

கறை; saliva stain due to dripping from mouth during sleeping time.

*[கோடு+ வாய் (இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை யாதலின் ஒற்று இரட்டித்தது)]*

**கோட்டைக்கல்** *kōttai-k-kal, பெ.*(n.)புதைகுழியின் மேல் வைக்கும் கல்; a memory stone erected on the burial pit.

*[கோட்டை-கல்]*

கசவர் பழங்குடிகளின் சொல்லாட்சி.

**கோடல்** *kōdal, பெ.*(n.)மருமகள்; daughter in law.

**தெ. கோடாலு.**

*[கொளல் - கோடல்* (பிறர் வீட்டிலிருந்து கொள்ளப்பட்ட பெண்).*]*

**கோடா முடிச்சு** *kōdā mudiccu, பெ.* (n.) இறுக்க மான கயிற்று முடிச்சு; very strong knot wigth a rope.

*[கோடா (அசையாத, நெகிழாத)+ முடிச்சு.]*

**கோடன்** *kōdaln பெ.*(n.)ஒருவகைக் களைச் செடி; a kind of weed.

*[கோடு-கோடான்]*

**கோடி** *kōḍi, பெ.*(n.)1. நூறு நூறாயிரம் (இலட்சம்) கொண்ட பேரெண்; one crore. 2. பத்து நெய்தல் (பத்து இலட்சம்) கொண்ட பேரெண்; one crore consisting 10 million.

**பாலி. கோடி Skt. kōṭi E. Crore Hin. carode.**

*[குவளை-குவடி-கோடி]*

தமிழிலிருந்து கி.மு.800 அளவில் திரிந்த திரிபு. பாலி மொழி வாயிலாக ஏனைய மொழிகளில் ஊடாட்டம் பெற்றது.

**கோடிக்காய்** *kōḍi-k-kāy, பெ.*(n.)மரத்தில் முதன் முதலில் காய்த்த காய்;the first fruit of the tree. கோடிக்காய் காய்த்திருக்கிறது.(இ.வ.).

**ம. கோடிக்காய்.**

*[கோடி (புதிய)+ காய்.]*

**கோடை** *kōḍai, பெ.*(n.)விலங்குகளுக்கு கொம்பு முளைக்கும் பருவம்; horn growing stage among animals. 2. இளமைப் பருவம்;teen age. அவனை நான் கோடையில் பார்த்த நினைவு இருக்கிறது.(கொங்.வ.).

*[கோடு(கொம்பு)-கோடை]*

**கோடைப்பட்டம்** *kōḍali-p-paṭṭam, பெ.*(n.)மேழ (சித்திரை) மாதப் பயிரிடும் பருவம்; seeding season during summer month, April.

*[கோடை+பட்டம்]*

**கோணமானி** *kōṇamāṇi,* பெ.(n.) கோணங் களை அளக்கப் பயன்படுத்தும் கருவி; an instrument for measuring angles, especially to check your position at sea or to look at stars, quadrant.

*[கோண(ம்)+மானி]*

**கோது** *kōdu,* பெ.(n.) 1. கரும்புச் சக்கை; pressed wasste of sugarcane. 2. இடி யாப்பம் (சந்திக்கனி); boiled rice noodle. 3. மென்சக்கை கொண்ட கோதுமைத் தினை; wheat.

*[கோல்-கோலு-கோது]*

**கோயர்** *kōyar, பெ.*(n.) 1.மலை நிலைத் தலைவர்; head of hill tribe.2. அரசக் கிளை மரபினர்; a branch of a royal family.

**மறுவ.கோசர், கோமன்,கோமர்.**

**ம.கோயர்– கோய்கள் (அரசர்).**

*[கோ+அர்-கோசர்-கோயர்.]*

**கோராலி** *kōrāli,* பெ.(n.) குதிரைவாலி எனும் புன்செய் தவசம்; a millet. "ஐம்பது மூட்டை கோராலி விளைந்தது (கொங்.வ.).

*[குதிரைவாலி-கோராலி]*

**கோரு-தல்** *kōru-, செ.குன்றாவி.* (v.t.) காதால் கேள்; to hear. நீ கோர்தியா (நீ கேட்கிறாயா.) (முகவை.வ.)

*[கேள் – கேர்-கோர் –கோரு.(தொ.வ.]*

**கோலப்பெட்டி** *kōla-p-peṭṭi*, பெ.(n.)மான், கிளி, போன்ற உருவங்கள் பின்னப்பட்ட பனை யோலைப் பெட்டி; inscribed deer, parrot like figures on box made of palmyra tree's leaves.

*[கோலம்+(அழகு,ஓவியம்)+பெட்டி]*

**கோவல்** *kōval*, பெ.(n.)மாட்டுமந்தை; a cow pen.

*[கோ–கோவு(மாடு)+அல்–கோவல். கோவல்– மாட்டுமந்தை]*

**கோவலன்** *kōvalan*, பெ.(n.)மாட்டுமந்தைகளை யுடைய செல்வன்; a wealthy person who has a number cowpen.

*[கோ–கோவு–கோவல்+அன். கோவல்( மாட்டு மந்தை).]*

கோவலன் எனும் தமிழ்ச் சொல்லும் கோவாள் (கோ+பால–மாடுவளர்ப்பவன், மேய்க்கும் பணி யாளர்) என்னும் வடதமிழ்ச் சொல்லும் வேறானவை.

**கோவலூர்** *kōvalūr*, பெ.(n.)மலையமான் திருமுடிக்காரியின் தலைநகர்; the capital city of Tamil king malayaman *Tirumuḍikāri*. கோவலூரர் நூறி.(புறம்).

*[கோவல்+(மாட்டுமந்தை)+ஊர்.]*

**கோவலை** *kōvalai*, பெ.(n.)நீளத்திலும் அகலத்திலும் பெரிய வலை; a net big in size.

*[கோ–(பெரிய)+வலை.]*

**கோவன்** *kōvan*, பெ.(n.)1. மலை வாழ்நன்; one who dwells on one hilltop.2. அரச குடும்பத்தைச் சார்ந்தவன்;one who belongs to royal family. 3. ஓர் இயற்பெயர்; a proper name. 4.மாட்டுக் காரன்; owner of cows.

**மறுவ.கோமான்.**

*[கோ+அன்– கோவன்.]*

**கோவேறு கழுதை** *kōvēṟu kaḻudai*, பெ.(n.) சுமேரிய நாட்டு கலப்பினக் கழுதை; a cross breed donkey of Sumeria.

*[கோ(அரசன்)+ஏறு+கழுதை.]*

கழுதைக்கும் குதிரைக்கும் பிறந்த கலப்பினக் கழுதை. குதிரை வலிமையும் கழுதையின் பொறு மையும் கொண்டது. கருவுறாது. குட்டி போடாது. ஆண் கழுதைக்கும் பெண் குதிரைக்கும் பிறந்தது. mule என்றும் ஆண் குதிரைக்கும் பெண் கழு தைக்கும் பிறந்தது. Hinny எனவும் அழைக்கப்படும்.



**கோள்குத்தி** *kōḷkutti*, பெ.(n.) புறங்கூறி கலகம் விளைப்பவன்; one who creates mischief by slanderous reports, a tale bearer.

**மறுவ.கோள்மூட்டி, கோள்காரன்.**

*[கோள்+குத்தி.]*

**கோள்குத்து–தல்** *kōḷkuttu-*, செ.கு.வி. (v.i.) 1. புறந் தூற்றுதல்; to tell tales.2. கோட்டை களில் இருவருக்குள் கலகம் விளைவித்தல்;to create mischief by slanderous reports.

*[கோள்+குத்து–,]*

**கோள்பற்று** *kōlpaṟṟu*, பெ.(n.) நிலவு, கதிரவன் ஆகியவற்றுக்கு நேர்க்கோட்டு நிழலடியாகிய மறைப்பு (கிரகணம்); Eclipse of sun and moon.

*[கோள்+பற்று]*

இராகு கேது எனும் நிழல் கோள்கள் நிலவையும் கதிரவனையும் கவ்வுவதாகக் கருதப்பட்ட நிழல் மறைப்பு கிரகணம் எனப்பட்டது.

**கோளுறுவினைப்பயன்** *kōḷuṟu vinaippayan*, பெ.(n.)கோளைப் பொறுத்த ஊழ்வினைப் பயன்(த.சா.); the fate of man as depending on the position of planets (சா.அக.).

*[கோள்+உறு+வினை+பயன்]*

# ச

**சக்கப்பற்று** *cakkaparru* பெ.(n.) கல்குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk.

*[சக்கை+பற்று]*

**சக்கரப்பிள்ளை** *cakkara-p-pillai,* பெ.(n.) அச்சுக்கும் கொரங்காட்டிக்கும் நடுவில் உள்ள சக்கரம்;a wheel in loom.

*[சக்கரம்+பிள்ளை]*

**சக்கரக்கையன்** *cakkara-k-kaiyan,* பெ. (n.) திருமால்; God Tirumal "சக்கரக் கையன் தடங்கண்ணால் மலர விழித்து" (பெரி. 1:4:4)

*[சக்கர(ம்)+கையன்]*

**சக்கந்தி** *cakkandi,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[சக்கை+கந்தி]*

**சக்கரம்** *cakkaram,* பெ.(n.) தட்டாங்கல் ஆட்டத்தில் ஐந்து கற்கள் சேர்ந்தது; five stones in *tattāngal play.*

**சக்கு** *cakku,*பெ.(n.)தோலாற் கைவினைப் பொருள்கள் செய்யப்பயன்படும் ஒரு கருவி; an implement used to make leather artefact.

*[சக்கை–சக்கு]*

**சக்குடி** *cakkudi,*பெ.(n.) மதுரை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurai Taluk.

*[செக்கு+சக்கு+குடி]*

**சகடக்கை** *cagadakkai,* பெ. (n.) ஒரு வகையான இரட்டைக்கை;double hand pose in dance.

*[சகடம்+கை]*

**சகடை**[1] *cagadai,* பெ.(n.) வண்டி போன்ற பீடம்; a seat designed as wheel.

*[கசடு+கசட்டை]*

**சகடை**[2] *cagadai,* பெ. (n.) மந்தமான போக்கு சுறுசுறுப்பின்மை; dullness stupidity.

*[சகடு–சகடை]*

**சகாட்டுத் தறி** *cagāttu-t-tari,* பெ. (n.) சேலை முழுவதும் பட்டுச் சரிகையால் நெய்ய உதவும் பெரிய தறி வகை; a big loom.

*[சகாட்டு+ தறி]*

**சகாடுப்பெட்டி** *cagādu-p-petti,* பெ.(n.) தறியின் மேல் பாகத்தில் அமைக்கப்பட்டிருக்கும் கருவி;an implement used in loom.

*[சகாடு+பெட்டி]*

**சகுடு** *cagudu,* பெ. (n.) ஆழ்துளைக் கிணற்றில் நீரோட்டத்தின் மேல் படிவாகப் படிந்திருக்கும் நொய் மணல்; fine sand layer before water level in borewell.

*[சகுள்–சகுடு]*

**சங்ககிரி** *cankagiri,* பெ. (n.) திருச்செங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengode Taluk.

*[சங்கரன்+Skt. கிரி]*

**சங்கடை** *cangadai,* பெ.(n.) குழந்தைகளுக்குப் பால் ஊட்டும் கிண்ணம்; a vessel for supplying liquid food to an infant.

*[சங்கு+அடை]*



**சங்கநிதி** *caṅga-nidi,* பெ. (n.) சோழர்காலக் கோயில்களில் காணப்படும் புடைப்புச் சிற்பம்; embossing sculpture of a hoḻa period temples.

*[சங்கம்+நிதி]*

**சங்கிலித் தொடுகை** *caṅgili-t-tōḍugai,* பெ. (n.) கைகளைக் கோர்த்து விளையாடல்; a play of children.

*[சங்கிலி+தொடுகை]*

**சங்கிலி முளை** *caṅgili-muḷai,* பெ. (n.) மூக்கணைப் பாரினைச் சங்கிலியோடு இணைக்கும் இரும்புக் கருவி; an implement in loom.

*[சங்கிலி+முளை]*

**சங்கைசங்கையாக** *cangai-cangai-y-āga,* வி.எ. (adv.) இழிவாக; fowl usage of words. சங்கை சங்கையாகத் திட்டினான்;

*[சங்கை+சங்கை+ஆக]*

**சச்சை** *caccai,* பெ. (n.) சந்தனம்; sandal *"குங்குமச் சச்சை கமழும் தடந்தோளும்"* (ஒட் t:350)

*[சுள் > சள் > சள்சை > சச்சை]*

**சஞ்சரிகம்** *cañjarigam,* பெ. (n.) வண்டு; bee "சஞ்சரிக நறுமலர்த்தார்த் தனஞ்சயன்" (வி.பா.7:36)

*[சல் > சல்சு > சஞ்சு = பறவை மூக்கு சஞ்சு > சஞ்சரி = கூரிய கொடுக்கினையுடைய வண்டு]*

**சடங்கு** *caḍaṅgu,* பெ. (n.) வில்லுப்பாட்டு மரபில் காணப்பெறும் ஒருநிகழ்வு;a feature.

**சட்டமாடு** *caṭṭamāḍu,* பெ. (n.)இரண்டு மூன்று நிறங்கள் கலந்திருக்கும் மாடு;a cow of mixed colour appearance.

*[சட்டம் +மாடு]*

**சட்டத்தறி** *caṭṭa-t-tari,* பெ. (n.) தரைக்கு மேலே உயரத்தில் இயங்கக் கூடிய தறி வகை;a loom fixed above the ground level.

*[சட்டம்+தறி]*

**சட்டிமேளம்** *caṭṭimēlam,* பெ. (n.) தப்பாட்டத்தில் பயன்படுத்தப்படும் இசைக் கருவி; a musical instrument.

*[சட்டி+மேளம்]*

**சட்டு** *caṭṭu,* பெ. (n.) கிணறு வெட்டும்போது நீர் இருப்பதை உறுதி செய்யும் மண்; the soil which indicates watering in digging well.

*[செட்டு–சட்டு]*

**சட்டைத்தாள்** *šaṭṭai-t-tāḷ,* பெ. (n.) தெருக் கூத்தில் பங்கேற்கும் ஆடவர் அணியும் அணி கலன்; a male ornament in terukkūttu.

*[சட்டை+தாள்]*

**சடஞ்சு** *šadañju,* பெ. (n.) சோர்வு, களைப்பு; weariness, longuor.

*[சடைவு–சடஞ்சு]*

**சடஞ்சுபோ–தல்** *šadanjū-pō-,* பெ. (n.) களைப் படைதல்; tiredness.

*[சடைந்து–சடஞ்சு+போ–,]*

**சடவு** *caḍavu,* பெ. (n.) சலிப்பு; weariness, longuor. (கொ.வ.வ.சொ. 69.).

*[சடைவு–சடவு]*

**சடயிவிளை** *caḍayiviḷai,* பெ.(n.) கல்குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk.

*[சடையன்+விளை]*

**சடைகட்டி** *caḍaikaṭṭi,* பெ.(n.) திருக் கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[சடை+கட்டி]*

**சடையநோடை** *caḍaiyanōḍai,* பெ.(n.) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvannamalai Taluk.

*[சடையன்+ஓடை]*

**சண்டி** *caṇḍi,* பெ.(n.) சல்லிக்கட்டு எனும் வீர விளையாட்டில் மாட்டின் கொம்பில் சுற்றப் பட்டிருக்கும் துணி; the cloth tied around the horn of the bull in salli-k-kattu.

*[செண்டு–சண்டி]*

**சண்டிசாட்சி** *candisāṭci,* பெ.(n.) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Senji Taluk.

*[சண்டியன்+சாட்சி]*

**சண்டைக்கும்மி** *šaṇḍai-k-kummi,* பெ.(n.) ஆடவர்களால் ஆடப்பெறும் கும்மியாட்டம்; dance with lapping of hands to time and singing by men.

*[சண்டை+கும்மி]*

**சண்டைசத்தம்** *caṇṇdai-šattam,* பெ. (n.) வாய்ப்பூசல்; rashness in speech.

*[சள் > சண்டு > சண்டை = சச்சரவு வ.வ.பக். 136.]*

**சணவேலி** *canavēli,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvadanai Taluk.

*[சணல்+வேலி]*

**சத்தக்கட்டை** *catta-k-kaṭṭai,* பெ. (n.) தப்பாட்டத்தில் பயன்படுத்தப்படும் இசைக் கருவி; a musical instrument.

*[சத்தம்+கட்டை]*

**சத்தக்குழல்** *catta-k-kūḻal,* பெ. (n.) ஒரு நாட்டுப் புறக் காற்றிசைக்கருவி; a flute.

*[சத்தம்+குழல்]*

**சத்தரை** *cattarai,* பெ.(n.) திருவள்ளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvallur Taluk.

*[சித்தர்+வரை]*

**சதமுகை** *cadamugai,* பெ.(n.) கோபிசெட்டி பாளையம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Gopichettipalayam Taluk.

*[சதல்+முகை]*

**சதுப்பேரி** *caduppēri,* பெ. (n.) போளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in polur Taluk.

*[சதுப்பு+ஏரி]*

**சதுர்ப்புயம்** *cadur-p-puyam,* பெ. (n.) சிற்பங்களின் உறுப்புகளில் ஒன்று; feature in sculpture.

*[சதுர்+புயம்]*

**சதுரச்சில்லி** *cadura-c-cilli,* பெ. (n.) சதுரமான அரங்கு அமைத்து ஆடும் சில்லியாட்டம்; a game with small disc-like broken piece of stone where square lines are drawn.

*[சதுரம் + சில்லி + சில் – சில்லி = துண்டு]*

**சதுரமடங்கன்** *caduramaḍangan,* பெ. (n.) மேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Melur Taluk.

*[சதுரம்+அடங்கன்]*

**சந்தயடி** *candayaḍi,* பெ. (n.) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[சந்தை+அடி]*

**சந்திரம்** *candiram,* பெ. (n.) ஒரு இசைக்கருவி; a musical instrument.

*[சந்து–சந்திரம்]*

**சந்துக்கறி** *candu-k-kaṟi,* பெ. (n.) தொடைக் கறி; thigh flesh.

*[அந்து > சந்து=தொடைப் பொருத்து வ.வ.69.]*

**சந்துமலை** *candumalai,* பெ. (n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[சந்து+மலை]*

**சப்படைக்கல்** *cappattai-k-kal,* பெ. (n.) பட்டை வடிவிலான கல்; stone plank.

*[சப்பட்டை + கல் + சப்பை – சப்பட்டை]*

**சப்பல்** *cappal,* பெ. (n.) நீர் செல்லும் பாதையில் அடைத்துள்ள குப்பை; block due to wastage in a water course.

*[தப்பல்–சப்பல்]*

**சப்பை** *cappai,* பெ. (n.) தோற்றோரைக் குறிக்கும் சொல்; word in contempt used for defeeted person in a game.

*[சாய்ப்பு–சப்பை]*

**சப்பைக்கட்டு** *cappai-k-kaṭṭu,* பெ. (n.) உறுதி யில்லாத முடிச்சு; uncertain knot.

*[சப்பை+கட்டு]*

**சபரிப்பட்டு** *cabari-p-paṭṭu,* பெ. (n.) முறுக்கு இழையுள்ள பட்டு; twisted thread of silk.

*[செம்புரி+பட்டு]*

**சம்பக்குடி** *cambakkuḍi,* பெ. (n.) மதுரை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurai Taluk.

*[சம்பை+குடி]*

**சம்பங்கரை** *campankarai,* பெ. (n.) அகத் தீசுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[சம்பை+கரை]*

**சம்பானி** *cambāni,* பெ. (n.) குதிரை வீரர்; cavalry "இழம் அழிக்கை காரியம் ஆக சம்பானி வெயைமைத்த குதிரை மனித்தர்" (SII, vii, 778).

*[சம்பு–சம்பானி]*

**சம்புடம்** *cambuḍam,* பெ. (n.) ஒருவகை யான சிற்ப முத்திரை; a feature in sculpture.

*[சம்பு–சம்புடம்]*

**சம்பை**[1] *cambai,* பெ.(n.) திருவாடானை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Thiruvadanai Taluk.

*[செண்பை–சம்பை]*

**சம்பை**[2] *cambai,* பெ.(n.) இராமநாதபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ramanathapuram Taluk.

*[செண்பை–சம்பை]*

**சம்மந்தனூர்** *cammandaṉūr,* பெ.(n.) திரு வண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvannamalai Taluk.

**சம்முள்** *sammūl,* பெ.(n.) நெய்த ஆடையின் ஓரப்பகுதி; rear border of woven cloth.

*[சம்ம+முள்]*

**சமஞ்சிதன்** *camañjidan,* பெ. (n.) கணக் கன்; accountant "இப்பொழுது கழிகில் இரட்டி தண்டம் படுவது சமஞ்சி தனிச் செலவு கண்டு செலுத்துவிது" (TAS, ii,p 173-207).

*[சமை–சமஞ்சிதன்]*

**சமநகம்** *cama-nagam,* பெ. (n.) கால்கள் இரண்டையும் இணைத்துச் சமநிலையில் நேராக நின்று கைகள் இரண்டையும் பக்கங் களில் தொங்கவிட்ட வண்ணம் நிற்பது; a yogic pose.

*[சமன்+அகம்]*

**சமன்கை** *camaṉkai,* பெ. (n.) மத்தளம் முழக்குவதின் வகை; a mode of playing mathalam.

*[சமன்+கை]*

**சமன்மண்டிலம்** *šamaṉ-manḍilam,* பெ. (n.) மண்டில வகைகளில் ஒன்று; a pose in dance.

*[சமன்+மண்டிலம்]*

**சமுக்கம்** *camukkam,* பெ. (n.) சதுரம்; square.

*[சமம்–சமுக்கம்]*

**சயஞ்ஞை** *cayaññai,* பெ. (n.) கையெழுத்து; hand writing "ராஜ ராஜக் கங்கை நாடாள் வானும் சயஞ்ஞை யாதன்மைக்கும் இப்படிக்கு இவை" (SII, xvii, 541).

*[கை–செய்–சயஞ்ஞை]*

**சரஓலை** *cara-ōlai,* பெ. (n.) கிழிந்து தொங்கும் ஓலை; torn leaf.

*[சரம்+ஓலை]*

**சரணன்** *caranaṉ,* பெ. (n.) சிவகங்கை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[சரவணம்–சரணன்]*

**சரடு** *caraḍu,* பெ.(n.) பெண்கள் கழுத்தில் அணியும் பொன் தொடரி, உறுதியான பொன் சங்கிலி; a gold chain like ornament worn by women.

**மறுவ. தோடு, தொங்கட்டான்**

*[சரள்–சரடு]*

**சரபவடிவம்** *carabavaḍivam,* பெ. (n.) சிவனின் சிற்ப வடிவம்; a pose in Siva in sculpture.

*[சரபம்+வடிவம்]*

**சரல்** *caral,* பெ. (n.) அகத்தீசுவரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Agasthees-waram Taluk.

*[சாரல்—சரல்]*

**சரளிவரிசை** *caraḷi-vārisai,* பெ. (n.) பிடில் இசையின் ஒருகூறு; a mode of fiddle music.

*[சரளி+வரிசை]*

**சரிகைப்புட்டா** *carigai-p-pūṭṭā,*பெ.(n.) சரிகை யாலான புட்டா; a putta made by sarigai.

*[சரிகை+பட்டம்]*

**சரிகைநாடா** *carigai-nāḍā,*பெ.(n.) சரிகையை மட்டும் பயன்படுத்தப்பெறும் நாடா; cloth tape of sarigai.

*[சரிகை+நாடா]*

**சரிகையுருளை** *carigai-yuruḷai,*பெ.(n.) விளிம் பின் சரிகையைச் சுற்றுவதற்குப் பயன்படும் உருளை; an implement in loom.

*[சரிகை+உருளை]*

**சரிப்பாண்டி** *cari-p-pāṇḍi,* பெ.(n.) பல்லாங் குழியின் ஒரு வகை; a type of pallankuli game.

*[சரி+பாண்டி]*

**சரிவண்டு** *carivaṇḍu,* பெ.(n.) சிற்பநூல்கள் இயம்புகின்ற ஒரு கையணி; a hand ornament in sculpture.

*[சரி+வண்டு (வளையல்)]*

**சருகணி** *carugaṇi,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[சருகு+அணி]*

**சல்லிக்காடு** *calli-k-kāḍu,* பெ. (n.) சிறுசிறு கற்கள் நிறைந்த காடு; an area of small pebbles.

*[சில்லி—சல்லி+காடு]*

**சல்லி** *calli,* பெ. (n.) சல்லிகை, கூத்தில் பயன் படுத்தப்படும் இசைக்கருவி; a musical instrument used calligai dance.

*[சல்—சல்லி]*

**சல்லிகை** *callikai,* பெ. (n.) சல்லென்ற ஓசையை எழுப்பும் இசைக்கருவி; a musical instru-ment.

மறுவ. சல்லி

*[சல்—சல்லிகை]*

**சலங்கைப்பூரான்** *calaṅgai-p-pūraṉ,* பெ. (n.) செம்மஞ்சள் நிறத்தில் இடையிடை கருமை நிறம் கொண்ட பெரிய வகை பூரான்; கடித்தால் சிலருக்கு மாரடைப்பு ஏற்படும்; yellowish red and balck intermediate large in size. Bitting this make clothing the blood to human.

*[சலங்கை+பூரான்]*

**சலமூலை** *cala-mūlai* பெ. (n.) வடகிழக்குப் பகுதி; north east.

*[சலம்+மூலை]*

**சலரி** *calari,* பெ. (n.) அருணகிரிநாதர் குறிப் பிடுகின்ற ஓர் இசைக்கருவி; a musical instrument mentioned by Arunagiri nādar.

*[சல்லரி—சலரி]*

**சலவாதி**[1] *calavādi,* பெ.(n.) திண்டிவனம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[செலவு+ஆளி—செலவாளி—சலவாதி (கொ.வ.)]*

குறிப்பிட்ட குடியினத்தார் வேற்றூரிலுள்ள உறவினர்க்குச் செய்தி சொல்லியனுப்புவதற்காக மரபுவழி அமர்த்தப்பட்ட அப்பொழுதைக்கான பயணப் பணியாளர். அப்பணியாளர் பெயரில் அமைந்த ஊர்.

**சலவாதி**[2] *calavādi,* பெ.(n.) காலைக்கடன் கழித்தல்; to answer the call of nature.

*[சலம்+ஆதி]*

**சலா** *calā,* பெ. (n.) பழங்காலத்திற்கு முன் நீர்க் கடவுளாகக் கருதப்பட்ட நாட்டுபுறத் தெய்வம்; an ancient folk deity which represents water.

*[ஒருகா. சாலி–சாலா]*

**சலுச்சுப்போடு–தல்** *calu-c-cupōḍū-,* செ. குன்றாவி. (v.t.) புடைத்துப்போடு–தல்; to winnow.

*[சலுச்சுப்+போடு–,]*

**சலையனூர்** *calayanūr,* பெ.(n.) திருப்பெரும் பூதூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sriperumbudur Taluk.

*[சிலையன்–சலையன்+ஊர்]*

**சவண்டு** *cavaṇḍu,* பெ. (n.) 1. வாடுதல்; dryness. 2. நைந்து போதல்; to be crushed.

*[சவள்–சவண்டு]*

**சவடை** *calvaḍai,* பெ. (n.) புளிய முத்துகளில் பெரிய முத்து (அஞ்சுப்பூட்டு) விளையாட்டு; a big tamarind seed play.

*[சவடு–சவடை]*

**சவம்** *cavam,* பெ.(n.) சிற்பியர் வடிவமைக்கும் தோள் அணிகளில் ஒன்று; a feature in sculpture.

*[சாவம்–சவம்]*

**சவலபட்டி** *cavalapaṭṭi,* பெ.(n.) பெரியகுளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Periyakulam Taluk.

*[செவலை–சவல+பட்டி]*

**சவளம்** *cavaḷam,* பெ. (n.) ஈட்டி; spear, lance.

*[சாவளம்–சவளம்]*

**சவறு** *cavaṟu,* பெ. (n.) குற்றம்; blemish, fault. *"சவறது ஆதலைத் தேற்றுவன்"* (நீல. 5:116)

*[சவடு >சவறு]*

**சவுக்குவீச்சு** *cavukku-viccu,* பெ.(n.) ஒரு வகையான நாட்டுப்புறக் கலை; folk dance.

*[சவுக்கு+வீச்சு]*

**சவைக்கடமை** *cavaikaḍamai,* பெ. (n.) சிற்றூர் அவை வரி; tax for the managing committee of village assembly. *ஒன்றுக்குப் பத்தாகக் குடுப்பது சவைக்கடமை கடலார் பக்கல் மூன்று..."*

*[அவை–சபை–சவை+கடமை]*

**சள்ளவாய்** *caḷḷavāi,* பெ. (n.) தூங்கும் போது ஓரத்தில் நீர் வடியும் வாய்; saliva stains.

*[சொள்ளு+வாய்]*

**சள்ளைக்குச்சி** *caḷḷai-k-kucci,* பெ. (n.) கொக்கி கட்டிய தழை ஒடிக்கப்பயன்படும் நீண்ட குச்சி; a hook stick.

*[சள்ளை+குச்சி]*

**சளம்ப** *caḷamba,* வி.எ. (adv.) நிறைய, ததும்ப; complete, consummate. *"புண்ணுக்குச் சளம்ப எண்ணெய் போடு"*

*[சலும்பு–சலும்ப–சளம்ப]*

**சளுக்கை** *caḷukkai,* பெ.(n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wandiwash Taluk.

*[செழுகை–சலுக்கை]*

**சறுக்கடைவு** *šarukkaadiv,* பெ. (n.) காலின் முன்பகுதியைச் சரிந்து தேய்த்துச் செல்லுதல்; a step in dancing.

*[சறுக்கு–அடைவு]*

**சறுக்கலடைவு** *caṟukkalaḍaivu,* பெ. (n.) பரதநாட்டியத்தில் மூன்று முறையில் கடைப் பிடிக்கப்படும் அடைவு வகை (14:245); a step in dancing.

*[சறுக்கல்+அடைவு]*

**சறுவாணி** *caṟuvāṇi,* பெ. (n.) பிராமணர்க்குக் கொடுக்கும் ஒரு வகைக் கொடை; inam given to Bramins. *"கோவிலில் அம்பலம் கண்டு தோறும் கெட்டி மேவிப்பானும் அம்பலத்தில் சறுவாணிக்கும்"* (TAS. vi.35)

*[சிறுவாணி–சறுவாணி]*

**சன்னக்கட்டை** *caṇṇāk-kaṭṭai,* பெ.(n.) தேர் செல்லும் பொழுது நிறுத்தப் பயன்படும் கட்டை;

block used as break to temple cart, block used as break.

மறுவ. முட்டுக்கட்டை

*[சன்னம்+கட்டை]*

**சன்னக்கோரை** *cannā-k-korai*, பெ.(n.) அளவில் பெரிதாக உள்ள கோரை; a weed of bigger size.

*[சன்னம்+கோரை]*

**சன்னதிவயல்** *cannādivayal*, பெ.(n.) அறந் தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[சன்னிதி+வயல்]*

**சன்னமுறுக்கு** *canna-murukku*, பெ.(n.) கற் றாழை நாரைப் பாய்பின்ன முறுக்குதல்; twisting the fibre of aleo.

*[சன்னம்+முறுக்கு]*

**சன்னவனம்** *cannāvanam*, பெ.(n.) திருப் பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[சன்ன(ம்)+வனம்]*

**சாக்கியப்பள்ளி** *cākkiya-p-palli*, பெ. (n.) புத்தர் கோயில்; temple of Buddha. *"குழலூர்ச் சாக்கியப் பள்ளி எல்லைக் கரையே கிழக்கு"* (TAS. 1958-59.P.84)

*[சாக்கியன்+பள்ளி]*

**சாக்கைவயல்** *cākkaivayal*, பெ.(n.) திருப் பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[சாக்கையன்+வயல்]*

**சாங்கம்** *cāngam*, பெ.(n.) இறைவடிவச் சிற்பங் களின் உறுப்புகளிற் ஒன்று; a feature in sculpture.

*[சாரங்கம்–சாங்கம்]*

**சாங்கியம்**[1] *cāngiyam*, பெ.(n.) திருக்கோயி லூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[சாங்கு–சாங்கியம்]*

**சாங்கியம்**[2] *cāngiyam*, பெ.(n.) தோற்பாவை நிழற்கூத்துக் கலைஞர்கள் சடங்குகளைக் குறிக்கப் பயன்படுத்துகின்ற சொல்; a term used to mean ritual.

*[சழங்கு–சாங்கு–சாங்கியம்]*

**சாட்டியக்குடி** *cāttiyakkudi*, பெ.(n.) அறந் தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[சாட்டியம்+குடி]*

**சாட்டையடிசடங்கு** *cāttai-yadi-cadangu*, பெ. (n.) தீ மிதித்து வந்தோர் மண்டியிட்டுத் தலைக்கு மேல் கைகூப்பி நிற்க ஒருவர் சாட்டையால் கையில் ஓர் அடியடித்தல்; a ritual in temple festival.

*[சாட்டை+அடி]*

**சாடவம்** *cādavam*, பெ.(n.) ஒரு வகையான பண்; a musical note.

*[சாடு–சாடவம்]*

**சாடிக்காரகண்டன்** *cādikkārakandan*, பெ. (n.) பகைவரை ஒழிப்பவன்; one who destroys his foes. (சே.ம.செ.ப. 101).

*[சாடிக்காரன்+கண்டன்]*

**சாணக்கு** *śāṇakku*, பெ.(n.) அரைத்தட்டுப் போன்ற மண் சட்டி;a plate like pot.

*[சாளக்கு–சாணக்கு]*

**சாணித்தட்டு** *śāṇi-t-tattu*, பெ. (n.) மாட்டுச் சாணத்தை அள்ளப் பயன்படும் தட்டு; a basket used to take cow dug.

*[சாணி+தட்டு]*

**சாணிப்பூரான்** *cāṇi-p-pūran*, பெ. (n.) இளங்கருப்பு நிறத்துடன் எருக்குவியலிலும் சாணத்தின் கீழ் இருக்கும் பூரான்; certiped gray in colour mostly seen under the low - during.

*[சாணி+பூரான்]*

**சாணூர்** *cāṇūr,* பெ. (n.) பல்லவர் நாட்டுச் சிற்றூர்; a village in pallava territory. (புல். செ. 74.). *"காளத கோத்திரத்து ஆவத்தம்பச் சூத்திரத்து சாணூர் வத்தவன் கூள சர்மன்"*

*[சாண் + ஊர்]*

**சாத்தங்குடி** *cāttaṅkuḍi,* பெ. (n.) பல்லவர் நாட்டுச் சிற்றூர்; a village in pallava territory. (புல். செ. 74.). *"காசியப கோத்திரத்து சாத்தங்குடி கிழான் பங்கொன்று"*

*[சாத்தன் + குடி]*

**சாத்தமை** *cāttamai,* பெ.(n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurantakam Taluk.

*[சாத்து+ஆண்மை]*

**சாத்தனி**[1] *cāṭṭani,* பெ.(n.) பரமக்குடி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Paramakkudi Taluk.

*[சாத்து+அணி]*

**சாத்தனி**[2] *cāṭṭani,* பெ.(n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ssivaganga Taluk.

*[சாத்து+அணி]*

**சாதம்** *šāḍam,* பெ. (n.) வேகவைத்த அரிசி; cooked rice.

[சோறு → சோது → சாது → சாதம்]

ப்ரஸாத என்னும் முன்னொட்டுப் பெற்ற சொல் லன்றி ஸாத என்னும் தனிச்சொல் வடமொழி வழக்கி லில்லை. ஸாத மேலை யாரியமொழி யொன்றிலு மில்லாத வட நாட்டுச் சொல். தமிழில் மட்டும் சாதம் என சோறு குறித்து வழங்கி வருகின்றது.

**சாதாப்பட்டு** *šādā-p-paṭṭu,* பெ.(n.) நான்கு (அ) ஐந்து குறுக்கிழைகள் கொண்ட பட்டு; a type of silk.

*[சாதா+பட்டு]*

**சாதாமுந்தானை** *šādā-muṇḍāṇṇai,* பெ.(n.) வடிவம் இல்லாத முந்தானை; ordinary fore saree.

*[சாதா+முந்தானை]*

**சாதியடி** *cādiyaḍi,* பெ. (n.) 1/2 அங்குலம் கொண்ட ஒரு நீட்டலளவு; a kind of measurment.

*[சாதி+அடி]*

**சாப்டூர்** *cāptūr,* பெ.(n.) திருமங்கலம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tirumangalam Taluk.

*[ஒருகா. சாப்பாட்டு+ஊர்]*

**சாபர்த்தி** *cābārtti,* பெ.(n.) கிருட்டிணகிரி வட்டத் திலுள்ள வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Krishnagiri Taluk.

**சாம்பல்கலன்** *sāmbalkalaṇ,* பெ.(n.) சுருட்டு போன்றவற்றின் சாம்பலைத் தட்டும் சிறுவட்டில்; ashtray.

*[சாம்பல்+கலன்]*

**சாமக்கோடங்கி** *cāma-k-kōḍāṇgi,* பெ.(n.) நடு இரவில் வந்து குறி சொல்பவர்; midnight fore - teller.

*[யாமம்–சாமம்+கோடங்கி]*



**சாமகானம்** *cāmakānam,* பெ.(n.) பாடல் வகைகளிற் ஒன்று; a type of musical tune.

*[சாமம்+கானம்]*

தமிழ்ப்பண்களில், பாடப்பெறும் வேதப்பாடல்.

**சாமந்தவாடா** *cāmaṇthavāḍā,* பெ.(n.) திருத்தணி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[சாமந்தன்+பாடி]*

**சாமான்வண்டி** *cāmāmvaṇḍi,* பெ.(n.) முன்னவனின் இடுப்பினைக் கை கோர்த்துப் பிடித்துக் கொண்டு விளையாடல் (தொடர் வண்டி போல்); a children's play.

*[சாமான்+வண்டி]*

**சாமிகொண்டாடிகள்** *cāmi-kōṇḍāḍigaḷ,* பெ. (n.) கொடைவிழாவில் சாமியாடுவோரைக் குறிக்கும் சொல்; possessed priests of a temple.

*[சாமி+கொண்டு+ஆடிகள்]*

**சாய்ப்புத்தாளம்** *cāyppu-t-tāḷam,* பெ. (n.) பரதத்தில் பயன்படுத்தப்படும் தாள வகைகளிற் ஒன்று; a time measure.

*[சாய்ப்பு+தாளம்]*

**சாய்தட்டுத்தாள்** *cāytaṭṭu-t-tāḷ,* பெ. (n.) ஒரு வகையான ஆடல் இயக்கம்; a dance movement.

*[சாய்+தட்டு+தாள்]*

**சாய்திண்ணை** *cāy-tiṇṇai,* பெ. (n.) சாய்ந்து கொள்ள வசதியான ஒருபுறம் திட்டு வைத்துக் கட்டப்படும் திண்ணை; back seat pial.

*[சாய்+திண்ணை]*

**சாயப்பானை** *cāya-p-pāṉai,* பெ. (n.) கோரையின் சாயம் ஏற்றும் பானை; a pot for paint.

*[சாயம்+பானை]*

**சாயவேட்டி** *cāya-vēṭṭi,* பெ. (n.) சாய மேற்றிய ஆடை; colour added cloth.

*[சாயம்+வேட்டி]*

**சார்புக்கை** *cārbu-k-kai,* பெ. (n.) நடனமாடு கையில் உடலுறுப்புகள் நிகழ்த்தும் வினை; dance movement.

*[சார்பு+கை]*

**சார்மேடை** *cār-mēḍai,* பெ. (n.) வீட்டுக்கு முன் உள்ள திண்ணையில் சாய்ந்து உட்கார்ந்து கொள்ளும் வகையில் அமைக்கப்பட்ட சாய்வு வடிவத்திண்டு; seat provided-like masonry work against the wall on a pial, intended to learn on.

*[சார்+மேடை]*

**சார்வாய்** *šārvai,* பெ.(n.) ஆத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Attur Taluk.

*[சாரல்+வாய்]*

**சாரக்கயிறு** *šāra-k-kayiṟu,* பெ. (n.) சாரங் கட்டும் கயிறு; rope.

*[சாரம்+கயிறு]*

**சாரங்கெட்டவன்** *cāraṉkēṭṭavaṉ,* பெ. (n.) 1. பெண் நோக்கம் இல்லாதவன்; impotant geroon. 2. பயன் இல்லாதவன்; useless person.

*[சாரம்+கெட்டவன்]*

**சால்சாப்பு** *cāl-šappu,* பெ. (n.) சமாளித்தல், சரி செய்தல்; to adjust by tactics.

*[சால்+சாப்பு]*

**சால்நடவு** *cāl-naḍavu,* பெ. (n.) விதையை கையிலெடுத்து ஏருக்குப் பின் விதைத்தல்; planting method.

*[சால்+நடவு]*

**சால்பானை** *cālpāṉai,* பெ. (n.) பெரிய தண்ணீர் பானை; water pot.

*[சால்+பானை]*

**சாலக்கயிறு** *šāl-k-kayiru,* பெ. (n.) ஏற்றச் சாலுக்குப் போடும் கயிறு; rope.

*[சால்+கயிறு]*

**சாலச்சகோணம்** *cāla-c-cakōnam,* பெ.(n.) விளவங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilavancode Taluk.

*[சாலத்தன்+கோணம்]*

**சாலாணி** *cālāni,* பெ. (n.) நீர் நிறைத்து வைக்கும் பானையைத் தாங்கி நிற்கும் மரத்தாலான தாங்கி; wooden ring stand.

*[சால்+ஆணி]*

**சாலி** *cāli*, பெ. (n.) இசையில் நிறைவை உடையது எனப் பொருள் தருவது; a term used in music referring to satisfaction.

*[சால்–சாலி]*

**சாலிவாரம்** *cālivāram*, பெ. (n.) ஒசூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Hosur Taluk.

*[சாலி(நெல்)+வாரம்]*

**சாலிறைப்போன்** *cāliṟai-p-pōṉ*, பெ. (n.) ஏற்றத்தின் கீழே சாலைக் கவிழ்ப்போன்; a worker in piccotah irrigation.

*[சால்+இறைப்போன்]*

**சாலூர்** *cālūr*, பெ.(n.) செங்கற்பட்டு வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Chingleput Taluk.

*[சாலி+ஊர்]*

**சாவளம்** *cāvaḷam*, பெ. (n.) அறையிலிருந்து தண்ணீர் வெளியேறுமாறு சுவரின் கீழ்ப் பகுதியில் அமைக்கப்படும் துளை; the hole to outlet the water from the room.

*[துவளம்–தவளம்–சாவளம்]*

**சாவிநெல்** *cāvi-nel*, பெ. (n.) கருக்காய் நெல்; perish paddy. *"கல், பதர், செத்தல், சாவி நெல் நீக்கி"* (CHEN,xix,P. 206-208.)

*[சாவு–சாவி+நெல்]*

**சாவுக்கழிச்சல்** *cāvu-k-kaḻiccal*, பெ. (n.) இறப்புக்கு முன்னால் நோய்வாய்ப் பட்ட வர்க்கு ஏற்படும் மலக்கழிச்சல்; loose motion to the patient before the time of death. *"இறப்புக்கு முன் உடல் தளர்தலில் குடல் முழுவதும் உள்ள மலம் வெளியேறி விடும்"*

*[சாவு+கழிச்சல்]*

**சாவுக்குருவி** *cāvu-k-kuruvi*, பெ. (n.) தீச்செயல்கள் நிகழுதற்கு அறிகுறியான ஓசை உடையதென்று கருதப்படும் ஆந்தை வகை; screech - owl a species of Atheno whose cry is believed to portend death.



*[சாவு+குருவி]*

**சாவுப்பாட்டு** *šāvu-p-pāṭṭu*, பெ.(n.) ஒப்பாரி பாடலின் மற்றொரு பெயர்;a name of lamentation song.

*[சாவு+பாட்டு]*

**சாளி** *cāḷi*, பெ. (n.) திருப்பத்தூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tiruppathur Taluk.

*[சாளை–சாளி]*

**சானமாவு** *cānamāvu*, பெ. (n.) ஒசூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Hosur Taluk.

*[சானன்+(மா)மாவு]*

**சிக்கபாவிலி** *cikkapāvili*, பெ. (n.) தருமபுரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dharmapuri Taluk.

*[சின்ன–சிக்க+(வாவில்+இ)பாவிலி]*

**சிக்காடு** *cikkāu*, பெ.(n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[சீங்கை+காடு]*

**சிக்கி** *cikki*, பெ.(n.) குழந்தைகள் விளையாட்டு; a childrens game.

*[சிக்கு–சிக்கி]*

**சிங்கங்குன்றப்போழன்** *ciṅkaṅk-kuṉṟap-pōḻaṉ*, பெ. (n.) பாண்டிய நாட்டுச் சபையாரில் ஒருவர்; a person in the assembly of

pandya kingdom. *"ஓமாயனாடு கிழவ னாயின சிங்குன்றப் போழன் எழுத்து"*

*[சிங்கம் + குன்றம் + போழன்]*

**சிங்கவரம்** *cingavaram,* பெ.(n.) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Senji Taluk.

*[சிங்கன்+புரம்]*

**சிங்கனி** *cingani,* பெ.(n.) சிவகங்கை வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[சிங்கை+அணி]*

**சிங்காரக்கும்மி** *cingāra-k-kumi,* பெ.(n.) அண்ணாமலைக் கவிராயர் இயற்றிய கும்மிப் பாடல்; a kummi play written by Annamalai-k-kavirāyar.

*[சிங்காரம்+கும்மி]*

**சிங்கில்பாடி** *cingil-pāḍi,* பெ.(n.) திருப்பெரும் புதூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sriperumbudur Taluk.

*[சீங்கை–சிங்கில்பாடி]*

**சிங்கி** *cingi,* பெ.(n.) கச்சேரியில் தட்டும் ஒரே வகை இசைக்கருவி; a musical instrument.

*[சிங்–சிங்கி]*

**சிஞ்சுவாடி** *cinjuvāḍi,* பெ.(n.) பொள்ளாச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Pollachi Taluk.

*[செஞ்சு–சிஞ்சு+வாடி]*

**சிட்டவட்டி** *citta-vātti,* பெ. (n.) வாரம் தோறும் வட்டி பெறுவது; interest levied weekly.

*[சிட்டம்+வட்டி]*

**சிட்டிகை** *cittigai,* பெ. (n.) சிறிய திரிபோட்டு எரியும் விளக்கு; a lamp of small fire.

*[சிட்டி–சிட்டிகை]*

**சிட்டிலிங்கி** *cittilingi,* பெ.(n.) கரூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Harur Taluk.

*[சிற்றிலிங்கம் (மரம்) – சிட்டிலிங்கி]*

**சிட்டுலொட்டி** *cittulotti,* பெ.(n.) திருமங்கலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirumangalam Taluk.

*[சிற்றிலி+ஒட்டி]*

**சிண்டுமுடி–தல்** *cindumudidal,* பெ.(n.) பாய் நெசவு செய்த பின்னர் அதன் ஓரங்களைச் சீவி மடித்துக் கட்டுவது; folding and tying knot of the mat. 2. வேண்டாத இருவரைப் பற்றி புறங்கூறி சண்டையிட்டுக் கொள்ளும்படி செய்தல்; to set persons by ears.

*[சிண்டு+முடி]*

**சித்தமல்லி** *cittamalli,* பெ.(n.) மாயூரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Mayuram Taluk.

*[சிறு–சிற்று+மல்லி]*

**சித்தரேவு** *citta-rēvu,* பெ.(n.) திண்டுக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dindigul Taluk.

*[சித்தர்+துறவு]*

**சித்தாரம்** *cittāram,* பெ. (n.) அழகு; grace, beauty. *"சின்னச் சித்தாரம் போலக் குழந்தை"*

*[சித்திரம்–சித்தாரம்]*

**சித்தாவனம்** *cittāvanam,* பெ.(n.) அறந் தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[சித்தர்+வனம்]*

**சித்திரப்புதவு** *cittira-p-pudavu,* பெ. (n.) சித்தி ரங்களையுடைய வாயில்; a decirated door.

*[சித்திரம்+புதவு]*

**சித்தூர்மட்டம்** *cittūr-mattam,* பெ. (n.) தேரின் அடிப்பாகத்தை அடுத்துள்ள பகுதிகள்; lower parts of the temple car.

*[சிற்று+ஊர்மட்டம்]*

**சித்தோடு** *cittōdu,* பெ.(n.) ஈரோடு வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Erode Taluk.

*[சிறு+(தோடு)ஓடை]*

**சிதண்டி** *cidandi*,பெ.(n.) மதுராந்தகம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Madurantakam Taluk.

*[சிதள்+அண்டி]*

**சிதம்பு** *cidambu*, பெ. (n.) இழிவான செயல்; baseness. *"சிதம்புகள் செய்தாருண்டால்"* (IPS. 176)

*[சிதை > சிதைவு > சிதம்பு]*

**சிதறால்** *cida-ṟāl*,பெ.(n.) விளவங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilavancode Taluk.

*[சிதறல்–சிதறால்]*

**சிந்தாணி** *cindāṇi*, பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[சிந்தாமணி–சிந்தாணி]*

**சிப்பல்** *cippal*, பெ.(n.) கஞ்சி வடிக்க உதவும் மூங்கில் தட்டு; a bamboo plate used as a strainer.

**மறுவ. தட்டுக்கூடை, வடிதட்டு**

*[சிலுப்பு–சிப்பு–சிப்பல்]*

**சிப்பிக்கோடாலி** *cippi-k-kōḍāli*, பெ. (n.) இலை தழைகளை வெட்ட உதவும் கருவி; hook knife pole.

*[சிப்பி+கோடாலி]*

**சிம்பு** *cimbu*, பெ. (n.) பனங்கட்டையின் நரம்புத் தொகுதி; fibre of palmyral.

*[சில்–சிம்பு]*

**சிமிறுகை** *cimiṟugai*, பெ. (n.) மத்தளத்தை முடிக்கும் செயற்பாடுகளில் ஒன்று; ending phase of beating mattalam.

*[சிமிறு+கை]*

**சியாலம்** *ciyālam*,பெ.(n.) வந்தவாசி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Wandiwash Taluk.

*[சேய்+ஆலம்]*

**சிரங்காடு** *ciraṅkāḍu*, பெ.(n.) திண்டுக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dindigul Taluk.

*[சேரம்+காடு]*

**சிரப்பாறை** *cirappāṟai*, பெ.(n.) பெரியகுளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Periyakulam Taluk.

*[சிரா+பாறை]*

**சிருக்கு** *cirukku*,பெ.(n.) சிற்பக் கலையில் இறையின் தொழிற் கருவியாகச் சுட்டப் பெறுவது; a feature in sculpture.

*[சிறு–சிருக்கு]*

**சிருகுமி** *cirukumi*, பெ.(n.) திருத்தணி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[சிறு+குமிழ்]*

**சிருணமல்லி** *cirunamaḷḷi* பெ.(n.) அரக் கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arkonam Taluk.

*[சிருணம்+மல்லி]*

**சிருணை** *cirunai*, பெ.(n.) திருவள்ளூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tiruvallur Taluk.

*[சிருணம்–சிருணை]*

**சிருணியம்** *ciruniyam*, பெ.(n.) பொன்னேரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ponneri Taluk.

*[சிருணம்–சிருணியம்]*

**சிருவம்** *ciruvam*, பெ.(n.) சிற்பங்களில் காணப் பெறும் தொழிற்கருவி; a feature in sculpture.

*[கடு–கடும்பு]*

**சில்லான்** *cillān*, பெ. (n.) தெருக்கூத்தில் பயன் படுத்தப்படும் ஓர் இசைக் கருவி; a little musical instrument as thalā used in street play.

*[சில்–சில்லான்]*

**சில்லான்தட்டு–தல்** *cillantattu-*, செ.கு.வி. (v.t.) ஒருவரின் கருத்துக்கு ஒத்துப் போய்ப் பேசுதல்; co-operate to one another.

*[சில்லான்+தட்டு]*

**சில்லி** *cilli,* பெ.(n.) ஒடு அல்லது கல்லை வட்டம், சதுரம் வடிவங்களில் அமைத்து விளையாடு தல்; a children's play.

*[சில்–சில்லி]*

சில்லாக்கு, தெல்லாக்கு, எத்துமாங் கொட்டை, பாண்டி, ஒண்ணான் இரண்டான், வட்டு என்றும் அழைக்கப்படுகிறது.

**சில்லியம்புள்ளி** *cilliyam-pulli,* பெ.(n.) பெரிய குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Periyakulam Taluk.

*[சில்லியன்+பள்ளி]*

**சிலட்டூர்** *cilattūr,* பெ.(n.) அறந்தாங்கி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[சில்+ஊற்றூர்]*

**சிலம்பு** *cilambu,* பெ.(n.) பரத நாட்டியத்தைக் குறிக்கும் பெயர்; name of Bharata natya.

**சிலாத்தணி** *cilattani,* பெ.(n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[சிலாத்து+அணி]*

**சிலாவடிவம்** *cilā-vadivam,* பெ.(n.) முருகனின் சிற்ப வடிவங்களுள் ஒன்று; a feature in sculpture.

*[சிலை+வடிவம்]*

**சிலுப்புத்தண்ணீர்** *cilūppu-t-tānnir,* பெ.(n.) வயலில் தண்ணீர் பாய்ச்சுதல்; sprinkle irrigation.

மறுவ. எடுப்புத்தண்ணி

*[சிலுப்பு+தண்ணீர்]*

**சிலுப்பி** *ciluppi,* பெ. (n.) முதுகுளத்தூர் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[சிலம்பு–சிலுப்பி]*

**சிலுவாய்** *ciluvāi,* பெ. (n.) வாயின் ஓரம்; edge of mouth.

*[கீள்–சீள்–சிலுவாய்]*

**சிவ்வாடா** *civvāḍā,* பெ.(n.) திருத்தணி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Tiruttani Taluk.

*[செவ்வன்+பாடி]*

**சிவக்கம்** *civakkam,* பெ.(n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[செவக்கல்–சிவக்கம்]*

**சிவகிரி** *civagiri,* பெ.(n.) ஈரோடு வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Erode Taluk.

*[சிவன்+கிரி]*

**சிவபுராணி** *civa-purāni,* பெ.(n.) கும்ப கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kombakkonam Taluk.

*[சிவன்+புராணி]*

**சிவனம்** *ciyānam,* பெ.(n.) வந்தவாசி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Wandiwash Taluk.

*[சிவண்ண–சிவனம்]*

**சிவிகைப்புறம்** *civigai-p-puram,* பெ. (n.) கோயில் பல்லக்குச் செலவுக்கு விடப்பட்ட நிலம்; free land for the expense of temple palanquin. (தெ.கோ.சா. 3:2).

*[சிவிகை + புறம்]*

**சிவிலாதி** *civilādi,* பெ.(n.) பரமக்குடி வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Paramagudi Taluk.

*[செவலை+ஆதி]*

**சிமிழி** *cimili,* பெ.(n.) நன்னிலம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Nannilam Taluk.

*[குமிழ்–சிமிழ்–சிமிழி]*

**சியெட்டி** *ciyetti,* பெ. (n.) காஞ்சிபுரம் வட்டத் திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[தீ–சீ+எட்டி]*

**சிற்றுடுக்கை** *cirruḍukkai,* பெ.(n.) உடுக்கை வகையினுள் ஒன்று; musical instrument.

*[சிறு+உடுக்கை]*



**சிற்றுளம்** *cirrulam,* பெ. (n.) குறுகிய மனம்; stunted mind. *"சிற்றுள மிலேச்சர் பொல்லா நற்கதி நவையை நூக்கி"* (நரி. 33).

*[சிறு+உள்ளம்]*

**சிறுகளஞ்சி** *cirukkaḷanji,* பெ. (n.) ஈரோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Erode Taluk.

*[சிறு+காளஞ்சி]*

**சிறுகளம்பூர்** *cirukaḷambur,* பெ. (n.) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk.

*[சிறு+களம்பூர்]*

**சிறுகிணர்** *cirukiṇār,* பெ. (n.) தாராபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tharapuram Taluk.

*[சிறு+கிணறு]*

**சிறுபாகல்** *cirupāgal,* பெ. (n.) காஞ்சிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[சிறு+(வாயில்)பாகல்]*

**சிறுவத்தி** *ciruvatti,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvādānai Taluk.

*[சிறு+அத்தி]*

**சிறுவளி** *ciruvaḷi,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvadanai Taluk.

*[சிறு+வெளி]*

**சிறுவாடு** *ciruvāḍu,* பெ. (n.) கணவனுக்குத் தெரியாமல் மனைவி சேர்க்கும் பணம்; small savings of wife.

*[சிறு+(படு–பாடு)வாடு]*

**சிறுவிடாகம்** *ciruviḍāgam,* பெ. (n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in wallajah Taluk.

*[சிறு+விடாகம்]*

**சிறுவீடு** *ciru-vīḍu,* பெ. (n.) அப்பா அம்மா விளையாட்டு, சோறாக்கி விளையாடுதல் பொண்ணு மாப்பிள்ளை விளையாட்டு என்று அழைக்கப்படும் பெற்றோர் தம் வாழ்க்கையினைக் கவனித்தறிந்து ஆடும் விளையாட்டு; a children's play.

*[சிறு+வீடு]*

**சிறுவை** *ciruvai,* பெ. (n.) விழுப்புரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Villupuram Taluk.

*[சிறு+வயல்]*

**சிறுவாய்உளி** *ciru-vāy-uḷi,* பெ. (n.) துளை போடுவதற்குப் பயன்படும் அரை அங்குல அகலமுள்ள உளி; a small chisel.

*[சிறு+வாய்+உளி]*

**சிறுவிளையாட்டு** *ciru-viḷaiyāṭṭu,* பெ. (n.) கடற்கரையில் நண்டுகள் அடிக்கடி மறை தலைக் காண்பது; a children's play. *"செப்பேர் ஈரளை அலவற் பார்க்கும் சிறு விளையாடல்".*

*[சிறு+விளையாட்டு]*

**சிறுவேடல்** *ciruvēḍal,* பெ. (n.) காஞ்சிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[சிறு+ஏடல்]*

**சிறை** *ciṟai,* பெ. (n.) தோற்று நிரப்பப்படாத வெற்றுக் குழிக்குப் பெயர்; an empty pot.

*[செறு–சிறை]*

**சின்னப்பிள்ளையாண்டான்** *cinna-p-piḷḷai yāṇḍāṉ,* பெ. (n.) அரண்மனை ஊழியன்; palace employee. (தெ.கோ.சா. 3:2).

*[சின்னப்பிள்ளை + ஆண்டான்]*

**சின்னம்** *ciṉṉam,* பெ. (n.) நாட்டுப்புற இசைக் கருவியினுள் ஒன்று; a musical instrument.

*[சன்னம்+சின்னம்]*

**சின்னத்தாரை** *ciṉṉa-t-tārai,* பெ. (n.) ஒருவகையான இசைக்கருவி; a musical instrument.

*[சின்ன+தாரை]*

**சின்னதாளம்** *ciṉṉatāḷam,* பெ. (n.) குறத்தி யாட்டத்தில் இடம்பெறும் இசைக் கருவி; a musical instrument.

*[சின்ன+தாளம்]*

**சின்னிலுட்டை** *ciṉṉiluṭṭai,* பெ. (n.) திண் டுக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dindigul Taluk.

*[சின்ன–(இலுப்பை)இலுட்டை]*

**சின்னுக்கோழி** *ciṉṉu-k-kōḻi,* பெ. (n.) சிறிய புள்ளிகளை உடைய கோழி; a hen.

*[சின்னு+கோழி]*

**சினாம்பு** *ciṉāmbu,* பெ. (n.) மீனின் செதிற் பகுதி (நெ.வ.வ.சொ.155.); fin.

*[சிதாம்பு–சினாம்பு]*

**சினுக்கு** *ciṉu-k-kū,* பெ. (n.) இழைகள் தாறு மாறாக இருத்தல் (நெ.தொ.க.); improper thread line.

*[சினு–சினுக்கு]*

மகளிர் தம் கூந்தலிற் சிக்குக் களைதற்குப் பயன்கொள்ளும் இரும்பொன் *ஊசி.*

**சீக்குச்சி** பெ. (n.) துடைப்பக் குச்சி; broom stick.

*[சீ+குச்சி]*

**சீதம்** *cīdam,* பெ. (n.) குளிர்ச்சி; coolness. *"சொற்படு சீதத்தொடு சுவை உடைத்தாய்"* (மணிமே. 27 : 121.)

*[சீது–சீதம்]*

**சீந்தலான்** *cīndalāṉ,* பெ.(n.) உயரத்தில் நெடுந்தொலைவு விரைந்து பறக்கும் குறுங்கண் பறவை; a bird flying to long distance.

*[சீந்தல்+ஆன்]*

**சீமாறு** *cīmaṟu,* பெ. (n.) துடைப்பம்; broom stick.

*[சீ+மாறு]*

**சீர்மானம்** *cīrmāṉam,* பெ. (n.) ஓர் இயங்கியின் எந்திரம் உள்ளிட்ட அனைத்து உறுப்புகளும் நன்கு செயற்படுதற்கு ஏற்ற வகையில் அனைத்துப் பகுதிகளையும் (நீராட்டு, நெய்யாட்டு உட்பட) செப்பம் செய்து ஒழுங்குபடுத்துதல்; servicing a vehicle examinating of a vehicle or machine followed by any work that is necessary to keep it operating well.

**சீர்மானம் செய்தல்** *cīrmanamcē-,* செ.கு.வி. (v.i.) **சீர்மானம் பார்க்க;** see cirmānam stick.

*[சீ+மாறு]*

**சீருத்திரர்** *cīruttirar,* பெ. (n.) 1. சிவனடியார்; devotee of Šiva. 2. ஆளுவ (நிர்வாக)க்குழு; executive or managing committee. (தெ.கோ.சா. 3:2).

*[சீரு + உத்திரர்]*

**சுண்டான்** *cuṇḍāṉ,* பெ. (n.) எலி வகைகளி லொன்று; a kind of rat.

*[சுண்டு–சுண்டான்]*

**சுணை** *cuṉai,* பெ. (n.) கத்தரிக்காயில் விழும் நோய்; a disease affecting brinjal.

*[சுள்–சுணை]*

**சுமாலி** *cumāli,* பெ. (n.) கள்; toddy. *"பாலி சுமாலி... கள் பெயர் என அறைவர்"* (நி.க.தி. 6:113)

*[சுமல்–சுமாலி]*

**சுருக்க** *curukka,* வி.எ. (adv.) விரைவாக; fast. *"வெளியில் போனால் சுருக்க வந்திடு"* (பே.வ.).

*[சுரு–சுருக்க]*

**சுருதிமான்** *curūdimāṉ,* பெ. (n.) குமுகாயத்தை ஆளுவ (நிருவாக)ம் செய்வோர்; one who supervise the society.

*[சுருதி + மான்]*

**சுருள்கத்தி** *curuḷ katti,* பெ. (n.) அகலம் குறைந்த நீண்ட இரும்புத் தகடுகள் பொருத்திய கைப்பிடியுள்ள போர்க்கருவி; whirling blade weapon. சுருள்கத்தியைச் சுழற்றினால் அதில் பொருத்தப்பட்ட தகடுகள் பல கோணங்களில் சுழன்று எதிரிலிருப்பவரைத் தாக்கும்.

*[சுருள்+கத்தி]*

**சுருளமுது** *curuḷamudu,* பெ. (n.) தாம்பூலம், betel nut. (தெ.கோ.சா. 3:2)

*[சுருள் + அமுது]*

**சுவாங்கி** *cuvāṅgi,* பெ. (n.) கத்தூரி மஞ்சள்; musk termaric. *"சுவாங்கி கத்தூரி மஞ்சள்"* (நி.க.பி.9:355)

*[சுவங்கு–சுவாங்கி]*

**சுழிபார்–த்தல்** *cuḻipār-,* செ.கு.வி. (v.t.) மாடுகள் வாங்கும் போது அதன் மயிர்ச் சுழியைப் பார்த்து வாங்குதல்; to look at the marks on cattle.

*[சுழி+பார்]*

**சுளுந்துரை** *culundurai,* பெ.(n.) எரியும் தீப்பந்தக்காலின் முன் பட்டிமன்றவாதத்துக்கு பாட்டும் உரையுமாக அறை கூவல் விடுத்தல்; challenging remarks of song and prose inviting the opponents to participate in a open debate sitting under the light of the fire pole erected.

*[சுளுந்து+உரை]*

**சுற்றுவாரி** *cūṟṟu-vāri,* பெ. (n.) கல்லூரி; college. *"கல்வி சுற்றுவாரி கல்லூரி ஆகும்"* (நி.க.பி.4:223)

*[சுற்று+வாரி]*

**சுனைப்பு** *cuṉaippu,* பெ. (n.) சுறுசுறுப்பு; smartness. *"சுனைப்பு இல்லாத பையன்"* (பே.வ.)

*[சுனை–சுனைப்பு]*

**சூளைதிரை** *cūḷaitirai,* பெ. (n.) பரத்தையர் செலுத்தும் வரி; tax for whores.

*[சூளை + திரை]*

**சூறைக்காய் விடுதல்** *cūṟai-k-kāyviḍudal,* பெ. (n.) ஊர்வலத்தின் போது நிலக்கடலை, முந்திரிக்கொட்டை முதலியவற்றை வாரி இறைத்தல்; to throw edibles during processed. 2. சிற்றூர்த் தெய்வங்களுக்கு நேர்த்திக்கடன் பொருட்டு சிதறு தேங்காய் உடைத்தல்; to break coconut on a vow to village deity.

*[சூறை+காய்+விடு–]*

**செக்கர்மேகக்குறி** *cekkar-mēga-k-kuṟi,* பெ. (n.) மழை பெய்வதற்கான அறிகுறி; Indication of rain falling.

*[செக்கர்+மேகம்+குறி]*

**செங்கீரி** *ceṅgīri,* பெ. (n.) சிவப்புக் கீரிப்பிள்ளை; red or brown mungoose-herpestus fuscus. (சா.அக.)

*[செம்+கீரி]*

**செங்குடி** *csēṅkuḍi,* பெ. (n.) பாண்டிய நாட்டுச் சிற்றூர்; a village in pandya territory. *"படைக்கமலவனச் செங்குடிக் கௌசிகன் பராந்தகன்"*

*[செங்கம் + குடி]*

**செங்குளம்பு** *ceṅkuḷambu,* பெ. (n.) மாட்டின் உடம்பும் குளம்பும் ஒரே நிறமுடையனவாக இருத்தல்; same colour for ox and its hoof.

*[செம்+குளம்பு]*

**செட்டளூர்** *ceṭṭaḷūr,* பெ. (n.) பல்லவர் நாட்டுச் சிற்றூர்; a village in Pallava territory. (தண்.செ.164) *"வாதுல கோத்திரத்து ஆலத் தம்ப சூத்திரத்து செட்டளூர் சுயசருபவ செந்த்திரு வேதிபட்டச் சோமாசி பங்கொன்று"*

*[செட்டி+ஆளூர்]*

**செட்டுகந்தாடை** *ceṭṭukandāḍai,* பெ. (n.) கோயில் விளை நிலம்; temple fertile land. (தண்.செ.150) *"வாதுல கோத்திரத்து ஆலத் தம்ப சூத்திரத்து காரம்பிச் செட்டுகந்தாடை வாசுதேவச் சதுர்வேதி பங்கொன்று"*

*[செட்டு + கந்தாடை]*

**செது** *cedu,* பெ. (n.) குற்றம்; blemish fault *"செது மதி மிகு சமணரும்".*

*[சீத்தை–செது]*

**செந்தடி** *centaḍi,* பெ. (n.) சிவந்த இறைச்சி; redish flesh *"செந்தடிக் குருதிப் பைந் நிணக் கொழுங்குடர்"* (பெருங். 52:9)

*[செம்+தடி]*

**செந்தரை** *cendarai,* பெ. (n.) பாலை, நிலம்; desert. *"செந்தரைக் குருதிப் பைந் நிணக் கொழுங்குடர்"* (பெருங். 52:9)

*[செம்+தரை]*

**செந்துவரை** *cenduvarai,* பெ. (n.) துவரை; red gram. (சா.அக.)

*[செம்+துவரை]*

**செந்நிலத்தாமரை** *cen-nila-t-tāmarai,* பெ. (n.) ஒரு வகை முளரி (ரோசா); a variety of rose. (சா.அக.)

*[செம்+நிலம்+தாமரை]*

**செப்பட்டை** *ceppaṭṭai,* பெ.(n.) 1. தோள்பட்டை; upper arm. 2. கன்னம்; cheek.

*[சேர்+பட்டை–சேர்ப்பட்டை–செப்பட்டை]*

**செப்புக்குளிசம்** *ceppu-k-kuḷiśam,* பெ. (n.) செப்புத் தகட்டில் மந்திரவெழுத்து பதித்துத் திரட்டிய தகடு; an amuletmade of rolled copper plate on which is inscribed magic lines and letters and worn as a remedy against evil or mischief. (சா.அக.)

*[செம்பு+குளிசம்]*

**செப்புச்சிமிழ்** *ceppu-c-cimiḻ,* பெ. (n.) செம்பி னாற் செய்த சிறிய பெட்டி; small box made of copper. (சா.அக.)

*[செம்பு+சிமிழ்]*

**செம்படவர்கருவிகள்** *cembaḍavarkaruvigaḷ,* பெ. (n.) மீனவர்கள் மீன்பிடிக்க பயன்படுத்தும் கருவிகள்; fishermen's tools.

*[செம்படவர்+கருவிகள்]*

**செம்பரிதி** *cem-paridi,* பெ. (n.) சூரியன்; sun. *"செம்பரிதி கடல் அளித்த செக்கர் ஒளி"* (பெரிய. 3695).

*[செம்+பரிதி]*

**செம்பல்** *cembal,* பெ. (n.) அரத்தம்; blood. (சா.அக.).

*[செம்–செம்பல்]*

**செம்பழம்** *cembaḷam,* பெ. (n.) 1. பழுக்கும் நிலையிலுள்ள காய்; fruit almost riped. 2. எலுமிச்சை பழம்; lime fruit. (சா.அக.).

*[செம்–பழம்]*

**செம்பிலியாடு** *cembili-y-āḍu,* பெ. (n.) செம் மறியாடு; a brown sheep. (சா.அக.).

*[செம்பல்–செம்பிலி+ஆடு]*



**செம்புக்கலம்** *cembu-k-kalam,* பெ. (n.) செம்புப் பாத்திரம்; copper eating dish. (சா.அக.).

*[செம்பு+கலம்]*

**செம்புக்கலுவம்** *cembu-k-kaluvam,* பெ. (n.) கல்லம்மி; grinding stone. (சா.அக.).

*[செம்பு+கலுவம்]*



**செம்புவட்டகை** *cembu-vattagai,* பெ. (n.) செம்பினாற் செய்த சிறு கிண்ணம்; small copper basin. (சா.அக.).

*[செம்பு+வட்டகை]*

**செம்பூமி** *cembūmi,* பெ. (n.) செம்மண்; red earth, soil. (சா.அக.).

*[செம்+பூமி]*

**செம்போத்து** *cempottu,* பெ.(n.) இறக்கை மட்டும் காவி நிறமுள்ள பறவை; a bird has brown wings.

*[செம்+போத்து]*

**செம்போத்துமாடு** *cembōttu-mādu,* பெ. (n.) கருமையுஞ் சிவப்புங் கலந்த மாடு; the ox coloured mingled in black and red.

*[செம்+பூத்து+மாடு]*

**செம்மட்டைமயிர்** *cemmattai-mayir,* பெ. (n.) கபில நிறமான மயிர்; hair brown in colour. (சா.அக.).

*[செம்பட்டை+மயிர்]*

**செம்மண்குறி** *cemman-kuri,* பெ. (n.) பாவில் செம்மண்ணால் குறிக்கப்பட்ட அடையாளம்; a symbol marked in loom by red soil.

*[செம்மண்+குறி]*

**செம்மணல்** *cemmanal,* பெ. (n.) சிவப்பு மணல்; red sand.

*[செம்+மணல்]*

**செம்மரு-தல்** *cemmaru-,* செ.கு.வி. (v.i.) களிப்படைதல்; to enjoy. *"மதுவுண்டு செம் மருந்தண் சுரும்பு சுழல்"* (பெரியபு. ஆனாய. 20).

*[செம்முறு–செம்மறு–செம்மரு]*

**செம்மலர்** *cemmalar,* பெ. (n.) 1. சிவந்த மலர்; reddish flower. 2. நெற்றி மாலை; fore head garland. *"அம்மலரடியுங்கையு மணி கிளர்பவ ளவாயுஞ்–செம்மலர் நுதனுநாவும்"* (சிந்தா. இலக்கணை. 69).

*[செம்+மலர்]*

**செம்மறிக்கடா** *cemmari-k-kadā,* பெ. (n.) செம்மறியாட்டின் ஆண்; its horn is angular and turned down words. (சா. அக.).

*[செம்+மறி+கடா]*



**செம்மறிக்குட்டி** *cemmari-k-kutti,* பெ. (n.) செம்மறியாட்டுக்குட்டி; lamb. (சா. அக.).

*[செம்+மறி+குட்டி]*

**செம்மறிச்சாணி** *cemmari-c-cāni,* பெ. (n.) செம்மறியாட்டுப் புழுக்கை; excrete (dung) of

the red sheep is very useful as manure. (சா. அக.).

*[செம்மறி+சாணி]*

**செம்மறியாட்டிறைச்சி** *cemmari-y-āttiraicci,* பெ. (n.) உணவாகப் பயன்படும் ஆட்டின் இறைச்சி; a sort of eczema. (சா.அக.).

*[செம்மறி+ஆடு+இறைச்சி]*

**செம்மாந்து** *cemmāndu,* வி.எ. (adv.) பெரு மிதமாக; a sit an exalted manner. அடி யார்கள் இறைவன் மேல் அசையா நம்பிக்கை வைத்து செம்மாந்து திரிந்தனர்.

*[செம்மா–செம்மாந்து]*

**செம்மார்** *cemmār,* பெ. (n.) திருநெல்வேலி வட்டத்திலுள்ள ஓர் இனத்தினர்; a tribe living in Tirunelveli Dt.

*[செருமான்–செருமார்–செம்மார்]*

**செம்முகம்** *cemmugam,* பெ. (n.) குரங்கு; monkey so called for its red face. (சா.அக.).

*[செம்–முகம்]*

**செமத்தியாக** *cemattiyāga,* வி.அ. (adv.) கடு மையாக; severely. *"கீழே விழுந்து செமத்தி யான அடி".*

*[சுமத்தி–செமத்தி+ஆக]*

**செய்திகொன்றோர்** *ceydi-konṟōr,* பெ. (n.) நன்றியில்லாதவர்; ungreateful persons. *"ஒருவன் – செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென"* (புறநா. 34).

*[செய்தி+கொன்றோர்]*

**செய்து** *ceydu,* வி.எ. (adv.) இறந்தகாலத் தெரி நிலை வினையெச்ச வாய்பாட்டி னொன்று; grammatical classification. *"செய்துசெய்பு செய்யாச் செய்யூச் செய்தென"* (நன். 343.)

*[செய்–செய்து]*

**செய்யது** *ceyyadu,* பெ. (n.) சிவப்புப் போர்வை; red colour carpet. *"செய்யது போர்த்தான் போல்"* (கள. 32.)

*[செம்–செய்–செய்யது]*

**செய்யர்** *ceyyar,* பெ. (n.) நேர்மையுள்ளவர்; honest person.

*[செம்–செய்–செய்யர்]*

**செய்யால்** *ceyyāl,* பெ. (n.) அழிந்து போன காடு; destroyed forest. *'நம்ம புஞ்சை தவிர நாலு பக்கமும் செய்யலு'.*

*[சாய்–சய்யல்–செய்யால்]*

**செய்யொளி** *cey-y-oli,* பெ. (n.) 1. வைடூரியம்; cat eye. 2. உண்டாக்கிய வெளிச்சம்; a light contrived by art or skill as electric light, gas light etc. (சா. அக.).

*[செம்–செய்+ஒளி]*

**செயற்படுத்து–தல்** *ceyal-paduttu-,* செ.கு.வி. (v.i.) நடைமுறைப்படுத்துதல்; enforce, implement. பள்ளி மாணவர்களுக்கு இலவசச் சீருடை வழங்கும் திட்டம் இந்த ஆண்டு முதல் செயற்படுத்தப்படும்.

*[செயல்+படுத்து]*

**செயற்பாடு** *ceyal-pādu,* பெ. (n.) செயற்படு கின்ற முறை; style of functioning. நிருவா கத்தின் செயற்பாட்டைக் கண்டித்துப் பேசினார்.

*[செயல்+பாடு]*

**செயற்கைப்பல்** *ceyaṟkai-p-pal,* பெ. (n.) செய் யப்பட்ட பல்; artificial tooth. 2. பொய்ப் பல்; false tooth (சா. அக.).

*[செயற்கை+பல்]*

**செயற்கையுயிர்ப்பு** *ceyaṟkai-y-uyirppu,* பெ. (n.) செயற்கை மூச்சு; artificial respiration. opp. to iyaṟkai-y-uyirppu. (சா. அக.).

*[செயற்கை+உயிர்ப்பு]*

**செரங்கை** *cerańgai,* பெ. (n.) சிரங்கை; handful. செரங்கை (கொ.வ.) (சா. அக.).

*[சிறங்கை–செரங்கை (கொ.வ.)]*

**செரளியாடு** *ceraḷi-y-āḍu,* பெ. (n.) உடல் வெண்மையும் மேற்புறம் சிவப்பு அல்லது வேறு

நிறங்கொண்ட ஆடு; a goat having its body white and top is red or some other colours.

*[சரளி–செரளி+ஆடு]*

**செரிகுடல்** *ceri-kuḍal,* பெ. (n.) உண்டவற்றை செரி மானமாக்கும் சிறுகுடல்; that part of small intestine in which the greater part of the food is digested and turned into chyme. (சா. அக.).

*[செரி+குடல்]*

**செரிப்பு** *cerippu,* பெ. (n.) செரிமானம்; digestion. (சா. அக.).

*[செரி–செரிப்பு]*

**செருக்கல்** *cerukkal,* பெ. (n.) 1. அலங் கரித்தல்; to decorate. 2. மிக மகிழ்ச்சி, bliss. "ஈசவை சேவடி நிழலிற்றங்கள் கிளை யுடன் செருக்கி வாழ்வார்" (அருணாசலபு. தீர்த்த. 32.).

*[செருக்கு–செருக்கல்]*

**செருக்கு** *cerukku,* பெ. (n.) 1. அகந்தை; self conceited. "*மீளிமொய்ம்பின் மிகுவலி செருக்கி*" (பொருந. 140). 2. மயங்கி; confused. "உரவுச்சின முன்பாலுடல் சினஞ் செருக்கி" (குறிஞ்சி. 159).

*[செரு–செருக்கு]*

**செருக்கிய** *cerukkiya,* பெ.எ. (adj.) மயங்கிய (சிந்தா.); to be infatuated.

*[செருக்கு–செருக்கிய]*

**செருப்படை** *ceruppaḍai,* பெ. (n.) சிறந்த வீரர் களைக் கொண்ட படை; army of tried solidiers.

*[செரு–படை]*

**செருப்பள்ளி** *ceruppaḷḷi,* பெ. (n.) பல்லவர் நாட்டுச் சிற்றூர்; a village in pallava territory. "காசியப கோத்திரத்து ஆலத்தம்ப சூத்திரத்து செருப்பள்ளி நாராயணச் சடங்கவி பங்கொன்று" (தண். செ. 52.)

*[செரு + பள்ளி]*

**செல்லடை–த்தல்** *cellaḍai-.* செ.கு.வி (v.i.) கடனை தீர்த்தல்; to repay debit.

*[செல்+அடை–]*

**செல்லூர்** *cellūr,* பெ. (n.) மதிச்சயம் என்னும் ஊருக்கு மேற்கும், மதுரைக்கு வடக்குமுள்ள ஊர்; the village situated by west ward of madiccayam and north word of Madurai.

*[செல்+ஊர்]*

**செல்வப்பேச்சு** *celva-p-pēccu,* பெ. (n.) மழலைப் பேச்சு; drattling speech as child. (சா. அக.).

*[செல்வம்+பேச்சு]*

**செல்வு** *celvu,* பெ.எ (adj.) 1. அழகு; beauty. 2. காலம்; time. 3. பருவம்; season. 4. நிலைமை; state. 5. மொக்கு; bud. 6. மணம்; smell. 7. **செல்வரளி** பார்க்க; see šev-v-araḷi. 8. **செம்புகுடத்தி** பார்க்க; see šembu-kuḍatti.

*[செல்–செலவு]*

**செலவிடல்** *celaviḍal,* பெ. (n.) எறிதல் (பிங்கல. 2162); throw.

*[செல்ல–செல+(வரு)விடல்]*

**செவ்வழல்** *cev-v-aḻal,* பெ. (n.) விளக்கு; lamp. "*செந்தீச் செவ்வழல் தொடங்க*" (கலி.).

*[செம்–செவ்+அழல்]*

**செவ்வாய்ப்புண்** *cevvāy-p-puṇ,* பெ. (n.) வாய் வேக்காளம்; sore through inflam-mation of the mouth. (சா. அக.).

*[செவ்+வாய்+புண்]*

**செவ்விரத்தம்** *cev-v-irattam,* பெ. (n.) தூய் மையான அரத்தம்; pure aerated red blood. (சா. அக.).

*[செவ்–இரத்தம்]*

**செவ்வுள்பட்டை** *cevvuḷ-paṭṭai,* பெ. (n.) சிவப்பும் வெண்மையும் கலந்த நிறமுடைய மாடு; red and white mingled Ox.

*[செவ்+வெள்+பட்டை]*

**செவிக்குறும்பி** *cevi-k-kūṟumbi,* பெ. (n.) காதழுக்கு; ear wax.

*[செவி+குறும்பி]*

**செவிச்சளி** *cevi-c-caḷi,* பெ. (n.) காதினின்று வடியும் சளி நீர்; mucous discharge from the ear. (சா.அக.)

*[செவி+சளி]*

**செவித்தாரை** *cevi-t-tārai,* பெ. (n.) காதின் வழி; auditory passage of the ear. (சா.அக.)

*[செவி+தாரை]*

**செவித்துவாரம்** *cevi-t-tuvāram,* பெ. (n.) 1. செவியின் துளை; cavity of the ear. 2. காதின் வெளி அல்லது உட்துளை; the external and or internal opening of the ear. 3. நடுக்காது; middle ear. (சா.அக.)

*[செவி+துவாரம்]*

**செவிப்புலன் ஒடுங்கல்** *cevi-p-pulaṉoḍuṅgal,* பெ. (n.) 1. காதடைத்தல்; deaf. 2. காதால் அறியும் ஓசை அற்றுப் போகை; loss of sense of hearing. 3. ஒகத்தில் ஐம்புலன் ஒடுங்குங் காலத்து வெளி சத்தம் கேளாதிருக்கை; that stage in the yoga practice when the external sound reaching the ears is not perceived owing to the conquering of the five sense. (சா.அக.)

*[செவி+புலன்+ஒடுங்கல்]*

**செள்ளை** *ceḷḷai,* பெ. (n.) 1. உடன் பிறந்தவள்; sister. 2. பெண்களுக்கு வழங்கப்பட்ட செல்லப்பெயர்; pet name of female.

**தெ. செள்ள**

*[செள்–செள்ளை]*

**செற்றார்** *ceṟṟār,* பெ. (n.) கொலை செய் வோர்; murderer. *"வேளும்பட விழியாற் செற்றார்க்கு"* (கந்தரல. 58.)

*[செறு–செற்றார்]*

**செறித்து** *ceṟittu,* வி.எ. (adv.) அடக்கி; restrain. *"செப்பல்வன் மையிற் செறித்தி யான் கடவலின்"* (குறிஞ்சிப். 12.)

*[செறி–செறித்து]*

**சென்னியெரி** *ceṉṉi-y-eri,* பெ. (n.) தலையி லுண்டாகும் எரிச்சல்; burning sensation in the heat. (சா. அக.)

*[சென்னி+எரி]*

**சென்னிவருத்தி** *ceṉṉi-varutti,* பெ. (n.) தலையோடு; skull. (சா. அக.)

*[சென்னி+வருத்தி]*

**சென்னிவலி** *ceṉṉi-vali,* பெ. (n.) தலைவலி; head ache. (சா. அக.)

*[சென்னி+வலி]*

**சென்னிவலை** *ceṉṉi-valai,* பெ. (n.) 1. தலை மண்டையோடு; the skull. 2. மூளை; division of the brain behind the cerebrum. (சா. அக.)

*[சென்னி+வலை]*

**சேடக்குடும்பி** *cēḍa-k-kuḍumbi,* பெ. (n.) கோவில் வழிபாடாற்றுவோன்; temple - priest, as belonging to a family of devotees. *"சேடக்குடும்பியின் சிறுமகள்"* (சிலப். 30, 52.)

*[சேடம்+குடும்பி]*

**சேடசுரம்** *cēḍa-curam,* பெ. (n.) கோழைக் காய்ச்சல்; phlegnatic. (யாழ். அக.)

*[சேடம்+சுரம்]*

**சேடசேடிபாவம்** *cēḍa-šēḍi-pāvam,* பெ. (n.) 1. ஆண்டானடிமைத் திறம்; the relation of master and servant. *"முதல்வனுக்குச் சேட சேடிபாவத்தால் ஆகற்பால தாகிய அடிமையாம் என்க"* (சி.போ.பா. 9,3 பக். 201. சுவாமி. பதிப்.) 2. அறநெறி தவறாதிருக்குந் தன்மை; the relation of disposer and disposable.

*[சேடன்+சேடி+பாவம்]*

**சேடர்** *cēḍar,* பெ. (n.) 1. அடிமைக்காரர்; slaves. 2. அறிவுடையோர், பெரியோர்; intelligent persons. *"வென்றி வேளருளாற் பெற்ற– சேடரின் மிக்க செய்மைத் திண்ணன்"* (பெரியபு. கண்ணப்ப. 29). 3. ஏவல் செய்வோர்; attendant, servant. 4. நெய்வாரினொரு சரார்; one of the group of weavers.

*[சேடு–சேடர்]*

**சேரலார்** *cēralār,* பெ. (n.) பகைவர்; enemy. *"தற்சேரலாரைத் திறைகவர்ந்துற்றன்".*

*[சேர்+அல்+ஆர்]*

**சேறடி** *cēṟaḍi* பெ. (n.) ஏரி மதகின் அடிப் பகுதி யில் தண்ணீர் வெளியேறும் சாளரம், திறந் தால் சேறு சகதி வெளியேறும்படி அமைந்த அமைப்பு; opening in near sluice.

*[சேறு+அடி]*

**சொக்கிடல்** *cokkiḍal,* பெ. (n.) நோட்ட மிடுகை; watching. *"சொக்கிட்ட ரமனை புக்கு"* (பட்டினத்துப்பிள்ளை).

*[சொக்கு+இடு]*

**சொடுக்குப்போடு–தல்** *coḍukku-p-pōḍu-,* செ.குவி. (v.i.) விரல் ஒட்டி ஓசை எழுப்புதல்; to make a noise by eroisting two fingers suddenly.

*[சொடுக்கு + போடு (சொடுக்கு – ஒலிக் குறிப்பு)]*

**சொத்தைக்காய்** *cottai-k-kāy,* பெ. (n.) புழுப்பாய்ந்த காய்; warm eaten fruit. (சா. அக.)

*[சொத்தை+காய்]*

**சொத்தைப்பாக்கு** *cottai-p-pākku,* பெ. (n.) 1. புழு அரித்த பாக்கு; worm eaten arecanut. 2. **சொள்ளைப் பாக்கு** பார்க்க; see coḷḷai-p-pākku. (சா. அக.)

*[சொத்தை+பாக்கு]*

**சொரிகுட்டம்** *cori-kuṭṭam,* பெ. (n.) 1. அரத்தம் வடியும் குட்டம்; leprosy attended with bleeding from sores.

*[சொரி+குட்டம்]*

**சொல்மறதி** *col-maṟadi,* பெ. (n.) பேசத் தொடங்கும் போது வார்த்தைகளை மறத்தல்; forget fulness of words when attempting to speak. (சா. அக.)

*[சொல்+மறதி]*

**சொல்மாறாட்டம்** *col-māṟāṭṭam,* பெ. (n.) 1. வாய் குளறல்; blabbering. 2. தடுமாறிப் பேசுகை; incoherent talk. (சா. அக.)

*[சொல்+மாறாட்டம்]*

**சொள்ளைப்பாக்கு** *coḷḷai-p-pākku,* பெ. (n.) சொத்தைப்பாக்கு; worm eaten arecanut. (சா. அக.)

*[சொள்ளை+பாக்கு]*

**சொளகு** *coḷagu,* பெ.(n.) மூங்கில் கணுவில் வெட்டிச் செய்த சிறிய முகத்தல் அளவுக் கருவி; a small cubic measure made of bamboo.

*[சுளகு–சொளகு]*

**சொற்கருவி** *coṟ-karuvi,* பெ. (n.) பேசுவ தற்கு ஆதாரமாயுள்ள உறுப்புகள்; organs facilitating speech as lips tongue, teeth etc. (சா. அக.)

*[சொல்+கருவி]*

**சொறண்டல்** *coṟaṇḍal,* பெ. (n.) தேய்க்கை; scraping (சா. அக.)

*[சுரண்டல்–சொறண்டல்]*

**சொறிகுட்டம்** *corikuṭṭam,* பெ. (n.) காயம் உண்டாகாமலே உடம்பு முழுவதும் எரிச்ச லுண்டாக்கும் ஒரு வகைக் குட்டம்; a kind of leprosy with diffuse papillary eruption with out ulceration on the entire surface of the body marked by intense itching and burning sensation. (சா. அக.)

*[சொறி+குட்டம்]*

**சொறிகுரு** *coṟi-kuru,* பெ. (n.) தவிடுபோல் உதிரும் பொடுகு; brawney scales scruf. (சா. அக.)

*[சொறி+குரு]*

**சொறுமாட்டு** *coru-māttu,* பெ. (n.) நிலுவை; balance. *"பொன்கொண்டு எப்பேர்ப்பட்ட இறையுஞ் சொறு மாட்டுங் காட்டப்பெறா தோமாக"* (தெ. கல். தொ. 7. கல். 420.).

*[சொறு+மாட்டு]*

**சொன்முரணணி** *con-muranani,* பெ. (n.) ஒன்றற்கொன்று முரணிய சொற்றொடராய் வருவது; controversy sentence. *"அவரே கிழவனாகிப்பின் காளையாய் கிஞ்சுகச் செவ்வாய்க் குழவியாய் விளையாடிய கொள்கையைப் பகர்வாம்"* (திருவிளை. விருத்தம்.)

*[சொல்+முரண்+அணி]*

**சோணை** *cōnai,* பெ. (n.) சோழ நாட்டுப்பெண்; a woman belonging to chola country. "நாயகி நற்சோணை. சோழன். (ஆ.பா.) – சோணை. (பெ.பா).

**சோணைக்கட்டு** *cōnai-k-kattu,* பெ. (n.) கழிக்கப்பட்ட கரும்பின் சோணைகளைச் சேர்த்துக் கட்டிய கட்டு; a kind of knot especially tied around sugarcane leaves.

*[சோனை+கட்டு]*

**சோணைகழி–த்தல்** *cōnai-kali-,* செ.கு.வி. (v.i.) கரும்பின் உலர்ந்த தழைகளை நீக்குகை; to remove the dry leaves from sugarcane.

*[சோணை+கழி]*

**சோணையறு–த்தல்** *cōnai-yaru-,* செ.கு.வி. (v.i.) கேழ்வரகுப் பயிரில் தாள் நீளமாதலைக் குறைக்க அறுத்தல்; to cut the ragi leaves to control the crop growth.

*[சோணை+அறு]*

# த

**தகுதி** *takuti,* பெ. (n.) 1. ஏற்றத்தாழ்வு (தராதரம்); distinction of rank, place class or other particulars. "தராதரற்தெரிந்து" (திருவிளை. திருமண.94). 2. நிலைப்பாடு; status, position.

*[தகு–தகுதி]*

**தட்டுக்கூடை** *tattu-k-kūdai,* பெ.(n.) கஞ்சி வடிக்க உதவும் மூங்கில் தட்டு; strainer made of bamboo.

மறுவ. சிப்பல்

*[தட்டு+கூடை]*

**தடவை** *tadavai,* பெ. (n.) முறை; time, occasion, turn. "இரண்டு தடவை வந்து போனான்".

*[தரம்–தடம்–தடவை]*

**தண் குடிப்பு** *tankudippu,* பெ. (n.) காய்ச் சாமலே ஓர் இரவு முழுவதும் குளிர்ந்த நீரிலூறப் போட்டு காலையில் இறுத்து எடுக்கும் குளிர்ச்சியான மருந்து (சீதகசாயம்); a cold infusion prepared by soaking. one part of drugs or drugs in bix parts of cold water for one night in the morning it is filtered and administered cold water infusion.

*[தண்+குடிப்பு]*

**தண்டேந்தி** *tandēnti,* பெ. (n.) தண்டு எனும் படைக்கலனை ஏந்தியவன் (வின்.); club.

மறுவ. தண்டாயுதபாணி

*[தண்டு+ஏந்தி]*

**தண்மேகம்** *tanmēkam,* பெ. (n.) நீரழிவு நோய் வகை (சீதமேகரோகம்); a kind of diabetes.

*[தண்+மேகம்]*

**தண்ணன்னீர்** *tannannir,* பெ. (n.) குளிர்ந்த நல்ல தண்ணீர் (சுத்தசலம்); pure cold water, as used for drinking purpose.

*[தண்+நன்+நீர்]*

**தண்ணீர்க்காய்** *tannir-k-kāy,* பெ.(n.) கோசக்காய், கரும் பூசணி (தர்ப்பூசணி); water melan.

*[தண்ணீர்+காய்]*

**தணுப்பு இசிவு** *tanuppuiśivu,* பெ. (n.) குளிர்ச்சியால் ஏற்படும் இசிவு நோய் (சீதகாத்திரம்); apoplexy due to extreme cold in the body.

*[தணுப்பு+இசிவு]*

**தணுப்புமலடு** *tanuppumaladu,* பெ. (n.) பெண்களுக்கு உண்டாகும் அறுவகை மலட்டு நோய்களுள் ஒன்று (சீதமலடு); one of the six varties of sterility in woman caused by extreme chillness of the body.

*[தணுப்பு+மலடு]*

**தந்தையிலி** *tantaiyili,* பெ. (n.) தந்தையில்லாதவன் (சேமண்டன்); one who has lost his father. "தாயுமிலி தந்தையிலி தான் தனியன் காணேடி" (திருவா.).

*[தந்தை+(இல்லி)இலி]*

**தப்பல்** *tappal,* பெ. (n.) 1. பன்னிரண்டு வகை மகன்களுள் கணவன் வீட்டிலில்லாத காலத்தில் இன்னான் னென்றறியப்படாத ஒருவனுக்கு ஒருத்தியிடம் தோன்றிய மகன் (கூடசன்); son born secretly of a woman when her husband absent, the real father being unknown one of twelve pulluran. 2. தவறானவன்; wrong person. "அவன் ஒரு தகப்பனுக்கு பிறந்தவன் இல்லை" (பே.வ.).

*[தப்பு–தப்பல்]*

**தப்பளம்** *tappalam,* பெ.(n.) கோணி ஊசி; needle of sack.

*[தைப்பு–தப்பளம்]*

**தப்பிமறைதல்** *tappimarai-,* செ.கு.வி. (v.i.) தந்திரமாய் மறைதல் (டிமிக்கி கொடுத்தல்); absconds, give one the slip.

*[தப்பி+மறைதல்]*

**தப்பை** *tappai,* பெ.(n.) மூங்கிற்பிளாச்சு; bamboo reed.

*[தப்பு–தப்பை]*

**தமருகம்** *tamarukam,* பெ. (n.) உடுக்கை என்னும் சிறுபறை (மடருகம்); a tabous or small drum shaped like an hour glass.

*[தமர்–தமருகம்]*



**தமிழாகரர்** *tamiḷākarar,* பெ. (n.) மருத்துவ நூல் செய்த ஒரு சித்தர் (டமரகர்); siddhar who is the author of a medical book.

*[தமிழ்+ஆகரர்]*

**தரவல்** *taraval,* பெ. (n.) ஒரு நிகழ்வு அல்லது ஒரு பொருள் குறித்த உண்மைச் செய்தி அல்லது அறியப்படும் செய்தி (தகவல்); facts or knowledge provided or learned information.

**மறுவ. தகவல்**

*[தரு–தரவல்]*

**தலைக்காண்பு** *talaik-kānpu,* பெ. (n.) பேறு காலத்தின் போது குழந்தையின் தலை வெளித் தோன்றுகை (சிரோதயம்); presentation of head in child birth.

*[தலை+காண்பு]*

**தலைமையேவலன்** *talaimaiyēvalan,* பெ. (n.) தலைமை ஏவலன் (தபேதார்); head peon.

*[தலைமை+ஏவலன்]*

**தலைவெட்டு** *talaivettu,* பெ. (n.) தலையை வெட்டுகை (சிரச்சேதம்); decapitation.

*[தலை+வெட்டு]*

**தழற்கரி** *talarkari,* பெ. (n.) நெருப்புக்கனல்; heat of burning.

**த.வ. கனலி**

*[தழல்+கரி]*

**தற்கருமம்** *tarkarumam,* பெ. (n.) சொந்த வேலை (சுவார்ச்சிதம்); one's own interest.

*[தன்+கருமம்]*

**தற்பக்கக்கொள்கை** *tarpakkakkolkai,* பெ. (n.) சொற்போரில் தன் கொள்கை (சுபட்சம்); one's own side in a debate, views or doctrines of one's own sect or party. 2. சிவஞான சித்தியாரில் சிவசமயத்திற்குரிய கொள்கையை உணர்த்தும் பகுதி; the portion of siva-ñana sittiyar that enunciated the principles of the saivam section.

*[தன்+பக்க+கொள்கை]*

**தற்பட்டறிவு** *tarpattarivu,* பெ. (n.) தன் நுகர்ச்சியால் உண்டாகும் அறிவு (சுவானுபூதிகம்); knowledge acquired through one's own experience.

*[தன்+பட்ட+அறிவு]*

**தற்பீற்றல்** *tarpirral,* பெ. (n.) வெளிப்பகட்டு (டம்பம்); being showy or vain, empty boast.

**மறுவ. பகட்டுப் பேச்சு, பீற்றல்**

*[தன்+பீற்றல்]*

**தன்பாங்கு** *tanpāngu,* பெ. (n.) யாரையும் சாராத நிலை (சுயேச்சை); independant. அவர் சென்ற தேர்தலில் தன்பாங்காக நின்று வெற்றி பெற்றார். தன்பாங்கு வேட்பாளரையும் கூட மக்கள் தேர்ந்தெடுக்கின்றனர். (உ.வ.).

*[தன்+பாங்கு]*

**தன்மான இயக்கம்** *tanmānaiyakkam,* பெ. (n.) தன்மானத்துடனும், பகுத்தறிவுடனும் நடந்து கொள்ள வேண்டும் என்ற கொள்கை யுடைய குழுகாய இயக்கம் (சுயமரியாதை இயக்கம்); a social movement based on one's faith in the dignity and reasoning power of the individual, self respect movement. தந்தை பெரியார் தன்மான இயக்கத்தை நடத்தி வெற்றி கண்டார்.

*[தன்+மானம்+இயக்கம்]*

**தன்முனைப்பு** *tanmunaippu,* பெ. (n.) இறுமாப்பு; conceit, feeling of elation.

*[தன்+முனைப்பு]*

**தன்விருப்பு** *tanviruppu,* பெ. (n.) தன்னுடைய முடிவு; one's inclination free will. 2. தன்பாங்கு எந்தக் கட்சியையும் சாராத நிலை (சுயேச்சை); independant candidate.

**மறுவ. தன்னிச்சை, தன்பாங்கு**

*[தன்+விருப்பு]*

**தன்விழைவு மணம்** *tanvilaivumanam,* பெ. (n.) தன்னை விரும்பி வந்த அரசர் கூட்டத்தில் தனக்குரிய கணவனைத் தலைவி தானே தெரிந்து மணந்து கொள்ளுகை (சுயம்வரம்); selection of husband by a princess herself at a public assembly of suitors.

**மறுவ. விழைவு மணம், தன்தெரிவு**

*[தன்+விழைவு+வரவு]*

**தன்னறிவு** *tannarivu,* பெ. (n.) தன்னுடைய அறிவு (சுயபுத்தி); one's own unaided sense. 2. மயக்கமற்ற அறிவு; solriety, cleanness of mind.

*[தன்+அறிவு]*

**தன்னன்** *tannan,* பெ. (n.) 1. மகன்; son. 2. ஆண்பாற் பெயர்; name of a person.

*[தன்(தோன்றுதல், பிறத்தல்)+அன்]*

**தன்னவன்** *tannan,* பெ. (n.) 1. தன்னைச் சார்ந்தவன்; one belongs to a group. 2. ஆண்பால் இயற்பெயர்; name of a person.

*[தன்+அவன்]*

**தன்னாட்டான்** *tannattān,* பெ. (n.) தனது நாட்டிற் பிறந்து வளர்ந்தவன் (சுதேசி); native son of the soil.

**த.வ. மண்ணின் மைந்தன், தன்னவன்**

*[தன்+நாட்டான்]*

**தன்னாட்டுப் பண்டம்** *tannāttuppandam,* பெ. (n.) தன் நாட்டிற் செய்த பொருள்

(சுதேசியம்); native goods.

மறுவ. உள்நாட்டுப் பண்டம்

*[தன்+நாட்டு+பண்டம்]*

**தன்னிட்டம்** *tanniṭṭam,* பெ. (n.) தானே தேடிய பொருள் (சுவார்ச்சிதம்); self acquisition.

*[தன்+இட்டம்]*

**தன்னுரிமை அதிகாரம்** *tannurimai adigāram,* பெ. (n.) தானே உரிமையோடு செயற்படுவதற்கு உரிய அதிகாரம் (சுயாதி காரம்); autonomy.

*[தன்+உரிமை+அதிகாரம்]*

**தன்னொறுப்பு** *tannoṟuppu,* பெ. (n.) தவப் பாங்கு, புலனடக்கம்; self-denial, ascetecism.

த.வ. தன்னொறுப்பு

*[தன்+ஒறுப்பு]*

**தாத்துமுள்** *tāttumuḷ,* பெ.(n.) வண்டி அல்லது ஏர் ஓட்டுவோர் மாட்டை விரட்டுவதற்காக கையில் வைத்திருக்கும் முட்கோல்; a pin fixed stick used by the cart driver or ploughing farmer to drive the animal.

*[துரத்து–தூத்து–தாத்து+முள்]*

**தாமரைக்கைகூப்பு** *tamarai-k-kaikūppu,* பெ. (n.) வணங்குதற்கு அடையாளமாக தாமரை மொட்டு போல கைகளைக் குவிக்கை (கமல வருத்தனை); a gesture with both hand signifying obeysance consisting in folding one's hands so as to resemble a lotus bud.

*[தாமரை+கை+கூப்பு]*



**தாள்தோய் தடக்கையன்** *taḷ-tōy-taḍak kaiyan,* பெ. (n.) முழங்காலளவு நீண்ட கையுடைய பெருந்தோற்றமுடையோன் (ஆசா னுவாகு); one whose arms reach his knees, indicating majesty of stature.

*[தாள்+தோய்+தடம்+கை+அன்]*

**தாளுருவா** *tāḷuruvā,* பெ. (n.) அமெரிக்கா, சிங்கப்பூர் முதலிய நாடுகளில் வழங்கும் காசு வகை (டாலர்); dollar, a coin in the currency of the U.S.A. straits settlements etc.,

*[தாள்+உருவா]*

**தான்தோன்றி** *tāntonri,* பெ. (n.) தானாக உண்டானது (சுயம்பு); self existant being anything considered to be uncreated. 2. இறைவன்; God. 3. நான்முகன்; Brahma. 4. அருகன்; Arhat. 5. இயற்கை; pecularity, nature. 5. மெய்நிலை; genuineness. 7. மடையன்; idiot.

*[தான்+தோன்றி]*

**திக்கிலி** *tikkili,* பெ. (n.) திக்கற்றவன்; one without resources of friends.

மறுவ. போக்கிலி

*[திக்கு+இலி]*

**திங்கள் மண்டிலம்** *tingaḷmanḍilam,* பெ. (n.) நிலவினது வட்டம் (சந்திர மண்டலம்); orb or disc of the moon.

*[திங்கள்+மண்டிலம்]*

**திங்கள் மரபு** *tingaḷmarabu,* பெ. (n.) அரச குலம் முன்றனுள் திங்களை குல முதல்வனாகக் கொண்ட பாண்டிய மரபு (சந்திரகுலம்); lunar race, as of king descended from the moon one of three irāša-kulam.

*[திங்கள்+மரபு]*

**திரிந்தமைவு** *tirindamaivu,* பெ.(n.) உயிரினங் களின் படிமுறை வளர்ச்சி; evolution.

மறுவ. கூர்தலறம், படிமலர்ச்சி, திரிபாக்கம்

*[திரி > திரிந்த+அமைவு]*

**திரு** *tiru*,பெ.(n.)1. மேன்மை, மதிப்பு;honour, respect.2. உயர்வு, செல்வம்;wealth.

**எ.டு. திருக்குறள், திருநாவுக்கரசர்**

*[இ–இரை–திரை–திரு(திரட்சி, செல்வம்)]*

திரு என்னும் சொல் தென் செல்லா, வட செல்லா? எனும் எதிராடல் நிகழ்ந்தபோது (1942) பாவாணர் தந்த விளக்கம்.

தமிழில் தற்பவமாக அதாவது வட சொல் திரிபாக அல்லது சிதைவாக ஒரு சாராரால் கருதப் படும் சொற்களில் திரு என்பதும் ஒன்று.

"நிலந்தரு திருவின் பாண்டியன் அவையத்து" என்று தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்திலும்.

"திருவுடைத் திருமனையது தோன்று கமழ் புகை" (379).

"விட்டோரைவிடாஅள் திருவே" (358)

"திருவில்லல்லது கொலைவில் லறியார்" (20) என்று புறநானூற்றிலும்,

"திருச்செற்றுத் தீயுழி யுய்த்து விடும்" (188)

"சேருந் திறனறிந் தாங்கே திரு" (179)

"திருநுதல் நல்லவர் நாணுப் பிற" (1011)

"நன்றறி வாரிற் கயவர் திருவுடையார்"(1072) என்று திருக்குறளிலும்.

"இருநிலங் கடந்த திருமறு மார்பின்" (29) என்று பெரும்பாணாற்றுப்படையிலும்.

திருநுதல்7 (241) திருத்தக்கீர் (11:11), திருஞெமிர கலம் (28:157)திருமொழி (10:12) திருமகள் (51:21) திருமால்(17) என்று சிலப்பதிகாரத்திலும், இங்ஙனமே பிற நூல்களிலும் திரு என்னும் சொல் பல்வேறு பொருள்களில் வழங்கப்பட்டுள்ளது.

உலக வழக்கில் திருக்கலியாணம், திருக்கார்த் திகை,திருக்குறள், திருக்கூத்து, திருநாள், திருநீறு, திருப்பணி,, திருப்பதி, திருப்பதிகம், திருப்பாற்கடல், திருப்புகழ், திருமகள், திருமால், திருமங்கலம், திருமங் கலியம், திருமணம், திருமலை, திருமால், திருமுகம், திருமுடி, திருமுறை, திருமுன், திருமேனி, திருவடி, திருவரங்கம், திருவருள் திருவள்ளுவர், திருவாக்கு, திருவாசிகை, திருவாடுதண்டு, திருவாய்மலர்தல், திருவிழா, திருவிளக்கு, திருவிளையாடல், திருவுளம், திருவேங்கடம், திருவோடு முதலிய நூற்றுக்கணக் கான சொற்கள் தொன்று தொட்டு வழங்கி வரு கின்றன.

தெய்வப் பெயர், அடியார் பெயர், தெய்வத்தின் அல்லது தெய்வத் தொடர்புள்ள சினைப் பெயர், ஆடையணிப் பெயர், உணவுப் பெயர், வினைப் பெயர், இடப்பெயர், நூற்பெயர், முதலியன தம் தூய்மையைக் குறித்தற்குத் திரு என்னும் அடைபெறுவது தொன்று தொட்ட வழக்காகும்.

<u>எ.டு.</u>

| | |
|---|---|
| தெய்வப் பெயர் | திருமுருகன் |
| அடியார்பெயர் | திருக்கண்ணப்பர்.<br>திருமழிசையாழ்வார். |
| சினைப் பெயர் | திருச்செவி, திருக்கண்மலர். |
| ஆடையணிப்பெயர் | திருப்பரிவட்டம். திருமலை<br>திருக்கைக்காறை. |
| உணவுப் பெயர் | திருக்கன்னலமுது,<br>திருப்படிமாற்று. |
| வினைப்பெயர் | திருப்பள்ளியெழுச்சி,<br>திருவுலாவரல், திருக்காட்சி,<br>திருக்கை வழக்கம். |
| இடப்பெயர் | திருக்கற்றளி, திருமுற்றம்,<br>திருப்பரங்குன்றம். |
| நூற்பெயர் | திருமொழி,<br>திருநெடுந்தாண்டகம்<br>திருக்கடைக்காப்பு. |
| பொருட் பெயர் | திருவலகு, திருப்படிக்கம்,<br>திருமுட்டு. |
| குணப் பெயர் | திருக்குறிப்பு, திருக்கோலம். |
| வாத்தியப் பெயர் | திருச்சின்னம், திருத்தாளம். |

அரசர் தெய்வத் தன்மையுள்ளவராகக் கருதப் பட்டதினால், அவர் தொடர்புள்ள சொற்களும் திரு என்னும் அடைபெற்றன.

<u>எ.டு.</u> திருவாய் கேள்வி, திருமந்திரவோலை, திருமாடம், திருக்கணக்கு, திருமுகக்காணம், திருவாணை, திருமுப்பு, திருவாண்டெழுத்திடுதல், திருநல்லியாண்டு, திருக்கைச் சிறப்பு.

அடியார்கள் தெய்வத்தன்மையுள்ளவராதலின், அவர்களோடு தொடர்புற்றவற்றின் பெயர்களும் திரு என்ற அடைபெறும்.

<u>எ.டு.</u> திருக்குகை, திருக்கூட்டம், திருக்கோவை, திருமடம், திருத்தொண்டர், திருநாள், திருநட்சத்திரம், திருவேடம்.

திருமகள், திருமகன், முதலியபெயர்களில் திரு என்னும் அடைமொழி பிரிக்க முடியாதவாறு பிணைந் துள்ளது.

திரு என்னுஞ் சொல்மேற்கூறியவாறு அடை மொழியாய் மட்டுமின்றி தனிச் செல்லாகவும் வந்து முறையே செல்வம், சிறப்பு, அழகு, ஒளி, செழிப்பு, பேறு (பாக்கியம்) தெய்வத் தன்மை, தூய்மை, நன்மை, நல்வினை, கணியன் (சோதிடன்) மங்கலம், மங் கிலியம், ஒருவகைத் தலையணி, மார்பில் தோன்றும் வீற்றுத் தெய்வம் முதலிய பொருள்களைத் தரும்.

இவற்றுள் செல்வம் என்னும் பொருளே முதல் தோன்றியதும் பிறவற்றுக்கெல்லாம் அடிப்படை யுமாகும்.

"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்." (குறள்.750)

"இல்லானை இல்லாளும் வேண்டாள் மற்றீன் றெடுத்த தாய்வேண்டாள் செல்லா தவன்வாயிற் சொல்" என்பவற்றால் சிறப்பும்.

"அன்னமொடுங்கினால் ஐந்து மொடுங்கும்" என்றும் எளிய இனத்தாரைக் காரொக்கல் (கரிய சுற்றதார்) என்றும் "தரித்திரம் மிக்க வனப்பினை யொடுக்கிச் சரீரத்தை யுலர்த்தாவாட்டும்" என்றும் கூறுவதால் அழகும் ஒளியும்;

"திருவுடை மன்னரைக்காணில் திருமாலைக் கண்டேனே யென்னும்" என்பதால் தூய்மையும் செல் வத்தாலுண்டாதல் காண்க. இங்ஙணமே பிறவும்

திரு என்னும் சொல் முதலராவது பொருட் பெயராய்ப் பின்பு பண்புப் பெயராயும் வழங்கி வரு கின்றது. இச்சொல்லினின்று திருமை (சுந்த. முதலாட். 35) திருவம் (சிலப்.12) முதலிய பண்புப் பெயர்களும் திருவன் (திவ்.இயற் 2.84) திருவாளன் (திவ். பெரியதி.5.5.1) திருவாட்டி (திருக்கோ.294 உரை) முதலிய உயர்திணைப் பெயர்களும் தோன்றியுள்ளன.

திருவன் } = 1. செல்வன், பெருமகன்;
திருவாளன் } = 2 திருமால்.
திருவாட்டி = 1. செல்வி, பெருமகள்,
2. திருமகள்.3.தேவி.

**திரு என்னும் சொல்லின் வேர்:**

உயிரெழுத்துகளில் ஈகாரம் அல்லது இகரம் அண்மைச் சுட்டும் கீழ்மைச் சுட்டும் பின்மைச் சுட்டுமாகும்.

அண்மைச் சுட்டை இவண், இது , இங்கு, இவள், முதலியசொற்களாலும்,கீழ்மைச் சுட்டை இகம், இகு, இழி, இளி, இறங்கு முதலிய சொற்களாலும் பின்மைச் சுட்டை இடை, இடறு, இணங்கு,இழு, இரை, இறை முதலிய சொற்களாலும் அறிய லாம்.(இதன் விரிவை எனது சுட்டு விளக்கம் என்னும் சுவடியிற் கண்டுகொள்க.)

இரை என்னுஞ் சொல்லுக்கு ஒலித்தல், சீறுதல், மூச்சுவாங்குதல், வீங்குதல் முதலிய வினைப்பொருள் களும், ஒலி, அஃறிணை யுயிரிகளின் உணவு, நாகப் பூச்சி முதலிய பெயர்ப் பொருள்களும் உள்ளன. இவற்றுள் மூச்சுவாங்குதல், வீங்குதல், உணவு, நாகப் பூச்சி என்னும் பொருள்கள், இழுத்தல், என்னுங் கருத்தை அடிப்படையாகக் கொண்டன.

மூச்சிழுத்தலுக்கும் மூச்சிழுக்கும் ஈளை (காச) நோய்க்கும் இரைப்பு என்றும் இழுப்புள்ள மாந்த நோக்கு இரப்பு மாந்தம் என்றும் இழுப்பை யுண்டாக்கும் எலிக்கு இரைப்பெலி என்றும் பெயர்.

இகரச் சுட்டப் பிறப்பினாலும் ரகர ழகரப் போலியாலும் இழுப்பு பொருளாலும்இரை என்னுஞ் சொற்கு இனமானதாகும். இரை என்னுஞ் சொல் முதலில் தகரமெய் பெற்றுத் திரை என்றாகும். திரைத்தல், இழுத்தல், வேட்டியைமேல்இழுத்துக் கட்டு தலைத் திரைத்துக் கட்டுதல் என்பது தென்னாட்டு வழக்கு ஆடையை இழுத்திழுத்து வைத்தாற் போன்ற அலைக்கும், தோற்சுருங்கற்கும் ஒருபுறமாகவும் கீழா கவும் இழுக்கப்படுகின்ற படுதாவுக்கும் திரை யென்னும் பெயரிருத்தலை நோக்குக.

இரை–திரை ஒ,நோ, ஏண்–சேண்.

ஆடையாவது நீராவது திரையும் போது, திரைந்தவிடத்தில் திரட்சியுண்டாவதால் திரைத லுக்குத் திரளுதல் என்னும் பொருளும் உண்டாயிற்று. பால் திரளுதலைத் திரைதலென்று கூறுவதை நோக்குக. திரள் என்னுஞ் சொல்லும் திரை என்பதி னின்று திரிந்ததே. அலையானது ஓரிடத்திலில்லாமல் இடை விடாது அலைந்து கொண்டிருப்பதால் அலை தல் வினை அலையைக் குறிக்கும் திரை என்னும் சொல்லின் திரிபான திரள் என்னுஞ் சொல்லாற் குறிக்கப்பட்டது.

திரு என்னுஞ் சொல் மேற்கூறிய திரை, திரள், திரி என்னும் மூன்று சொற்கும் சொல்லாலும் பொரு ளாலும் இனமாகும். திரை போல் ஓரிடத்திலில்லாமல் என்றும் அலைந்து கொண்டிருப்பது என்னும் பொருளிலாவது, மக்களால்திரட்டப்படுவது என்னும் பொருளிலாவது, செல்வத்திற்குத் திரு என்னும் பெயர்

தோன்றியிருக்கலாம்.

"ஆறிடு மேடு மடுவும்போ லாஞ்செல்வம்"

"அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வஞ்"

"சகடக்கால்போலவரும்"

என்று கூறியதனாலும், செல்வம் என்னும் பெயருக்குச் செல்வது என்பது பொருளாதாலாலும் செல்வம் நிலையற்றது என்றும், ஆக்கப்படுவதால் ஆக்கம் என்றும் தேடப்படுவதால்தேட்டு என்றும் செறிந்திருப்பதால் வெறுக்கையென்றும் பெயர் பெற்றிருப்பதினால் செல்வம் திரட்டப்படுவது என்றும், இரு கருத்துகள் நம் முன்னோர்க்குத் தோன்றியிருந்தமை புலனாம். இவ்விரண்டி லொன்று திரு என்னுஞ் சொல் தோன்றுவதற்குத் காரணமா யிருந்திருக்கலாம். திரை என்னும் சொல்லே செல்வத்தைக் குறியாமல் அதன் திரிபான திரு என்னுஞ் சொல் குறிப்பதேன் எனின் சொல்லின் பொருள் மாறும்போது சொல்லும் மாற வேண்டும் என்னும் சொல்லின் பொருள் சொல்லாக்கப் பொது விதிபற்றியென்க. அல்லாக்கால் பல பொருள்கள் உடன் மயங்கிக் கருத்துணர்வு தடைப்படுமென்க.

திரை என்பதிலிருந்து திரு என்பது தோன்றி யிருத்தல் திருப்பாற் கடலிலிருந்து திருமகள் தோன்றி னாள் என்னுங் கதையை நினைவுறுத்தும் திரை– கடல் திரு – திருமகள்.

"திரைகட லோடியும் திரவியந் தேடு"

"நீர்போயும் – ஒன்றிரண்டாம் வாணிகம் இல்."

என்பவற்றால் பட்டினப்பாலை, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியவற்றாலும், பண்டைய காலத் திலும் நீர் வாணிகத்தாலேயே பெரும் பொருளீட்டப் பட்டமை அறியப்படும். கடல் போய்வந்த செல் வத்தைக் கடல் தந்ததென்று கூறுதல் பொருத்த மானதே. மேலும் செல்வத்தின் சிறந்தவகையான முத்தே பெரும்பாலும் கடலிலிருந்தெடுக்கப்படுவது. இதனாலும் செல்வம் கடலில் பிறந்ததாகக் கூறலாம். செல்வத்தின் உருவகமே அல்லது ஆட்படையே (personification) திருமகளாதலின், அவள் திருமாலின் இருப்பிடமாகக் கூறப்படும் திருப்பாற்கடலி னின்று தோன்றினதாகக் கூறப்பட்டாள் என்க. (வடமொழியிலுள்ள திரவியம் என்னும் சொல் திரவம் என்பதி னின்றே தோன்றியது போரும்).

ஆகவே, திரு என்னுஞ் சொல் தனிமொழி யாகவும் அடைமொழியாகவும் முதலாவது செல்வப் பொருளிலும் பின்பு அதன் வழிப்பட்ட பல பொருள் களிலும் தொன்று தொட்டு வழங்கிவரும் தனித் தமிழ்ச் சொல்லாதல் பெறப்படும். இலத்தீன், கிரேக்க, செருமானியம் முதலிய மேலையாரிய மொழிகளிலும் இச்சொல்லிலாமையால், இது வட சொல்லன்று என் பதும் வெளியாம். ஆரியர் நாவலந்தேயத்திற்கு (இந்தியாவிற்கு) வந்த பின் வட மொழியிற் கலந்து போன நூற்றுக் கணக்கான திரவிட அல்லது தென் சொற்களில் திரு என்பது ஒன்றாகும்.

திரு என்னும் தென்சொல் வடமொழியில் ஸ்ரீ என்றாகிப் பின்பு சீ எனத் தமிழிற் சிதைந்து வழங்கு கின்றதென்க. இப்போது தமிழ் நாட்டில் கள்ளிக் கோட்டையெனும் மேலக்கரைத் துறை நகராகிய கோழிக்கோட்டிலிருந்து இங்கிலாந் திற்கு ஏற்றுமதி யான துணி ஆங்கிலத்தில் கலிக்கோ (Calico) என்றும் பின்பு அதன் வழியாய்த் தமிழில் கலிக்கா என்றும் வங்காளத்தில் காளிக்கோட்டம் என்னும் நகர் பெயர் ஆங்கிலத்தில் கல்குற்றா என்றும் பின்பு அதன்வழியாத் தமிழில் கல்கத்தா என்றும் வழங்குவதை நோக்குக. கள்–காளம்–காளி. கள்– கருப்பு. கோடிய மதில் கோட்டம் கோடுதல்= கோணுதல் அல்லது வளைதல்.

கோழிக்கோடு →Calico→கலிக்கா

காளிக்கோட்டம்→Calcutta→கல்கத்தா

திரு என்பது ஸ்ரீ என்று திரியவே, திருமான் என்பதை ஸ்ரீமான், சீமான் என்றும் திருவாட்டி என்பதை ஸ்ரீமாட்டி, சீமாட்டி என்றும் சொல்லவும் எழுதவும் தலைப்பட்டனர்.

திருமான் என்பது திருமகன் என்பதின். மரூஉ.

<u>ஓ.நோ.</u> பெருமகன் – பெருமான். பெருமானுக்கு பெண்பால் பெருமாட்டியாதல்போல திருமானுக்குப் பெண்பால் திருமாட்டியாகும். ஸ்ரீ என்பது திரு என்பதன் திரிபே யாதலால் ஸ்ரீ அல்லது சீ என்னும் அடைமொழி பின்பவரும் தனித் தமிழில் எழுதப்படும்.

| வடமொழிவடிவம் | தென்மொழிவடிவம் |
|---|---|
| ஸ்ரீ | திரு |
| மகாராஜ ராஜ ராஜ ஸ்ரீ } | மா அரசு, அரசத்திரு |
| ம– – – ஸ்ரீ } | பேர் அரசு, அரசத்திரு |
| ஸ்ரீலஸ்ரீ | திருவத்திரு, |
| | திருப்பெருந்திரு |
| சீகாழி | திருக்காழி |
| சீகாளத்தி | திருக்காளத்தி |

திருநாவுக்கரசு, திருமங்கையாழ்வார் முதலிய பெயர்களில் வரும் திரு என்னும்அடை ஆங்கிலத்தில் அடியார் பெயர் முன் சேர்க்கப்படும் St. (Saint) என்பதற்குச் சமமாய்த்தூய்மை குறிப்பதாயிருப்பதால் அடியாரல்லா பிற மக்களைக் குறிக்கும் போது திருவாளர் திருவாட்டியார் என்ற அடைகளையே முறையே ஆண்பாற்கும் பெண்பாற்கும் வழங்குவது தக்கதாகும். திருவாளன்மார் திருவாட்டிமார் என்பன பலர்பால் அடைகள்.

சீகாழியைச் சீர்காழியென்று வழங்குவது சரியாய்த் தோன்றவில்லை. சிறு தனம் என்பது ஸ்ரீ தனம் எனத் தவறாய் வழங்குகிறது. இதுகாறுங் கூறியவற்றால் திரு என்பது தென்சொல்லே யென்றும் அதன் திரிபே ஸ்ரீ யென்றும் தெரிந்து கொள்க.

-Thew Putturian, Vol.VIII. Feb.1942.

**திருத்தலச்செலவு** *tiru-t-talac-celavu,* பெ. (n.) 1. போற்றத்தக்கதும் தொழத்தக்கதுமான இடங்களுக்குத் தூய்மையோடு விரும்பிச் சென்று வரும் பயணம்; pilgrimage to holy places. 2. மகமதியர் 'மெக்கா' என்னும் திருத்தலத் திற்குச் செல்லும் செலவு (கச்சி); pilgrimage to Mecca.

*[திரு+தலம்+செலவு]*

**திருமணி** *tirumaṇi,* பெ. (n.) கோமேதகம்; cinnamon stone.

*[திரு+மணி]*

**திருமால்திருமண்** *tirumāltirumaṇ,* பெ. (n.) மாலியர் சிலர் நெற்றியிலிடும் மஞ்சளான திருமண் (கோபி சந்தனம்); yellowish earth used by certain vishnu devotees.

*[திருமால்+திருமண்]*

**திருமுழுக்காட்டு-தல்** *tirumuḻukkāṭṭu-,* செ. குன்றாவி. (v.t.) திருமுழுக்கு செய்தல் (அபிடேகித்தல்); to bathe, to anoint.

*[திருமுழுக்கு+ஆட்டு-]*

**திருவடிக்கூலி** *tiruvaḍikkūli,* பெ. (n.) திருவடி தாங்குவோர்க்குக் கொடுக்குங் கூலி (சீபாதக் கூலி); wages of vehicle learn in temple.

*[திரு+அடி+கூலி]*

**திருவளர்செல்வி** *tiruvaḷarśelvi,* பெ. (n.) சிறு பெண்களின் அல்லது மணமான பெண்களின் பெயர்க்கு முன் வழங்கும் மங்கலச் சொல் (சௌபாக்கிய வதி); a tittle applied to a girl or woman whose husband is alive.

*[திரு+வளர்+செல்வி]*

**திருவிளக்கு** *tiruvilākku,* பெ. (n.) கோயிலிலேற்றும் விளக்குகள்; row of lights set up in temples.

*[திரு+விளக்கு]*



**தில்** *til,* பெ. (n.) இடை; (part). ஒலிக்குறிப்பு இடைச்சொல்; one mopoic-particle used in poetry. செல்லாமோதில் சில்வளை விறலி.

*[தில்-ஒலிக்குறிப்புச்சொல்]*

**தில்லி** *tilli,* பெ. (n.) ஒரு வகை நாட்டுப்புற நடனம்; a dance variety in folklore. தில்லி ஆடினர் (கொ.வ.).

*[தில்லாலே-தில்லி]*

**தில்லாலே** *tillāle,* பெ. (n.) இடைச்.; (part.) நாட்டுப்புறப்பாடல்களில் இன்னோசைக்காக ஈற்றில் சேர்க்கப்படும் அசைமொழி; an empty morph added at the end of a stanza in songs of folklore. வண்டிக்காரா வண்டிக் காரா மணி தில்லாலே, வடக்கே போற வண்டிக்காரா மணி தில்லாலே.

*[தில்-(ஒலிக்குளிப்பு)- தில்லாலே]*

**திறமறவன்** *tiṟamaṟavaṉ,* பெ. (n.) குறிக் கோளில் மாறாத பெருவீரன்; ideal hero or warrior.

*[திறம்+மறவன்]*

**தீக்கடவுள்** *tīkkaḍavuḷ,* பெ. (n.) நெருப்புத் தெய்வம் (அக்கினி பகவான்); the God of fire.

*[தீ+கடவுள்]*

**தீக்குறி** *thekkuri,* பெ. (n.) தீய நிமித்தம்; sign of future bad event.

**த.வ. தீத்திறம்**

*[தீமை+குறி>தீக்குறி]*

**தீட்டாளி** *tiṭṭāḷi,* பெ. (n.) மாத விலக்கான பெண் (சூதகப்பெண்); a woman in menses or periods.

*[தீட்டு+ஆளி]*

**தீட்டு இசிவு** *tiṭṭuiśivu,* பெ. (n.) மாதவிடாய்க் காலங்களில் உண்டாகும் ஒரு வகை இழுப்பு நோய் (சூதகசன்னி); a kind of hysteria, a disease of woman during the period of mensturation.

*[தீட்டு+இசிவு]*

**தீட்டுப்பலகை** *tēṭṭu-p-palagai,* பெ. (n.) உளி போன்றவற்றைத் தீட்டுவதற்குப் பயன்படும் பலகை; plank used to sharpen chisel, koire etc.,

*[தீட்டு+பலகை]*

**தீட்டுமலடு** *tiṭṭumalaḍu,* பெ. (n.) அறுவகை மலட்டில் ஒன்று (சூதகமலடு); barrenness due to menstrual disorder one of six maladu.

*[தீட்டு+மலடு]*

**தியனூர்** *tiyanūr,* பெ. (n.) சிவகெங்கை மாவட்டம் மானாமதுரை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in siva gangai district.

*[தீயன்+ஊர். தீயன் (இனியன்) இயற்பெயர்]*

**தீர்ப்புமுறி** *tirppumuṟi,* பெ. (n.) வழக்கைத் தீர்த்தெழுதுஞ் சீட்டு (நாஞ்.) (கண்டபத்திரம்); award in a dispute.

*[தீர்ப்பு+முறி]*

**துடும்பு** *tuḍumbu,* பெ.(n.) பறை; kettle like drums. "கோயிலில் நோம்பு சாற்றிய தைத்துடும்பு அடித்துத் தெரிவித்தனர்".

*[துடும்-துடும்பு]*

**துண்டுகவ்வணம்** *tuṇḍukavvaṇam,* பெ. (n.) அரைக்கவ்வல் பார்க்க; see araikkavval.

*[துண்டு+கவ்வணம்]*

**துணிவினை** *tiṇivinai,* பெ. (n.) வழக்கத்திற்குக் கூடுதலான வகையில் செய்யும் துணிச்சலான அருஞ்செயல்; adventure.

*[துணி+வினை]*

**துணைப்பாய்** *tuṇaippāi,* பெ. (n.) பறுவான்களில் விரிக்கப்படும் சதுரப் பாய்களின் வெளிப் புறத்துப் போடப்படும் துணைப்பாய் (டகதூர்); studding sail.

*[துணை+பாய்]*

**துணைபுரி-தல்** *tuṇaipuri-,* செ.கு.வி. (v.i.) உதவுதல்; to help, assist.

*[துணை+புரி-,]*

**துமுக்கி** *tumukki,* பெ. (n.) சுடுவதற்குப் பயன் படுத்தும் ஒரு படைக்கலக்கருவி (துப்பாக்கி); gun.

*[துமுக்கு-துமுக்கி]*



**துலா** *tulā,* பெ. (n.) கிணற்றிலிருந்து நீர் இறைக் கும் ஏற்றக்கலம்; piccotah.

*[துலை-துலா]*

**துவர்கருக்கி** *tuvarkarukki,* பெ. (n.) மிக்கத் துவர்ப்பான கருக்கு நீர் (கசாயம்); a decoction extremely astringent.

*[துவர்+கருக்கி]*

**துள்ளல்நடை** *tul̤l̤alnaḍai,* பெ. (n.) குழந்தை களின் துள்ளு நடை (சிங்காரப் பாய்ச்சல்); frisky movement as of children.

*[துள்ளல்+நடை]*

**துளைக்கயிறு** *tul̤ai-k-kayiṟu,* பெ. (n.) பலகை ஒட்டைகளின் வழியாய்ச் செல்லுங் கயிறு (டப்புக்கயிறு); rope passing through the holes at the extremities of a log. (M.Navi.).

*[துளை+கயிறு]*

**தூலம்** *tūlam,* பெ.(n.) கூரை அல்லது ஓட்டு வீட்டில் மேற்கூரையைத் தாங்குவதற்காக எதிர் சுவர் இரண்டின் மீதும் படியுமாறு வைக்கப்பட்ட உறுதியான நெடுமரம்; a lengthy wooden log placed on the top of the opposite walls so as to support the weight of the roof of that thatched or tiled house.

*[தூ-தூல்-தூலம்]*

**தூ விடுதல்** *tūviḍu-,* தொ.பெ. (vbbn.) சேர்ந் திருக்கும் சுட்டு விரலையும், நடு விரலையும் பிரித்துக் காட்டி நட்பின்மைக் குறிப்பு தெரிவித்தல் (டூ விடுதல்); an exclamation, declaring breach of friendship, indicated by disjoining the ring formed of the fore and middle fingers.

*[தூ+விடுதல்]*

**தூயமெய்மம்** *tūyameymam,* பெ. (n.) மூவகை மெய்ப்பொருட்களுள் ஒன்று (சுத்ததத்துவம்); pure catagories, one of three tattuvam, compressing seva tattuvam, salletat-tuvam sadākkiya-tattuvam cle-tatuvam. cutta-vittiya-tattuvam.

*[தூய+மெய்மம்]*

**தூயபடி** *tūyapaḍi,* பெ. (n.) பிழையின்றி எழுதப் பட்டபடி (சுத்தப்பிரதி); fair copy. 2. ஆய்வு செய்யப்பட்ட நூல்; revised and corrected copy of a book.

*[தூய+படி]*

**தெப்பம்** *teppam,* பெ. (n.) உப்பளத்தில் நீர் இறைக்கப்படும் முதல் பாத்தி; first salt - pan.

*[தெப்பு-தெப்பம்]*

**தென்முக நம்பி** *teṉmuganambi,* பெ. (n.) தென்புறமாக அமர்ந்து நால்வர்க்கும் அருளிய சிவன் திருவுருவம் (தட்சிணாமூர்த்தி); a Siva's posture.

*[தென்+முகம்+நம்பி]*

**தென்னங்கிடுகு** *tennaṅkiḍugu,* பெ. (n.) தென்னங்கீற்றால் ஆன தட்டி; coconut palm leaf screen.

**தேக்கை** *tēkkai,* பெ.(n.) தேகை எனும் இராசாளிப் பறவை; royal falcon.

**மறுவ. தேகை, டேகை, வல்லூறு**

*[தாக்கு-தாக்கை-தேக்கை]*

**தேயப்பகுதி** *tēyappagudi,* பெ. (n.) நாட்டின் ஒரு பகுதி (சுபா); district of province, especially of the moghul empire.

*[தேயம்+பகுதி]*

**தேன்முளரி** *tēṉmul̤ari,* பெ. (n.) சருக்கரை அல்லது தேன் கலந்து பக்குவப்படுத்திய முளரி (ரோசா)ப்பூ இதழ் (குல்கந்து); a confection of rose prepared in sugar or honey candied rose.

*[தேன்+முளரி]*

**தொங்கல் விழு-தல்**[1] *toṅgalvil̤u,* செ.குன் றாவி. (v.t.) பற்றாக்குறை காணுதல்; to deficit.

*[தொங்கல்+விழு-,]*

**தொங்கல் விழு-தல்**[2] *tōṅgalvil̤u-,* செ.கு.வி. (v.i.) பணம் முதலியன குறைதல் (டொங்கு விழுதல்); to decrease, dwindle, to be short as money.

**மறுவ. குறைபடல்**

*[தொங்கல்+விழு-]*

**தொங்கலில்விடு-தல்** *toṅgalilviḍu-,* செ.கு.வி. (v.i.) இடர்ப்படுமாறு விட்டுவிடுதல், உதவி செய்யாமல் விட்டுவிடுதல்; to leave aperson in distress without helping.

*[தொங்கல்+இல்+விடு]*

**தொங்குக்கட்டில்** *toṅgukkaṭṭil,* பெ. (n.) நோயாளிகளை எடுத்துப் போகப் பயன்படும் ஒரு நீண்ட மூங்கிலின் நடுவில் தொங்கும்

கட்டிலை உடைய ஒரு கருவி (டுவி); a swinging lifter for carrying sick persons, a cot, or frams suspended by the four corners from a bamboo pole.

*[தொங்கு+கட்டில்]*

**தொங்குமஞ்சம்** *tōṅgumāñjam,* பெ. (n.) தூக்கிச்செல்லும் மஞ்சம் (டோலி); lifter, dooly, a kind of sedan.

*[தொங்கு+மஞ்சம்]*



**தொச்சம்** *toccam,* பெ. (n.) நிலுவை (கசர்பா பத்து) (வின்.); undisturbed balance. இன்னும் எங்களுக்குக் கொடுக்க வேண்டிய தொச்சம் இருக்கிறது (இ.வ.).

*[தொள்–தொச்சம்]*

**தொடரியம்** *toḍariyam,* பெ. (n.) கூற்று, வினா போன்றவற்றை வெளிப்படுத்த வினைச் சொல்லை உள்ளடக்கிய முற்றுத்தொடர்; sentence.

*[தொடர்+இயம்]*

**தொண்ணை** *toṇṇai,* பெ.(n.) இனிப்பில்லாத கரும்பின் நுனிப்பகுதி, கோதாளை; tip portion of the sugarcane.

*[தொள்–தொண்–தொண்ணை]*

**தொப்பைக்காரி** *toppai-k-kāri,* பெ.(n.) பணக்காரி; rich woman. "கப்பல்காரன் பெண்டாட்டி தொக்காரி, கப்பல் கவிழ்ந்து போனால் பிச்சைக்காரி (பழ.).

*[தொப்பை+காரி]*

**தொம்பை** *tombai,* பெ.(n.) சீழ் முடியொடு மூங்கிற் பிளாச்சினால் செய்த தவசம் கொட்டி வைக்கும் மட்பாண்டத் தாழி போன்ற மூங்கில் கலன்; a barrel like storage oval shaped basket utensil to save food grains with small opening at the bottom.

மறுவ. குதிர், இருவாய்சால்

*[அம்பு–தூம்பை–தொம்பை]*

**தொல்காப்பியர் காலம்** *tolkāppiyar kāḷam,* பெ. (n.) **தொல்காப்பியர் வெள்ளணி** பார்க்க; see *tolkāppiyar veḷḷani*

*[தெப்பு–தெப்பம்]*

**தொல்காப்பியர் வெள்ளணி** *tolkāppiyar veḷḷani,* பெ.(n.) தொல்காப்பியர் பிறந்த நாள் விழா; Birthday celebration of Tolkappiya the great, தொல்காப்பியர் வெள்ளணி விழா கொண்டாடுவது மிகவும் இன்றியமையாதது.

*[தொல்காப்பியர்+வெள்ளணி]*

தமிழின் செம்மொழித் தகவுக்கு ஆணிவேராக இருப்பது தொல்காப்பியம். இதனை இயற்றிய தொல் காப்பியர் பிறந்த நாள் ஒவ்வோராண்டும் மேழ வெள்ளுவா (சித்திரை பௌர்ணமி) அன்று கொண் டாடுவது தகும் என நூற்றுக்கும் மேற்பட்ட தமிழறி ஞர்கள் கூடிய காரைக்குடிக் கருத்தரங்கில் 2009 ஆம் ஆண்டு திசம்பர் திங்களில் தீர்மானம் நிறைவேற்றப் பட்டுள்ளது. அந்தக் கருத்தரங்கில் தொல்காப்பியர் பிறந்த ஆண்டு கி.மு.711 என வெளியிடப்பட்ட கருத்து மறு ஆய்வுக்கு உரியதாக இருக்கிறது. தொல்காப் பியரின் பிறந்த ஆண்டை கி.மு.864 எனக் கணிப்பதே பொருந்தும் என்பதற்கான காரணங்கள் இங்கே தரப்படுகின்றன.

1. 23.4.2010 நாளிட்ட Frontline இதழில் ஆர். கிருட்டிணகுமார் எழுதிய முசிறிப்பட்டின அகழ்வா ராய்ச்சிக் கட்டுரையில் கி.மு.1000 முதல் எகுபது நாட்டு பெரனிகே துறைமுகத்துக்குச் சேர நாட்டு வணிகக் கப்பல்கள் சென்று வந்ததைக் குறிப்பிட் டிருக்கிறார். இதே காலத்தைச் சார்ந்த சாலமன் கப்பல்கள் தமிழகத் துறைமுகங்களுக்கு வந்ததை விவிலியம் பழைய ஏற்பாடு குறிப்பிடுகிறது. இத்தகைய சூழல்களைக் கருதித் தொல்காப்பியர்

காலம் கி.மு.1000 ஆகலாம் எனத் தனிநாயகம் அடிக ளாரும் கருத்து வெளியிட்டிருக்கிறார். ஆர்.சிமசும்தார், தன் நூலில் கலிங்கத்தைக் கி.மு.1000 அளவில் ஒரு பாண்டியன் ஆண்டான் என்றும் அவன் வடபர்மா பரோமர் பகுதியையும் வென்றான் என்றும் கூறி யிருப்பது கருதத்தக்கது. ஆதலால் தொல்காப்பியர் காலத்தை கி.மு.711 எனப் பின்னோக்கிக் கணிக்க வேண்டியதில்லை.

2. 1920ஆம் ஆண்டில் மதுரை மனோன்மணி விலாச அச்சகத்தில் த. ஆறுமுகநயினார் பிள்ளை இயற்றிய நற்குடிவேளாளர் வரலாறு எனும் 1035 செய்யுள் கொண்ட நூல் வெளியிடப்பட்டது. இதில் கோட்டை வேளாளர் மரபு வழிப்பட்ட இருங்கோவேள் பாண்டிய மரபினரின் 201 தலைமுறை வரலாறு கூறப் பட்டுள்ளது. இந்நூல் அறிஞர்களின் பார்வைக்கு வரவில்லை.

இதில் கி.மு.901 (கலியாண்டு 2200)இல் ஏற்பட்ட கடல்கோளால் குசராத்து மாநில துவரை (துவாரகை) மாநகரும் தென்தமிழக மணலூர்ப் பகுதியும் கடலில் மூழ்கியதாக அறியமுடிகிறது. கடல்கோளால் நாடி ழந்த மக்களுக்கு நிலம் தந்த பேருதவி பொலந்தார் மார்பின் நெடியோனாகிய நிலந்தருதிருவின் பாண்டியன் தொல்காப்பியத்தை அரங்கேற்றிய வனாகக் கூறப்படுகிறான். ஆதலின் தொல்காப் பியத்தின் மேல் வரம்பு கி.மு.901 என்பது உறுதிப் படுகிறது.

கொற்கைக்குக் குடிபெயர்ந்த பாண்டியர் மரபில் கி.மு.834இல் கூழைப் பாண்டியன் முடி சூட்டிக் கொண்டதால் இதற்கு முன்பே தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்ட காலத்தின் கீர் வரம்பு கி.மு.834 ஆண்டுக்கு முற்பட்டது எனத் தெளிவாகிறது.

3. பெரும்பாலான நூற்பாக்களில் என்ப, என்மனார் எனக் குறிப்பிடும் தொல்காப்பியர்

" வடசோற் கிளவி வடஎழுத் தொரீஇ

எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே"

எனும் நூற்பாவில் தன்னுடைய புதிய கருத்தை வெளியிடுகிறார். ஐந்திர இலக்கணக் காலத்தில் இல்லாத வடசொற்கள் தொல்காப்பியர் காலத்தில் தமிழில் புகத்தொடங்கியதால் இடப்பட்ட புதிய இலக்கணக் கட்டுப்பாடு இது.

ஆரியர்கள் கி.மு.1600 முதல் 1300 வரை பஞ்சாபிலும், கி.மு.1300 முதல் 1000 வரை சாசுவதி (குமரிக்கன்னி) ஆற்றுச் சமவெளியிலும் கி.மு.1100 முதல் கி.மு.900 வரை கங்கைப் பகுதியிலும் கி.மு.900 முதல் 800 வரை கலிங்கத்திலும் குடியேறினர். கி.மு. 800க்குப் பிறகு விந்திய மலைக்குத் தெற்கே குடி யேறத் தொடங்கினர். மேற்கண்ட இடங்களில் அந் தந்த காலவரம்பில் ஆரியர் பயன்படுத்திய சாம்பல் நிறப்பானை ஓடுகள் அகழாய்வில் கிடைத்துள்ளன எனத் தொல்பொருள் ஆய்வாளர்கள் கண்டறிந் துள்ளனர்.

கலிங்கத்தில் ஆரியர் குடியேறிய கி.மு.900 – கி.மு.800 கால அளவில் வடசொற்கள் உள்ளது உள்ளபடியே கலந்து பாலிமொழி உருவாகியது. அதற்கு கி.மு.800 அளவில் திருத்தியமைத்த 41 எழுத்துகள் பாலிமொழியின் எழுத்துகளாயின. பிராகிருத மொழி தமிழைப் போல் வடமொழி எழுத்து களை நீக்கிவிட்டது. எனவே, வடசொற் கலப்பு நேரடியாகத் தமிழைத் தாக்கிய கி.மு.900 – கி.மு.800 கால வரம்பே தொல்காப்பியர் வாழ்ந்த காலமாகும்.

4. ஆரியர் வருமுன் இந்தியா முழுவதும் தமிழ் பேசப்பட்டது என்று அண்ணல் அம்பேத்கரும் குறிப்பிட்டிருக்கிறார். தொல்காப்பியச் சொற்களில் சில, சிந்தி மொழியில் <u>உம்–உந்து</u> என்றும் <u>**சிவணுதல்**</u> என்பது குசராத்தி மொழியில் <u>**ஜோவுண்**</u> என்றும் 10இலட்சம் எனும் எண்ணைக் குறித்த <u>**நெய்தல்**</u> என்பது ஒரியா (கலிங்கம்) மொழியில் <u>**நியுத**</u> என்றும் இன்றும் வழங்கி வருகின்றன. தொல் காப்பியர் காலத்தில் கோடி எனும் எண்ணுப்பெயர் இல்லை. குவளை என்னும் சொல்லே கோடியைக் குறித்தது. கோடி எனும் சொல் முதன் முதலாகப் பாலிமொழியில் தான் தோன்றியது. இதன் காலம் கி.மு.800 என்பதால் தொல்காப்பியர் கி.மு.800க்கு முன்பு வாழ்ந்தவர் எனத் தெரிகிறது. குவளை எனும் தமிழ்ச்சொல் பாலிமொழியில் குவளை–குவடி–கோடி எனத் திரிந்து விட்டது. குவளை என்னும் சொல் லுக்குக் கோடி எனும் எண்ணுப் பொருள் இருந்ததை "ஆயிரம் குவளை" என சுக்கிர நீதி (106) குறிப் பிடுகிறது.

கோடி எனும் எண்ணுப் பெயர் தொல்காப்பியர் காலத்திலும் இருந்திருந்தால்,

"ஐ அம் பல் லென வரூஉம் இறுதி" எனும் நூற்பாவில் கோடி என்பதன் இகர ஈறும் அகப்படுத்தி,

'இஐஅம் பல்லென வரூஉம் இறுதி' என மாற்றி எழுதியிருப்பார். ஆதலின் தொல்காப்பியர் குவளை எனும் எண்ணுப்பெயர் கோடி எனத் திரிவதற்கு முன்பு கி.மு.9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தார் எனத் தெரிகிறது.

5. கி.மு.901இல் கடல்கோள் நிகழ்ந்த பிறகு நிலத்தரு திருவின் பாண்டியன் தமிழ்ச்சங்கம் நிறுவிய செய்தி,

தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்
நிலந்தரு திருவின் நெடியோன் போல
(மதுரைக் காஞ்சி)

என மாங்குடி மருதனார் பாடிய பாடல் வரிகளாலும் அறியப்படுகிறது.

6. கடல்கோளுக்குப் பிறகு மக்கள் குடியமர்ந்து வாழத் தொடங்கிய பின் முந்நூல் கண்டு கல்வியும், கலையும் வளர்க்கவும் தமிழ்ச் சங்கம் நிறுவவும் ஒரு தலைமுறை அதாவது 37 ஆண்டுகள் ஆகியிருக்கும். இந்நிலையில் அதங்கோட்டாசானிடம் தொல்காப் பியர் மாணவராகச் சேர்ந்தார் எனக் கணக்கிட்டால் (901-37) தொல்காப்பியர் கி.மு.864 ஆண்டு பிறந்தவராக இருக்க வேண்டும். 864 எனும் எண் ஒன்பதால் வகுபடும் எண்ணாகவும் ஒன்பதின் பெருக்கல் மடங்காகவும் தனித்தனியாக கூட்டினால் ஒன்பது வருவதாகவும் இருப்பதைக் காணலாம்.

(குறிப்பு: ஒருவன் தன் பேரக்குழந்தையைக் காணும் தலைமுறை வரம்பு 37 ஆண்டுகள் எனப்படு கிறது. மூன்று தமிழ்ச் சங்கங்களின் காலம் முறையே 4400, 3700, 1850 என்பன 37 எனும் தலைமுறை எண்ணால் மிச்சமின்றி வகுபடுவதாக இருக்கிறது என அறிஞர் ஏ.கே. இராமானுசம் குறிப்பிட்டிருப்பது இங்குக் கருதத்தக்கது.)

7. கி.மு. 800 கால அளவில் ஆரியர் விந்திய மலையைக் கடந்து தென்னிந்தியாவில் குடியேறி யதன் அடையாளமாகத் தென்னிந்தியாவில் ஆரியர் களின் சாம்பல் நிறப்பானை ஓடுகள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளதால் சமற்கிருதக் கலப்புச் சொற்களைக் கி.மு.எட்டாம் நூற்றாண்டுக்குப் பிறகு வடசொல் என்று சொல்லியிருக்க முடியாது. எட்டாம் நூற்றாண் டுக்கு முன்பு தான் வடசொல் என்று சொல்லியிருக்க முடியும். எனவே தொல்காப்பியர் கி.மு.711இல் வாழ்ந்தவராகக் கருத இயலவில்லை.

8. ஐந்திரனார் காலத்தில் ய,வ எனும் உடம்படு மெய்கள் பயன்படுத்தப்படவில்லை. ஈழத்துத் தமிழைப் போல் வரஇல்லை, கேட்க இல்லை எனச் சொற்கள் பிரிந்தே இசைத்தன. தனிச் சொல்லிலும் நாய் எனும் சொல் நாஇ என எழுதப்பட்டதைத் தொல்காப்பியர் சுட்டிக் காட்டுகிறார். இந்த இலக்கண அமைப்பு இந்தியா முழுவதும் தமிழ் பேசப்பட்ட காலத்திலிருந்து தொடர்ந்து வருவதால் இன்றும் வட இந்திய மொழிகள் அனைத்திலும் ஆய்-ஆயி(தாய்) எனும் தமிழ்ச்சொல் யகர உடம்படுமெய் பெறாமல் **ஆஇ** என்றே எழுதப்படுகின்றது.

ஐ எனும் நெட்டெழுத்து பல்லவர் காலத்தில் தான் இந்த வடிவம் பெற்றது. இதற்கு முன் அஇ என்றே இரு குறில் எழுத்துகளின் கூட்டாக எழுதப்பட்டது. 'அகர இகரம் ஐகாரம்' ஆகும் எனும் தொல்காப்பியர் நூற்பாவை நன்கு விளங்கிக் கொள்ளாத நச்சினார்க்கினியர் 'ஐ' வடிவமே பழையது என்றும் அஇ என எழுதுவது ஐகார எழுத்தின் போலி என்றும் கருதி உரையெழுதி விட்டார். சிந்துவெளி முத்திரைகளிலும் ஐகாரம் அஇ எனும் இருகுறில் கூட்டாகவே எழுதப்பட்டுள்ளது. இன்றைய இந்தி மொழியிலும் சென்னை எனும் பெயர் சென்னஇ என எழுதப்பட்டிருப்பதைச் சென்னைத் தொடர்வண்டி நடுவணத்தில் காணலாம்.

இத்தென்மரபு கி.மு.800 அளவில் அசோகன் பிராமி எனும் பாலி மொழி எழுத்தில் காணப்பட வில்லை. ஆனால், முற்றிலும் தமிழ் எழுத்தைப் பின்பற்றிய பிராகிருதத்திலும் அதன் வழி வந்த வடஇந்திய எழுத்துகளிலும் நின்று நிலைத்துள்ளது. ஆதலால் தொல்காப்பியர் காலம் கி.மு.800க்கு முற்பட்டதாகும்.

9.மூவேந்தர் ஆட்சி கி.மு.ஆறு ஏழாம் நூற்றாண்டுகளில் முற்றிலும் நிலைகுலைந்தது என நற்குடி வேளாளர் வரலாறு எனும் நூலின் 350ஆம் செய்யுள் கூறுகிறது. கி.மு.எட்டாம் நூற்றாண்டி லிருந்தே மூவேந்தர் ஆட்சிக்கு இடையூறுகள் தொன்றியிருக்க வேண்டும்.

"போந்தை வேம்பே ஆரென வருஉம்
மாபெருந் தானையர்" எனவும்
"வண்புகழ் மூவர் தண் பொழில் வரைப்பு"

எனவும் மூவேந்தர் ஆட்சி ஒற்றுமை மிக்கதாய் புகழேணியின் உச்சியில் இருந்த காலத்தை கி.மு.711 ஆம் ஆண்டு என்னும் வரையறை காட்டவே காட்டாது.

இந்நிலைகளைக் கூர்ந்து நோக்கினால் தொல் காப்பியர் பிறந்த ஆண்டு கி.மு.864 எனவும் கி.மு.835 இல் தொல்காப்பியம் அரங்கேறியது என்பதே பொருந்தும் எனவும் உறுதிப்படுத்த முடிகிறது.

**தொலைவரி** *tolaivari,* பெ. (n.) மின்கம்பி வழியனுப்பும் செய்தி; telegram(தந்தி).

*[தொலை+வரி]*

**தொலைவரி கொடு-த்தல்** *tolaivarikoḍu-,* செ.கு.வி. (v.i.) ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு விரைவாகக் கம்பி வழியாகச் செய்தி அனுப்புதல் (தந்தி); to send a telegram, wire. 'மும்பை போய்ச் சேர்ந்ததும் உடனே தொலைவரி கொடு'.

**தொழும்பன்** *tōḻumbaṉ,* பெ. (n.) கழைக் கூத்தன் (கொ.வ.) (டொம்பர்); a man of wandering tribe, singers and rope dancers.

**மறுவ. தொம்பன்**

*[தொழு–தொழும்பு–அன்]*



**தொளி**[1] *toḷi,* பெ. (n.) உழவு செய்வதற்காக நீர்கட்டப்பெற்ற வயல் (சேடை நிலம்); field filled with water to prepare it for sowing.

**மறுவ. நீர்கட்டல்**

*[துலி(மிதித்தல்)–துளி–தொளி]*

**தொளி**[2] *toḷi,* பெ. (n.) கசடு தங்கும் முதல் பாத்தி; first section of the field where the sediment stagnates.

*[துளி–தொளி]*

**தொள்ளை விழுதல்** *tōllaivilu-,* செ.கு.வி. (v.i.) பெருச்சாளி முதலியவற்றாற் கட்டடத் தரையில் விழும் குழிவு (டொக்கை); depression or hollow in the saved floor, caused by bandicoot etc.,

*[தொள்ளை+விழு–]*

**தொன்மரவன்** *toṉmaravaṉ,* பெ. (n.) பண்டைய பழக்கவழக்கங்களைப் பின்பற்றுபவன் (சம்பிரதாயத்தன்); one who respects customs or traditions, a traditionist. 2. திறமைசாலி; skillfull person.

*[தொன்மை+(மரபன்)மரவன்]*

**தொன்மறை நெறிகள்** *tōnmaṟaineṟigaḷ,* பெ. (n.) அறநூலிற் கூறிய நெறிகள் (சுமார்த்தம்); percepts or rules laid down in ancient works.

*[தொல்+மறை+நெறிகள்]*

**தோழமைநெறி** *tōḻamaineṟi,* பெ. (n.) ஒக நெறி (சகமார்க்க); yogā as the path leading to cāruppiyam.

*[தோழமை+நெறி]*

**தோள்விந்தி** *tōḷvindi,* பெ.(n.) பெண்கள் மேற்கையில் அணியும் தொடி போன்ற வெள்ளி நகை; a silver bracelet worn by women on the upper arm.

*[தோள்+விந்தி. ஒருகா. வெள்ளி >தெ. வென்டி > த. விந்தி]*

**தோளணி** *tōḷaṇi,* பெ. (n.) வில்லையோடு கூடிய தொண்டனின் தோட்கச்சை (கொ.வ.) (டவாலி); peon's belt on which a badge is worn.

*[தோள்+அணி]*



**தோற்றமறைவுக்கணக்கு** *tōṟṟamaṟaivu-k-kaṇakku,* பெ. (n.) மக்களின் பிறப்பிறப்புப் பதிவு (சனனமரணக் கணக்கு); birth death register.

*[தோற்றம்+மறைவு+கணக்கு]*

# ந

**நச்சுவளி** *naccuvaḷi,* பெ. (n.) நச்சுப்புகை; poisonous gas.

த.வ. நச்சுப்புகை

*[நச்சு+புகை]*

**நஞ்சோடை** *nanjōḍai,* பெ. (n.) உப்பை வாறிய பின் நீர் வெளியேறும் இடம்; outlet.

*[நஞ்சு+ஓடை]*

**நடுக்கக்கனவு** *nadukka-k-kaṉavu,* பெ. (n.) அச்சத்தால் ஏற்படும் நடுக்கம், நடுநடுங்க வைப்பது (சிம்ம சொப்பனம்); nightmare, devil incarnate.

*[நடுக்க+கனவு]*

**நடுத்தரம்** *naḍuttaram,* பெ. (n.) மட்டம் (சுமார்); moderate.

*[நடு+தரம்]*

**நடுநெற்றி** *naḍuneṟṟi,* பெ. (n.) ஆதனின் இடமாகக் கருதும் புருவ இடைப்பகுதி (சாக்கிர தானம்); center between the eye brow where the soul dwels in the waking state.

*[நடு+நெற்றி]*

**நடைமொழி** *nadaimoḻi* பெ. (n.) ஒரு நாட்டின் ஒரு பகுதியில் பேசப்படும் கிளை மொழியின் வடிவம்; dialect.

மறுவ. கிளைமொழி

*[நடை+மொழி]*

**நடைவரப்பு** *nadai-varappu,* பெ. (n.) வயல் களில் நடப்பதற்காகப் போடப்படும் வரப்பு; walkable broad parement between paddy field.

*[நடை+வரப்பு]*

**நண்டு தறிக்கை** *naṇḍutaṟikkai,* பெ.(n.) நட்டுவாக்காளி என்னும் தேள் போன்ற நச்சுயிரி; a poisonous insect like scorpion.

*[நண்டு+தறிக்கை]*

**நண்ணிலக்கோடு** *naṇṇila-k-kōḍu,* பெ. (n.) வட, தென்முனைகளிலிருந்து சமதொலைவு களில் அமையுமாறு உலகவுருண்டையைச் சுற்றி வரையப்படும் உருவலிப்பு (கற்பனை)க்கோடு; equator.

மறுவ. நிலநடுக்கோடு

*[நண்ணிலம்+கோடு]*

**நமட்டை** *namaṭṭai,* பெ.(n.) உதடு; lip. பல்லில்லா தவன் நமட்டையைக் கடிச்சானாம் (பழ.).

மறுவ. நமுட்டு

*[நா+பட்டை]*

**நயஏய்ப்பு** *nayaēyppu,* பெ. (n.) இனிய சொற் களைக் கூறி ஏமாற்றுதல் (டராய்த்தல்); to deceivs, befool a person by honored words.

*[நயம்+ஏய்ப்பு]*

**நல்லி** *nalli,* பெ. (n.) 1. உடல்நலமுள்ளவன் (சுகி); healthy person. 2. செல்வன்; prosperous wealthy person. 3. கருநிறமுள்ளவன்; black person.

*[நல்–நல்லி]*

**நல்லுருவம்** *nalluruvam,* பெ. (n.) அழகு (சொரு பம்); beauty.

*[நல்ல+உருவம்]*

**நல்வாழ்த்து** *nal-vāḻttu,* பெ. (n.) சீரும் சிறப்பும் பெறுமாறு வாழ்த்துதல் (ஆசீர்வாதம்); blessing, good wishes, the invoking of happiness.

*[நல்+வாழ்த்து]*

**நலஞ்சேர்த்தி** *nalañcērtti,* பெ. (n.) தீமைகளை விலக்குவதற்காக அல்லது அமைதிப்படுத்த செய்யும் நடப்புக்காரியம் (சாந்திகம்);

propetiatory rite for averting or removing evil. 2. திருநீற்றுக்காகச் சாணியை ஆவின் பின்னிருந்து ஏற்றுக்கொள்ளுஞ் செயல்; obtaining dung from the cow while being evacuated for the preparation of sacred ashes.

*[நலம்+சேர்த்தி]*

**நலப்பேறு** *nalappēṟu,* பெ. (n.) வருத்தமில்லா பிள்ளைப்பேறு (சுகப்பிரசவம்); easy and safe accore chement, safe, child birth after the full period of gestation.

*[நலம்+பேறு]*

**நலம் நுகர்தல்** *nalamnugar-,* 2 செ.கு.வி. (v.t.) மகிழ்ச்சியாக இருத்தல்; to live hapily.

*[நலம்+நுகர்–]*

**நலவாழ்வன்** *nalavāḻvaṉ,* பெ. (n.) நலமுடன் வாழ்பவன்; happy or healthy person.

*[நல+வாழ்வன்]*

**நலவாழிடம்** *nalavāḻiḍam,* பெ. (n.) நல வாழ்வின் பொருட்டுச் சென்று வாழும் இடம்; sanatorium.

*[நல+வாழ்+இடம்]*

**நலிவு** *nalivu,* பெ. (n.) நலக்குறை(வு); want of comfort, unhealthiness.

*[நலி–நலிவு]*

**நழுவல்** *naḻuval,* பெ. (n.) கண்ணில் படாமல், ஏமாற்றி நழுவிவிடும் செயல்; giving the slip, playing truant.

*[நழுவு+அல்]*

**நளிநயக்கை** *naḷinaya-k-kai,* பெ. (n.) கையது கொண்டு காட்டும் மெய்ப்பாடு; gesture by hand.

*[நளிநயம்+கை]*

**நற்காப்புப்பொருள்** *naṟkāppu-p-poruḷ,* பெ. (n.) நன்கு காப்பாற்றப்பட்ட பொருள்; that which is well protected.

*[நல்ல+காப்பு+பொருள்]*

**நற்கோள்** *naṟkōḷ,* பெ. (n.) வளர்பிறைத் திங்கள், குரு அறிவன், வெள்ளி ஆகிய நற்கோள்; auspicious planets, as waxing Moon, Mercury, Jupitar, Venus.

*[நல்ல+கோள்]*

**நற்கோள்நிலை** *naṟkōḷnilai,* பெ. (n.) ஒருவன் பிறக்குங் காலத்து அவனுக்கு உயர்ந்த நிலையைக் கொடுக்குமாறு கோள்கள் நிலை சேர்ந்த ஒரு நல்லூழ், கூர்ம யோகம் (சங்அக.); a peculiar conjunction of planets at the time of one's birth indicative of great success in life.

*[நல்ல+கோள்+நிலை]*

**நற்புதல்வன்** *naṟpudalvaṉ,* பெ. (n.) நற் செய்கையுள்ள மகன்; good virtuous, dutiful son.

*[நல்ல+புதல்வன்]*

**நன்மங்கலத்தள்** *naṉmaṅgalattaḷ,* பெ. (n.) கணவனுயிருடனிருக்க மங்கலநாண் அணிந் திருப்பவள்; married woman under coverture, as wearing the used, lock, opposite to amangal.

**த.வ. வாழ்வரசி**

*[நல்ல+மங்கலத்தள்]*

**நன்மைதீமைகள்** *naṉmaitīmaigaḷ,* பெ. (n.) நலந்தீங்குகள்; pros and cons, as of a case; convience and inconvience, good and bad conse-quences.

*[நன்மை+தீமைகள்]*

**நனிசுவை** *ṉaṉisuvai,* பெ. (n.) சுவை (சுவாரசியம்); relish, taste. 2. மனத்தை ஈர்த்து விறுவிறுப்பை ஏற்படுத்தும் தன்மை, ஈடுபாடு; absorbing interest, relish fascination.

*[நனி+சுவை]*

**நாணயநோட்டகன்** *nāṇayanōṭṭagaṉ,* பெ. (n.) காசு ஆய்வாளன்; shroff, teller employed by banks and commercial firms. 2. கருவூல வேலைக்காரன்; treasury

assistant. 3. காசுக்கடைக்காரன்; banker, dealer in precious metals.

*[நாணயம்+நோட்டகன்]*

**நாதாங்கி** *nāā-tāṅgi,* பெ. (n.) கதவைச் சார்த்தப் பயன்படுத்தும் அமைப்புக்கருவி; bolt.

*[நா+தாங்கி]*

**நாமக்குழி** *nāma-k-kuḻi,* பெ.(n.) முன் கழுத்தின் அடியில் உள்ள தொண்டைக்குழி; a dip like portion at the lower throat.

*[நாமம்+குழி]*

**நாவாய்கன்** *nāvāykaṉ,* பெ. (n.) மீகாமன் பார்க்க; see mikāmaṉ.

*[நாவாய்+அன்–நாவாயன்–நாவாய்கன்]*

**நாவாயிகம்** *nāvāyikam,* பெ. (n.) மரக் கலத்தொடர்பானது; shipping.

*[நாவாய்+இகம்]*

**நிலஅளவை** *nilaaḷavai,* பெ. (n.) நிலங்களை அளந்து பதிவு செய்கை (சர்வே); survey.

*[நிலம்+அளவை]*

**நிலாக்கல்** *nilākkal,* பெ. (n.) நிலவினொளியில் நீர்கால்வதாகிய கல் வகை; moon stone, a crystal soil to emit water when exposed to moon light, as moon beloved.

*[நிலா+கல்]*

**நிலாக்காட்சி** *nilā-k-kāṭci,* பெ. (n.) குழந்தை களுக்கு முதன்முதற்காட்டும் நடப்பு காரியம் (சந்திரதரிசனம்); ceremony of showing the moon to a child for the first time in an auspecious evening. 2. வளர்பிறையில் முதன்முதல் நிலவு கட்புலனாதல்; sighting of the moon in the sky for the first time after new moon.

*[நிலவு+காட்சி]*

**நிலாவுதயம்** *nilāvuḍayam,* பெ. (n.) 1. நிலாத் தோற்றம்; moon rise. 2. குளிர்ச்சி தரும் மாத்திரை; a cooling pill.

*[நிலா+உதயம்]*

**நிலுவைத் தொகை** *niluvai-t-togai,* பெ.(n.) **நிலுவைப் பணம்** பார்க்க; see *niluvai-p-paṇam.*

*[நிலுவை+தொகை]*

**நிலுவைப் பணம்** *niluvai-p-paṇam,* பெ.(n.) ஒருவருக்கு உரிமையுடைய முன்னரே செலுத் தப்பட்டிருக்க வேண்டிய பணம்; arrears.

*[நிலுவை+பணம்]*

**நிறைஒளிமறை** *niṟavoḷimaṟai,* பெ. (n.) வான் கோள்களின் முழு மறைப்பு; total eclipse.

*[நிறை+ஒளிமறை]*

**நிறைப்பண்**[1] *niṟaippaṇ,* பெ. (n.) ஆறு சுரமுள்ள பண் (சிலப்.13.106 வரை); secondary melody type, hexalonic.

*[நிறை+பண்]*

**நிறைபண்**[2] *niṟaipaṇ,* பெ. (n.) எல்லா இசை, ஒலிக்குறிப்புகளும் அமைந்த பண்; primary melody type as containing all the notes of the gamut.

*[நிறை+பண்]*

**நிறைமதி** *niṟai-madi,* பெ. (n.) வெள்ளுவா; full moon.

*[நிறை+மதி]*

**நீடுவாழி** *nīḍuvāḻi,* பெ. (n.) நீண்ட வாழ்நாளு டையவன்; long lived person as living hundred years.

*[நீடு+வாழி]*

**நீர் நோன்பு** *nirnōṉbu,* பெ. (n.) மூன்று நாள் வரை நீர் மட்டும் பருகிப் பட்டினியிருக்கும் ஒரு

நோன்பு (யாழ்.அக); a fast for three days, drinking only water.

*[நீர்+நோன்பு]*

**நீர்வாழி** *nīrvāḻi*, பெ. (n.) நீரில் வாழும் உயிர்; aquatic.

*[நீர்+வாழி]*

**நுண்ணுடல்** *nuṉṉuḍal*, பெ. (n.) உயிர் ஐந்து, மனம் ஒன்று, பொறிகளைந்து செயல் உறுப்புகள் ஐந்து ஆகிய இவற்றால் ஆனதும், உயிர் வீடுபேற்று நிலை வரை அதனோடிருப்பதுமாகிய உடல்; subtle body made of five piranan, manam, five ñaṉēndiriyam and fivekarumendriyam, accompanyingfivetill hisfinalemanclpation.

*[நுண்மை+உடல்]*

**நுண்ணுயிரிக் காய்ச்சல்** *nuṉṉuyirikāyccal*, பெ. (n.) நுண்ணுயிரிகளால் உண்டாகும் காய்ச்சல் வகை (மு.அ.) (கிருமிச்சுரம்); fever caused by worms.

*[நுண்ணுயிர்+காய்ச்சல்]*

**நுண்ணுயிரிசொறி** *nunnuyiricoṟi*, பெ. (n.) நுண்ணுயிர்களால் உண்டாகும் சொறி நோய் வகை (மு.அ.); itching caused by worms.

*[நுண்ணுயிரி+சொறி]*

**நுண்மநிலை** *nuṉmanilai*, பெ. (n.) நுண்துகளான உடலில் உயிர் நிற்கும் நிலை; state of jivan or individual soul in subtle body.

*[நுண்ம+நிலை]*

**நூல்மா** *nūlmā*, பெ. (n.) கோதுமை முதலிய தவசங்களால் திரித்திரியாகச் செய்யப்படும் உணவுப்பொருள்; vermicelli.

**மறுவ. நூல்மாவு**

*[நூல்+(மாவு)மா]*

**நூற்பாநிலை** *nūṟpanilai*, பெ. (n.) ஆற்றொழுக்கு, அரிமா நோக்கு, தவளைப் பாய்ச்சல், பருந்தின் வீழ்வு என நால்வகைப் பட்டதாய் நூற்பாக்கள் ஒன்றோடொன்று பொருளால் தொடர்ந்து நிற்கும் நிலை; position of sutras in a treatise as the guiding principle of interpretation four in number.

*[நூற்பா+நிலை]*

**நூற்பாவை** *nūṟpāvai*, பெ. (n.) கயிற்றால் ஆட்டப்படும் பாவை; puppet moved by strings or other contrivances.

*[நூல்+பாவை]*

**நெட்டு** *neṭṭu*, பெ. (n.) செருக்கு, திமிர்; arrogance. "அவனுக்கு நெட்டு அடங்கவில்லை" (உ.வ.).

**நெடுஞ்சாண்கிடக்கை** *neḍuncāṇkiḍakkai*, பெ. (n.) உடலின் எட்டு இடங்கள் தரையில் படும்படியாக பெரியார்கள் முன் விழுகை (சாட்டங்கமாக); prostration by touching ground with the eight limbs - two hands, two knees, two shoulders, chest and forehead.

*[நெடும்+சாண்+கிடக்கை]*



**நெடுமாடம்** *nedumadam*, பெ.(n.) நெடுங்கூட அங்காடி; emporium.

**நெய்தல்நிலப்பா** *neytalnilappā*, பெ. (n.) தன்னைப் பிரிந்திருக்கும் தலைவனைக் குறித்துத் தலைவி கடற்கரையிலிருந்து புலம்புவதாகக் கூறப்படும் சிற்றிலக்கிய வகை; poem in which a maiden laments on the seashore for her lovers separation.

*[நெய்தல்+நில+பா]*

**நெய்ப்புழு** *ney-p-puḻu,* பெ. (n.) நெய்யில் உண்டாகும் புழு; a worm found in pulugred ghee.

*[நெய்+புழு]*

**நெய்மம்** *neiymam,* பெ. (n.) 1. வடித்த மருந்தெண்ணெய் (சூடா.); ointment, medicated oil, balm. 2. எண்ணெய்; oil.

*[நெய் > நெய்மம்]*

**நெல்லிக்காய் குண்டு** *nelli-k-kāykuṇḍu,* பெ.(n.) நெல்லிக்காய் போன்று பொன்மணி கோர்த்த கழுத்தணி; a gold ornament worn by women.

*[நெல்லி+காய்+குண்டு]*

**நெற்றாக** *neṟṟāka,* வி.எ. (adj.) குறிப்பிட்ட காலத்தில் சிறிதும் தவறாமல், மிகச் சரியாக; right on the spot.

மறுவ. முற்றாக

*[நெற்று+ஆக]*

**நெறி-த்தல்** *neṟi-,* செ.குன்றாவி. (n.) சோளம், கேழ்வரகு முதலியவற்றை மாவாக்குதல்; grinding cerials. சோளம் நெறித்துக்கொடு (உ.வ.).

*[நுறு-நெறு-நெறி]*

**நேட்டு** *niṭṭu,* பெ.(n.) உறுதி, உறுதிப்பாடு; confirmation, firmness.

**நேந்திரம்** *nēndiram,* பெ.(n.) கண்பார்வை; eye sight. "அவருக்கு நேந்திரம் குறைந்து விட்டது" (கொங்.வ.).

*[நோள்(நோடு)- நோந்திரம் - நேந்திரம்]*

நேந்திரம் எனும் தமிழ்ச்சொல் வடமொழியில் நேத்திரம் எனத்திரிந்தது.

**நேர்காட்சி** *nērkāṭci,* பெ. (n.) ஒரு நிகழ்ச்சியை நேரில் பார்த்தவர் அல்லது நன்கு அறிந்தவர்; eye witness. அந்தக் கொலையை நேரில் பார்த்தவர் என்பதால் இவரை முதல் நேர்காட்சியாக அழைத்தனர். (இ.வ.).

*[நேர்+காட்சி]*

**நேர்கூற்று** *nērkūṟṟu,* பெ. (n.) ஒருவர் கூறிய சரி நேர்வான சொற்கள்; direct speach.

மறுவ. தற்கூற்று

*[நேர்+கூற்று. கூறு > கூற்று]*

**நேர்ச்சி** *nērcci,* பெ. (n.) தற்செயல்; accident.

*[நேர்-நேர்ச்சி]*

**நேரல்கூற்று** *nēralkūṟṟu,* பெ. (n.) கூறப்பட்ட சொற்களை அவ்வாறே பயன்படுத்தாமல் அவற்றை மற்றவர் எடுத்துரைக்கும் வகை; indirect speech.

மறுவ. அயற்கூற்று

*[நேர்+அல்+கூற்று]*

**நேரலை** *nēralai,* பெ. (n.) நேரடி ஒலிபரப்பு, ஒளி பரப்பு; direct broadcasting or direct telecasting. உலகத்தமிழ்ச்செம்மொழி மாநாட்டு நிகழ்ச்சிகளை நேரலையில் எல்லாத் தொலைக்காட்சிகளும் ஒளிபரப்பின.

*[நேர்+அலை]*

**நொடிப்பிசைப்பெட்டி** *noḍippiśaippeṭṭi,* பெ. (n.) இசைக்கருவி வகை (இக்வ.); harmonium.

*[நொடிப்பு+இசை+பெட்டி]*



**நோக்குரு** *nōkkuru,* பெ. (n.) மூலப்பொருளுக்கு எடுத்துக்காட்டான பொருள் (மாதிரி); model, sample.

*[நோக்கு+உரு]*

**நோட்டகன்** *nōṭṭagaṉ,* பெ. (n.) ஆய்வு செய் பவன் (சோதனைக்காரன்); one who examines.

*[நோடு-நோட்டம்-நோட்டகன்]*

# ப

**பக்கரிஎலும்பு** *pakkarielumbu, பெ.*(n.) விலா எலும்பு; rib.

**மறுவ. பக்க எலும்பு**

*[பக்கம்–பக்கல்–பக்கலி–பக்கரி+எலும்பு]*

**பக்குடுக்கை நன்கணியார்** *pakkuḍu-k-kai nankaniyar, பெ.*(n.)கடைக்கழகக் காலப் புலவர்;a poet of sangam age.

*[பக்கு+உடுக்கை+நல்+கணியார்]*

**பகைநீர்** *pagainir, பெ.*(n.)விதை முளைத்த மூன்றாம் நாள் பாய்ச்சும் நீர்;watering the field on the third day of the transplantation of paddy sapling.

*[பகை+நீர்]*

**பங்கடை** *pangaḍai, பெ.*(n.)அழகில்லாத அருவருப்பான தோற்றம்; ugly aapearance. அந்தப்பங்கடை இங்கு ஏன் வந்தாள்? (இ.வ.)

**மறுவ.பங்கரை.**

*[போங்கு– பங்கு --பங்கடை]*

**பங்கம்** *pangam, பெ.*(n.)நாணம்;வெட்கம்; shyness.

*[பின்கு–பங்கு–பங்கம்]*

**பங்கீட்டுஅட்டை** *pangīṭṭuaṭṭai, பெ.* (n.) உணவுப் பொருள்கள் பெறுவதற்கான அடையாள அட்டை;Ration card; family card.

*[பங்கீடு+அட்டை]*

**பச்சை போடுதல்** *paccaipōḍu-*, செ.குன்றாவி. (v.t.)நடவு முடித்த பிறகு சிறிதாக நாற்றைக் கட்டி நடுவில் போடுதல்(வடார்க்.);to lay a few saplings in the middle of the field after finishing the work of transplantation.

*[பச்சை+போடு]*

**பட்டி** *paṭṭi,* பெ. (n.)பட்டிக்குக் காவல் இருக்கும் நாய்;watch dog for the cattle at pen.

**ம. பட்டி**

*[பட்டி–ஆட்டுப்பட்டி]*

இடவாகுபெயர் போல் பொருட்பாட்டுத்தாவலால் பட்டிக்குக் காவல் இருக்கும் நாயைக் குறிக்கும் சொல்லாயிற்று. பட்டிக்குக் காவலிருக்கும் நாயைப் பட்டி என்பது போல வேட்டைக்குத் துணையாகும் நாயை வேட்டை என்பது வழக்கம்.

**பட்டின சுட்டான்** *paṭṭina cuṭṭān,* பெ. (n.)மீனவர் தீயில் சுட்டுத் தின்னும் மீன்வகை; a kind of fish fire baked and eaten by fishermen.

*[பட்டின+சுட்டான்]*

**பட்டுப் பாதை** *pattu-p-pādai,* பெ. (n.)இமய மலையின் பின்புறம் சீன நாட்டிலிருந்து ஆப்கனித்தானம் வழியாகத் துருக்கி வரை சென்ற 11,200 அயிரை மாத்திரை (கி.மீ.) வணிகப்பாதை; silk route of the Chinese from China to Turkey.

*[பட்டு+பாதை]*

**பட்டை** *paṭṭai,* பெ. (n.)பெண்ணாடு; she-goat or sheep.

**க. பட்டெ.**

*[பெட்டை–பட்டை]*

**பட்டைக்கயிறு** *paṭṭa-k-kayiṟu,* பெ. (n.)பயிர் நடவு நேராக இருப்பதற்காக ஒரு குறிப்பிட்ட பட்டை அளவு பிடித்துக் காட்டும் கயிறு;rope used gto line marking in the field.

*[பட்டை+கயிறு]*

பட்டக் கயிறு என்பது கொச்சை வழக்கு.

**படரிலந்தை** *paḍarilandai,* பெ. (n.)நிலத்தில் ஆழ வேரூன்றிப் படரும் இலந்தைச் செடி;a kind of lant.



*[படர்+இலந்தை]*

**படியாள்** *padi-y-āḷ*,பெ. (n.)நில உரிமையாளரின் வீட்டில் தவசம் மட்டும் கூலியாகப் பெற்றுக் கொண்டு வேலை செய்யும் பணியாள்; a worker in the house of a land owner getting food grains as salary.

*[படி+ஆள்(படி -நாட்படி) (நாள்தோறும் உணவுக்கான தவசம்)]*

**படைமரம்** *paḍaimaram*,பெ. (n.)நெய்த துணியைத் தறியில் சுருட்டி வைக்க உதவும் கருவி;a device to hold the cloth woven in handloom weaving.

*[படை+மரம்]*

**பண்** *paṇ*,பெ.(n.)ஏழு சுரங்கள் நிரம்பிய முறை யானஇசையடைவு (சம்பூரணராகம்); seven musical node. பண் (7 சுரம்), பண்ணியம் (6 சுரம்), திறம் (5 சுரம்), திறத்திறம் (4 சுரம்);musical note.ஏழு சுரங்கள் நிரம்பிய முறையானஇசையடைவு (சம்பூரணராகம்). "பண் என்னாம் பாடற்கியை பின்றேல்"(குறள்)

*[பள்–பண்]*

**பண்டாரங்கனார்** *pāṇḍaranganār*,பெ.(n.)கடைக் கழகப் புலவர்;a poet of sangam age.

**க. பண்டாரா (வெள்ளாடைத்துறவி.)**

*[பாண்டு+அரங்கன்+ஆர்]*

பாண்டுரங்கம் (மஞ்சள்கலந்த வெண்ணிற முடையவை)

**பத்திரம்** *pattiram*,பெ.(n.)பனையோலை;palmyrah leaf.

*[பதவு–பதம் (புல்,சீரை, இலை) –பத்தம் – பத்திரம்]*

**Skt.** பத்திரா. த. பத்திரம்.

**பதக்கு** *padaikku*,பெ.(v.)ஒரு மரக்கால் அல்லது 3 பட்டணம் படி கொண்ட முகத்தளவு;a measurment of quantity equal to one markkal.இரு குறுணி ஒரு பதக்கு.

**மறுவ.மரக்கால், வள்ளம்**

*[பொதுக்கு – பதக்கு]*

**பதடி வைகலார்** *paddi vaigalār*,பெ.(n.) கடைக் கழகக் காலப் புலவர்;a poet of sangam period.

*[பதடி+வைகல்+ஆர்]*

**பதிவு** *padivu*,பெ.(n.)ஒழுங்கு; நன்னடத்தை; regularity,good habit.

*[பதி–பதிவு]*

**பதுமம்** *padumam*,பெ.(n.) கோடான கோடி எனும் பேரெண்; hundred trillion.

*[பதுமம் (தாமரை)–பேரெண் குறித்த ஆகுபெயர்]*

**பதுமனார்** *padumanār*,பெ.(v.)கடைக் கழகக் காலப்புலவர்;poet of sangam period.

*[பதுமம் – பதுமன்+ஆர்]*

**பந்தக்காரன்** *pandakkāran*,பெ.(n.)அறுவடைக் காலத்தில் இரவில் கையில் தீவட்டியுடன் காவல் காக்கும் பணியாளன்;a night watchman at the time of harvesting.

*[பந்தம் (தீப்பந்தம்)+காரன்–பந்தக்காரன்]*

**பயிரா–தல்** *payirā-*, செ.கு.வி. (v.i.) விலங்குகள் கருவுறுதல்; to be pregnant, as of an animal.

**பயின்றவலை** *payiṉṟavai*,பெ.(n.)சிறிய கண்கள் கொண்ட வலை;a net of small holes.

*[பயில்தல் (நெருங்குதல்)பயில்வலை– பயின்ற +வலை]*

**பரங்கொற்றனார்** *parankorranār*,பெ.(n.)
1கடைக்கழகக் காலப்புலவர்; poet of sangam period

*[பரம்+கொற்றன்+ ஆர்]*

**பரம்புப் பலகை** *parambu-p-palagai* ,பெ.(n.)
நாற்றுநடுவதற்று முன்பு வயலில் சேற்றை மட்டப்படுத்தும் பலகை;a leveling plank.

*[பரம்பு+பலகை]*



**பரமை** *paramai*,பெ.(v.)1. பெண் ஆட்டுக்குட்டி; she-goat.2.விலங்கினத்தில் பெண்;female in animals.அந்தப்பரமைக்குட்டியை விற்று விட்டான்.

*[புருவை-பரவை-பரமை]*

**பரவை** *paravai*,பெ.(v.)மீன்குஞ்சு;young one of fish.

**பரியக்கட்டு** *pariya-k-kattu*,பெ.(v.) பரிசம் போடுதல், திருமணம் உறுதிப்படுத்துதல் (நிச்சயதார்த்தம்); ceremony of fixing the marriage date.

**மறுவ. உறுதிப்படுத்தல், பாக்கு வெற்றிலை மாற்றுதல், நாள் அளத்தல், பருப்பஞ்சோறு பரிசம் போடுதல்.**

*[பரிசு- பரிசம்+போடு]*

திருமணம் உறுதிபடுத்தியதற்கு அடையாளமாக மணப்பெண்ணுக்குப் பரிசுப் பொருள்களையும் ஆடை அணிகலன்களையும் தருதல்.

**பரியம்பாடு-தல்** *pariyampādu*,செ.கு.வி.(v.t.)
ஏற்றம் இறைப்பவர்கள் பாடும் ஏற்றப்பாட்டின் ஒருவகை;variety of piccotah song in the rural areas.

*[பரியம்+பாடு]*

ஏற்றம் இறைப்போர் 30 சால் இறைப்பதை ஒரு பரியம் என்பர். 30 சால் இறைக்கும் வரைஉள்ள காலத்தில் பாடும் வரிகளின் எண்ணிக்கை கொண்ட பாடல் ஒரு பரியம்.

**பரூஉத்துணியல்** *parūu tuniyal*, பெ.(v.)
தடிப்பான துணி வகை; a big cotton piece.

*[பரு-பரூஉ+துணி+அல்]*

**பல்யானைச் செல்கெழு குட்டுவன்** *palyānaicel kelukuttuvan*,பெ.(v.)சேரமன்னன்;a chera king.

*[பல்+யானை+செல்+கெழு+குட்டுவன்]*

பல் = பெரிய. பல்யானை = உயரமான பெரிய யானை. செல் = மேகம். பல்யானைச்செல் = பெரிய யானைக் கூட்ட மேகங்கள் (உருவகம்). கெழு = பொருந்திய. குட்டுவன் = சேரன். யானைக் கூட்டங் களாகிய மேகக் கூட்டங்கள் கொண்ட சேரன் என்பது பொருள்.

**பலாசனை** *palāsanai*, பெ.(n.) பரவல், அங்கொன் றும் இங்கொன்றுமாக; sparce. "பயிர்களை பலாசனையாக நடு" (இ.வ.).

**மறுவ. பரவடா, பருதாடா.**

*[பல்-பலாசு-பலாசனை]*

**பழங்கலம்** *palaṅkalam*,பெ.(n.)முன்னோர் பாதுகாத்து வழங்கிய பழைய மட்பாண்டம்; earthen potteries used and given by the ancesstors.

**மறுவ. பழம்பானை**

*[பழம்(பழைய)+கலம்]*

**பழம் வி-டுதல்** *palam vidu-*, செ.கு.வி.(v.t.)
1. மரம் காய்த்துப் பழுத்தல்; yielding fruits as tree.2. சிறுவர் விளையாட்டில் சிறு சண்டை நடந்த பிறகு ஒற்றுமையுண்டான பின் கூறும் சொல்;word denoting compromise in play children.

*[பழம்+விடு]*

காய்விடு என்பதற்கு எதிரான சொல்லாட்சி.

**பழு** *palu*,பெ.(n.)ஆலமரம்;banyan tree.சிறு பழுவூர் ஆலந்துறை.

*[பல்(பெரிய)–பழு]*

**பழையன்** *palayan*,பெ.(n.) தொன்முது குடியினன்; a man of very long ancestry.2 பாண்டியன் மரபின் கிளைக் குடியினன்;a clan of pandya dynasty.

**ம.** **பழையன், பழவன், பழே.**

*[பள்–பழு–பழை–பழையன்]*

**பறம்பு** *parambu*,பெ.(n.)மேட்டு நிலம்; high ground.2.குன்று;hill.

**ம. பறம்பு (மேட்டு நிலம்) பற (உயரம்).**

*[பறு–பறம்]*

**பறைவகைகள்** *paraivagaigal*, பெ.(n.) குறிஞ்சிக் குரிய ஏறுகோட்பறை, மருதத்துக்குரிய பொருநர் கிணைப்பறை, நெய்தலுக்குரிய மீன் கோட்பறை, பாலைக் குய விசியுறு கடுங்கண், தண்ணுமை;drum varieties of different landscape.

*[பறை+வகைகள்]*

**பன்னாடு தந்த மாறன் வழுதி** *pannādutanda māranvaludi*,பெ.(n.)நற்றிணை தொகுப் பித்தபாண்டிய மன்னன்;pandiya king who compiled the tamil literature *narrinyai*

*[பல்+நாடு+ தந்த (வென்ற)+மாறன்+ வழுதி]*

பல்நாடு என்பது ஆந்திர மாநிலப்பகுதி.

**பனாட்டு** *panāttu*,பெ.(n.)பனைப்பாகினால் செய்த இனிப்பு; a chocklate made from palmyra juice. பனாட்டு (தொல்.சொல்.உரை).

*[பனை+அட்டு]*

**பாகம்** *pāgam*,பெ.(n.)ஆறடி ஆழம் அல்லது நீளத்தைக் குறிக்கும் நீட்டல் அளவு;a linear measure of six feet length or depth.

**மறுவ. மார்.**

*[பாகு –பாகம்]*

**பாகுடி** *pākudi* ,பெ.(n.) 1. சேரநாட்டு உம்பாற் காட்டு மலைகளின் இடையிலிருந்த குறு நாட்டுப் பகுதி;a region in ancient Kerala mountain. 2. **அகப்பாகுடி பார்க்க**; see agappakudi.

**மறுவ.அகப்பாகுடி.**

**க. பாகுடி**

*[அகப்பாகுடி(மதில்சூழ்ந்த குடியிருப்பு)– பாகுடி]*

**பாட்டன்** *pattan*,பெ.(v.)பாய் மரக் கலனை கரை சேர்ப்பதற்கு உதவும் காற்று.favourable wind which enables fishermen to reach seashore. பாட்டன் வந்துவிட்டான். பாயைவிரி (மீனவ.)

*[பாட்டன் – பாசமுள்ள உறவுக்காரனின் பெயர் தனக்குச் சார்பாக உதவும் காற்றுக்கு ஆயிற்று. (உறவு குறித்த ஆகுபெயர்]*

**பாண்டியன்** *pāndiyan*,பெ.(n.) 1. பாண்டிய மன்னன்; Pandiyan king. 2.பாண்டிய மரபைச் சேர்ந்தவன்;one who belongs to the Pandiya dynasty.

**தெ. பண்டு (விளைதல்) பண்ட்ட (தவசம்).**

*[பண் – பண்டு(விளைதல்)– பாண்டி (எருது, வண்டி)– (வேளாண்மை)+அன்]*

வேளாண் தொழிலை முதன்முதல் உண்டாக் கியவன் என்பதால் பெற்ற பெயர் எருது, வண்டி, விளை பொருள்கள் என்பவை காலத்தால் பிற்பட்ட பொருட்பாட்டுத் திரிபுகள்.

**பாண்டியதாசன்** *pāndiyadāsan*,பெ.(n.) பாண்டியதாசன் எனப்பெயரிட்டுக் கொண்டு கிரேக்க நாடாண்ட ஏதென்சு மன்னர் இரு வரின் பெயர். two kings of Athens termed as pandiyadasan. Caldwell - History of Tinnevelli p.119)

*[பாண்டியன் + தாசன்]*

கி.மு. 1400 அளவில் அத்தீனிய அரசுகள் கொற்கைப் பாண்டியனுக்கு நன்றிசெலுத்தும் பாங்கில் பண்டாக (pandas) எனப்பெயர் ஒட்டிக் கொண்டனர் எனப்படுகிறது.

**பாதீடு** *pādidu*,பெ.(v.)அரசின்வரவு செலவுத் திட்டம்; budget.

*[பகுத்து+இடு–பகுத்திடு –பாதீடு]*

**பாம்புரி** *pāmburi,* பெ.(n.)மதிலடி ஆளோடி, ஓர் ஆள்புகுந்துசெல்லும் உள்ளகத் துளை வாயில்;a manhole in a rampart. "பன்மலர்க் கிடங்குசூழ் பசும்பொற் பாம்புரி. (சீவக.1250).

*[பாம்பு+ஊரி]*

**பாய்ச்சு வலை** *pāyccu valai,* பெ.(n.)கடலில் தள்ளி மிகப் பரவலாக விரித்து மீன் பிடிக்கும் வலை;an extensive big net.

[பாய் –பாய்ச்சு +வலை]

**பாரி** *pāri,* பெ.(n.)கடையெழு வள்ளல்களுள் ஒருவனும் பறம்பு மலையின் தலைவனும் ஆகிய குறுநில மன்னன்; a beneficient king of prambu hill.

**மறுவ.பாரி வள்ளல்**

**மு.பார் (வாழ்தல்) – பாரி (வாழ்விப்பவன்)**

*[பார்–பாரி]*

*[பால். பாலித்தல் – பாரித்தல் (வளர்த்தல்) பால்– பா – பாரி (காப்பவன்) பாரிக்கும் நோய் (குறள்) பாரிடம்– வழுமிடம் –பார்(வாழுவிடம்)]*

**பால்** *pāl,* பெ.(n.) இரண்டு;two.

*[பகு+பகல் (பிளத்தல்) – பால்]*

**பால்காப்பியனார்** *palkappiyanār,* பெ.(v.) கடைக் கழகப் புலவர்;poet of sangam period.

*[பல்+காப்பியன்]*

**பால்கூலிப் புடவை** *pākūli pudavai,* பெ.(n.) மாமியாருக்கு மருமகன் தரும் புடவை;saree presented by the bridge groom to mother-in-law.

*[பால்+கூலி+புடவை]*

கசவர் பழங்குடிகளின்சொல்லாட்சி.

**பாலைகௌதமனார்** *pālai-k-kaudamanār,* பெ.(v.)கடைக்கழகப் புலவர்; a poet of sangam age.

*[பாலை+கௌதமன்+ஆர்]*

**பாவாணர்** *pāvānar,* பெ.(n.) 1. பாப்புனையும் பாவலர்; poet. 2. மொழிஞாயிறு ஞா. தேவநேயப்பாவாணர்;Prof. Pavanar well known etymologist.

*[பா+வாணர்]*



**பாவைக்கொட்டிலார்** *pāvai-k-koṭṭilār,* பெ.(n.)கடைக்கழகப் புலவர்; a poet of sangam age.

*[பாவை+கொட்டில்+ஆர்]*

**பாற்கடல்** *pāṟkadal,* பெ.(n.)மீனவர்கள் மீன் பிடிக்கும் கடைசி கடல் எல்லை;the maximum distance for fishing operations by the fishermen.

*[பால்+கடல்]*

தெளிந்த கடல். பால் போல் தெரிவதால் பாற்கடல் எனப்பட்டது. கரையிலிருந்து 50 முதல் 80 கல் தொலைவில் தெளிந்த கடலில் வேடன் சுறா போன்றனவும் மீனவர் வணங்கும் தெய்வத்தன்மை மீன்களும் உள்ளன என்பர்.

**பிசி** *pisi,* பெ.(n.)புதிர்; riddle."பிசியும் நொடியும் பிறர்வாய் கேட்டு"(மணிமே.2.2.62). 2.பொய்;lie. 3.சோறு; boiled rice.

**க. பிசிகு (கிழித்தல்)**

*[பிய்– பிசி]*

**பிசிர்** *pisir,* பெ.(n.)1. நீர்த்துளி;water drop. 2. நீருற்று;fountain.வான் பிசிர்க் கருவியுள் (ஐங்குறு.401). 3. ஒரூரின் பெயர்;name of a village in Kanyakumari district.

*[பில் (பிள்) பிய் – பிசி– பிசிர்(நீருற்று உள்ள ஊர்)]*

**பிசிராந்தையார்** *pisirāndayār*, பெ.(n.) கடைக்கழகப் புலவர்; a poet of sangam age.

*[பிசிர்+ஆந்தை+ஆர்.பிசிர்– குமரிமாவட்டத்துச் சிற்றூர்]*

**பிஞ்சு எழுத்து** *pinju eluttu*, பெ.(n.) உகர உயிரெழுத்து ;the vowel 'U' in Tamil.

*[பிஞ்சு (சிறியது) + எழுத்து]பிஞ்செழுத்து (கொடிக்கவி).*

**பிட்டங்கொற்றன்** *pittaṅkoṟṟaṉ*, பெ.(n.) கடைக்கழகக் குறுநிலத் தலைவன்;a chieftain of sangam age.

*[பிட்டன்+கொத்தன்]*

**பிடவூர்** *piḍavūr*, பெ.(n.) ஓர் ஊரின் பெயர்; name of a village.

*[பிடவு (பிடவ,(மலர்) +ஊர்]*

**பிடிச்சேணி** *piḍiccēṇi*, பெ.(n.) ஏற்றத்தில் ஏறும் போது ஊன்றிச் செல்ல உதவும் மூங்கிற்கழி; a bamboo pole used by the piccotah driver while ascending and descending the piccotah.

*[பிடி – பிடித்து +ஏணி-இதனை புளிச் சேணி என்பது கொச்சை]*

**பிடிசூழ்** *piḍicūḻ*, செ.கு.வி.(v.t) பிடிசூழ்தல் பெண்யானையின் மீதேறி நிலத்தின் நான்கு எல்லைகளைக் காட்டுதல்;to show the boundary of land mounting on elephant.

*[பிடி –சூழ்]*

**பிண்டன்** *piṇḍaṉ*, பெ.(n.)1. ஆண்பாற்பெயர்; name of a person.2.குழுத்தலைவன்; chief of a group.

**<u>க.</u> பிண்டு (கூட்டம்) மந்தை, தொகுதி, பிண்டா (யானைக் கூட்டம்).**

*[இரண்டு – பிண்டு(குழுத்தொகுதி) –பிண்டன்)]*

**பிண்டு–தல்** *piṇḍu-*, செ.குன்றாவி.(v.t.)பிழிதல்; to squeeze. 2.பிசைதல்; to knead.

**<u>தெ.</u> பிண்டு.**

*[பிள்–பிண்டு]*

**பிராமணன்** *pirāmaṇaṉ*, பெ.(n.) 1. மந்திரம் ஓதும் முனிவன்; the sage who recite sacred formula of invocation. 2. படித்த முனிவர்; learned sage. 3. அந்தணன்; the gracious one. 4. ஆரியரிடையில் பிறப்பால் உயர்ந்தவன் எனப்பட்டோன்; Brāhmin.

பிராமணன் என்னும் சொல் சமற்கிருதத்திலும் பாலி மொழியிலும் வெவ்வேறு பொருள்களில் ஆளப்பட்டிருப்பது பரவலாகப் பலர்க்கும் தெரியாத செய்தியாகும்.

இந்தியா முழுவதும் தமிழ் பேசப்பட்ட சிந்துவெளி நாகரிகக் கால இறுதி முதல் வடநாட்டில் அரசாண்ட தமிழ் மன்னன் உதயணன் (கி.மு.700) வரை தமிழாகவே இருந்த வடநாட்டு மொழிகள் முற்றிலும் வடதமிழ் என்னும் பிராகிருதமாகவும் பாலி மொழியாகவும் திரிந்துவிட்டன.

புத்தர் கற்ற மொழிகளில் தமிழும் ஒன்று என்பதால் புத்தர் காலத்திலும் தமிழை வட இந்தியர் கற்றனர் என்பதை அறியலாம். ஆரிய அரசன் பிருகதத்தனுக்காகக் கபிலர் குறிஞ்சிப்பாட்டு எழுதினார்.

இந்தப் பின்னணியை விளங்கிக் கொண்டால் வட இந்திய மொழிகளில் ஊடாடிய தமிழ்ச் சொற்களை எளிதில் கண்டறியலாம். பரம் எனும் சொல் உயர்வு, மேலான வீட்டுலகம், மெய்ப்பொருளாகிய இறையுணர்வு, மெய்யுணர்வு எனப் பொருள்படுகிறது.

சிவனைப் பரன், பரம்பொருள் என்பர். இச்சொல் வடமொழியில் பரமம்–பிரம்மம் எனத் திரிந்தது. மெய்ப்பொருள் உணர்ந்த தவமுனிவனை பிரம்மண எனப் பாலி மொழியில் குறிப்பிட்டனர்.

புலால் தவிர்த்து, கொல்லாமை இன்னா செய்யாமை அறங்களை மேற்கொண்டு, எலும்புந்தோலுமான தோற்றத்துடன் கடுந்தவம் செய்யும் முனிவனை மட்டும் குறித்த சொல்லாக பிரம்மண – பிராம்மண சொல் பெருவழக்கூன்றி இருந்தது.

ஆரியர் இந்தியாவில் குடியேறிய பின் கி.மு.1000அளவில் கங்கைக் கரையிலும் மகதநாட்டிலும் குடியேறி உயிர்க்கொலை வேள்விகள் செய்யத் தொடங்கினர். வேத மந்திரங்களை உரத்துச் சொல்லுதல் எனும் பொருள் கொண்ட புருஹ் (பேசு, பாடு, போற்று) எனும் சொல்லிலிருந்து பிரஹ்– பிராஹ்மண (உரத்துப் போற்றிப்பாடுபவன்) எனும் சமற்கிருதச் சொல் தோன்றியது.

பாலி மொழியிலுள்ள பிராமண எனும் சொல்லும் சமற்கிருதத்திலுள்ள அதே ஒலிப்புள்ள சொல்லும் சமயத்துறையில் உயர்ந்தோரைக் குறிக்கும் சொற்களாக மாறி மதிக்கத்தக்க பெரியவர் எனும் பொதுப் பொருள் பெற்றதால் சொல்லின் உட்பொருளாய்வில் யாரும் ஈடுபடவில்லை. புத்தமதம் இந்தியாவில் மறைந்து போனதால் தவம் செய்யும் துறவியைக் குறித்த பிராமண என்னும் பாலிச்சொல் வழக்கழிந்து போய்விட்டது.

புத்தபெருமான் தன்னுடைய தம்மபதத்தில் 26ஆம் அதிகாரத்திற்குப் பிராமணவருக்கம் (பிராஹ் மணவக்கோ) எனப்பெயரிட்டு பிராமணன் யார் என்பதைப் பாடல்களில் தெளிவாக்கியிருக்கிறார். இறுதிப் பாடலில் பிராமணன் என்பவன் புத்த முனிவன் என்பதைக் குறிக்க முனி என்னும் சொல் லையே பிராமணன் என்பதற்குப் பொருளாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

எல்லா உயிர்களிடமும் அருளறம் பூண்டவனும் உயிர்க்கொலை தவிர்த்தவனுமாகிய அந்தணனைப் பிராமணன் என்பது பாலி மொழியில் வேரூன்றிய வழக்காம்.

இந்தியப் பார்ப்பனர் அனைவரும் தம்மைப் பிராமணர் என அடையாளப்படுத்திக் கொள்கின் றனர். இந்தியாவில் ஒவ்வொரு சாதிக்கும் ஒரே குறிப் பிட்ட பெயர் சாதிப் பெயராக நிலவுகிறது. ஆனால் பார்ப்பனர் மட்டும் ஒவ்வொரு மொழியிலும் அந்தந்தப் பகுதி தாய்மொழியில் உயர்குடியினரைக் குறிக்கும் உயர்வான பெயர்களைத் தெரிந்தெடுத்துத் தமக்குக் கூடுதல் சாதிப்பெயர்களாகச் சூட்டிக் கொள்கின்றனர்.

வடநாட்டில் சாத்திரி, சர்மா, ஆசார்யா போலவும் தென்னாட்டில், ஐயர், ஐயங்கார், அந்தணன் போலவும் சாதிப் பெயர் சூட்டிக் கொண்டனர்.

நெல்லையில் பிள்ளை (பெரியவாச்சான் பிள்ளை) எனவும் ஈழத்தில் முதலியார் எனவும் தம்மை அடையாளப்படுத்திக் கொண்டனர். ஆனால் இந்திய அளவில் தம்மைப் பிராமணன் எனும் பொதுப் பெயரால் அழைத்துக் கொள்கின்றனர்.

உள்நாட்டு மொழியில் வெவ்வேறு சாதிப் பெயர்களும் இந்திய அளவில் ஒரே பொதுப் பெயரும் பார்ப்பனருக்கு வழங்கி வருவது ஏன் என்று எவரும் வினாத்தொடுக்கவில்லை.

எந்த ஊருக்குச் சென்றாலும் அங்குள்ள உயர்குடியினரைப் போன்றே தாமும் உயர்ந்த பிரி வினர் எனக் காட்டுவதற்காகச் செய்யப்பட்ட சூழ்ச்சியாகவே இது அமைந்துள்ளது.

உயிர்க்கொலை யாகம் செய்வது ஆரியப் பண் பாடு. ஞானம் எனும் உயர்ந்த மெய்யுணர்வு பெறுவ தற்காகத் தவம் என்னும் ஓகம் செய்வது திராவிடப் பண்பாடு. இரண்டும் ஒன்றுக்கொன்று எதிரானவை.

தவம் செய்தவனை இராமன் கொலை செய்தது இராமாயணத்தில் கூறப்படுகிறது. தவம் செய்யும் முனிவரைக் கொல்வது தீவினை (பாவம்) எனக் கருதப்பட்டது.

பிராமணனைக் கொல்வது பிரம்மஹத்தி (முனிவனைக் கொல்வது) எனும் கொடுஞ்செயலாகக் கருதப்பட்டது. ஓகம் செய்யும் பிராமணனாகிய (அந் தணன்) முனிவனைக் குறித்த சொல்லை உயிர்க் கொலை யாகம் செய்யும் பார்ப்பனப் பிராமணனைக் குறித்த சொல்லாக்கித் தந்திரத்தால் பார்ப்பனனைக் கொல்வது கடுங்குற்றம் (பாவம்) எனத் தலைகீழாகச் சொல்லின் பொருளை மாற்றிவிட்டனர்.

புத்தரின் தம்மபதத்தில் பிராமணன் எனும் சொல் தவம் செய்யும் திராவிட முனிவனைக் குறித்த உண்மை புலப்படுத்தப்பட்டிருக்கிறது.

பிரமன் என்னும் சொல் பிராகிருத மொழியில் ஆதிநாதரைக் குறித்த சொல்லாக வழங்கியுள்ளது. பிரம்மஞானி – ஆத்மஞானியைக் குறிக்கிறது. பிரம்ம வித்தை என்பது பரம்பொருளாகிய இறையியல்பை அறிவதைக் குறிக்கிறது.

பாலிமொழியில் பிராமணன் என்னும் சொல் அந்தணன், தவம் செய்து பெற்ற மெய்யுணர்வால் முகத்திலும் அகத்திலும் ஒளிபெற்று ஒளிர்பவன், உயிர்க்கொலை தீவினையிலிருந்து விடுபட்டவன் என்பதை "Bhaahita paapothi Brahmano" எனப் புத்தர் குறிப்பிடுகிறார்.

மனம் மொழி மெய்களால் பிறர்க்குத் தீங்கு செய்யாத அந்தணனே பிராமணன். ஆரியர்கள் வேள்வித்தீயை உயர்வாக மதிப்பதுபோல் திராவிட முனிவர்களாகிய பிராமணரை உயர்வாக மதிக்க வேண்டும்.

சடை வளர்ப்பதாலும் கோத்திரத்தாலும் பார்ப் பனக் குடிப்பிறப்பாலும் பிராமணன் ஆகமுடியாது. அதாவது பார்ப்பனப் பெண் வயிற்றில் பிறந்ததால் ஒருவன் பிராமணன் ஆகமுடியாது.

திராவிட முனிவனாகிய பிராமணன் (அந் தணன்) இல்லறத்தாரொடும், துறவறத்தாரொடும்

சேராமல் தனித்திருந்து தவம் செய்யும் அருளாளன். எவன் பிற உயிர்களைக் கொல்வதில்லையோ கொல் விப்பதில்லையோ அவனே திராவிட அந்தணனாகிய பிராமணன் என்பதைப் பின்வருமாறு புத்தர் கூறுகிறார்.

யோ நஹந்தி ந காதேதி

தமஹம் ப்ரூமி பராமணம் (தம்மபதம் 405)

தொல்காப்பியம் அருளாளராகிய முனிவரை அந்தணன் எனவும் அறிவன் எனவும் குறிப்பிடு கிறது. அறிவன் என்னும் தமிழ்ச்சொல் பாலி பிரா கிருத மொழிகளில் அர்ஹதன் (அருகன்) அர் ஹந்தன் எனத் திரிந்துள்ளது. மெய்யறிவு பெற்று வீடுபேற்றுத் தகுதி பெற்றவனே பரம்பொருள் உணர்ந்த (பரமணன்) பிராமணன் என்னும் திராவிட முனிவன் (அந்தணன்) எனப் புத்தர் வரையறைப்படுத் தியிருக்கிறார்.

மெய்ப்பொருள் (பரமஞானம்) அறிவு பெற்ற வனை வடநாட்டார் ப்ரம்மஞ்ஞதா என அழைத்தனர். இச்சொல்லின் தமிழ் வடிவமான அந்தணன் என் பதைத் திருவள்ளுவரும், முனைவன், அறிவன் என்ப வற்றைத் தொல்காப்பியரும் முனிவன், முனிசாமி என்பவற்றைப் பொதுமக்களும் ஆண்டு வந்துள்ளனர்.

**பிரித்தி** *piritti*, பெ.(n.) அன்னாசிப் பழம்; pine apple.

*[பிரி- பிரித்தி]*

**பிறிதா(கு)-தல்** *piridagu-*, செ.கு.வி.(v.t.) வேறா குதல்; changing.

*[பிறிது+ஆகு]*

**பீலி** *pili*, பெ.(v.) 1. மயில் தோகை; peacock's feathers 2. மலை; mountain. 3. பசுங்குருத்து; sprout. 4. கால்விரலணி; ring.

*[பீல்-பீலி]*

**பீலிவளை** *pilivalai*, பெ.(n.) பெண்ணின் பெயர்; name of a woman.

*[பீலி+வளை]*

**புட்டுக்கூடை** *puttu-k-kūdai*, பெ.(n.) மூங்கிலால் செய்யப்பட்ட சிறிய கூடை; a little basket made of bamboo.

*[பிள்-பிட்டு-புட்டு+கூடை]*

**புண்ணிய குமரன்** *punniyakumaran*, பெ.(n.) காவிரிக்குக்கரை கட்டிய சோழன் கரிகாலன் வழிவந்ததெலுங்குச் சோழ மன்னன்; a Tamil king in Andhra Pradesh who claimed as a decendent of the great Sangam age Chola King Karikalan.

*[புண்ணியன் + குமரன்]*

**புத்தரி நன்மை** *puttari nanmai*, பெ.(n.) புதிய நெல்லறுவடைத் திருநாள்; new harvest festival.

குட. புத்தரி நம்மெ.

*[புது+அரி (நெல்லரிதாள்) + (விழா)]*

**புத்தேளிர்** *puttōlir*, பெ.(n.) (பொன்னிறம் கொண்ட) தேவர்; gods (of golden colour).

தமிழிலக்கியங்களில் புத்தேள், புத்தேளிர் என்னுஞ் சொல்லாட்சிகள் பயின்றுள்ளன. தொல் காப்பியர் இச்சொல்லைக் கையாளவில்லை. மொழி ஞாயிறு ஞா.தேவநேயப் பாவாணர் வேர்ச் சொல்லாய் வின் வழி 'புது+எல்' என இச்சொல்லைப் பிரித்து புதிய அல்லது மேலான ஒளி வடிவமான தெய்வம் எனப் பொருள்கொண்டார். கல்-கள்; கொல்-கொள்; ஒல்-ஒள்; வெல்-வெள் போன்றவை அவர் காட்டும் அடிப்படை வேர்ச் சொல் மூலவடிவில் ஒன்றுபோல் காட்டப்படினும் பொருட்பாட்டு விரிவில் முற்றிலும் வெவ்வேறான கோணத்தில் பிரிந்துவிடுகின்றன.

ஓர் அடிப்படைச்சொல் பத்து வெவ்வேறு பொருட்பாடுகளில் பிரியும் பாங்கு கொண்டிருந்தாலும் குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட சொல்லாட்சி எந்த எல்லைப் பகுதிக்குள் எந்தப் பொருளில் புடைபெயர்ந் திருக்கிறது என்பதை உறுதி செய்த பின்னரே அச்சொற் பொருளைத் தெளிவாக வரையறுக்க முடியும். வழக்கூன்றாத சொற்பொருள்களை நாமாக இட்டுக்கட்டி வலிந்துரைக்க முடியாது.

'புத்தேள்' என்னும் சொல் பாவாணர் கருத்தின் வண்ணம் கூட்டுச்சொல் என்பதில் ஐயமில்லை. இச் சொல் தமிழிலக்கியங்களிலும் இந்திய மொழிகளிலும் ஆளப்பட்டுள்ள பொருட்பாட்டு நிலைகளைக் கூர்ந்து நோக்கினால் கூட்டுச் சொல் நிலையிலிருந்து தனிச் சொல் பொருளே நாளடைவில் நிலைபேறு பெற் றதைக் காண முடிகிறது.

**புலத்தலிற் புத்தேள் நாடுண்டோ நிலத்தொடு**
**நீரியைந் தன்னா ரகத்து** (குறள். 1323).

**புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறலரிதே**
**ஒப்புரவின் நல்ல பிற** (குறள். 213).

எனத் திருவள்ளுவரும்,

**மாந்தரஞ் சேரல் ஓம்பிய நாடே**
**புத்தேள் உலகத் தற்றெனக் கேட்டு**
**இனிது கண்டிசின்** (புறம்.22).

எனக் குறுங்கோழியூர் கிழாரும் புத்தேள் என்னும் சொல்லைத் 'தெய்வம்' எனும் பொருளில் ஆண்டுள் ளனர்.

**புலத்தகை புத்தேளில் புக்கான்** (கலி.82).

ஏனும் கலித்தொகை பாடல்வரியில் இச்சொல் புதியவன் எனப் பொருள்படுகிறது. பாவாணர் சுட்டும் ஒளி வடிவமான தெய்வம் என்னும் பொருள் இங்குப் பொருந்தவில்லை.

திருவிளையாடற் புராணத்தில்,

**புத்தேள் வண்டும்** (தருமி.32)

என்னும் வரியில் புத்தேள் என்னும் சொல்லுக்குப் 'புதுமை' என உரையாசிரியர்கள் பொருள் கொண் டுள்ளனர். இதற்குப் 'பொன் வண்டு' எனப் பொருள் கொள்ள வேண்டும் என்கின்றனர். அப்படியாயின் இச்சொல்லுக்குப் 'பொன்' என்னும் பொருளும் இருப்பது தெரிகிறது.

புத்தேளிர் என்னும் சொல் தேவர்கள் என்னும் பொருளில்,

**பெற்றாற் பெறிந் பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்பு**
**புத்தேளிர் வாழு முலகு** (குறள். 58)

**புத்தேளிர் கோட்டம் வலஞ்செய்து** (கலி.82)

என ஆளப்பட்டுள்ளது. தேவர்கள் 'பொன்னுலகத் தவர்கள்' என்பதும் தேவருலகம் பொன்னுலகம் என்பதும் சமய நூல்களில் காணப்படும் பொதுவான கருத்து.

பொன்னிறப் பூ, காய், பழம் கொண்ட மரஞ்செடி கொடிகள் சிலவற்றுக்கும் பழந்தமிழ் மருத்துவர் முதலியோர் குழூஉக் குறிப் பெயராகப் புத்தேள் என்னும் சொல்லை ஆண்டுள்ளனர். கதிரை வேற் பிள்ளையின் தமிழ்ச்சொல் அகராதி புத்தேள் என்னும் சொல்லுக்குக் 'காஞ்சிரை' எட்டி (எட்டிப்பழம்) என்னும் பொருள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

புத்தளம் (புத்தேள்) என்னும் சொல் புத்தளி – புத்தழி எனக் கன்னடத்திலும், புத்தளி–புத்தடி எனத் தெலுங்கிலும் திரிந்து பொன்னைக் குறிக்கும் சொல் லாயிற்று. நாளடைவில் சமற்கிருதம் உள்ளிட்ட இந்திய மொழிகள் அனைத்திலும் பொன்னால் செய்த தெய்வப் படிமத்தை அல்லது பொற்சிலை (பொற் பாவை)யைக் குறித்த சொல்லாட்சியாகிவிட்டது.

வடபுல மொழிகளில் இன்றும் புதலி– புத்தளி என்பவை (பொம்மை)யைக் குறித்த சொல்லாக வழங்கி வருகிறது. புதுமையும் பழமையும் வடிவழகைக் குறித்த சொற்கள். புத்தளி – நிறம் பொலிவைக் குறித்த சொல்.

புத்தேள் என்னும் பொன்னைக் குறித்த சொல் வடமொழியில் 'பீதம்' எனத் திரிந்தது. பீதாம்பரம் என்பது வடமொழியில் திருமால் அணியும் பொன்னா டையைக் குறித்தது.

ஒரு மருங்கு பொன் போன்று காட்சியளிக்கும் பித்தளையும் வடமொழியில் பீதம் என்னும் சொல்லி லிருந்தே தோன்றியுள்ளது.

மஞ்சள் நிறத்தைக் குறிக்க வடபுல மொழிகள் அனைத்திலும் 'பீத்தல, பித்தல, பீலா' என்னும் சொற்களே பயன்பட்டு வருகின்றன.

இந்திய மொழிகள் அனைத்திலும் பொன்னிறம் அல்லது 'மஞ்சள் நிறத்'தைக் குறிக்க இச்சொல் பெருமளவில் பயன்பட்டிருப்பது உறுதியாகிறது. வடமொழிகளுக்கு இது இயற்கைச் சொல்லாயிற்று.

வணிகர் வழி இந்தியா முழுவதும் பரவிய தமிழ்ச் சொல்லாகிய 'புத்தேள்' என்பது புதுமஞ்சளைக் குறிக் கப் பழந்தமிழர் வழங்கிய சொல்.

மேனி அழகுக்குப் புதுமஞ்சளும் உடல் நலத் துக்கு புதிய இஞ்சியும் சிறந்தவை எனத் தமிழர் கண்ட றிந்தனர்.

இஞ்சி சுக்காகச் சுருங்கும் தன்மை நோக்கி அதனை அல்–அல்லம் என்றனர். அல்லம் என்னும் சொல் தெலுங்கிலும் வழங்கி வருகிறது.

மென்மையும் பசுமையான பொலிவும் நோக்கி மஞ்சளை அள்–அள்ளம் என்றனர். அள்–அளகு–அழகு எனத் திரிந்த சொல்லாட்சிகளைக் காணலாம். மொய்–திரட்சி, மொய்–மைந்து–மைஞ்சு–மஞ்சு+அள்–மஞ்சள் என வளர்ந்த சொல் வளர்ச்சியும் புலனாகிறது. அள்–அள்ளு (அள்ளுக்கொண்டை) எனும் சொல் திரட்சியைக் குறித்தது. திரண்ட மஞ்சள் கிழங்கு 'அள்' எனப்பட்டது. அள்–மஞ்சள். இது வடமொழியில் 'அல' எனத் திரிந்தது.

மஞ்சள் பூசி அழகு கொள்வது அலங்கரித்தல் – அலங்காரம் எனப்பட்டது.

இச்சொல் ஆரியர் தென்னாட்டில் குடியேறிய பின்னரே வடமொழியில் புகுந்துள்ளது. புதிய மஞ்சள் புது+அள்–புத்தள்–புத்தேள் எனத் திரிபுற்றுள்ளது. பசு மஞ்சளாகிய புது மஞ்சளின் மின்னும் பொலிவு பொன்னுக்கு ஆகு பெயராயிற்று.

சங்க அகராதியில் அளமம் என்னும் சொல் லுக்குப் 'பொன்' எனப் பொருள் தரப்பட்டுள்ளது. அளகை–குபேரனின் பொன் நகரமாகிய அளகாபுரி. வடமொழியில் அல என்னும் சொல் பொன்னி றத்தைக் குறிக்கிறது. வணிகர் வழி 'அளம்' (மஞ்சள்) எனும் சொல் உலகம் முழுவதும் பரவியது.

அளம் வடமொழியில் aurum (பொன்) எனவும் aurora(பொன்னிறமான விடியல் தெய்வம்) திரிந்து உள்ளது. அர்தரிக் என்னும் வடசொல் பாலி பிராகிருத மொழிகளில் அரி–அரிசன – அர்சன என்றெல்லாம் திரிந்துள்ளது.

புது மஞ்சளைக் குறித்த புத்தளம் – புத்தள் – புத்தேள் எனத் திரிந்துவிட்டது. பொன்னிறம் கொண்ட தேவர்கள் புத்தேளிர் எனப்பட்டனர். புத்தேள் உலகம் பொன்னுலகம் ஆயிற்று.

உருவ வழிபாட்டுக்குரிய தெய்வம் படிமங்கள் வடமொழியில் புத்தள–புத்தலக எனவும், தெய்வ வழிபாடு புத்தள பூசை எனவும் வழங்கி வருதலைக் காணலாம்.

தெய்வ வடிவத்தைக் குறித்த படிமம் என்னும் தமிழ்ச் சொல் படிமத்தோன் எனத் தேவோராளனையும், படிமத்தான் எனக் கடவுளையும் படிமம் எனத் தவக் கோலத்தையும் குறித்த சொல்லாகப் பொருளால் புடை பெயர்ந்தது போலப் புதுமஞ்சளைக் குறித்த புது+அள்–புத்தள்–புத்தேள் எனுஞ்சொல் பொன்–பொன்னிறம்–பொன்னிறத் தெய்வம் – பொன்னால் செய்த சிலை – தெய்வ உருவங்கள் – தெய்வத்தாய் எனப் பலவாறு தொடர்புடைய பொருள்களில் புடை பெயர்ந்துள்ளது.

புத்தளம் எனும் மஞ்சள் வணிகப் பொருளா தலின் வணிகர் வழி பன்மடித் திரிவுகளைப் பல்வேறு மொழிகளில் பெற்றது.

ஏற்கனவே மஞ்சள் எனும் சொல் தமிழ் மக் களின் அன்றாட வழக்கிலுள்ள அடிப்படைச் சொல் லாகி விட்டதால் 'புத்தேள்' வணிகரின் குழூஉக்குறி சொல்லாகவும், பண்டைத் தமிழிலக்கியங்களிலும் ஆங்காங்கு இடம் பெற்ற அருகிய சொல்லாகவும் ஆளப்பட்டுள்ளது.

தென்புலத்தாருள் தவ ஒழுக்கத்தில் சிறந்த மெய்யுணர்வாளர் பிறவியற்ற வீட்டுலகம் பெறுவர் எனும் கருத்து தமிழ் மக்களிடம் இருந்திருக்கிறது. வானோர்க்கு உணர்ந்த உலகம் எனவும் வாராச்சேட் புலம் படர்ந்தோர் (புத்தேளிர்) எனவும் ஆட்சி பெற்றுள்ள சொற்களால் இதனை அறியலாம்.

பழந்தமிழருள் கருநிறத்தவர் செந்நிறத்தவர் பொன்னிறத்தவர் எனும் மூவகைப் பிரிவினரும் இருந்திருக்கின்றனர். கரியன், மாயவன், பொன்னன் (இரணியன்), பொன்னி, செங்கோன், செம்பியன், சேந்தன் என்னும் சொல்லாட்சிகளே தக்க சான்றா கின்றன. எனவே, புத்தேள் தமிழ்த் தெய்வங்களைக் குறித்த சொல்லாகவே உருப்பெற்றுள்ளது. பொன் னுலகம் செல்வோர் எந்நிறத்தவராகவும் இருக்கலாம்.

**புதைபானை** *pudaipāṉai*,பெ.(n.)வீட்டின் உள்ளறை மூலைச் சுவரில் உள்ளாகப் பதியப்பட்ட வாய் குறுகிய மட்கலம்;a narrow mouthed earthen pot set in the corner wall of the inner chamber of the house inolden days.(வடார்க்.வ).

*[புதை +பானை]*

**புரடை** *puraḍai*,பெ.(n.) புன்செய் நிலம்; dry land.

*[புரை –புரடை]*

**புரவி நூல்** *puravi nūl*, பெ.(n.)குதிரைகளைப் பற்றி கூறும் நூல்;a treatise on horses. "நூல்நெறி நுணங்கிய கால்நவில் புரவி" (அகம்.314)

*[புரம்–உயரம். புரவி–உயரமான குதிரை]*

**புரிந்துணர்வு** *pūrintuṇarvu*, பெ.(n.) ஒரு குறிப்பிட்ட பிரிவில் அல்லது துறையில் இரண்டு நிறுவனம் போன்றவற்றிற்கு இடையே செய்து கொள்ளப்படும் ஒப்பந்தம்; memorandam of understanding.

**புல்லங்காடனார்** *pullaṅkāḍaṉār*,பெ(n.)கடைக்கழகப் புலவர்; poet of sangam age.

*[புல் –புல்லம் (மலர்) + காடு + அன் + ஆர்]*

மாறோக்கத்து முள்ளிநாட்டு நல்லூர் காவிதி யார் மகனாராகிய புல்லங்காடனார் கைந்நிலை பாடல் இயற்றியவர்.

**புல்லாற்றூர் எயிற்றியனார்** *pullāṟṟūr eyiṟṟiyaṉār*,பெ.(n.)கடைக் கழகப் புலவர்;poet of sangam age.

*[புல்லாறு+எயிற்றியன்+ஆர்]*

எய்–எயினன்(வேடன்)–எயிற்றியன்.

**புல்லி** *pulli*,பெ.(v.) வேங்கடமலைத் தலைவன்; Chieftain of Venkata hills.

*[(புல் (இளமை)–புல்லி (இளைஞன்)]*

**புல்லை** *pullai*,பெ.(n.)1.மான்;deer. 2.கலைமான்;antilope.

**க.** புல்லை (மான்). புலிந்தன் (வேடன்)

**புலத்துறை** *pula-t-tuṟai*,பெ.(v.)அறிவுத் துறை;faculties of academic branches. புலத்துறை முற்றிய கூடலூர்க் கிழார் (ஐங்குறு.)

*[புலம் +துறை]*

**புலத்தோர்** *pulattōr*,பெ.(v.)1. மூதறிவினர்;elite persons.2.முனிவர்; sages.

*[புலம் +அத்து + (ஆர்) ஓர்]*

**புலைகுளி** *pulai kuḷi*,பெ.(n.)இறந்தவரை அடக்கம் செய்துவிட்டுத் திரும்பும்போது குளிக்கும் குளியல்; bath taken after the burial is over..

*[புலை+குளி]*

**புளியிலைப்பொடி** *puḷiyilai-p-poḍi*,பெ.(n.) மிகச் சிறு மீன்வகை; a variety of very small fish.

*[புளி+இலை+பொடி]*

**புனி** *puṉi*,பெ.(n.) கைத்தறி நெசவில் நாடா செல்லும் வழி;a loop in handloom weaving.

*[புல்– புன்– புனி]*

**பூங்கணுத்திரையார்** *pūngāṇuttiraiyār*, பெ.(n.) பெண்பாற் புலவர் பெயர்; name of a poetess of sangam age.

**ம.** உத்திரம் (உள்ளுரம், துணிச்சல்) **க.** உத்தி (உயரம்) **து.** உத்திரை – ஊக்கமும் திறனும் கொண்டபெண்.

*[பூங்கண் + உத்திரை +ஆடு]*

**பூஞ்சி ஆடு** *pūnji āḍu*,பெ.(n.)மயிலை நிறமுள்ள ஆடு;a goat or sheep of brown colour.

*[புல்லை – பூவன்– பூஞ்சி +ஆடு]*

**பூண்டரம்** *pūṇḍaram*,பெ.(v.)உடல் வெளுத்துக் காணப்படும் சோகை நோய்;anemic dropsy.

*[பாண்டு (வெண்மை) – பாண்டரம் – பூண்டரம்]*

**பூதன் சேர்ந்தன்** *pūdan cēndan*,பெ.(n.) கடைக் கழகக் காலத்திய இயற்பெயர்;a proper name during the Sangam period.

*[(பூ–பூது– புதன் பூது = பெருமை, துணிவு, ஆற்றல்.) பூதன் + சேந்தன்]*

**பூரிக்கோ** *pūrikkō*,பெ.(n.)குறுந்தொகை தொகுப்பித்த குறுநில மன்னன்; a chieftain who compiled ancient Tamil Kuruntogai.

*[பூரி (நிறைவு, சால்வு)+ கோ]*

பூர் – வெள்ளம், பூரம் – பொன். **க.** பூரம்பு – ஊற்று நீர். பூரித்தல்– நிறைதல்.

**பூலாபிடி–த்தல்** *pūlapiḍi*,செ.கு.வி.(v.t.)தூண்டில் கயிற்றுக்கு வலுவேற்ற மரப்பட்டைச் சாறு பூசிப் பக்குவப்படுத்தல்;a method of restrengthening the rope.

*[பூலா +பிடி]*

**பூழியர் கோன்** *pūḻiyar kōṉ*,பெ.(n.)பாண்டிய மன்னன்; Pandiya king.

*[பூழி – ஒரு சிறு நாட்டின் பெயர் + அர் +கோன்]*

**பெட்டிப் பலகை** *peṭṭi-p-palagai*,பெ.(n.)கைத்தறி நெசவில் நாடா தங்கும் பலகை;an implement in handloom weaving.

*[பெட்டி +பலகை]*

**பெண்டைபிடி–த்தல்** *peṇḍaipiḍi-*, செ.கு.வி. (v.i.) வீட்டில் கூரை அமைக்கும்போது மூங்கிலை இணைத்துக் கயிற்றால் கட்டிச் செல்லுதல்; to tie the bamboos in series while constructing a thatched roof of the house.

*[இண்டு–பிண்டு–பெண்டை+பிடி]*

**பெண்ணளி** *peṇṇaḷi*,பெ.(n.)திருமணம்; marriage.

**தெ.** பெண்லி

*[பெண் +அளி]*

பெண்ணைப் பெற்றோர் மணமகனுக்கு அளிப் பதால் பெற்ற பெயர்.

**பெண் வெற்றிலை** *peṇ veṟṟilai*, பெ.(n.) வெற்றிலைவகை; a kind of betel.

*[பெண் + வெற்றிலை]*

# குறிஞ்சிப் பாட்டு - மலர்கள்

.............................. வள்இதழ்
ஒண் **செங்காந்தள்**, **ஆம்பல்**, **அனிச்சம்**,
தண்கயக் **குவளை**, **குறிஞ்சி**, **வெட்சி**,
**செங்கோடுவேரி**, **தேமா**, **மணிச்சிகை**,
உரிதுநாறு அவிழ்தொத்து **உந்தூழ்**, **கூவிளம்**,
எரிபுரை **எறுழம்**, **சுள்ளி**, **கூவிரம்**,
**வடவனம்**, **வாகை**, வான்பூங் **குடசம்**,
**எருவை**, **செருவிளை**, மணிப்பூங் **கருவிளை**,
**பயினி**, **வானி**, பல்இணர்க் **குரவம்**,
**பசும்பிடி**, **வகுளம்**, பல்இணர்க் **காயா**,
விரிமலர் **ஆவிரை**, **வேரல்**, **சூரல்**,
குரீஇப் **பூளை**, குறுநறுங் **கண்ணி**,
**குருகிலை**, **மருதம்**, விரிபூங் **கோங்கம்**,
**போங்கம்**, **திலகம்**, தேங்கமழ் **பாதிரி**,
**செருந்தி**, **அதிரல்**, பெருந்தண் **சண்பகம்**,
**கரந்தை**, **குளவி**, கடிகமழ் **கலிமா**,
**தில்லை**, **பாலை**, கல்இவர் **முல்லை**,
**குல்லை**, **பிடவம்**, சிறு**மாரோடம்**,
**வாழை**, **வள்ளி**, நீள்நறு **நெய்தல்**,
**தாழை**, **தளவம்**, முள்தாள் **தாமரை**,
**ஞாழல்**, **மௌவல்**, நறுந்தண் **கொகுடி**,
**சேடல்**, **செம்மல்**, சிறு **செங்குரலி**,
**கோடல்**, **கைதை**, கொங்குமுதிர் நறு **வழை**,
**காஞ்சி**, மணிக்குலைக் கள்கமழ் **நெய்தல்**,
**பாங்கர்**, **மராஅம்**, பல்பூந் **தணக்கம்**,
**ஈங்கை**, **இலவம்**, தூங்குஇணர்க் **கொன்றை**,
**அடும்பு**, அமர் **ஆத்தி**, நெடுங்கொடி **அவரை**,
**பகன்றை**, **பலாசம்**, பல்பூம் **பிண்டி**,
**வஞ்சி**, **பித்திகம்**, **சிந்துவாரம்**,
**தும்பை**, **துழாஅய்**, சுடர்பூந் **தோன்றி**,
**நந்தி**, **நறவம்**, நறும் **புன்னாகம்**,
**பாரம்**, **பீரம்**, பைங் **குருக்கத்தி**,
**ஆரம்**, **காழ்வை**, கடிஇரும் **புன்னை**,
**நரந்தம்**, **நாகம்**, **நள்ளிருள்நாறி**,
மாஇருங் **குருந்தும்**, **வேங்கை**யும், பிறவும்,
அரக்குவிரித் தன்ன பருஏர்அம் **புழகு**.... அடி. (61–96)



1. செங்காந்தள்



2. ஆம்பல்



3. அனிச்சம்



4. குவளை



5. குறிஞ்சி



6. வெட்சி



7. செங்கோடுவேரி



8. தேமா



9. மணிச்சிகை (செம்மணி)



10. உந்தூழ் (பெருமூங்கில்)



11. கூவிளம் (வில்வம்)



12. எறுழம்



13. சுள்ளி



14. கூவிரம்



15. வடவனம்



16. வாகை



17. குடசம் (வெட்பாலை)



18. எருவை (கோரை)



19. செருவிளை (காக்கணம், சங்கு)



20. கருவிளை



21. பயினி



22. வானி (ஓமம்)



23. குரவம்



24. பசும்பிடி (இளமுகிழ்)



25. வகுளம் (மகிழம்)



26. காயா



27 ஆவிரை



28. வேரல் (சிறுமூங்கில்)



29. சூரல்



30. பூளை



31. கண்ணி (குன்றிமணி)



32. குருகிலை (முருக்கிலை)



33. மருதம்



34. கோங்கம்



35 .போங்கம்



36. திலகம்



37. பாதிரி



38. செருந்தி



39. அதிரல் (புனலி)



40. சண்பகம்



41. கரந்தை



42. குளவி (காட்டுமல்லிகை)



43. கலிமா



44. தில்லை



45. பாலை



46. முல்லை



47. குல்லை



48. பிடவம்



49. மாரோடம்



50. வாழை



51. வள்ளி



52. நெய்தல்



53. தாழை (தென்னம்பாளை)



54. தளவம்



55. தாமரை



56. ஞாழல்



57. மௌவல்



58. கொகுடி



59. சேடல் (பவளமல்லிகை)



60. செம்மல்



61. செங்குரலி



62. கோடல்



63. கைதை (தாழை)



64. வழை (சுரபுன்னை)



65. காஞ்சி



66. நெய்தல்



67. பாங்கர்



68. மரா (கடம்பு)



69. தணக்கம் (நுணா)



70. ஈங்கை



71. இலவம்



72. கொன்றை



73. அடும்பு



74. ஆத்தி



75. அவரை



76. பகன்றை



77. பலாசம்



78. பிண்டி



79. வஞ்சி



80. பித்திகம்



81. சிந்துவாரம் (நொச்சி)



82. தும்பை



83. துழாய் (துளசி)



84. தோன்றி



85. நந்தி (நந்தியாவட்டம்)



86. நறவம்



87. புன்னாகம்



88. பாரம் (பருத்தி)



89. பீரம் (பீர்க்கு)



90. குருக்கத்தி



91. ஆரம் (சந்தனம்)



92. காழ்வை (அகில்)



93. புன்னை



94. நரந்தம் (நாரத்தம்)



95. நாகம்



96. நள்ளிருள்நாறி (இருவாட்சி)



97. குருந்து (காட்டெலுமிச்சை)



98. வேங்கை



99. புழகு (மலை எருக்கு)

## ஆத்தி மலரும் மாலையும்





## வேம்பின் மலரும் மாலையும்





## பனம் பூவும் மாலையும்





பெண் வெற்றிலையின் பின்புற நரம்புகள் தெரியாது எனவும் ஆண் வெற்றிலையின் நரம்புகள் தெரியும் எனவும் கூறுவர்.

**பெரந்தை** *perandai,*பெ.(n.)பெரியப்பா, தந்தையின் அண்ணன்;father's elder brother.

**கொலா.பெரந்தை.**

*[பெரு +அந்தை (தந்தை) – பெரந்தை]*

**பெரியஎழுத்து** *periya eḷuttu,*பெ.(n.)அகர உயிரெழுத்து; the first vowel 'a' in Tamil.

*[பெரிய + எழுத்து]*

**பெரியகோயில்** *periyakōyil,* பெ.(n.) தஞ்சாவூரில் சோழப்பேரரசன் இராசராசனால் பத்தாம் நூற்றாண்டில் கட்டப்பட்ட பெரிய சிவன் கோயில்; a big siva temple constructed at Thanjavur by Chola Emperor Rajaraja-1.during 10th century A.D.

*மறுவ. பிருகதீசுவரர் கோயில்*

*[பெரிய + கோயில்]*

**பெரிய சேர்வை** *periyacērvai,*பெ.(n.)பெரிய கட்டு மரங்கள்;big and large catamaran. (மீனவ)

*[பெரிய+ சேர்வை (சேர்த்துக் கட்டிய கட்டுமரம்]*

**பெருக்கை** *perukkai,*பெ.(n.)துடைப்பம்;broom.

**மறுவ.வாரியல், விளக்குமாறு, துடைப்பம், துடைப்பக் கட்டை.**

**க.பொரக்கெ. தெ.பொரக்க**

*[பெருக்கு – பெருக்கை]*



**பெருங்கதவனார்** *perunkadavanār,*பெ.(n.)கடைக் கழகப் புலவர்; poet of sangam age.

*[பெரும்+கதவன்+ஆர்]*

**பெருங்காமணிவலை** *peringā manivali,*பெ.(n.) வலையின் அடிப்பகுதியில் பெரிய மணிகள் கட்டப்பட்ட வலை.bells fixed net.

*[பெரும்+காய்+மணி+வலை]*

**பெருஞ்சித்திரனார்** *peruncittiranār,*பெ.(n.)
1. கடைக்கழகப் புலவர்; poet of sangam age.
2.தனித்தமிழ் வளர்த்த பாவலரேறு பெருஞ் சித்திரனார்;a savant and puritan of chaste Tamil movement of 20th Century.

*[பெரும்+சித்திரன்+ஆர்]*



**பெருவழிக்கல்** *peruvaḷi-k-kal,* பெ.(n.) பழந்தமிழ் நாட்டில் வணிகப் போக்குவரத்துக்காக அமைக்கப்பட்ட நெடுஞ்சாலையில் ஒரு காதத் தொலைவுக்கு (5 மைல்) ஒன்றாக நடப்பட்ட தொலைவு எண் குறித்த கல்; mile stone (for fivemiles) erected on the high way of ancient Tamil land. "அதியமான் பெருவழி நாவல் தாவளத்துக்கு 29 காதம்" (கல்).

*[பெரு+வழி+கல்]*

**பெருவளநாடு** *peruvaḷanāḍu,*பெ.(n.)கடல்கொண்ட குமரிநாட்டு நிலப்பகுதி; an area in the submerged kumari land.

*[பெரு + வள +நாடு]*

**பேகன்** *pēgan*,பெ.(n.) கடையெழு வள்ளல்களுள் ஒருவர்; one of the beneficient Tamil king.

*[பெரு - பே - பேகு-பேகன்(பெருமைக் குரியவன்)]*

**பேகுல்** *pēgul*, பெ.(n.) பெருங்குடல்; large intestine.

**தெ.** பேகுல்

*[பெரு-பே-பேகு-பேகுல்]*

**பேசா எழுத்து** *pēsā eluttu*,பெ.(n.) மந்திர ஒலியாகிய 'ஓம்' எனும் ஓசை; sacred Tamil syllable OM'.

*[பேசாத-பேசா +எழுத்து]*

எழுத்து எழுந்து புறத்து இசைக்காமல் அ+உ+ம் எனப் பெரிய எழுத்தும் பிஞ்செழுத்தும் மகர மெய்யும் கூட்டி உள்ளிருந்து எழும் மெல்லிய ஓசை யாதலின் மந்திர எழுத்து எனப்பட்டது. இதன் வடிவம் சிந்து வெளி தமிழிலும் தமிழகப் பாறை ஓவியங் களிலும் எனக் காணப்படுகிறது.

**பேடு** *pēdu*, பெ.(n.) 1. காடு வெட்டி உண்டாக்கிய விளை நிலம்; deferested agricultural land. 2. உழப்படாத கரம்பு நிலம்; land left uncultivated. 3. சிற்றூர்; small village. "மப்பேடு, அன்னம்பேடு, கோயம்பேடு, கல்பேடு.

**மறுவ.** போடு, வோடு

*[போடு-பேடு]*

**பேந்தாவலை** *pēndāvalai*,பெ.(n.)மிகப் பெரிய மீனைப்பிடிப்பதற்காகப் பின்னப்பட்ட பெரிய வலை; a big net..

*[பெரிய - பெந்து -பேந்து - பேந்தா + வலை]*

**பேய்ச்சி** *pēycci*,பெ.(n.)பேய்பிடித்தவள்; a woman haunted by spirit.

*[பேய் +பேய்ச்சி]*

**பேய்மகள்** *pēymagal*,பெ.(n.)வடிவில் பெருத்த பெண்; a woman of large size.

*[பெரு-பே-பேய்+மகள்]*

**பேராற்றுநெடுந்துறையன்**; *pērarru neduntura̤iyan*,பெ.(n.)கடல் கொண்ட குமரி நாட்டுத் தமிழ்ப் புலவர்; a Tamil poet of submerged Kumari land.

*[பேரு +ஆறு+நெடும்+துறை+ அன்]*

**பேரிசாத்தனார்** *pēricāttanār*,பெ.(vn)கடைக்கழகப் புலவர்; poet of sangam age.

*[பேரி + சாத்தன் + ஆர்]*

**பேரைப் பழம்** *pēraipalam*,பெ.(n.)கொய்யாப் பழம்; guava.(வடார்க்.)

*[பிரை - பேரை + பழம்]*

**பேழ்-தல்** *pēl*,செ.கு.வி.(v.i.)பேசுதல், சொல்லுதல்; to speak, to say.

**க.** பேழ் (பேசு)

*[பேழ்தல் = பிளத்தல், வாய் திறத்தல் – பேசுதல்]*

**பேள்-தல்** *pēl-*,செ.கு.வி.(v.i.)மலம் கழித்தல்; to excrete.

*[பிள் –பேள்]*

**பையுள்திறம்** *paiyūl tiram*, பெ. (n.) பாலைப் பண்ணின் உட்பிரிவாகிய திறப் பண்களில் ஒன்று; a melody series of *pālai* tune.

*[பையுள்(வருத்தம்)+திறம்]*

பாணர் பாலைப்பண்ணில் பையுள்திறம் பாடினால் செல்வக் கடுங்கோழிவாழியாதன் மிக விரும்பிக் கேட்பான். கனவோ என மருளும் வண்ணம் கொடை யளிப்பான் எனப் பதிற்றுப்பத்து கூறுகிறது.

**பொகுட்டெழினி** *poguttelini*,பெ.(n.)தகடூர் மன்னன் அதியமானின் மகன்; son of Adiyamānn.

*[பொகுட்டு + எழினி]*

**பொங்கலை** *poṅgalai*, பெ.(n.) கருக்கொண்ட பெண் ஏழாம் மாதத்தில் ஏழு பானைகளில் பொங்கலிட்டு வழிபடும் இல்லத்து நன்னி கழ்ச்சி; a function of cooking rice in seven pots to workship the God on the seventh month of pregnancy.

*[பொங்கல் – பொங்கலை]*

பண்டைத் தமிழ்ப் பண்பாட்டு வழிவந்த வளைகாப்பு (சீமந்தம்) நிகழ்ச்சி.

**பொண்டுகன்** *pondugan*,பெ.(n.)பெண் தன்மை வாய்ந்தவன், பேடி;other gender .(வடார்க்)

**மறுவ. திருநங்கை**

*[பெண்டு– பொண்டு – பொண்டுகன்(கொ.வ.)]*

**பொத்தியார்** *pottiyār*,பெ.(n.)கடைக்கழகப் புலவர் பெயர்; a poet of sangam age.

*[புது–பொது–பொத்து (இளங்கதிர், இளமை,அழகு)– பொத்தி+ ஆர்]*

**பொந்து** *pondu*,பெ.(n.)கைத்தறி நெசவில் பல சிலுப்பைகள் சேர்ந்தது; a group of ciluppai in handloom.

*[பொல்– பொந்து]*

**பொலிகிடாய்** *polikiḍāy*,பெ.(n.)இனம் பெருக்குவதற்காக வளர்க்கப்படும் ஆண் ஆடு;he-goat specially meant for breeding purpose.

*[பொலி + கிடாய்]*



**பொலி தூற்று–தல்** *pollitūrru-*, செ.குன்றாவி. (v.t.) நெல்லுடன் கலந்துள்ள பதரைத்தூற்றி நீக்குதல்; to remove the unwanted in the heap of paddy with the help of blowing wind.

*[பொலி (நெற்குவியல்) +தூற்றுதல்]*

**பொலுப்பு** *poluppu-*, பெ.(n.) பயிராதல் அல்லது சினையாவதற்கு விலங்குகளிடம் தோன்றும் பாலுணர்ச்சி வெளிப்பாடு, அதிரகும் உணர்ச்சி; sexual desire or urge in animmals. "மாடு பொலுப்பு ஆகிவிட்டது" (கொங்.வ.).

*[பொல்–பொலி–பொலிப்பு–பொலுப்பு]*

**பொழை** *polai*, பெ.(n.)1.ஆறு; river.2. அருவி; stream.

**ம .புழ.**

*[புள்–புழை–பொழை]*

**பொறை மரம்** *poraimaram*,பெ.(n.)காவடி;load carrying balance pole.

*[பொறை + மரம்]*

**பொன்** *pon*, பெ.(n.) பத்து பணத்தின் மதிப்பு கொண்ட பழங்கால நாணயம்; coin of the value of ten panam.

**பொன்னகழ்–தல்** *ponnagal-*,செ.குன்றாவி. (v.t.) பொன்னை நிலத்தடியிலிருந்தும் ஆற்றோரத்தி லிருந்தும் தோண்டி எடுத்தல்;to dig goldfrom the river bed. நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன். (அகம்.282).

*[பொன் + அகழ்]*

**போக்கற்றான்** *pōkkarrān*, பெ.(n.) வாழ வழி தெரியாத ஏமாளி; easily deceivable humble person who knows no means of livelihood.

*[போக்கு + (அற்றவன்) அற்றான்]*

போக்கற்றவனைப் போக்கட்டான் எனத் திரித்து வழங்குவது கடுங் கொச்சை, விலக்கத்தக்கது.

**போடு** *pōḍu*, பெ.(n.) 1. காடுவெட்டி உண் டாக்கிய விளை நிலம்; deforested agriculture land. 2. உழப்படாத கரம்பு நிலம்; land left uncultivated.

**மறுவ. பேடு, வேடு.**

**<u>தெ.</u> போடு**

*[போடு–வெட்டு, தாக்கு, போடு–மரம் வெட்டிய வெறு (நிலம்)]*

**போடூர்** *pōḍūr*, பெ.(n.)தருமபுரி மாவட்டத்தில் உள்ள சிற்றூர்; a village in Dharmapuri Dt.

# ம

**மக்கள்பாட்டு** *makkalpāṭṭu,* பெ.(n.) இந்துத் தானி குரலில் (தொனி)யில் அமைந்த ஒரு வகை இசைப்பாட்டு (டப்பா பாட்டு) ; Tamil song attuned to Hindustan style of music.

*[மக்கள்+பாட்டு]*

**மகவேற்பு** *magavērpu,* பெ.(n.) ஒருவர் மற்றொ ருவருடைய குழந்தையைச் சட்டப்படி தன்னு டைய குழந்தையாக ஏற்றுக் கொள்ளுதல் (சுவீகாரம்); adoption of a child.

*[மகவு+ஏற்பு]*

**மங்கல மும்மி** *maṅgalamummi,* பெ.(n.) விடை(வைசாக) மாத வளர்பிறை மூன்றாம் பக்கலாகிய நன்னாள்(அட்சய திருதியை); third tithi of the bright fortnight of vaisāgam, as securing merit to all deeds of virtue performed on that day .

*[மங்கலம்+மும்மி]*

**மஞ்சிபோ–தல்** *manjipō-,* செ.கு.வி. (v.i.) தொடர்ந்து இடித்தலால் நன்கு பொடியாகச் செய்தல்; to make nice powder to pounding continuously.

*[நைந்து–மைந்து–மஞ்சி+போ–,]*

**மடங்கல்** *madaṅgal,* பெ.(n.) 1. ஐந்தாம் தமிழ் மாதம் (ஆவணி); the fifth Tamil month-August-September. 2. 22 ஆவது விண் மீனாகிய பறவை(அவிட்டம்) ; 22nd viṇmīṇ.

*[மடங்கு–மடங்கல்(அரிமா)]*

**மடிப்புப்பிடி–த்தல்** *madippupidi-,* செ.கு.வி. (v.i.) சட்டை முதலியவற்றில் மடிப்பு வைத்துத் தைத்தல் (டக்குப் பிடித்தல்); to tuck or sew folds in a garment.

*[மடிப்பு+பிடித்தல்]*

**மண்டிகோல்** *mandikōl-,* பெ. (n.) களி கிண்டும் போது மட்பாண்ட ஏனத்துக்குப் பிடிப்பாக வைக்கும் கவைக்கோல்; a cleft pole used while grindling boiled ragi preparation.

*[மண்டி+கோல்–மண்டியிட்டு களிக்கிண்ட உதவும் கவைக்கோல்]*

**மண்ணிப்பழம்** *mannippalam,* பெ.(n.) மண் வண்ணத் தோலும், வெளிர் பழுப்பு நிறச் சதைப் பகுதியுமுடைய சிறுபழம் (சப்போட்டா); sapota plum.

**மறுவ. சீமை கிலுப்பை**

*[மண்ணி+பழம்]*

**மண்தூங்கி** *mantūngi,* பெ.(n.) தவளை; frog.

*[மண்+தூங்கி]*

மண்ணுக்குள் உறங்குவது என்னும் பொருளில் மண்தூங்கி எனப்பெயர் பெற்றது. இச்சொல்லைக் கடன் பெற்ற வடமொழியாளர் மண்டுக எனத் திரித்துத் தவளையைக் குறிக்கும் சொல்லாக்கிக் கொண்டனர்.

*[த. மண்தூங்கி > Skt. mandūngi ]*

**மணஉறவாடல்** *manauravādal,* பெ.(n.) மக்கள் திருமணத்தால் தொடர்புடைய பெற் றோர் உறவு கொள்ளுதல் (சம்பந்தங் கலத்தல்); contracting relation-ship, as parents by marriage by their children.

*[மணம்+உறவாடல்]*

**மணக்கீரை** *mana-k-kīrai,* பெ.(n.) கீரை வகை (புதினா) ; mint.

*[மணம்+கீரை]*

**மணமண்** *manaman,* பெ.(n.) மணமுள்ள மண் (கஞ்சோறபவம்) ; a fragrant earth.

*[மணம்+மண்]*

**மணமுறிவு** *manamurivu,* பெ.(n.) மணவிலக்கு பார்க்க ; see manavilakku.

*[மண(ம்)+முறிவு]*

**மணவிலக்கு** *manavilakku,* பெ.(n.) ஒரு திரு மணத்தின் சட்டப்படியான முறிவு ; divorce.

மறுவ. மணமுறிவு, தீர்வை, கழித்துக்கட்டல்

[மண(ம்)+விலக்கு]

**மணிஒடுக்கான்** *maniodukkān*, பெ.(n.) உடும்பு; a genus of large lizard.

[மணி+ஒடுக்கான்]

**மந்திரவளியோகம்** *mantiravaliyōgam*, பெ.(n.) மந்திரத்தோடு செய்யப்படும் வளிநிலை (சகர்ப்பபிராணாயாமம்) ; restraint of breath practised with the use of mantras.

[மந்திரம்+வளி+ஓகம்]

**மயிர்ச்சுழி** *mayir-c-culi*, பெ.(n.) (நன்மை, தீமை) ஆகூழ், போகூழ் போன்றவற்றைக் குறிக்கப் பயன்படுத்தும் மாந்தர் மற்றும் பிறவற்றின் உடற்கூறுகளில் காணப்படும் வளையமிட்டிருக்கும் மயிர்த் தொகுதி (உரோமச் சுழி) ; a spiral growth of hair found at a particular spot on the surface of the body of both the human and animal kingdoms and by examining it good or evil, fortune or misfortune is bound to be predicted.

[மயிர்+சுழி]

**மரிக்கை** *marikkai*, பெ.(n.) பருவம் எய்தாத இளம் ஆட்டுக்குட்டி; young one of goat or sheep.

மறுவ. பிருவை.

[முல்-மல்-மரிக்கை. பெண் ஆட்டுக்குட்டி]

**மருத்துவக் கல்வி** *maruttuva-k-kalvi*, பெ.(n.) மருத்துவத் துறைக் கல்வி ; medical education.

[மருத்துவம்+கல்வி]

**மருளாடு-தல்** *marulādu-*, செ.கு.வி.(v.i.) தெய்வமேறிக் குறி சொல்லுதல்(சாமியாடுதல்); to dance under the inspiration of a demon or deity and oracular responses.

[மருள்+ஆடு]

**மரைக்காடு** *marai-k-kādu*, பெ.(n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர்; a village name in Tanjure district. "மானினத்துளொன்றான 'மரை' மிக்கிருந்ததோர் அடவிப்பகுதி" – (வேதாரண்யம்);

**மழுங்கன்** *malungan*, பெ.(n.) எதையும் பொருட்படுத்தாத பேதை; fool. "ரோசக்காரனுக்குக் கடன் கொடு; மழுங்கனுக்குப் பெண்ணைக் கொடு.

[மழு-மழுங்கன்]

**மழைகள்** *malaigal*, பெ.(n.) பல்வேறு பெயர் கொண்ட மழைகள்; rains with different names.

[மழை+கள்]

27 நாண்மீன்களின் பெயரிலமைந்த மழைகள். இக்காலத்தில் உழவர்களால் மகமழை, ஆயில்யமழை, ரோகிணிமழை, உப்பை மழை, அத்தை மழை, சித்த மழை, சாந்தி மழை, சாஉருட்பு மழை, உத்தர மழை என அழைக்கப்படினும் பழைய பெயர்கள் வேறானவை.

**மறத்தண்டு** *marattandu*, பெ.(n.) தண்டாயுதம் (கதாயுதம்) ; club, mace.

[மறம்+தண்டு]



**மறுப்பு-தல்** *maruppu-*, செ.குன்றாவி. (v.t.) காட்டில் மேயவிட்ட கால்நடைகளை மாலையில் வீடு திரும்புவதற்காக மேய்ப்பாளன் எழுப்பும் ஒலியைக் குறிக்கும் வினைச்சொல்; a vert denoting the signal sound made by the cow herd to remind the cattle to tur.

**மனத்தெளிவு** *manattelivu,* பெ.(n.) மனம் வசப் பட்டிருக்கை (கொ.வ.) (சித்தசுவாதீனம்); control over one's mind.

*[மனம்+தெளிவு]*

**மனவமைதி** *manavamaidi,* பெ.(n.) மன அமைதி (சித்த சமாதானம்) ; peace of mind, tranquility.

*[மன+அமைதி]*

**மாக்குச்சி** *mākkucci,* பெ.(n.) கல்லேட்டில் எழுதப் பயன்படும் குச்சி வடிவக் கல் (சிலேட்டுக் குச்சி); pencil like stone to write with on a slate.

*[மா+குச்சி]*

**மாட்டல்** *māttal,* பெ.(n.) மகளிர் காதிலணியும் தோடு முதல் தலைமுடி வரை இணைத்து அணியும் பொன் அணிகலன்; an women ornament.

*[மாட்டு–மாட்டல்]*

**மாந்தனூல்** *māndanūl,* பெ.(n.) மாந்தனது தோற்றம், வளர்ச்சி, பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் பற்றி ஆராயும் அறிவுத்துறை; anthropology.

*[மாந்தன்+நூல்]*

**மாலாழி** *mālāḻi,* பெ.(n.) ஆயிரம் முனை களுடைய திருமாலின் சக்கரப்படை (சகத் திரதாரம்); discuss of Vishnu as thousand pointed.

*[மால்+ஆழி]*

**மாலை நிலை** *mālainilai,* பெ.(n.) உடன்கட்டை ஏறுகை (சககமனம்) ; self immolation of a Hindu widow on her husband's funeral pyre.

*[மாலை+நிலை]*

**மாழைக்கோல்** *māḻai-k-kōl,* பெ.(n.) அறு வைக்கு பயன்படும் வெள்ளி அல்லது செம்பி னாற் செய்த ஊசி(சோதனைக் கோல்); surgeon's needle or instrument made of silver or copper.

*[மாழை+கோல்]*

**மாற்றுப் பெயர்** *māṟṟu-p-peyar,* பெ.(n.) ஒரு பெயர்ச் சொல்லுக்கு அல்லது ஒரு பெயர்த் தொடருக்கு மாற்றாகப் பயன்படுத்தும் சொல்; pronoun.

**மறுவ. பகரப்பெயர்**

*[மாறு–மாற்று+பெயர்]*

**மிகுநலம்** *migunalam,* பெ.(n.) மிகு பேறு(சௌ பாக்கியம்); good fortune, hale and healthy.

*[மிகு+நலம்]*

**மிகு வெளிச்சம்** *mikuveliccam,* பெ.(n.) பேரொளி; brilliancy.

*[மிகு+வெளிச்சம்]*

**மிறைகோல்** *miraikōl,* பெ.(n.) களத்தில் கதிர் அல்லது வைக்கோலை ஈரங்காய்வதற்காக புரட்டிவிட உதவும் வளைந்த கம்பி பொருத்தப் பட்ட கோல்; an implement used by the agriculturists on the threshold.

**மறுவ. மெரகோல்.**

*[மிடை–மிறை+கோல்]*

**மின்னுந்து** *minnundu,* பெ.(n.) மின்சார வண்டி (டிராம் வண்டி); electric train.

*[மின்+உந்து]*



**மினுக்கி** *minukki,* பெ.(n.) ஒப்பனை ஆர்வ முடையவள் (சிங்காரி); gaily dressed women. "மேட்டு நிலத்தை உழுதவனும் கெட்டான், மேனாமினுக்கியைக் கட்டிக் கொண்டவனும் கெட்டான்" (பழ.).

**மினுப்பி** *minuppi,* பெ.(n.) குங்கிலியத்தையும், கற்பூரத்தையும் ஒன்றாகக் கூட்டி பொடியாக்கி குழைத்துச் செய்யும் மின்னு நெய் செய்யும் வகை ; spirit varnish prepared by mixing hot alcohol with 6 parts of piney dammer and one part of camphor.

*[மின்–மினுப்பி]*

**மீகாமன்** *mīkāman,* பெ.(n.) கப்பற்றலைவன் (கப்பித்தான்) ; captain of a ship.

*[மீகு–மீகாமன்]*

**மூக்குளியர்** *mukkuliyar,* பெ.(n.) கடலில் மூழ்கி (முங்கி)க் குளித்து முத்து, சிப்பி ஆகியவற்றை எடுப்பவர்கள்; pearl collecting divers.

**மறுவ. குளியாளி**

*[முங்கு+குளியர்]*

**முடிவு நிலை** *mudivunilai,* பெ.(n.) கருத்துகள், கோட்பாடுகள் ஆகியவற்றின் அடிப்படையில் வரும் முடிவு; theoretical stage.

*[முடிவு+நிலை]*

**முதன்மை ஏவலர்** *mutanmaiyēvalar,* பெ.(n.) தலைமை ஏவலாளர் (தபேதார்); head peon,

*[முதன்மை+ஏவலர்]*

**முது சொத்து ஏம வாழ்வு** *mutusottuēma vāḻvu,* பெ.(n.) மூதாதையர் சொத்தால் வாழும் நல்வாழ்க்கை (சுகவாச சீவனம்) ; comfortable livelihood.

*[முது+சொத்து+ஏம+வாழ்வு]*

**முழுமேனியழகன்** *mulumēniyalgan,* பெ.(n.) எல்லா உடலுறுப்புகளும் அழகாய் அமைந் தவன் (சர்வாங்கசுந்தரன்) ; one perfect in every limb, embodiment of beauty.

*[முழு+மேனி+அழகன்]*

**முழுவழிக்கை** *muluvalikkai,* பெ.(n.) உடல் முழுவதும் மயிர் மழிக்கை (சர்வாங்க சவரம்); shaving the whole body.

*[முழு+மழிக்கை]*

**முழுவின்பம்** *muluvinbam,* பெ.(n.) முழு மகிழ்ச்சி (சொரூபானந்தம்) ; perfect bliss.

*[முழு+இன்பம்]*

**முள்ளந்தண்டு** *mullantandu,* பெ.(n.) முதுகுத் தண்டிலிருக்கும் 33 முள் எலும்புகள் (கசே ரூபம்) ; the thirty three vertebrae. 2. முதுகெலும்பு; back bone.

*[முள்+தண்டு]*

**முள்ளந்தண்டு நீர்க்கோவை** *mullantandu nīr-k-kōvai,* பெ.(n.) முள்ளந்தண்டில் இறங்கி நிற்கும் ஊதை நீர் (கசேரு நீர்க்கோவை); a collection of morbid fluid in the vertebral column -Hydrorochis.

*[முள்ளந்தண்டு+நீர்+கோவை]*

**முளரிப் பூ** *mularippū,* பெ.(n.) இளஞ்சிவப்பு நிற இனிய மணமுள்ள அழகு ரோசா மலர்; thomy shrub bearing beautiful and sweet-smelling flowers.

*[முளரி+பூ]*

**முளைப்பு** *mulaippu,* பெ.(n.) பல் முளைக்கை (தசனோற்பவம்) ; dentition, teething.

*[முளை–முளைப்பு]*

**முற்கோள்** *murkōl,* பெ.(n.) ஒரு பொருள் பற்றிய உண்மை நிலையை ஏற்காமல் தானே கொண்டிருக்கும் தவறான அல்லது பொருந் தாத கருத்து; prejudice.

*[முன்+கோள்]*

**முற்றதிகார ஆவணம்** *murradigāra āvanam,* பெ.(n.) எல்லாவற்றுக்குமாகக் கொடுக்கும் அதிகார ஆவணம் (சர்வமுக்தி யார் நாமா); a general power of attorney.

*[முற்று+அதிகார+ஆவணம்]*

**முற்றதிகாரம்** *murratikāram,* பெ.(n.) தனி மாந்தன் அல்லது ஓர் அமைப்பு எல்லா அதிகா ரங்களையும் வைத்துக் கொண்டு அடக்கி ஆளும் முறை (சர்வாதிகாரம்); dictator ship.

*[முற்று+அதிகாரம்]*

**முற்றெரிவு** *murrerivu,* பெ.(n.) முழுமையும் எரிக்கை (சர்வங்க தகனம்) ; burning the whole.

*[முற்று+எரிவு]*

**முன்வரைவு** *munvaraivu,* பெ.(n.) எழுத்து முதலியவற்றின் மாற்றத்திற்கும் திருத்தத் திற்கும் மேம்பாட்டுக்கும் உரியதுமான வரைவு, இறுதி வடிவம் பெறாத முன் வரைவு; draft. சட்ட முன் வரைவு.

*[முன்+வரைவு]*

**முறைமன்றம்** *murai-manram,* பெ.(n.) நீதி மன்றம் (அதாலத்து); court of justice.

**முன்விழிப்பு** *munvilippu,* பெ.(n.) விழிப்பு (சாக்கிரதை); wakefulness, vigilence.

*[முன்+விழிப்பு]*

**மூட்டைவிடு-தல்** *mūttaividu-,* செ.கு.வி. (v.i.) பொய் புளுகுதல்; to gossip.

*[மூட்டை+விடு-,]*

**மூடாடி விளக்கு** *mūdādivilakku,* பெ.(n.) கண்ணாடிக் கூடு பொருத்திய மண்ணெண் ணெய் விளக்கு(சிமினி விளக்கு); kerosene lamp with a chimney.

*[மூடு+ஆடி+விளக்கு]*

**மூடுமுகப்பிறப்பு** *mūdumugappirappu,* பெ.(n.) முகத்தில் சவ்வு மூடிப்பிறக்கை (குல்லா யிட்டுப் பிறத்தல்); birth of child with a piece of the amneolic membrane, occassionally covering its face like a veil being born with a caul.

*[மூடு+முகம்+பிறப்பு]*

**மூரி** *mūri,* பெ.(n.) பொலி காளை, எருது; stud bull.

*[மூல்-மூர்-மூரி]*

**மூவிடப்பெயர்** *mūvida-p-peyar,* பெ.(n.) தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூவிடங்களை உணர்த்தும் பகரப்பெயர்; personel pronoun.

*[மூவிடம்+பெயர்]*

**மூவேந்தர்** *mūvēndar,* பெ.(n.) பழந்தமிழ கத்தை ஆட்சி புரிந்த மூன்று தமிழ் வேந்தர் மரபினர்; three royal class of the Tamils who ruled over Tamilnadu.

*[மூன்று+வேந்தர்]*

பண்டைத்தமிழ் மன்னர்க்குப் பல பெயர்கள் வழங்கினும் அவற்றுட் **பாண்டியன், சோழன், சேரன்** என்பவை மிக முதுமையும், முதன்மையும் பற்றியவாகும். பாண்டியன், சோழன், சேரன் என்பதே கால முறையாயினும் இசைவுபற்றிச் சேரன், சோழன், பாண்டியன் எனத் தலைமாற்றிக் கூறப்படும்.

தமிழரசர் கொடி வழிகள் ஆரிய வருகைக்கு முன்னமே தமிழ் நாட்டிலிருந்தும், அவற்றின் பெயர்கட்கு வடமொழி மூலங்காட்டினார் கால்டுவெல் கண்காணியார். மேனாட்டறிஞர் எத்துணையோ ஆராய்ச்சி வன்மையும், நடுவுநிலைமையும் உடைய ரேனும், இந்திய மொழிகளெல்லாம் வடமொழி வழியின வென்னுமோர் தவற்றெண்ணம் அவர் மன திற் குடி கொண்ட மையின், அவராராய்ச்சி சிற்சில விடத்துப் பயன்பட்டிலது. சேர சோழ பாண்டியர் தமிழ் மன்னராயிருப்பவும் அவர்க்குப் பெயர் வடமொழியி னின்று வந்தன வென்பது எங்ஙனம் பொருந்தும்? ஆரிய மரபினராயிருந் திருப்பினன்றோ அவர்க்கு ஆரியப் பெயர் வழங்கியிருக்கும்? சேர சோழ பாண்டியப் பெயர்கள் சேர சோழ பாண்டிய ரென்று அசோகர் கல்வெட்டிலிருக்கின்றனவென்பது ஆரிய வழிக்கு ஆதாரமாகுமா? ழகரம் தெலுங்கிலும், வட மொழியிலும் டகரமாய்த் திரியும்.

| <u>எ–டு :</u> | தெலுங்கு | வடமொழி |
|---|---|---|
| | கோழி–கோடி | நாழி–நாடி |
| | கிழங்கு–கெட்டா | பீழை–பீட |

நாளம் = மூங்கில். நாளி–மூங்கிலாற் செய்யப் பட்டபடி. இக்காலத்தும் மூங்கிற் படிகளைச் சிற்றூர் களிலும், சிறு கடைகளிலும் காணலாம். நாளி – நாழி. சீகாளி – சீகாழி.

சோழன் என்பது சோடன் என்பதன் திரி பென்றும், நாழி என்பது நாடி என்பதன் திரிபென்றும்,

தமிழர் என்பது திராவிடர் என்பதன் திரிபென்றும், பாண்டியன் என்பது பாண்டுவினின்றும் திரிந்த தென்றும் கூறுவர் கால்டுவெல் கண்காணியார்.

மெய்யெழுத்துகள் ரகரத்தோடு சேர்ந்து மொழி முதல் நிற்பது வடமொழியிற் பெரும்பான்மை. அதன் படி த என்பது த்ர என்றாகும். மகரத்திற்கு வகரம் போலியாகும்.

<u>எ-டு :</u> குமி–குவி, மிஞ்சு–விஞ்சு.

ழ வடமொழியில் ட ஆகும். இங்ஙனம் தமிழ் என்னும் சொல் வட மொழியில் த்ரவிட என்றாகும். தமிழகம் என்னும் சொல் கிறித்துவுக்குப் பன்னூ றாண்டிற்கு முன்னரே மேலை நாடுகளில் Damurica - Lemurica - Lemuria என்று பலவாறு திரிந்து வழங்கி யிருப்பவும், அதற்குப் பின் இந்தியாவிற்கு வந்த ஆரிய வாய்ச்சொல்லின் திரிபென்பது சற்றும் பொருந்தாது.

தமிழ் மன்னர் பெயர் வடமொழிப் பழங் காவியங் களாகிய பாரத இராமாயணங்களிற் கூறப்பட்டுள. உதியன் என்னும் ஓர் சேரநாட்டரசன் பாரதப் படை கட்குச் சோறு வழங்கியமைபற்றிப் பெருஞ்சோற்று தியஞ்சேரலாதன் என்று பழந்தமிழ் நூல்களிற் பாராட் டப்படுகின்றான். வான்மீகி இராமாயணத்திற் றமிழ் மன்னரைப் பற்றிய குறிப்பு, பிற்காலத்தில் இடைச் செருகலென்று சிலர் புறக்கணிக்கலாம். இராமர் தெற்கே வந்து அகத்தியரைக் கண்டதை எவரும் மறுக்கார். அகத்தியருண்மையானே பாண்டியனுண் மையும் அறியப்படும். பாரதத்திற்கு முன்னமே பாண் டியனுண்மை இராமாயணத்தால் விளங்காவிடினும், கிறித்துவுக்கு முன்னைய மேனாட்டுப் பூமி சாத்திரி கள் குறித்துள்ள தமிழகப் படங்களானும், பிரித் தானியப் பொருட்காட்சிச் சாலைத் தலைவர், Dr.ஹால் என்பவர் பாபிலோனியக் குடைபொருள்கள் பற்றிக் கூறியுள்ள ஆராய்ச்சியுரையானும் விளங்குவ தாகும்.

பாண்டு, பாண்டியன் என்னும் பெயரொப்புமை பற்றியும், பாண்டுவின் மகனாகிய அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை வந்தபோது பாண்டியன் மகளை மணந் தான் என்னும் கதைபற்றியும், மகாவம்சம் என்னும் இலங்கைச் சரித்திர நூலில் பாண்டியன் என்பதை, பாண்டு என்பதினின்றும் திரிந்த பாண்டிவன் என்னும் தத்திதாந்தத் திரிபென்று கூறுவது மொட்டைத் தலைக்கும், முழங்காற்கும் முடிபோட்ட தொக்கு மன்றோ?

பாண்டியன், சோழன்,சேரன் என்னும் பெயர்கள் வடமொழியாயின், வடமொழியில் அவற்றிற்குப் பொருளிருத்தல் வேண்டும். பாண்டியப் பெயர்க்குக் கூறும் வடமொழிப் பொருள் சரித்திர வாயிலாய் மறுக் கப்பட்டது. சோழசேரப் பெயர்கட்குப் பொருந்தப் புளுகும் பொருளும் வடமொழியிலில்லை. இனி, இத் தமிழ் மன்னர் பெயர்கள் தமிழ் சொற்களாயின் அவற்றிற்குப் பொருள் என்னை யெனிற் கூறுதும்:

1. பாண்டியன் – பாண்டியன் = பாண்டி + அன்

பாண்டி என்பது வட்டமென்னும் பொருளிலேயே வழங்கப்பட்டுள்ளது. பாண்டி,ஒரு விளையாட்டு. ஓட்டை, வட்டமாக நறுக்கி நிலத்தில் அரங்கு கீறி எறிந்து விளையாடுவது. வட்டமாக நறுக்கப்பட்ட ஓடு வட்டு எனப்படும். வட்டு என்பது கருவியாகுபெயராய் அதைக் கொண்டு ஆடும் விளையாட்டையும் உணர்த்தும்.

'கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்' (நற்.3)

வட்டு என்பதன் பரியாயப் பெயராகவே பாண்டி யென்பது தென்னாட்டில் வழங்குகின்றது.

தொடடி, புட்டி, விட்டி என்பன தொட்டில், புட்டில், விட்டில் என்று நின்றாற்போல, பாண்டி என்பதும் பாண்டில் என நிற்கும்.

பாண்டில் = வட்டம். பாண்டில் என்பது வட்டம் என்னும் மூலப் பொருள்பற்றியே பல பொருள்களை யுணர்த்தும்.

பாண்டில் = 1. அகல், வட்டமாயிருப்பது.
2. காளை, வட்டமாய் அல்லது உருண்டிருப்பது.
3. கைத்தாளம், வட்டமாயிருப்பது.
4. நாடு

ஒரு நாட்டை அல்லது நாட்டுப் பகுதியை வட்டம், வட்டகை, வட்டாரம் என்று சொல்வது வழக்கு. மண்டலம் என்பது வட்டத்தின் பரியாயப் பெயரே. இங்கிலீஷிலும் 'circle' என்று நாட்டுப் பகுதியைக் கூறுவர்.

5. சக்கரம், வட்டமாயிருப்பது.
6. பண்டி (வண்டி)

(கொல்லாப் பண்டி எனச் சிலப்பதிகார உரை)

பண்டி யென்பத வண்டியென்பதன் திரிபு. ப– வ, போலி. வண்டி–வள் பகுதி, தி விகுதி. வள் + தி =வண்டி, வளைந்திருப்பது. வண்டியென்பது முதலில் சக்கரத்தையும் பின்பு உறுப்பாகுபெயராய்ச் சகடத்தையும் குறிக்கும்.

பண்டி என்பதே பாண்டி, பாண்டில் எனத் திரியும்.

"பாண்டில் எடுத்தபஃ றாமரை கீழும் பழனங் களே" எனும் திருக்கோவையடியில் பாண்டில் என்பது கிண்ணம் என்னும் பொருளில் தாமரைக் குவமையாய் வந்துள்ளது. கிண்ணம் வட்டமா யிருப்பது.

வட்டம் என்னும் சொல் உருட்சியையும், திரட்சி யையும் குறிக்கும். ஓர் உருண்டையின் பரப்புத் தூரத் தில் வட்டமாகவே தோன்றும்.

பாண்டியன் குதிரைக்குக் கனவட்டம் என்று பெயர். ஓர் இளைஞனை இளவட்டம் என்பர் தென் னாட்டார். வட்டம் என்பதைப் போலவே அதன் பரியாயப் பெயராகிய பாண்டில் என்பதும் உருட்சியும், திரட்சியுமாகிய பொருள்களை யுணர்த்தும்.

பாண்டில், உருட்சியான ஒரு காளையை யுணர்த்துவது போல உருட்சியான ஒரு வீரனையும் உணர்த்தும். காளை என்னும் பெயர் உவமையாகு பெயராய் வீரனைக் குறிப்பது செய்யுளிற் பெரு வழக்கு. தென்னாட்டார் காளை என்னும் பெயரைத் தம் சிறார்க்கிடுவது இன்றும் வழக்கம். இப்போ துள்ள சிவகிரி ஜமீன்தார் அவர்களின் பெயர் செந் தட்டிக் காளைப் பாண்டியன் என்பது. ஆகவே **பாண்டி யென்பதற்கு "வீரன்" என்பதே பொருளாம்.** அஃது அன் விகுதி பெற்றுப் பாண்டியன் என நிற்கும். பாண்டியன் வீரத்தைச் சங்க நூல்களானும், "பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே யம்மானே" என்னும் புகழெந்தியார் கூற்றானு முணர்க.

இனி, பாண்டியனுக்குரிய மறுபெயர்களாவன:

செழியன் = செழிய நாட்டை யுடையவன்.

தென்னவன் = தென்னாட்டரசன்.

வழுதி = புலவரால் வழுத்தப்படுகின்றவன்.

மாறன் = பகைவரொடு மாறுகொண்டவன்.

மீனவன் = மீனக்கொடி யுடையவன்.

கைதானவன் = தன் கையை வெட்டினவன் (பொற்கைப் பாண்டியன். அவனுக்குப் பின்னால் ஏற்பட்ட பெயர்.)

பஞ்சவன் = ஐந்து சிற்றரசரை ஆண்டவன். (கல்வெட்டுகளையும், சரித்திரத்தையுங் காண்க.) முல்லை, குறிஞ்சி முதலிய ஐந்திணை நிலங்களை யுடையவன் என்று பொருள் கூறல் பொருந்தாது.

கௌரியன் = கௌரியின் வழித்தோன்றல்.

கௌரி தடாதகைப் பிராட்டியாரான பார்வதி.

சின்னமும், அங்கமும் பற்றிய தொடர்மொழிப் பெயர்கள் இங்குக் கூறப்பட்டில.

2. சோழன் : சோளம் – சோழம் – சோழம் + அன் = சோழன்.

சோழம் என்பது மக்காச் சோழம்; கள்ளர் வெட்டிச் சோளம் என்றும் கூறப்படும்.

மக்காச்சோளம் சோழநாட்டிலேயே சிறப்பாய் விளைகின்றது. பாண்டிநாட்டிற் பயிரிடப்படுவதே யில்லை. கொங்குநாட்டிலும், பிற சேர நாட்டுப் பகுதி களிலும் விளைந்தாலும், சிற்றுண்டியாய்த் தின்னத் தக்க அவ்வளவு சிற்றளவாகவே விளைகின்றது. சோழநாட்டிற் கள்ளருக்குச் சிறந்த வுணவாகின்றது. கள்ளர் அதை மிகுதியாகப் பயிரிடுகின்றனர். அதனாலேயே கள்ளர்வெட்டிச் சோளம் எனப் பெயர் பெற்றது. கள்ளர் என்னும் வகுப்பார் சோழநாட்டி லன்றிப் பிற நாட்டிவில்லை. இதனாலும் சோளம் சோழநாட்டிற்கே சிறப்பென்பது பெறப்படும்.

தாவரப் பொருள்களால் இடங்கள் பெயர் பெறுவது சாதாரணம்.

எ–டு : பொழில் = (சோலை) உலகம். உலக முழுதும் முன்காலத்தில்ஒரே சோலைபோல் தோன்றிற்று.

நாவலந் தீவு = நாவன் மரம் மிகுந்த பரதகண்டம்.

நெல்வேலி, திருநெல்வேலி, நென்மேனி, நெல்லூர் முதலியன நெல் விளையும் இடங்கள்.

புளியம்பட்டி, புளியங்குடி, அத்திகுளம், வேப்பங் குளம், பனையூர், பனையடிப்பட்டி முதலியன மரங்க ளாற் பெற்ற பெயர்கள்.

எருக்கலங்குடி செடியாற் பெற்ற பெயர். இங்ஙனமே பிறவும்.

சோளம் விளையும்நாடு தானியாகுபெயராகச் சோளம் எனப்பட்டது. சோளம் சோழம் எனத் திரியும்.

ள–ழ. cf. தோள் + அன் = தோளன் = தோழன். தோள்போல் உதவுபவன் அல்லது தோளிற் கை போடுபவன்.

சீகாளி – சீகாழி. யாளி –யாழ், நாளி–நாரி, தேளி–தேழி, தேள்போற் கொட்டுவது.

சோழநாட்டையுடையவன் சோழன்.

இனி, சோழனுக்குரிய மறுபெயர்களாவன :

சென்னி = தலைவன், சென்னி = தலை.

கிள்ளி = பகைவர் தலையைக் கிள்ளுபவன்.

அபயன் = பயத்தை நீக்குபவன், அடைக்கலந் தருபவன்.

வளவன் = வளநாட்டையுடையவன்.

செம்பியன் = சிபியின் வழித்தோன்றல்.

சின்னமும், அங்கமும் பற்றிய தொடர்மொழிப் பெயர்கள் இங்குக் கூறப்பட்டில.

3. சேரன் : சாரல் – சேரல் –சேரன்.

தமிழ் வேந்தர் மூவருள்ளும் சேரனே மலை நாட்டையுடையவன். சாரல் என்பது மலையின் அடிவாரத்தையும், மலைநாட்டையும் குறிக்கும். பின்பு இடவாகுபெயராய் அம் மலைநாட்டை ஆள்பவனைக் குறித்தது.

சாரல் என்பது சேரல் என்று திரியும். உக. சார் – சேர்.

சேரல் என்பது சேரன் என்று திரியும்.

ல–ன போலி. cf. மறன் – மறல், மறலி –எமன். திறன் – திறல்.

சேரல் என்பதே சேரன் பழம்பெயராகும்.

எ.டு: குடக்கோச் சேரல், மாந்தரஞ் சேரல்.

சேரல் + அன் = சேரலன் – கேரளன்.

ச–க, போலி. cf. சீர்த்தி – கீர்த்தி, சுலவு – குலவு.

ல–ள, போலி cf. இறலி – இறளி, கசலி – கசளி.

சேரன், கேரளன் என்பவை பிந்திய வடிவங் களாகும். அவற்றுள்ளும் மிகப் பிந்தியது கேரளன் என்பத பண்டைத் தமிழ் நூல்களிலெல்லாம் சேரல் என்பதே பெருவழக்காய் வரும். பிற்காலத்துப் புராணங்களிலெல்லாம் கேரளன் என்பது பெருவழக் காய் வரும்.

சேரன் என்னும் பெயரொடு மான் என்னும் பெயர் சேர்த்துச் சேரமான் என்று வழங்குவது முண்டு. மான் என்பத மகன் என்பதன் திரிபு. பெருமகன் – பெருமான், மருமகன் – மருமான்.

இனிச் சேரனுக்குரிய பிற பெயர்களாவன :

வில்லவன் – வில்லையுடையவன்.

கொங்கன் – கொங்குநாட்டை யுடையவன்.

குடக்கோ – குடநாட்டரசன். குடம் – மேற்கு.

குட்டுவன் – குடநாட்டரசன். குடம்– குட்டம்.

குடகன் – குடநாட்டரசன்.

கோதை – (வில்லுக்காக) முன்கைத் தோற்கட்டுடையவன்.

உதியன் – உயர்ந்தவன். உயர்ந்த மலைநாடன்.

வானவன் – வானத்தையளாவும் மலைநாடன்.

வானவரம்பன்– வானத்தையளாவும் மலைநாடன்.

மலையமான் – மலைநாட்டரசன்.

சேய் – மலைத் தெய்வமாகிய முருகன் போன்றவன்.

சின்னமும், அங்கமும் பற்றியதொடர்மொழிப் பெயர்கள் கூறாது விடப்பட்டன.

இதுகாறுங் கூறியவற்றால் தமிழரும், தமிழர சரும் ஆரிய வருகைக்கு முன்பே, தமிழ்நாட்டி லிருந்தவர்களென்றும், அவர்கள் தமிழ்நாட்டின் பழங்குடிகளேயென்றும், அவை வடமொழியிற் பலவாறு திரியுமென்றும், தமிழரசருள் பாண்டியன் காலத்தால் முற்பட்டவன் என்றும், சோழன் இடைப் பட்டவன் என்றும், சேரன் கடைப்பட்டவன் என்றும் தெரிந்து கொள்க.

பாண்டியன் முற்பட்டவன் என்பது தமிழ்நாடன் என்னும் பெயரினாலும், சங்க வரலாற்றாலும், சரித்திரத்தினாலும்,

"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு
தென்திசை யாண்ட தென்னவன் வாழி"

(சிலப்.11: 19–22)

என்னும் சிலப்பதிகார வரிகளாலும், முழுகின தமிழகமுண்மையிலும், மேனாட்டுக் குறிப்புகளாலும் அறியப்படும். முழுகின தமிழகம் பாண்டி நாட்டுப் பகுதியாகும். அதுவே மக்கள் முதன்முதற் றோன்றி யவிடம்.

மக்கள் பெருகி வடக்கே வரவே சோழநாடு தோன்றிற்று. தென்றிசையினின்றே மக்கள் ஆதியில் வடக்கே சென்று உலகமுழுதும் பரவின தாகச் வரலாறு கூறும். பல்வகைக் கலைகளும் இதற்குச் சான்று பகரும்.

சோழநாட்டின்பின் சேரநாடு தோன்றிற்று. சேரநாடு முதலாவது குடமலைக்குக் கீழ்ப்பட்ட கொங்குநாட் டளவாயிருந்து பின்பு மேல் கரையும் சென்று தாவிற்று.

தமிழ்மொழி பாண்டிநாட்டின் செந்தமிழாயிருந் ததும், வடக்கே சோழ நாட்டிற் சற்றுத் திரிந்ததும், அதை அடுத்து அதன் மேற்கே மிகத் திரிந்து கொடுந் தமிழானதும்.

கிறித்துவுக்கு முற்பட்ட காலத்தில் பாண்டியன் தமிழ்நாட்டில் தலைமை வகித்ததும், பின்பு சோழன் தலைமை வகித்ததும், பின்பு சேரன் செங்குட்டுவன் தலைமை வகித்ததும், பாண்டிய சோழ சேர முன்மை இடைமை பின்மைகளை யுணர்த்துவனவாகும்.

சங்ககாலத்தோடு தனித் தமிழரசு தலைத் தாழ்த்ததனால் அதற்குப் பிற்பட்ட சிற்றிடைச் சிறு போதைத் தமிழரசுக் கிளர்ச்சிகள் இங்குக் கொள் ளப்பட்டில.

மேனாட்டுப் பழையவரலாற்று நூல்களில் தமிழரசரைப் பற்றிய குறிப்புகளிலெல்லாம் பாண்டியன் பெயரே குறிப்பிடப்பட்டுள்ளது.

சோழநாடு வடக்கே வரவர விரிந்திருத்தலால் மக்கள் மேற்கே சென்று குடியேறினர் என்க.

சேரநாட்டுத் தமிழ் தன் பெருந்திரிபினாலேயே வடமொழித் துணைகொண்டு மலையாளம் எனத் தனிமொழியாய்ப் பிரிந்தது.

ஆதலால் பாண்டியன் பெயர் மிகப் பழைமையான தென்க.

–"செந்தமிழ்ச் செல்வி" கன்னி 1934

**மெதுவுகால்** *meduvukāl,* பெ.(n.) வளர்ப்பு விலங்குகளின் கால் பாதம் நடத்தற்கு இயலாத வாறு மென்மையாகிவிட்ட நிலை; the state of emaciation of thin skin at the bottom of the foot of the domestic animals. "மாட்டுக்கு மெதுவுகால் ஏற்பட்டதால் மேய்ச் சலுக்கு கொண்டு செல்ல முடியவில்லை" (உ.வ.).

*[மெல்–மெது–மெதுவு+கால்]*

**மெய்காப்புறை** *meykāppuṟai,* பெ.(n.) காப் புறை, கவசம்(கங்கடம்) ; armous.

*[மெய்+காப்பு+உறை]*

**மெய்ம்மப் பட்டறிவு** *meymma-p-paṭṭaṟivu,* பெ.(n.) மெய்மைகளின் குணங்களை ஆன்மா காணும் ஓர் பட்டறிவு நிலை(தத்துவரூபம்); a spiritual experience of the soul in which it is cognizant of the operations of the 36 tatvas.

**மெய்யறிவின்பம்** *meyyaṟiviṉbam,* பெ.(n.) உளதாயிருத்தல் மெய்யறிவு இன்பம் என்னும் முக்குணம் 2ன் நிரம்பிய பரம்பொருள் (சச்சிதானந்தம்); the supreme spirit, as having the threefold attributes of existence, knowledge and bliss.

*[மெய்+அறிவு+இன்பம்]*

**மெய்யுணர்வு அளவை** *meyyuṇarvuaḷavai* பெ.(n.) மெய்யுணர்வு விளக்கத்திற்காக மறை முதலியவற்றைக் கொண்டு அறியும் ஓர் அளவை (சத்தப்பிரமாணம்) ; verbal authority, revelation or scripture, as a means of acquiring correct knowledge.

*[மெய்+உணர்வு+அளவை]*

**மேம்பட்ட அழகு** *mēmpaṭṭa aḻagu,* பெ.(n.) ஒளிவிடுதல் (சோபித்தல்) ; to be beautiful, to be splendid, lustrious.

*[மேம்பட்ட+அழகு]*

**மேற்காணகர்** *mēṟkāṇagar,* பெ.(n.) முறை மன்றம், ஆட்சியர் மற்றும் வட்டாட்சியர் அலுவலகம் ஆகியவற்றிலுள்ள ஆளுவ பணியாளர்க்குத் தலைவரான அதிகாரி (சிரத்தார்); head officer of a court of justice or collectors office, head accountant of a Taluk, who has the general superin- tendance of the establishment.

*[மேல்+காணகம்]*

**மேனி இலக்கணம்** *mēṉiilakkaṇam,* பெ.(n.) ஆண் பெண் இருவருக்கும் வேண்டிய அங்க அமைப்பு (சாமுத்திரிகா லட்சணம்); physical features of a beautiful woman or handsome man, physeognomy.

*[மேனி+இலக்கணம்]*

**மோட்டு மரி** *mōṭṭupari,* பெ.(n.) விலா எலும்பு ஊனமுற்ற மாடு; a cow with a damaged rib.

*[முடு–மோடு–மோட்டு+பரி]*

# வ

**வங்கன்** *vangan,* பெ.(n.) நாவாய்கன் பார்க்க; see nāvāygaṉ.

*[வங்கம்–வங்கன்]*

**வட்டாட்சியர்** *vaṭṭāṭciyar,* பெ.(n.) மாவட்ட ஆட்சியருக்குக் கீழ் வட்டத்தில் அரசிறை தண்டும் அதிகாரி (தாசில்தார்) ; (tahsildar) a revenue officer in charge of a taluk under the district Collector.

*[வட்டம்+ஆட்சியர்]*

**வண்ணவான்வெடி** *vaṇṇavāṉveḍi,* பெ.(n.) சீன வெடி (கொ.வ.) (டப்பாசு); a kind of fire-crackers.

*[வண்ண+வான்+வெடி]*

**வருவாய் மதிப்பீடு** *varuvāimadippīḍu,* பெ.(n.) வட்டாரம் அல்லது பண்ணையிலிருந்து கிடைக்கக் கூடிய தண்டலின் குத்து மதிப்பு (டவுல்); estimate valuation, estimate of the amount of revenue which a district or estate may be expected to yield.

*[வருவாய்+மதிப்பு+ஈடு]*

**வரையாடு** *varaiyāḍu,* பெ.(n.) மலையாடு; mountain sheep.

**த.வ. செம்மறியாடு**

*[வரை+ஆடு]*

**வரைவோலை** *varaivōlai,* பெ.(n.) ஒருவருக்குப் பணம் வழங்குமாறு வைப்பகத்திற்குத் தரப்படும் எழுத்து வடிவிலான ஆணை; demand draft.

*[வரைவு+ஓலை]*

**வல்லமை** *vallamai,* பெ.(n.) திறனாற்றல் (சாதுரியம்); cleverness.

*[வல்–வல்லமை]*

**வல்லே** *vallē,* பெ.(n.) மிக நன்று என்னும் குறிப்பு (சபாசு); expr. meaning excellence well done.

**வலக்காரம்** *valakkāram,* பெ.(n.) அடாவடித் தனம், கரவடம் (சாணக்கியம்); art stratagem.

**மறுவ. நுண்சூழ்ச்சித் திறம்**

*[வலம்–வலக்காரம்]*

**வழக்கீடு** *vaḻakkīḍu,* பெ.(n.) வழக்கு தொடுத் தல் (தகாதா) ; law suit.

*[வழக்கு+ஈடு]*

**வழும்புக் காய்ச்சல்** *vaḻumpu-k-kāiccal,* பெ.(n.) வயிற்றளைச்சலில் காணும் காய்ச்சல் (சீதக் கட்டு சுரம்); fever in dysentery.

*[வழும்பு+காய்ச்சல்]*

**வழும்பு வலி** *valumbuvali,* பெ.(n.) வழும்புவலி (சீதக்கடுப்பு) ; pain in the anus and lower abdomen due to dysentery.

*[வழும்பு+வலி]*

**வளிநீர்** *vaḷi-nīr,* பெ.(n.) இரைப்பை நீர்; gastric juice.

*[வழி+நீர்]*

**வளி நோய்** *vaḷinoy,* பெ.(n.) ஒரு வகை வாத(வளி) நோய் ; a kind of gastric disease.

**த.வ. அழல் வளி**

*[வளி+நோய்]*

**வறட்டுஅடை** *varaṭṭuaḍai,* பெ.(n.) எண்ணெய் தடவாமல் நெருப்பில் வாட்டி எடுக்கப்படும் அடை போன்ற உணவு (சுக்கா ரொட்டி); a kind of aḍai roasted without using oil.

*[வறட்டு+அடை]*

**வாய்வெருவல்** *vāyveruval,* பெ.(n.) மறதியாக அல்லது அறியாமையின் வெளிப்பாடாகச் சொல்லக்கூடாதவற்றையும் சொல்லிவிடுதல்; to reveal what not to be spoken or exposed as a result of ignorance or

forgetfulness. "வாய்வெருவலாக எல்லாவற்றையும் சொல்லிவிட்டார்" (உ.வ.).

*[வாய்+வெருவல்]*

**வாயால்கெடல்** *vāyalkeḍal*, தொ.பெ.(vbl.n.) சொல்லக்கூடாததைச் சொல்லித் துன்பத்திற்குள்ளாதல்; inviting trouble by loose talk. 2. தவளை கத்துதலின் வாயிலாகத் தன் இருப்பிடத்தை பகை உயிரிகளுக்குத் தெரிவித்து உயிரிழத்தல்; forg denoting its location to enemies by croaking. "நுணலும் தன் வாயாற் கெடும் (பழ.).

*[வழி+நீர்]*

தவளையைத் தின்ன நினைக்கும் வெளவால் தவளை கத்தும் வரை காத்திருக்கும். தவளை இனச்சேர்க்கையின்போது கத்துவது வழக்கம். உண்ணக்கூடாத நச்சுத் தவளையின் ஓசையையும் நல்ல தவளையின் ஓசையையும் வேறுபடுத்தி நுனித்தறிந்த பின் நல்ல தவளையை மட்டும் வெளவால் தின்னும். இதனால் மணலுள் முழுகி மறைந்து கிடக்கும் நுணலும் தன் வாயால் கெடும் என்ற பழமொழி தோன்றியது. மழைக்காலத்தில் கூட்டமாக சேர்ந்து கத்துவது இதனினும் வேறான நிகழ்வு.

**வான்செலல் அறிவர்** *vānselalaṟivar*, பெ.(n.) வான்வழியே நினைத்தவிடம் செல்ல வல்ல சித்தர் (கமன சித்தர்); siddhar reputed to have the super natural power of freely traversing through space.

*[வான்+செலல்+அறிவர்]*

**வான் செலவாற்றல்** *vānselavāṟṟal*, பெ.(n.) வான்வழி நினைத்தவிடம் செல்லும் ஆற்றல் (வின்)(கமன சித்தி) ; supernatural power of freely traversing through space.

*[வான்+செலவு+ஆற்றல்]*

**வானுலா** *vāṉulā*, பெ.(n.) வானத்தில் உலாவுகை (ககன சாரிகை); aerial travel.

*[வான்+உலா]*

**வானுலாவி** *vāṉulāvi*, பெ.(n.) வானத்தில் சுற்றித் திரிபவன்–ள் (ககன சாரி) ; one who travels through the air, aeronaut.

*[வான்+உலாவி]*

**வானூர்திப் பணிப்பெண்கள்** *vānūrdi-p-panippengal*, பெ.(n.) வானூர்தியில் பயணிகளுக்குப் பணிவிடை செய்யும் பெண்கள்; air hostess.

**வானூர்தி முனையம்** *vānūrdimunaiyam*, பெ.(n.) பல்வேறு நாட்டைச் சேர்ந்த வானூர்திகள் வந்து போகுமிடம்; an airport.

**விடா வினை நோய்** *viḍāviṉai nōy*, பெ.(n.) யாதொரு காரணமுமில்லாமலே ஏற்பட்டு ஊழ்வினை தன்னைவிட்டகல அதுவும் கூடவே உடம்பை விட்டகலும் ஊழ்வினை நோய்(கர்ம நோய்); disease coming on without any apparent cause and dissappeang with the extinction of karma.

*[விடா+வினைநோய்]*

**விண்ணாணம்** *viṉṉāṉam*, பெ.(n.) 1. விரிவுரை, விளக்கம் ; a narration, detailed commentary. 2. வேண்டாத விளக்கம்; unnecessary explanation. அவன் விண்ணாணம் பேசுகிறான் (இ.வ.)

*[விள்–விண்–விண்ணாணம்]*

**விந்திகை** *vindigai*, பெ.(n.) வெண்கலக்குடம்; metal pot made of bronze.

**க. பிந்திதெ.**

*[வள்–விள்–விந்து–விந்திகை]*

**வியர்வையுண்டாக்கி** *viyarvaiyuṇḍākki*, பெ.(n.) வியர்வை பிறப்பிக்கும் மருந்து (சுவேதகாரி); diaphoietics.

*[வியர்வை+உண்டாக்கி]*

**விரி சிறைக்கை** *viriśiṟai-k-kai*, பெ.(n.) பறவை தன் சிறகுகளை சமப்படுத்துவது போல் இரு கைகளையும் இருபுறத்தும் விரித்துக் காட்டும் நாட்டிய வகை(டோளக்கை) ; a pose which consists in extending the hands on both sides in imitation of a bird balancing itself on its wings.

*[வில்+சிறை+கை]*

**விருப்பாவணம்** *viruppāvaṇam,* பெ.(n.) இறப்பிற்குப் பின் நடைமுறைப்படுத்தக் கோரி எழுதும் விருப்பாவணம் (உயில்): bill, legal declaration of a person's intensions, totake effect after his death.

*[விருப்பு+ஆவணம்]*

**விலாடன்** *vilāḍaṉ,* பெ.(n.) குற்றவாளியிடம் கைப்பற்றிய நிலம்; land embezzled from the culprit. "நீலபாடி எல்லை இன்னும் விலாடன் குகற்றெத்தத் தெல்லை...." (பா.செ.ப.).

*[வில்+ஆடன்]*

**விழாப்பறை** *viḻāppaṟai,* பெ.(n.) விழாக்களில் காளை மாட்டின் முதுகிலேற்றி வைத்து அடிக்கும் கொட்டு (டமாயி) ; keltle drums mounted on an ox and beaten, as in processions.

**மறுவ. ஏற்றுப்பறை**

*[விழா+பறை]*

**விழிப்புநிலை** *viḻippunilai,* பெ.(n.) ஆதன் புருவ நடுவில் நின்று கோட்பாடுகளுடன் கூடி நுகர்ச்சியில் மெத்தென நிற்கும் நிலை (சாக்கிரம்); waking state in which the soul is in the forehead with all its faculties active.

*[விழிப்பு+நிலை]*

**விழிப்புவளி** *viḻippuvaḷi,* பெ.(n.) பத்து உடல் வழிகளும், இமைத்தல், விழித்தல்களைச் செய்யும் காற்று (கூர்மன்); the vital air of the body which causes closing and opening of eyelids one of taša-vayu.

*[விழிப்பு+வளி]*

**விழிப்பேந்துகள்** *viḻip-pēntu-gaḷ,* பெ.(n.) பொறிகள், புலன்கள், தன் மாத்திரைகள் உயிர்வளி ஆதன் எனும் விழிப்புணர்வுக்கு உரிய கருவிகள் (சாக்கிரக் கருவி); agent or elements operating in the state of waking, as organs of action, of sense and of mind, vital airs and soul.

*[விழி+பேந்துகள்]*

**விழைந்தேற்றல்** *viḻaindēṟṟal,* செ.குன்றாவி (v.t.) ஒப்புதல் வழங்குதல்(சுவீகரித்தல்); to agree, accept. 2. உட்கொள்ளுதல் ; to take in, imbibe. 3. ஈவுப் பிள்ளையாக ஏற்றுக் கொள்ளல்; adopt. 4. தனக்குரியதாக்குதல்; make one's own adopt an idea scheme etc.,

*[விழைந்து+ஏற்றல்]*

**விழைவு மடல்** *viḻaivu maḍal,* பெ.(n.) நிலம் முதலிய பெறற் பொருட்டு அரசாங்கத்தார்க் குச்செய்து கொள்ளும் வேண்டுகோள் (தர்க்காத்து); tender representation of petition, as for an assignment of land, for the cultivation of land, for forming only branch of the revenue, application as for an appointment.

*[விழைவு+மடல்]*

**விற்கையன்** *viṟkaiyaṉ,* பெ.(n.) வில்லைக் கை யிலுடைய திருமால் (சாரங்கபாணி); Tirumal as holding sarangam in his hand.

*[வில்+கையன்]*

**வினையகல் வியப்பு** *viṉaiyakalviyappu,* பெ.(n.) அருக சமயத்தார் கூறும் வியப்பு மூன்றனுள் வினை நீங்குகையாகிய வியப்பு (சீவக.28,3;உரை); pre-eminence arising from annihilation of all karma, one of three aticayam.

*[வினை+அகல்+வியப்பு]*

**வீகாய்** *vikāy,* பெ.(n.) திறவுகோல், சாவி; key.

**க. பீகாய்**

*[வீழ்+கை–வீழ்கை+வீகாய் (திரிபு)]*

**வீண்பகட்டன்** *viṇpagaṭṭaṉ,* பெ.(n.) இடம்பன் (டாம்பிகன்); fop, ostentatious person.

*[வீண்+பகட்டன்]*

**வீறார்ந்த குரல்** *virārndakural,* பெ.(n.) பொருளார்ந்த செய்யுள் (வின்) (கம்பீரவாக்கு); superior style of writing, pregnant with meaning. 2. எடுப்பான குரல்; manly authoritative majestic voice, grave intonation.

*[வீறார்ந்த+குரல்]*

**வெட்டுக்கறிக்காரன்** *vettu-k-kari-k-kāran,* பெ.(n.) வெட்டுக் கறியாளன் பார்க்க; see vettu-k-kariyālan.

*[வெட்டு+கறி+காரன்]*

**வெட்டுக் கறியாளன்** *vettukkariyālan,* பெ.(n.) ஆடு மாடுகளை வெட்டி இறைச்சியை விற்பவன், கசாப்புக்காரன்; butcher.

*[வெட்டு+கறியாளன்]*

**வெட்டுக்கிடங்கு** *vettukkidanku,* பெ.(n.) ஆடு மாடுகள் அடிக்குமிடம் (கசாப்புக் கிடங்கு); slaughter-house.

*[வெட்டு+கிடங்கு]*

**வெடியுப்பு** *vediyuppu,* பெ.(n.) ஒரு வகை பொட்டாசியம் உப்பு ; a kind of potassium salt.

**த.வ.அழலுப்பு**

*[வெடி+ உப்பு]*

**வெண்டுறைப்பாட்டு** *vendurai-p-pāttu,* பெ.(n.) கூத்து வகைகளுக்கு உரிய பாட்டு; a song composed for dance varieties.

**வெவ்வை** *vevvai,* பெ.(n.) உயர்ந்த முடிப் போர்வை (சால்வை); fine shawl.

*[வெம்–வெவ்–வெவ்வை]*

**வெள்ளக்கால்** *vellakkāl,* பெ.(n.) மழைநீர் செல்லும் கால்வாய்; canal of rainflow.

*[வெள்ளம்+கால்]*

**வெள்ளணி நாள்** *vellaninā!,* பெ.(n.) பிறந்த நாள் பெருவிழா (சயந்தி); birthday celebration.

*[வெள்+அணி+நாள்]*

**வெள்ளாடைச் சமணர்** *velļādaiccamaņar,* பெ.(n.) வெள்ளாடை அணிந்த சமண முனிவர் (சுவேதாம்பரர்); Jaina medicants clad in white robe tigambaram.

*[வெண்மை+ஆடை+சமணர்]*

**வெள்ளி நோட்டம்** *vellinōttam,* பெ.(n.) வெள்ளிக்கு (சுக்கிரன்) உரிய இருபதாண்டு ஆட்சிக் காலம் (சுக்கிரதசை); the period 20 years in which venus excercise its influence. 2. நல்லகாலம்; period of great prosperity.

*[வெள்ளி+நோட்டம்]*

**வெள்ளிமறை** *vellimarai,* பெ.(n.) இரவில் வெள்ளி மீன் கண்களுக்குப் புலப்படாத காலம் (சுக்கிரன்பாடு); the time of the year when sukra is invisible at nights.

*[வெள்ளி+மறை]*

**வெற்றிகொண்ட சோழன்** *verrikondacōlan,* பெ.(n.) முதலாம் இராச இராசன் சிறப்புப் பெயர் (சயங்கொண்ட சோழன்); surname of the chola king Raja Raja.

*[வெற்றி+கொண்ட+சோழன்]*

**வெற்றிமுரசு** *verrimurašu,* பெ.(n.) வெற்றியை அறிவிக்க அடிக்கப்படும் முரசு (சயபேரிகை); drum of victory.

**மறுவ. வெற்றிபேரிகை**

*[வெற்றி+முரசு]*

**வெறுஞ்சோறு** *veruñcōru,* பெ.(n.) வெறும் சோறு (சுத்தானம்) ; cooked rice.

*[வெறும்+சோறு]*

**வேகமானி** *vēgamāņi,* பெ.(n.) கப்பல் வேகத்தை அளக்குங் கருவி(டப்பு) ; log an instrument for ascertaining the speed of a ship.

*[வேகம்+மானி]*

**வேளாண்கோ** *vēlaņkō,* பெ.(n.) தலைமைக் குடியானவன்(வின்); head ryot, hereditary cultivator.